உ

கணபதி துணை.

# அத்துவிதவெண்பா

## மூலம்.

மெய்கண்டசந்தானம்,

துறையூர்ச் சிவப்பிரகாச சுவாமிகளால்

அருளிச்செய்யப்பட்டது.

இஃது,

ஆறுவது பட்டம்

நன்னூற் சிவப்பிரகாச சுவாமிகளாற்

செய்யப்பட்ட உரையோடு,

ஷை ஆதீனம்

ஸ்ரீ. சொக்கலிங்க சிவப்பிரகாச சுவாமிகளாலும்

திருமயிலை

முருகேசமுதலியாராலும்

பல பிரதிகளைக்கொண்டு பரிசோதித்து,

சென்னபட்டணம்:

ஊ. புஷ்பரதசெட்டியாரவர்களது

கலாரத்நாகர அச்சுக்கூடத்திற்

பதிப்பிக்கப்பட்டது.

தாரண௵ பங்குனிமீ

சிவமயம்.

## துறையூர்ச்

# சிவப்பிரகாசசுவாமிகள் சரித்திரம்.

ஸ்ரீகைலாயத்தில் உமாதேவி சமேதராய் எழுந்தருளியிருக்கும் சிவபெருமான்தம தீசானுதி பஞ்சவத்திரங்களிற் றோன்றிய பிரணவர்முதலிய அணுசதாசிவர்களுக்கு அனுக்கிரகித்த காமிகாதி யிருபத்தெட்டுத் திவ்வியாகமங்களி லொன்றாகிய ரௌரவாகமத்தில் எழுபத்துமூன்றாவது பாசவிமோசன படலத்தில் பன்னிரண்டாவது அத்தியாயத்தில் கூறப்பட்டுள்ள பன்னிரண்டு சூத்திரங்களையும் சிவஞானபோதமெனப் பெயர்தந்து திருநந்திதேவருக் குபதேசித்தருளினர். அவர் சனற்குமார பகவானுக்கனுக்கிரகித்தனர். அவர் சத்தியஞான தெரிசனிகளுக் கனுக்கிரகித்தனர். அவர் பரஞ்சோதிமுனிவருக் கனுக்கிரகித்தனர். அவர் புண்ணிய பூமியாகிய இப் பரதகண்டத்திலே தென்னாட்டிலே திருவெண்ணெய் நல்லூரிற் றிருவவதாரஞ் செய்தருளிய மெய்கண்டதேவருக் கனுக்கிரகித்தனர். அவர் அந்த வடநூற் சிவஞானபோதத்தைப் பன்னிரண்டு சூத்திரமாகத் தமிழில் மொழிபெயர்த்து வார்த்திகமெனப்படும் பொழிப்புரைசெய்து அருணந்தி சிவாசாரியருக் கனுக்கிரகித்தனர். அவர் அம்முதனூலுக்கு வழிநூலாகச் சிவஞானசித்தியாரென்னு நூலைச்செய்து மறைஞானதேசிகருக்கு அனுக்கிரகித்தனர். அவர் தில்லை மூவாயிரவரி லொருவராகிய கொற்றவன்குடி உமாபதி சிவாசாரியருக்கு அனுக்கிரகித்தனர். அவர் அதற்குச் சார்புநூலாகச் சிவப்பிரகாசமென்னு நூலைச்செய்து நமச்சிவாய சித்தருக் கனுக்கிரகிக்க, அவர் சிவப்பிரகாச சித்தருக் கனுக்கிரகித்தனர். அவர் நமச்சிவாய மூர்த்திகளுக்கு அனுக்கிரகித்து உடனே பொதிகைக் கெழுந்தருளா நிற்கையில், நமச்சிவாய மூர்த்திகள் அஞ்சலியஸ்தராய்ச் சிவப்பிரகாச சித்தரது திருமுகத்தை நோக்கிச் சுவாமிகள் இன்னுஞ் சொற்பகால மிங்கெழுந்தருளி இருந்து ஞானசமாதி சாதனங்களைக்

கற்பிக்கவேண்டும். அடிமைக்கு அபரோக்ஷ ஞானசுவானுபூதி யெக்காலங் கைவல்லியமாகுமோ அறியேனென்று மனவருத்தத்தோடு கண்கலக்கப்பட்டு நிற்க, சுவாமிகள் திருவுளமிரங்கி, அப்பா நீ! சஞ்சலப்படவேண்டாம். சீக்கிரத்திற்றானே நமது திருநாமங்கொண்ட வொருபக்குவி உனக்குச் சீடனாக வருவான். அவனுக்கு அனுக்கிரகிக்குங் காலத்து அவன் முன்னிலையில் உன்கருத்து முற்றுப்பெறுமென்று ஆசீர்வதித்துப் பொதிகைக்கெழுந்தருளினர்.

பின்னர் நமச்சிவாய மூர்த்திகள் ஞானாசாரியர் கட்டளைப்படி திருவாவடுதுறை யென்னுந் தலத்திற்சென்று அன்பர்களால் அமைத்துக் கொடுக்கப்பட்ட திருமடத்தில் திருக் கூட்டத்தோடு ஞானப்பியாசஞ் செய்துகொண்டு தம்மிடத்து அநேகந் தெய்வீகம் விளங்க வெழுந்தருளி யிருக்குங்காலத்துச், சிவப்பிரகாச சுவாமிகள் கும்பகோணத்தில் வேளாண்செட்டிகள் மரபிற் றிருவவதாரஞ் செய்து ஏழுவயதிலேயே இலக்கிய விலக்கணப் பயிற்சியும் ஞான சாஸ்திராப்பியாசமு முடையராய் நற்குண நற்செய்கைகளுக் குறைவிடமாய் விளங்குநாளில் புண்ணியஸ்தல யாத்திரை செய்யவேண்டு மென்னுங் கருத்தினராய் பற்பல சிவஸ்தலங்களுக்குச் சென்று புண்ணிய தீர்த்தங்களில் ஸ்நானஞ் செய்து சிவதரிசனமுஞ் செய்துகொண்டு அங்கங் குள்ள பெரியோர்களையுந் தரிசித்துக்கொண்டு திருவாவடுதுறைக்கு வந்து நமச்சிவாய மூர்த்திகளைக்கண்டு தரிசனஞ்செய்து அஞ்சலியஸ்தராய் நிற்கையில், தம்முள்ளத்தில் என்றுந் தோன்றாத அன்பும் ஆராமையும் அச்சமுந் தோன்றுதலால் இது தான் நம்மை அடிமைகொள்ள எழுந்தருளிய ஞானாசாரிய மூர்த்தமென்று கருதி உடல் விதிர்விதிர்க்க அனலிலிட்ட மெழுகெனமன முருகி நாத் தழுதழுக்கத் துதித்துநிற்கும் இவரது அதிதீவிர சத்திநிபாதக் குறியைச் சுவாமிகள் திருவுள்ளத் தடைத்துக் கிருபாவீக்ஷணஞ் செய்து நம தருட்குருவின் திருவாக்கின்படி யெய்திய பக்குவி இவன்தானென்று தேறி உடனே சங்கமதீட்சைசெய்து பின்பு விதிப்படி சமயம் விசேஷம் நிருவாணம் அபிஷேகமென்னுந் தீட்சைகளையுமே யன்றி உண்மை நிலையையு முபதேசித் தடிமைகொண்டு பதிபசு பாசமென்னுந் திரிபதார்த்த வுண்மைகளைக் கடாவிடையாகத் திருவாய்மலர்ந்

தருளும்போழ்து, சீடராகிய சிவப்பிரகாச சுவாமிகள் சாட்சாத்கார சுவானுபவநிலையை மௌனமுத்திரையினாலும் நயனபாஷையினாலுங் குறிப்பா யெடுத்துவிளக்க, நமச்சிவாய மூர்த்திகள் ஆனந்த பரவசராய்த் தமது இரண்டு திருக்கரங்களாலும் ஆலிங்கனஞ் செய்துகொண்டு அகமகிழ்ந்து உடனே ஆத்மார்த்த சிவபூசையையும் அதிகார உடையவர் பூசையையு மொப்பித்து இக்குருசந்தானத்து அடியவர்களுக்குச் சைவாகம விதிப்படி அனுக்கிரத்துக் கொண்டு இவ்வாதீனத்தைப் பரிபாலித்து வரக்கடவை யென்று கட்டளையிட்டுச் சகசானுபவ நிமித்தங் குகையின்கண் வசித்துக்கொண் டிருந்தனர்.

சிவப்பிரகாச சுவாமிகளுங் குருவாணைப்படி சிலகாலம் அங்கு ஆதீன முறைமைப்படி அன்பர்களுக்குத் தீட்சானுக்கிரகஞ் செய்துகொண்டிருந்து பின்பு தமது பரமாசிரியராகிய உமாபதி சிவாசாரியர் தரிசனார்த்தமாகவும் நடேசர் தரிசனார்த்தமாகவும் திருக்கூட்டத்தோடு சிதம்பரத்துக் கெழுந்தருளி நடேசர் சந்நிதானத்திற் சென்று பலமுறை வணங்கிப் பேரன்போடு அஞ்சலி அஸ்தராய் மனங்கரைந் துருகித் துதித்து ஆனந்த பரவசராய்த் தரிசனஞ்செய்து நிற்கையில், அம்பலவாணர் கிருபையால் தமது திருக்கரத்தில் ஓர் சிவலிங்க மெழுந்தருளி யிருக்கக்கண்டு, இஃது சிவபெருமான் திருவருளெனக் கருதி அளவிறந்த மனமகழ்ச்சியோடு பலமுறை பணிந் தெழுந்து சந்நிதானத்தினின்று மரிதினீங்கிக் கொற்றவன் குடிக்குச்சென்று உமாபதிசிவாசாரியர் சந்நிதானமடைந்து தரிசனஞ்செய்து சிலநாளத் திருமடத்தில் வசித்திருந்து பின்பு தமதுள்ளத்தை யோர்பால் நடராஜன் திருவடிதரிசனத் துளதாகிய பேரன்பீர்ப்ப, மற்றொருபால் குருவாஞ்ஞை திருவாவடுதுறைக் கீர்ப்ப, அத்தலத்திற் சென்று சிவாலயத்திற்புகுந்து சிவபெருமானைத் தரிசித்து அன்பின் மிகுதியால் தோத்திரஞ்செய்து ஆனந்த பரவசராய் நிருத்தஞ்செய்து தேவாரமோதித் திருக்கரத்தாற் றிருத்தாளமொற்ற அத்திருக்கை சேப்புற்று வருத்தமுறுவதைக் கருணைக்கடலாகிய சிவபெருமான் றிருவுள்ளத் துணர்ந்து ஓர் திருத்தாளங் கொடுத்தருளப் பெற்றுத் திருவுளக் களிப்போடு திருமடத்திலெழுந்தருளி யிருந்தனர்.

அக்காலத்தில் இராயவேலூரி லரசு புரிந்து கொண்டிருந்த விருபாட்சி ராயருடைய கட்டளையால் அதிகாரம்பெற்ற வைணவசமய வொழுக்கம் பூண்டவோர் வடுகன் நடுநாட்டின் கண் அதிகாரஞ் செலுத்திக்கொண் டிருந்தனன். இங்ஙன மதிகாரஞ் செலுத்து நாளிலோர்நாள் அவன் சிதம்பரத்திற் சென்று நடராஜப் பெருமானுக்கு அங்கு நடந்து வருகின்ற நித்திய நைமித்திக விபவங்களைக் கண்டு களிகூராது புறச்சமயத்தானாகிய வைணவனாதலால் மிகப் பொறாமைகொண்டு நடேசர் சந்நிதானத்தின் கணிருந்த துவஜஸ்தம்பத்தைப் பிடுங்கித் தில்லைக் கோவிந்தராஜப் பெருமாள் சந்நிதியில் நட்டு அந் நடேசராலய வருமானமெல்லாவற்றையும் அப்பெருமாள் பெயராற் செய்து அவ்வருமானத்தா லத்தில்லைக் கோவிந்தராஜப் பெருமாளுக்குத் திருவாராதனம் திருவிழா முதலியவற்றை அதிக விபவமாக நடத்தி நடேசருக்கு நடத்திவந்த நித்திய நைமித்திகங்களை நிறுத்திவிட்டான். அதனால் தில்லைத் தீட்சிதர்களும் சைவர்களும் தலத்தார்களும் மகத்தார்களும் அந் நாட்டிலுள்ள மற்றவர்களும் ஒன்று கூடி அவ்வைணவனிடத்திற் சென்று வெகுவாய் நியாயங்களை யெடுத்துப் பேசியும் அவனவற்றிற்குச் செவிகொடாமையாற் றங்கள் கருத்துமுற்றுப் பெறாதொழிய, மனக்கவலை யடைந்து திகைப்புற்று நித்திய கன்மாநுஷ்டானம் ஆகார நித்திரை முதலிய யாவு மொழித்து வாட்டமுற்று இச்சங்கதிகளைச் சைவ சமயஸ்தாபன சந்தானசாரியரான திருவாவடுதுறை ஆதீனத்துப் பண்டாரச் சந்நிதிக்குத் தெரிவித்துக்கொண்டார்கள். இதைக் கேட்ட சிவப்பிரகாச சுவாமிகள் குகையின்கண் நிட்டாபரராயெழுந்தருளி யிருக்கின்ற தமதாசாரியராகிய நமச்சிவாய மூர்த்திகள் சந்நிதானத்திற் சென்று விண்ணப்பஞ் செய்த மாத்திரத்தில் நம தாத்மார்த்தமாயுள்ள நடேசப்பெருமான் சந்நிதிக்கு இப்படிப்பட்ட தாழ்வு நேரிட்டிருப்பதைச் செவியுற்றும் நாம் சும்மாவிருப்பது சரியன்று; ஆதலால், அப்பா! நீ உடனே அங்குச் சென்று இது காரியத்தை யெவ்விதத்தாலாவது செயித்துக் கொண்டு வரவேண்டுமென்று உத்திரவு கொடுத்தருள, அவ்வுத்திரவின்படி திருக்கூட்டத்தோடு சிதம்பரத்துக் கெழுந்தருளி வைணவனாகிய அவ்வதிகாரியி னிடத்திற்சென்று சன்மார்க்க நெறிகளை அநேகமாக எடுத்துச் சொல்லியும், முன் பின்

நடந்த வழக்கங்களை யனுபவ பூர்வமா யெடுத்துக் காட்டியுங் கேளாமையால் அவனை யுள்ளிட்ட வைணவ மதாபிமானிகளான தாசர்களுக்கும் தீக்ஷிதர் முதலிய சைவர்களுக்கும் பெரும் போருளதாயிற்று. அதனால் இவ்விருதிறத்தவரினும் அநேகர் இறந்தனர். அநேகர் கைகால் முதலிய வுறுப்புச் சிதைந்தனர். இங்ஙன நிகழ்ந்தும் தீட்சிதர் முதலிய சைவசமயிகள் கருத்து முற்றுப் பெருமையால் ஓரிடத் தொன்றுசேர்ந் தாலோசித்து நாம் வேலூர்க்குச்சென்று இராயரிடத்தில் இது செய்திகளைத் தெரிவித்து இப்பாதகனை உத்தியோகத்தி னின்று நீக்கின லொழிய இக்கலகந் தீர்தலின்றெனத் துணிந்தார்கள்.

அப்பொழுது சிவப்பிரகாச சுவாமிகள் நாமே அங்குச் சென்று முடிவு செய்துகொண்டு வருகின்றன மென்று கூறிப் பிரயாணப்பட ஆயத்தமாயினர். அது பொழுது அத்தீக்ஷிதர்களும் மற்றச் சைவசமயிகளும் சுவாமிகள் இராஜ சமஸ்தானத்தினுஞ் சிறந்த மரியாதை யுள்ளவ ராதலா லதற்குத்தக்க சின்னங்களோடு போதல்வேண்டுமேயென்று ஆலோசித்திருந்தனர். இருக்கவே, அன்றிரவில் நடேசப் பெருமான் தீக்ஷிதர்கள் சொப்பனத்தின்கட் டோன்றி நம்முடைய சிவிகை க்ஷத்திரஞ் சாமரம் ஆலவட்டம் இடபத்தடி கொடி முதலிய சகல விருதுகளையுங் கொடுத்து அனுப்பக் கடவீர்களென்று திருவாய் மலர்ந்தருளி மறைந்தனர். உடனே தீக்ஷிதர்கள் அனந்தல் தவிர்ந்தெழுந்து சிவகங்கையில் ஸ்நானஞ்செய்து நித்தியகரும முடித்து ஆலயத்துட்சென்று சபாபதியைத் துதித்துப் பணிந்தெழுந்து விடைபெற்று அரிதினீங்கித் தமக்குச் சொப்பனத்திற் சிவபெருமான் கட்டளையிட்டபடி சிவிகைமுதலிய சின்னங்களைக்கொண்டுவந்து வைத்து அம்பலவாணர் சொப்பனத்திற் கட்டளையிட்ட செய்தியையுங் கூறிப் பிரார்த்திக்க, சுவாமிகள் அவற்றை நோக்கி மிகுந்த அச்சங்கொண்டு சந்நியாசியாச்சிரமமுடைய நமக்கு இவைகள் ஏன், வேண்டுவதில்லையென்று மறுக்க, அம்பலவாணர் அருளுப்பாடாதலால் சுவாமிகள் மறுப்பது யுக்தமன்றென்று கூறியது கேட்டுப், பரமகாருணியராகிய சிவபிரான் திருவருள் இங்ஙனமாயின் தடுப்பதுநன்றன்று என வுடன்பட்டு, அவர்கள் வேண்டுகோளின்படி சிவிகையின்மீதெழுந்தருளித் திருக்கூட்டத்தோடும் அநேக சின்னங்களோடும் ஆடம்பரமாக அவ்விடத்தி னின்று மெழுந்த

ருளித் திருக்கழுக்குன்றஞ்சென்று சிவதரிசனஞ் செய்துகொண் டத்தலத்தி னின்றுங் காஞ்சிபுரத்திற் கெழுந்தருளி யங் கச்சிவ பெருமானைத் தரிசனஞ் செய்துகொண்டு அவ்விடம்விட் டிராய வேலூருக்குச் சென்றபோது, அங்குள்ள தலத்தாரும் மகத்தா ரும் மடாதிபதிகளு மற்றச் சைவர்களும் சிவப்பிரகாச சுவாமி கள் எழுந்தருளுவதைக் கேள்வியுற்று எதிர்கொண்டு சென்று வணங்கிச் சுவாமிக ணல்வரவினைப் பணிவோடு வினவினார்கள். அப்பொழுது சுவாமிகள் தமது திருவுளக் குறிப்பைக் கட்டளை யிட்டருள, அவர்கள் சுவாமீ! அரசனோ பிராமணன். மந்திரியி னுடைய சகாய மிருந்தாற்றான் சுவாமிகள் கருத்து முற்றுப்பெ றும். ஆதலால் முன்னரதைத் தேடிக்கொள்ளல்வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்யக் கேட்டுச் சுவாமிகள் மந்திரி எக்குலத்தி னர், எம்மதத்தினர், எத்தன்மையர், அவர் பெயர்யாது? என வினவினர். அவ்வன்பர்கள் மந்திரி கன்னடர், வீரசைவர், பக்த ரிடத் தன்புள்ளவர், இலிங்கணபத்தர் என்பது அவர் பெயர். மேலும் வீரசைவ சமயாசாரிய ராகிய சித்தராம தேவசுவாமிகள் ஆதீனத்துச் சிஷியரும் சிவலிங்கதாரண சம்பந்தமுள்ள வருமாத லால் அவர் லிங்காங்க சம்பந்த மில்லாதவர்கள் யாராயிருக்கி னும் முகாவலோகனஞ் செய்கிறது மில்லை என்றனர்.

அதுகேட்டுச் சுவாமிகள் இதற்கியாது செய்யத்தக்கது என் று மயங்கி ஒருவாறு தெளிந்து சிவசம்பந்தஞ் சைவமென்னும் வேத வாக்கியார்த்தங்களையும் வாதுளாகமம் வீராகம முதலிய ஆகம வாக்கியங்களையும் பல முறை ஆலோசித்துப் பெட்டகத்து ளெழுந்தருளி யிருக்கும் சிவலிங்கப் பெருமானைச் சிறுபெட் டகத் தெழுந்தருளச்செய்து உத்தமாங்கமான சிரசின்மீது தரித் துச் செல்லலாமென்று திருவுளத் துணர்ந்துகொண் டிருக்கை யில், அம்பலவாணர் அசரீரியாக அங்ஙனமே புரிதியென்று மும் முறை கட்டளை யிட்டருளலும் சுவாமிகள் ஆனந்த பரவசராய்ப் பணிந்தெழுந்து பூசைத் தம்பிரானைத் தருவித்துச், சிவபூசைக் கிடம் பண்ணக் கட்டளையிட்டுத், தாம் ஸ்நாநாநுஷ்டானம் செ ய்து சிவபூசை முடித்துச் சிவலிங்கப் பெருமானைச் சிறுபெட்ட கத் தெழுந்தருளப்பண்ணிச் சிரசின்மீது தரித்துக்கொண்டு தம து சந்நிதி சங்கமர்களுக்கும் அவ்வாறே சிவலிங்கந் தரிப்பித்துப்

பின்பு அவ்விலிங்கண பத்தன் அரண்மனைக்குட் சென்று தமது வரவைத் தெரிவித்தனர்.

அம்மந்திரி நஞ்சமயாசாரியர் எழுந்தருளினரென்றுணர்ந்து சகல விருது வாத்தியங்களோடு மெதிர்கொண்டுவந்து தன்னரண்மனைக் கெழுந்தருளச்செய்து அர்க்கியபாத்திய ஆசமனாதி சோடசோபசாரங்களோடு பாதபூசைசெய்து விதிப்படி நமஸ்கரித்துத் தீர்த்தப்பிரசாதம் பெற்றுக் கைகட்டி வாய்பொத்தி அடங்கி யொடுங்கி மிகுந்த பயபக்தியோ டஞ்சலியஸ்த்தனாய் நின்று ஒன்றுக்கும் பற்றாத அடியேனை ஓர்பொருளாகத் திருவுளத்தடைத்து இச்சிறு குடிலுக்கெழுந்தருளிய காரணம் யாதென விண்ணப்பஞ் செய்யச், சுவாமிகள் சிதம்பரத்தின்கண் வைணவனாகிய வொருவடுகன் சிவாபராதியாய் அதிகாரஞ் செலுத்துகின்றனன் என்று அவ்வடுகனது தீயவொழுக்கங்களனைத்தையும் ஆதியோடந்தமாய்த் திருவாய் மலர்ந்தருளக் கேட்டமாத்திரத்தில், அவ்வாமாத்திரர் மிகமனவருத்தமுற்று உடனே யேவலாளர்களைக் கூவி அதிசீக்கிரத்திற் சிதம்பரஞ்சென்று சிவாபராதியாய் அதிகார நடத்துகின்ற அவ்வடுகனைச் சிரச்சேதஞ் செய்து அம்பலவாணருக்கு வழக்கப்படி சகல வருமானங்களையும் மீட்டுக்கொடுத்துச் சிறப்பாகக் கும்பாபிஷேகமுஞ் செய்வித்து முன்போலத் தாழ்வின்றி நித்திய நைமித்திகங்களை நடப்பிக்கத் திட்டஞ்செய்து விபூதிப் பிரசாதம் இங்குக் கொண்டுவரச் செய்யென்று அவர்களுக்குச் சர்வாதிகாரமுங் கொடுத்தனுப்ப, அவர்கள் சிதம்பரஞ்சென்று அவ்வாறே நிறைவேற்றித் தீக்ஷிதர்களால் விபூதிப்பிரசாதங் கொடுப்பித்தனர், அதனைச் சிவப்பிரகாச சுவாமிகள் அதிவினயத்தோடு தமது திருக்கரத்திலேற்றுச் சிவகவசமாக நெற்றியிற்றரித்து மந்திரியாருக்குங் கொடுப்பிக்க, அவரும் விதிப்படி வாங்கிச் சர்வாங்கமுந் தூளிதஞ் செய்துகொண்டு பின்பு சித்தராமதேவரை வரவழைத்து வீரசைவக்கிரியாசாரத்தைப் பெற்று எல்லோரும் சமத்துவமாக இருந்து லிங்கநிவேதனயஞ்செய்து முடித்தபின்னர் ஆத்மார்த்தசாஸ்திர சம்பாஷணஞ் செய்துகொண் டெழுந்தருளி யிருக்கும்போது, அரசன் சுவாமிகள் அங்கெழுந்தருளி யிருத்தலையும் அவரது மகிமையையுங் கேள்வியுற்று மந்திரியார் அரண்மனைக்கு வந்து சுவாமிகளைக்கண்டு தரிசித்து, சுவாமீ! இத்தேசத்தில் சிலநாளாய் மழை

யின்றிப் பயிர்களும் பல்வுயிர்களும் மிகவாட்டமுற்று வருந்து கின்றன. கிருபாமூர்த்தியாகிய தேவரீர் இங்க ணெழுந்தருளியும் எங்கள் மனக்கவலை தீரவில்லையே யென்று விண்ணப்பஞ்செய்து கொள்ளக் கேட்டு, சுவாமிகள் திருவுள மிரங்கிச் சற்றுநேரம் இங்கிரும், அம்பலவாணர் கிருபைசெய்வரெனக் கட்டளையிட்டு உடனே ஸ்நானத்துக் கெழுந்தருளிச் சிவபூசை முடித்துத் தமது திருக்கரத்தில் வீணையைத்தாங்கி முற்றத்தினின்று அடியார்கள் திருத்தாளமொற்றப் பொறுத்தற்கரிய வெய்யிலி னின்றுமேகராகக் குறிஞ்சியென்னும் பண்ணால் தேவாரமோதிக்கொண்டு ஓர் பாதத்தை யூன்றி யோர்பாதத்தைத் தூக்கி நிருத்தஞ் செய்தருளிய மாத்திரத்தில் பிரளயகாலம்போலச் சப்தமேகங் களுங் குழுமி அளவற்ற நீரைச்சொரிய, இத்தெய்வீகத்தைக் கண்ட அரசனும் மந்திரியாரும் அதிக வியப்பும் அச்சமுமடைந்து, இனி வெள்ளப்பெருக்கினால் தேசத்துக்கு அபாயநேரிடும் போலிருக்கிறதே யிதற்கென்ன செய்கிறதென்று பயந்து, அம் மழையில் ஆனந்தபரவசராய் மெய்ம்மறந்து நிருத்தஞ் செய்யும் சுவாமிகள் முன்பாகச்சென்று தண்டம் செய்து மழை போதும் போதுமென்று முறையிட்டுப் பிரார்த்திக்க, சுவாமிகளும் நிருத்தமொழிந்து நின்றனர். மழையும் நின்றது, இம்மகிமையைக் கண்ட அவ்வரசனும் மந்திரியாரும் சுவாமீ! இதோ சமீபத்தில் திருவண்ணமலை யென்கிற சிவஸ்தல மிருக்கின்றது. அவ்விடத் திற்றானே யெழுந்தருளி யிருந்து எங்கட்குச் சதாதரிசனங் கொடுத்தருள வேண்டுமென்று மிகுந்த பிரியத்தோடு பிரார்த்திக்க, அவர்களன்புக்கிரங்கி யங்ஙனஞ் செய்ய வுடம்பட்டுத் திருவண்ணமலையின்கண் அக்கினி தீர்த்தக்கரையின் பிரபலமாக வோர் மடாலயஞ் சமைத்துப் பூசைநைவேத்திய முதலியவற்றிற் காக ஏழுகிராமம் சர்வமான்யமாகச் சிலாசாசனம் வரைந்து தந் ததுமன்றிச், சிவிகை க்ஷத்திரம் சாமரமுதலிய சகல விருதுகளும் வாத்தியங்களும் அளவிறந்த திவ்வியாபரணங்களும் யானை குதிரை ஆனிரை இடபமுதலியயாவும் காணிக்கையாகக் கொடுக்க, அவற்றையும் அம்பலவாணராற் றந்தருளப்பட்ட சின்னங் களையும் ஏற்றுக்கொண்டு திருவருணையின்க ணெழுந்தருளி அரசன் வேண்டுகோளின்படி அவ்வரசனால் முன்னர்க்கட்டிக் கொடுக்கப்பட்ட திருமடத்திற் சகல விபவத்தோடும் எழுந்தருளி யிருந்தனர்.

அக்காலத்து அத்துவித சைவசமயஸ்த்தாபனமாக அத்துவிதவெண்பா, கணபாஷித ரத்தினமாலை, முக்காண்டம், சதகத்திரையம், அனுபவசடுத்தலம், மந்திரகோப்பியம், தீட்சாபோதை, மிசிராற்பணம், நூற்ருருதலம், சர்வாசாரசடுத்தலம், திருவாலந்துறைச்சிந்து, திருக்கழுக்குன்றமாலை, விருத்தம், கப்பறை முக்கியம், தீக்ஷாவிதி, வெண்பா முக்காண்டம், என்னும் இப்பதினைந்து நூல்களைத் தமிழிற்செய்தருளி அத்துவித சைவசமயஸ்த்தாபனுசாரியராய் வீரசிங்காசனக் கர்த்தராய்ச் சரணமென்றடைந்த அன்பர்களுக்குச் சிவலிங்கதாரண தீட்சைகளைச் செய்துகொண்டு ஸ்வலீலானந்தத்தோடெழுந்தருளியிருந்தனர்.

இங்ஙனஞ் சிலநாள் கழிந்தபின்னர்ச் சிவஸ்தலயாத்திரை செய்யத் திருவுளங்கொண்டு திருக்கூட்டத்தோடு திருக்கழுக்குன்றத்திற் கெழுந்தருளி அங்குள்ள சில அந்தணர்கள் செய்த சங்கைக்கு உத்தரங் கூறி வேதகிரீசுரரைத் தரிசனஞ் செய்துகொண்டு அவ்விடம் விட்டுத் திருக்காளத்திக் கெழுந்தருளி அத்தலத்தின்கணுள்ள பொன்முகலி நதியில் ஸ்நானஞ்செய்து சிவபூசை முடித்துக்கொண்டு காளத்தீசுரர் தரிசனத்துக்காக ஆலயத்துக் கெழுந்தருளும் போழ்து, வடதேசத்திருந்து அங்கு வந்திருந்த மத்துவசமையாசாரிய ரொருவர் அந்நதியில் ஸ்நானஞ்செய்து பூசை முடித்துக்கொண்டு நிற்கக்கண்டு இருவரும் அளவளாய் ஒருவர்க்கொருவர் நல்வரவு வினவி பிரியவார்த்தைகள் பேசிக்கொண்டிருக்கும்போது, மத்துவ சமய சித்தாந்தத்திலும் வீரசைவசமய சித்தாந்தத்திலும் வாதிக்கத் தொடங்கினர். அப்போது சிவப்பிரகாசசுவாமிகள் நாம் சங்கைசமாதானமாக இங்ஙனம் வாதித்துப் பொழுதுபோக்குவதனுற் பயனில்லை. நமக்குள் ஓர் பிரதிக்கினை செய்துகொண்டு வாதிக்க வேண்டும்; அதாவது சுருதி யுக்தி அனுபவத்திற்கு விரோதமின்றி வாதிக்கும்போது எவர் தோல்வி யெய்துகின்றனரோ அவர் வெற்றியெய்தினோர்க்கு அடிமையாதல் வேண்டுமென்பதே யென்று சுவாமிகள் கட்டளையிட, அதற்கு அவர் உடன்பட்டதனுல் இருவரும் அந்நதிக்கரையிலேயே மூன்றுநாள் மட்டும் வாதுசெய்து முடிவுபெருமல் நான்காநாள் தமது மத்துவசமயாசாரிய ஸ்தானத்திற்கு வேருெருவனை நியமித்துத் தம்மோடுகூட வந்த யானை சேனை முதலிய யாவற்றையும் அவரிடத்தொப்பித்துத் தாம்

சுவாமிகள் திருவடியில் நமஸ்க்காரஞ் செய்து அவராற் றந்தருளப்பெற்ற விபூதி ருத்திராட்ச பஞ்சாட்சரமுதலிய அஷ்டாபரணதாரியாய் அடிமைப்பட்டு அஞ்சலியஸ்தராய் நிற்கச், சுவாமிகள் திருவாக்கினுற் றூளிதங் காளத்திமூர்த்தியெனத் தீட்சாநாமந்தரித்து, அவனைத் திருக்கூட்டத் தொருவராய்ச் சேர்த்துக்கொண்டு, ஆலயத் தடைந்து சிவதரிசனஞ் செய்து அவ்விடம் விட்டுக் கலியாணபுரிக்கெழுந்தருளி அவ்விடத்துள்ள அன்பர்களுக்கு இலிங்கநிட்டானுபவத்தை அனுக்கிரகித்து, அவ்விடம் விட்டு உடும்பை 'சுப்பிரமண்ணியமென்னும் ஸ்தலத்துக்கெழுந்தருளி அத்தலத்துக்குச் சமீபத்திலுள்ள வோருத்தியானவனத்தையுந் திவ்வியமாகிய வோர் தடாகத்தையுங் கண்டு, அவ்விடத்திறங்கி மூன்றுதின மளவும் நித்திய கன்மானுஷ்டானம் சிவபூசை அன்னபானீயமொழிந்து விதேககைவல்லிய நிஷ்டாநுபூதியி லிருந்தனர். அப்பொழுது சிவபெருமான் அவ்வூரின்கணுள்ள அன்பர்களது சொப்பனத்தெழுந்தருளி நம்மடியாணுகிய சிவப்பிரகாசன் அன்னபானீய மின்றி யிருக்கின்றனன். அவனுக்கு அமுதுபடைக்கக் கடவீர் என்று கட்டளையிட்டருளி மறைய, அவர்கள் அனந்தல் தவிர்ந்தெழுந்து நித்திய கன்ம முடித்துக்கொண்டு சுவாமிகள் நிட்டை செய்துகொண்டிருக்குமிடத்திற்கு வந்து வணங்கித் துதித்து நிட்டையைத் தெளிவித்துப் பயபக்தியோடு அஞ்சலியஸ்தராய் நின்று அமுதுகொள்ள வேண்டுமென்று பிரார்த்திக்கச், சுவாமிகள் அவர்களன்பிற்கிரங்கி அங்ஙனமே யாகட்டுமெனத் திருவாக்களித்துச் சிவபூசைசெய்துகொண்டு,அவர்களா லமைக்கப்பட்ட அறுசுவையோடு கூடிய வுண்டிகளைத் திருக்கூட்டத்தோடு அமுதுசெய்தருளிச், சிலகாலம் அவர்கள் வேண்டுகோளுக் குடம்பட்டு அங்கெழுந்தருளியிருந்து, பின் பவ்விடம்விட்டுத் திருச்செங்கோடென்னுஞ் சிவஸ்தலத்துக் கெழுந்தருளினர்.

அப்போது அத்தலத்தின்கணுள்ள கேதாரி ஐயர் என்கிறவோர் பிராமணருடைய சிஷியர்களில் சிலர் இப்பிராமணவீதியில் சூத்திரராகிய நீர் சிவிகையேறிச் செல்லுதல் கூடாதென்றுதடுக்க, இதுவும் அம்பலவாணர் கிருபைதானென்று சிவிகையினின்றிறங்கி எப்படிப்பட்ட பெரியோர்களாயினும் பிராரத்தகன்மத்தை அனுபவித்தே தொலைத்தல் வேண்டுமென்று

சொல்லிக்கொண்டு பாதசாரியாய்ச் செல்லும்போது, அவர்கள் நீர் பெரியராயின் இந்தச் சந்நிதியி லிருக்கின்ற கல்லிடபத்தை நாங்கள் கொடுக்கு மிக்கடலையைத் தின்னச் செய்வீராயின் நீர் கூறியவார்த்தை யுண்மைதானென்று உல்லங்கனமாகச் சொல்ல அதைக்கேட்டுச் சுவாமிகள் புன்னகைபுரிந்து, அங்ஙனமே தின்னுமாயின் நீவிர் யாது செய்துகொள்ளுகின்றீர்களென்று கூற அதற்கவர்கள் நாங்களனைவரும் உமக் கடிமையாகின்றோமென்று பிரதிக்கினைசெய்ய நல்லதென்று, அவர்களாற் றரப்பட்ட கடலையை அவ்விடபத்தின் முன்வைத்து,

"வில்லார் மணிச்சபையின் வித்தகா கூடலின்முன்
கல்லானைக் கிக்கருத்திக் காட்டியவுன்—வல்லாண்மை
கட்டுரையே யாகிலிந்தக் கல்லே றெழீஇக்கடலை
இட்டவிவர் முன்றினச்செய் யே."

என்னு மிவ்வெண்பாவைத் திருவாய்மலர்ந்தருளித் தமது திருக்கரத்தாற் றிருவெண்ணீ றெடுத்திட்டவளவில், அது வாலைநிமிர்த்துக் காலைநீட்டி ஆரவாரித்தெழுந்து அக்கடலை முழுமையும் புசித்துநிற்ப, இத்தெய்வீகத்தைக்கண்ட அப்பிராமணர்கள் மிகுந்த வச்சமடைந்து தம தாசிரியரான கேதாரி ஐயர்பாற்சென்று இதை விண்ணப்பஞ்செய்யக் கேட்டமாத்திரத்தில், அவர் ஓடிவந்து தீர்க்க தண்டஞ்செய்து அடியேங்கள்செய்த அபராதத்தைத் திருவுளத்தடைக்காது மன்னித்து, அடியேங்களை அடிமைகொண்டு இச்சிவிகைமீது முன்போலவே யெழுந்தருளல்வேண்டும். அங்ஙனஞ் செய்யாது பாதசாரியாச் செல்லின் சுவாமிகள் சந்நிதியிலேயே யுயிர்விடுவோமென்று அன்போடு பிரார்த்திக்க, அவர்களன்புக்கிரங்கி யங்ஙனமே சிவிகைமீ தெழுந்தருளி அர்த்தநாரீசுரரைத் தரிசனஞ்செய்துகொண்டு, அக்கேதாரிஐயர் திருமடத்திலிறங்கி அவர்களுக்குச் சிவலிங்கதாரண தீட்சை முதலியவைகளைச் செய்து, சிலகாலம் அவ்விடத்து வசித்திருந்து பின்பவ்விடம்விட்டுத் திருவண்ணுமலைக் கெழுந்தருளித் திருமடத்தில் வசித்திருக்கின்றகாலத்தில், காஞ்சீபுரத்திலிருந்து திருவண்ணுமலைத் தரிசனத்துக்காக வந்த குமாரசுவாமிப் பண்டாரமென்னு மோர்சைவர் மத்தியிலுள்ள கல்லாற்றங்கரையி லிறங்கிச் சிவபூசை முடித்துத், தம தாத்மார்த்த பூசைப்பெட்டகத்தை அங்கிருந்த வோர் கொன்றை மரத்திற் றூக்கிப், போசனஞ்செய்து

போகும்போது, அதை மறந்துசென்று மறுநாள் திருவண்ணாமலையில் ஸ்நானஞ்செய்து பூசைப்பெட்டகத்தைத் தேடிப்பார்த்துக் காணாமையால் அதிக மனவருத்தமுற்று மூன்றுநாள் ஆகாரமின்றிச் சஞ்சலப்படுவதை அண்ணாமலையார் திருவுளத்துணர்ந்து, அவர் சொப்பனத்தில் வயோதிகப் பிராமணவடிவங்கொண்டெழுந்தருளி, அப்பா நீ அங்கம்வேறு இலிங்கம்வேறா யிருந்தமையா லிவ்வாறு ஆபத்து நேரிட்டது. ஆதலால் இத்தலத்தில் அக்கினிதீர்த்தத்துக் கருகிலுள்ள திருமடத்தில் சிவப்பிரகாசனென் றொருவன் இருக்கின்றனன், அவன்பாற் சென்று சிவலிங்கதாரணஞ்செய்து கொள்வாயாகவென்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினர். உடனே அவர் விழித்தெழுந்து நித்தியகன்மானுட்டான முடித்துச் சுவாமிகளிடத்திற்சென்று வணங்கி யஞ்சலியஸ்தராய், நிகழ்ந்த சங்கதிகளையும் அண்ணாமலையார் கட்டளையிட்டதையும் விவரணமாக விண்ணப்பஞ்செய்து, சிவலிங்கதாரணஞ்செய்யப் பெற்றுக்கொண்டு சந்நிதானத்தில் வசிக்குங் காலத்து ஓர்நாள் தமக்குச் சந்ததியில்லாமையா லுண்டாகிய மனவருத்தத்தைச் சந்நிதானத்திற் குறிப்பிக்கச், சுவாமிகள் திருவுளமிரங்கி அப்பா உனக்கு அண்ணாமலையார் கிருபையால் மூன்று புத்திரரும் ஒரு புத்திரியும் உளராவர். அவருள் மூத்தகுமாரனுக்கு நமது திருநாமந் தரித்து நமக்குத் தரல்வேண்டும், மற்ற புத்திரர்களையும் புத்திரியையும் உம்மிடத்து வைத்துக்கொள்ளல் வேண்டுமென்று விபூதிப் பிரசாதங் கொடுத்தருளினர்.

சுவாமிகள் கட்டளையிட்டபடியே மூன்று புத்திரரும் ஒரு புத்திரியும் உற்பவித்தனர். அவர்களில் முதற் புத்திரனுக்குச் சிவப்பிரகாசனென்றும் மற்றவர்கட்கு வேலையனென்றுங் கருணையனென்றும் ஞானாம்பாளென்று நாமகரணமும் சிவலிங்கதாரணமுஞ் செய்து வளர்க்க வளருநாளில், சிவப்பிரகாசரென்கிற சிரேட்ட குமாரர் கல்வியில் மிகத் தேர்ச்சி யுடையராய் ஞான சாஸ்திராப்பியாச விருப்பமுற்றுச் சுவாமிகளிடத்திற் போந்து சங்கமதீட்சை பெற்றுக்கொண்டு, ஞானசாஸ்திரங்களை யோதி யுணர்ந்து அவரிடத்து விடைபெற்றுச் சந்நிதானத்தினின்று மரிதினீங்கிச் சிவஸ்தல யாத்திரை செய்து வருகையில் அவ்விடத்து வசிக்கும் அண்ணாமலை ரெட்டியா ரென்பவர் இவரது கல்வித்திறத்தையும் ஞானசாஸ்திர முதிர்ச்சியையுங் கண்டு

மகிழ்ந்து, துறைமங்கலத்தின்கண் ஓர் திருமடம் அமைத்துக் கொடுத்துச் சம்ரக்ஷணை செய்துவந்தார். அதனால் அவருக்குத் துறைமங்கலம் சிவப்பிரகாசரென்று திருநாமம் வழங்கிவருகின்றது. இதுநிற்க, துறையூரில் அரசாட்சிசெய்திருந்த இலிங்கதுரையென்பவர் தந்தமையனுக்குந் தமக்குநேரிட்ட மனவருத்தத்தினாற் காசியாத்திரையின்பொருட்டு அநேக சைந்நியங்களோடு பிரயாணப்பட்டுச் செல்லுகையில், திருவண்ணாமலை நாதரைத் தரிசனஞ் செய்துகொண்டு அவ்விடத் தெழுந்தருளியிருக்குஞ் சிவப்பிரகாச சுவாமிகளின் மகிமைகளைக் கேள்வியுற்றுச் சுவாமிகள் சந்நிதானத்திற்சென்று வணங்கி யஞ்சலியஸ்தராய் நின்றனர். அப்போது சுவாமிகள் திருவுள மகிழ்ச்சியோடு உமது மனோபீஷ்டம் நிறைவேறுக வென்று ஆசீர்வதித்து விபூதிப் பிரசாத மளித்தனுப்ப, அவர் காசிக்குச் சென்று மீண்டு வரும்பொழுது சுவாமிகள் சந்நிதானத்து வந்து தரிசனஞ்செய்து விபூதிப் பிரசாதம் பெற்றுக்கொண்டு அஞ்சலியஸ்தராய் நிற்கையில் துறையூரில் தமையன் இறந்தமையால் அரசுக்கொருவரு மின்மையை மந்திரி பிரதானிகள் முதலியோர்கள் ஆலோசித்துக் காசிக்குச் சென்ற இளவரசரான இலிங்கதுரை திருவண்ணாமலையிற் சிவப்பிரகாசசுவாமிகள் சந்நிதானத்தில்வந் திறங்கி யிருக்கின்றசெய்தியுணர்ந்து, இவர்களெல்லோரு மங்குச்சென்று அரசற்குச் செய்யத்தகும் மரியாதைகளனைத்துஞ்செய்து, நிகழ்ந்த சமாசாரங்களைச்சொல்லியமாத்திரத்தில், அரசனு மனவருத்தமுற்று ஒருவாறுதேறி இது சிவப்பிரகாசசுவாமிகளின் சந்நிதானப்பெருமையையென்று கருதிச், சுவாமிகளுக்கு உடல் பொருள் ஆவி மூன்றுஞ் சத்தியமாக ஒப்பித்துவிட்டேன். அடியேனை அடிமைகொண்டு சிவலிங்கதாரணஞ்செய்து சிவபூசைக்கும் சிவத்தியானத்துக்கும் யோக்கியனும்படி கடாக்ஷித்தருளல் வேண்டுமென்று பிரார்த்திக்க, அங்ஙனமே சிவலிங்கதாரணஞ் செய்து அடிமை கொண்டருளப்,பின்பு அவ்வரசன் சுவாமீ!அடிமையோடுகூடவே துறையூருக்கெழுந்தருளிச் சதாதரிசனங் கொடுத்தருளல் வேண்டுமென்று வேண்ட, அவ்வண்ணமே திருக்கூட்டத்தோடு மெழுந்தருளிச் செல்லுகையில் நெறிக்கணுள்ள பெண்ணையாறு மிகப் பெருகி வரலைக்கண்ணுற்ற சிலர் சந்நிதானத்தில் விண்ணப்பஞ் செய்தனர். சுவாமிகள் அவர்கள் கையில் விபூதிப்பிரசாதங்கொ

டுத்தருளி இதை யப்பிரவாகத்தி லிட்டுச் சிவிகையைவிடக் கட்டளை யிட்டனர். அவர்களங்ஙனமே செய்து சிவிகையை நடத்த அப்பிரவாக மடங்கிக் கணைக்காலளவாக அச்சிவிகையின் பின் திருக்கூட்டத்தனைவரும் சென்று கரைசேர்ந்தனர். இவ் வற்புதத்தை அரசன்கண்டு மகிழ்ந்து சுவாமிகளோடு துறையூரின்கண் வந்தெய்தித் தமையனுக்குச் செய்யவேண்டிய நீர்க்கடன் முதலியவற்றைச் செய்து முடித்து அரசுசெலுத்தி வருநாளில் தனதரண்மனைக்கெதிரில் ஓர் திருமடம் சிறப்பாக வமைத்துக் கொடுத்துப் பூசைநைவேத்தியத்தின் பொருட்டுச் சர்வமான்னியமாகச் சிலகிராமங்களைச் சாசன மெழுதிக்கொடுத்தது மன்றி நாள்தோறும் அரண்மனையி லிருந்து நைவேத்தியத்திற்கு வேண்டும் சாமக்கிரியைகளும் பத்துப்பொன்னும் அனுப்பிச் சுவாமிகளையுந் திருக்கூட்டத்தையும் அன்போடு பாதுகாத்துத் தினமும் தரிசனஞ் செய்துகொண் டிருந்தனன்.

சுவாமிகள் அவ்விடத்துள்ள சில அடியவர்களுக்குத் தீட்சை தாரணமுதலிய செய்துகொண்டு சுவயலீலானந்தமா யெழுந்தருளி யிருக்குநாளில் ஓர்நாள், திருவாவடுதுறையிற் குருதரிசனஞ் செய்யவேண்டுமென்னும் பேரன்போடு அவ்விடம் விட்டுத் திருக்கூட்டத்தோடு சகல விருதுவாத்திய ஆடம்பரங்களுடனே பிரயாணப்பட்டுத் திரிசிரபுரத்தின்கணுள்ள தலத்தார் மகத்தார் மடத்தார் அந்நாட்டார்முதலியோருக்குத் தமதுநல்வரவு தெரிவிக்க அவர்களனைவரு மொருங்கு கூடிவந்து தரிசித்து வணங்கித் துதித்து மகிழ்ந்து பட்டணப்பிரவேசமாக அழைத்துக்கொண்டுபோகும்போது, தீவட்டிகளுக்கெண்ணெ யில்லாமையினாலும் அகாலமானமையினாலும் யாவரும் மனவருத்தப்பட, அதைச் சுவாமிகளுணர்ந்து திருக்கூட்டத்திலோர் தம்பிரானை அருகழைத்து நீ காவேரியில் ஸ்நானுனுட்டானஞ்செய்து குடங்களி லந்நீரைப் பூரித்து ஆட்களின் றலைமீதெடுப்பித்துக்கொண்டுவந்து விட்டெரித்துக் கருமமுடிப்பாயாகவெனக் கட்டளையிட்டருளத், தம்பிரான் அங்ஙனமே செய்ய யாதொரு குறைவுமின்றிச் சுவாமிகள் சகல விபவத்தோடும் சாரமாமுனிவர் ஆச்சிரமத்திற் சென்றிறங்கிப் பூசை முடித்து மாதுபூரேசுரரைத் தரிசித்து நைவேத்தியஞ் செய்துகொண்டு சிவிகைமேலேறி அவ்விடம் விட்டுத் திருச்சோற்றுத் துறையென்னுந் தலத்துக்குச் சமீபத்திற் செல்லும்போது

மார்க்கமத்தியில் ஓரால விருட்ச நிழலிலிருந்த வோர் குட்ட ரோகி கண்டு வணங்கிக் கைகூப்பி நின்று வருத்தமுறுவதைச் சுவாமிகள் அவனிடுக்கணுக்கிரங்கித் தமது திருவாயிற்றம்பலத்தை உமிய அந்நோயாளி அதை யிதுதான் நமது தீராப்பிணிக்கும் பவப்பிணிக்கும் பரமௌஷதமென்று கருதி அன்போடெடுத்துப் புசித்த வளவில் அக்குஷ்டந் தீர்ந்து திவ்வியதேகம் பெற்றுத் திருக்கூட்டத் தொருவனு யிருந்தனன்.

பின்பு சோழவம்மிசத் தரசரில் ஓரரசன் பிரமகத்தி தோஷத்தாற் குணபேதப்பட்டோர்தோறு மலைந்து திரிந்துகொண் டிருந்தனன். அவன் சுவாமி சகலசம்பிரமத்துடனே பல்லக்கிற் செல்வதைக்கண்டு விரைந்தோடிவந்து கையாற் சிவிகையைப்பற்றி மறுத்தனன். அப்பொழுது சுவாமிகள் அங்குள்ளவர்களை நோக்கி இவன் யாரொன்று வினவினர். அவர்கள் அவனது விருத்தாந்தத்தை விவரணமாகச் சொல்லத் திருவுளமிரங்கித் திருக்கரத்தால் விபூதியை அவன்மீது தெறித்த உடனே அப்பிரமகத்தி தோஷமும் குணபேதமும் நீங்கப் பரமசந்துஷ்டனுய்ச் சுவாமிகளைப் பலமுறை பணிந்து பரவி நற்குண நற்செய்கை யுடையவனுய்த் தனதரண்மனைக்கட்கென்று அரசுசெய்திருந்தனன்.

அங்கிருந்து திருக்கலையநல்லூருக்குச் சமீபத்திற் செல்லும் போது நெறியில் அவ்வூர்ச் சிவஸ்தலத்தருச்சகராகிய ஆதிசைவப் பிராமணருடைய புத்திரனெருவன் சர்ப்பந்தீண்டி இறந்ததனுற் பிரேதத்தைத் துக்காக்கிரந்தரா யழுதலறிக்கொண்டு மயானத்திற் கெடுத்துச் செல்லச், சுவாமிகள் நோக்கி யப்பிரேதத்தின் பின் செல்லுகின்றவரைச் சமீபத்திலழைத்து நிகழ்ந்த செய்தியைக்கேட்டுத் திருவுளமிரங்கி, இச்சிறுவன் உயிர்பெற்றெழின் நமக்குக் கொடுப்பீர்களாவென, அவர்கள் இவ்வுயிர் நீங்கிய பிரேதத்தைத்தானு கொடுக்கவேண்டுமென்று மனவருத்தத்தோடுரைக்கக்கேட்டு, அந்தச் சங்கற்பம் உங்கட்கேன், உங்கட்கு உபயோகமற்ற பிரேதந்தானே, அதைக் கொடுக்க ஏன் மனமில்லையென, மாதவர்மகிமை யெங்ஙன மிருக்குமோ வென்று அவர்களனைவரு மவ்வாறே செய்ய வுடன்பட்டார்கள். உடனே சுவாமிகள் தமது திருக்கரத்தால் திருநீறெடுத்து மந்திரித்து அப்பிரேதத்தின்மீது தெறித்துத் திருஞானக்கூத்தாவென்று தமது

ருளித் திருக்கழுக்குன்றஞ்சென்று சிவதரிசனஞ் செய்துகொண் டத்தலத்தி னின்றுங் காஞ்சிபுரத்திற் கெழுந்தருளி யங் கச்சிவ பெருமானைத் தரிசனஞ் செய்துகொண்டு அவ்விடம்விட் டிராய வேலூருக்குச் சென்றபோது, அங்குள்ள தலத்தாரும் மகத்தா ரும் மடாதிபதிகளு மற்றச் சைவர்களும் சிவப்பிரகாச சுவாமி கள் எழுந்தருளுவதைக் கேள்வியுற்று எதிர்கொண்டு சென்று வணங்கிச் சுவாமிக ணல்வரவினைப் பணிவோடு வினவினார்கள். அப்பொழுது சுவாமிகள் தமது திருவுளக் குறிப்பைக் கட்டளை யிட்டருள, அவர்கள் சுவாமீ! அரசனோ பிராமணன். மந்திரியி னுடைய சகாய மிருந்தாற்றான் சுவாமிகள் கருத்து முற்றுப்பெ றும். ஆதலால் முன்னரதைத் தேடிக்கொள்ளல்வேண்டுமென்று விண்ணப்பஞ் செய்யக் கேட்டுச் சுவாமிகள் மந்திரி எக்குலத்தி னர், எம்மதத்தினர், எத்தன்மையர், அவர் பெயர்யாது? என வினவினர். அவ்வன்பர்கள் மந்திரி கன்னடர், வீரசைவர், பக்த ரிடத் தன்புள்ளவர், இலிங்கணபத்தர் என்பது அவர் பெயர். மேலும் வீரசைவ சமயாசாரிய ராகிய சித்தராம தேவசுவாமிகள் ஆதீனத்துச் சிஷியரும் சிவலிங்கதாரண சம்பந்தமுள்ள வருமாத லால் அவர் லிங்காங்க சம்பந்த மில்லாதவர்கள் யாராயிருக்கி னும் முகாவலோகனஞ் செய்கிறது மில்லை என்றனர்.

அதுகேட்டுச் சுவாமிகள் இதற்கியாது செய்யத்தக்கது என்று மயங்கி ஒருவாறு தெளிந்து சிவசம்பந்தஞ் சைவமென்னும் வேத வாக்கியார்த்தங்களையும் வாதுளாகமம் வீராகம முதலிய ஆகம வாக்கியங்களையும் பல முறை ஆலோசித்துப் பெட்டகத்து ளெழுந்தருளி யிருக்கும் சிவலிங்கப் பெருமானைச் சிறுபெட் டகத் தெழுந்தருளச்செய்து உத்தமாங்கமான சிரசின்மீது தரித் துச் செல்லலாமென்று திருவுளத் துணர்ந்துகொண் டிருக்கை யில், அம்பலவாணர் அசரீரியாக அங்ஙனமே புரிதியென்று மும் முறை கட்டளை யிட்டருளலும் சுவாமிகள் ஆனந்த பரவசராய்ப் பணிந்தெழுந்து பூசைத் தம்பிரானைத் தருவித்துச், சிவபூசைக் கிடம் பண்ணக் கட்டளையிட்டுத், தாம் ஸ்நாநுனுஷ்டானம் செய்து சிவபூசை முடித்துச் சிவலிங்கப் பெருமானைச் சிறுபெட்ட கத் தெழுந்தருளப்பண்ணிச் சிரசின்மீது தரித்துக்கொண்டு தமது சந்நிதி சங்கமர்களுக்கும் அவ்வாறே சிவலிங்கந் தரிப்பித்துப்

பின்பு அவ்விலிங்கண பத்தன் அரண்மனைக்குட் சென்று தமது வரவைத் தெரிவித்தனர்.

அம்மந்திரி நஞ்சமயாசாரியர் எழுந்தருளினரென்றுணர்ந்து சகல விருது வாத்தியங்களோடு மெதிர்கொண்டுவந்து தன்னரண்மனைக் கெழுந்தருளச்செய்து அர்க்கியபாத்திய ஆசமனாதி சோடசோபசாரங்களோடு பாதபூசைசெய்து விதிப்படி நமஸ்கரித்துத் தீர்த்தப்பிரசாதம் பெற்றுக் கைகட்டி வாய்பொத்தி அடங்கி யொடுங்கி மிகுந்த பயபக்தியோ டஞ்சலியஸ்த்தனாய் நின்று ஒன்றுக்கும் பற்றாத அடியேனை ஓர்பொருளாகத் திருவுளத்தடைத்து இச்சிறு குடிலுக்கெழுந்தருளிய காரணம் யாதென விண்ணப்பஞ் செய்யச், சுவாமிகள் சிதம்பரத்தின்கண் வைணவனாகிய வொருவடுகன் சிவாபராதியாய் அதிகாரஞ் செலுத்துகின்றனன் என்று அவ்வடுகனது தீயவொழுக்கங்களனைத்தையும் ஆதியோடந்தமாய்த் திருவாய் மலர்ந்தருளக் கேட்டமாத்திரத்தில், அவ்வாமாத்திரர் மிகமனவருத்தமுற்று உடனேயேவலாளர்களைக் கூவி அதிசீக்கிரத்திற் சிதம்பரஞ்சென்று சிவாபராதியாய் அதிகார நடத்துகின்ற அவ்வடுகனைச் சிரச்சேதஞ் செய்து அம்பலவாணருக்கு வழக்கப்படி சகல வருமானங்களையும் மீட்டுக்கொடுத்துச் சிறப்பாகக் கும்பாபிஷேகமுஞ் செய்வித்து முன்போலத் தாழ்வின்றி நித்திய நைமித்திகங்களை நடப்பிக்கத் திட்டஞ்செய்து விபூதிப் பிரசாதம் இங்குக் கொண்டுவரச் செய்யென்று அவர்களுக்குச் சர்வாதிகாரமுங் கொடுத்தனுப்ப, அவர்கள் சிதம்பரஞ்சென்று அவ்வாறே நிறைவேற்றித் தீக்ஷிதர்களால் விபூதிப்பிரசாதங் கொடுப்பித்தனர், அதனைச் சிவப்பிரகாச சுவாமிகள் அதிவினயத்தோடு தமது திருக்கரத்திலேற்றுச் சிவகவசமாக நெற்றியிற்றரித்து மந்திரியாருக்குங் கொடுப்பிக்க, அவரும் விதிப்படி வாங்கிச் சர்வாங்கமுந் தூளிதஞ் செய்துகொண்டு பின்பு சித்தராமதேவரை வரவழைத்து வீரசைவக்கிரியாசாரத்தைப் பெற்று எல்லோரும் சமத்துவமாக இருந்து லிங்கநிவேதனயஞ்செய்து முடித்தபின்னர் ஆத்மார்த்தசாஸ்திர சம்பாஷணஞ் செய்துகொண் டெழுந்தருளி யிருக்கும்போது, அரசன் சுவாமிகள் அங்கெழுந்தருளி யிருத்தலையும் அவரது மகிமையையுங் கேள்வியுற்று மந்திரியார் அரண்மனைக்கு வந்து சுவாமிகளைக்கண்டு தரிசித்து, சுவாமீ! இத்தேசத்தில் சிலநாளாய் மழை

சுவாமிகள் திருவடியில் நமஸ்க்காரஞ் செய்து அவராற் றந்தருளப்பெற்ற விபூதி ருத்திராட்ச பஞ்சாட்சரமுதலிய அஷ்ட்டாபரணதாரியாய் அடிமைப்பட்டு அஞ்சலியஸ்தராய் நிற்கச், சுவாமிகள் திருவாக்கினாற் றாளிதங் காளத்திமூர்த்தியெனத் தீட்சாநாமந்தரித்து, அவரைத் திருக்கூட்டத் தொருவராய்ச் சேர்த்துக்கொண்டு, ஆலயத் தடைந்து சிவதரிசனஞ் செய்து அவ்விடம் விட்டுக் கலியாணபுரிக்கெழுந்தருளி அவ்விடத்துள்ள அன்பர்களுக்கு இலிங்கநிட்டானுபவத்தை அனுக்கிரகித்து, அவ்விடம் விட்டு உடும்பை 'சுப்பிரமண்ணியமென்னும் ஸ்தலத்துக்கெழுந்தருளி அத்தலத்துக்குச் சமீபத்திலுள்ள வோருத்தியான வனத்தையுந் திவ்வியமாகிய வோர் தடாகத்தையுங் கண்டு, அவ்விடத்திறங்கி மூன்றுதின மளவும் நித்திய கன்மானுஷ்ட்டானம் சிவபூசை அன்னபானீயமொழிந்து விதேககைவல்லிய நிஷ்ட்டாநுபூதியி லிருந்தனர். அப்பொழுது சிவபெருமான் அவ்வூரின்கணுள்ள அன்பர்களது சொப்பனத்தெழுந்தருளி நம்மடியானாகிய சிவப்பிரகாசன் அன்னபானீய மின்றி யிருக்கின்றனன். அவனுக்கு அமுதுபடைக்கக் கடவீர் என்று கட்டளையிட்டருளி மறைய, அவர்கள் அனந்தல் தவிர்ந்தெழுந்து நித்திய கன்ம முடித்துக்கொண்டு சுவாமிகள் நிட்டை செய்துகொண்டிருக்குமிடத்திற்கு வந்து வணங்கித் துதித்து நிட்டையைத் தெளிவித்துப் பயபக்தியோடு அஞ்சலியஸ்தராய் நின்று அமுதுகொள்ள வேண்டுமென்று பிரார்த்திக்கச், சுவாமிகள் அவர்களன்பிற்கிரங்கி அங்ஙனமே யாகட்டுமெனத் திருவாக்களித்துச் சிவபூசைசெய்துகொண்டு, அவர்களா லமைக்கப்பட்ட அறுசுவையோடு கூடிய வுண்டிகளைத் திருக்கூட்டத்தோடு அமுதுசெய்தருளிச், சிலகாலம் அவர்கள் வேண்டுகோளுக் குடம்பட்டு அங்கெழுந்தருளியிருந்து, பின் பவ்விடம்விட்டுத் திருச்செங்கோடென்னுஞ் சிவஸ்தலத்துக் கெழுந்தருளினர்.

அப்போது அத்தலத்தின்கணுள்ள கேதாரி ஐயர் என்கிறவோர் பிராமணருடைய சிஷியர்களில் சிலர் இப்பிராமணவீதியில் சூத்திரராகிய நீர் சிவிகையேறிச் செல்லுதல் கூடாதென்றுதடுக்க, இதுவும் அம்பலவாணர் கிருபைதானென்று சிவிகையினின்றிறங்கி எப்படிப்பட்ட பெரியோர்களாயினும் பிராரத்தகன்மத்தை அனுபவித்தே தொலைத்தல் வேண்டுமென்று

சொல்லிக்கொண்டு பாதசாரியாய்ச் செல்லும்போது, அவர்கள் நீர் பெரியராயின் இந்தச் சந்நிதியி லிருக்கின்ற கல்லிடபத்தை நாங்கள் கொடுக்கு மிக்கடலையைத் தின்னச் செய்வீராயின் நீர் கூறியவார்த்தை யுண்மைதானென்று உல்லங்கனமாகச் சொல்ல அதைக்கேட்டுச் சுவாமிகள் புன்னகைபுரிந்து, அங்ஙனமே தின்னுமாயின் நீவிர் யாது செய்துகொள்ளுகின்றீர்களென்று கூற அதற்கவர்கள் நாங்களனைவரும் உமக் கடிமையாகின்றோமென்று பிரதிக்ஞைசெய்ய நல்லதென்று, அவர்களாற் றரப்பட்ட கடலையை அவ்விடபத்தின் முன்வைத்து,

"வில்லார் மணிச்சபையின் வித்தகா கூடலின்முன்
கல்லானைக் கிக்கருத்திக் காட்டியவுன்—வல்லாண்மை
கட்டுரையே யாகிலிந்தக் கல்லே றெழீஇக்கடலை
இட்டவிவர் முன்றினச்செய் யே."

என்னு மிவ்வெண்பாவைத் திருவாய்மலர்ந்தருளித் தமது திருக்கரத்தாற் றிருவெண்ணீ றெடுத்திட்டவளவில்,அது வாலைநிமிர்த்துக் காலைநீட்டி ஆரவாரித்தெழுந்து அக்கடலை முழுமையும் புசித்துநிற்ப,இத்தெய்வீகத்தைக்கண்ட அப்பிராம்மணர்கள் மிகுந்த வச்சமடைந்து தம தாசிரியரான கேதாரி ஐயர்பாற்சென்று இதை விண்ணப்பஞ்செய்யக் கேட்டமாத்திரத்தில், அவர் ஓடிவந்து தீர்க்க தண்டஞ்செய்து அடியேங்கள்செய்த அபராதத்தைத் திருவுளத்தடைக்காது மன்னித்து, அடியேங்களை அடிமைகொண்டு இச்சிவிகைமீது முன்போலவே யெழுந்தருளல்வேண்டும். அங்ஙனஞ் செய்யாது பாதசாரியாச் செல்லின் சுவாமிகள் சந்நிதியிலேயே யுயிர்விடுவோமென்று அன்போடு பிரார்த்திக்க, அவர்களன்புக்கிரங்கி யங்ஙனமே சிவிகைமீ தெழுந்தருளி அர்த்தநாரீசுரரைத் தரிசனஞ்செய்துகொண்டு, அக்கேதாரிஐயர் திருமடத்திலிறங்கி அவர்களுக்குச் சிவலிங்கதாரண தீட்சை முதலியவைகளைச் செய்து, சிலகாலம் அவ்விடத்து வசித்திருந்து பின்பவ்விடம்விட்டுத் திருவண்ணுமலைக் கெழுந்தருளித் திருமடத்தில் வசித்திருக்கின்றகாலத்தில், காஞ்சீபுரத்திலிருந்து திருவண்ணுமலைத் தரிசனத்துக்காக வந்த குமாரசுவாமிப் பண்டாரமென்னு மோர்சைவர் மத்தியிலுள்ள கல்லாற்றங்கரையி லிறங்கிச் சிவபூசை முடித்துத், தம தாத்மார்த்த பூசைப்பெட்டகத்தை அங்கிருந்த வோர் கொன்றை மரத்திற் றூக்கிப், போசனஞ்செய்து

போகும்போது, அதை மறந்துசென்று மறுநாள் திருவண்ணு மலையில் ஸ்நானஞ்செய்து பூசைப்பெட்டகத்தைத் தேடிப்பார்த்துக் காணுமையால் அதிக மனவருத்தமுற்று மூன்றுநாள் ஆகாரமின்றிச் சஞ்சலப்படுவதை அண்ணுமலையார் திருவுளத்துணர்ந்து, அவர் சொப்பனத்தில் வயோதிகப் பிராமணவடிவங்கொண்டெழுந்தருளி, அப்பா நீ அங்கம்வேறு இலிங்கம்வேறு யிருந்தமையா லிவ்வாறு ஆபத்து நேரிட்டது. ஆதலால் இத்தலத்தில் அக்கினிதீர்த்தத்துக் கருகிலுள்ள திருமடத்தில் சிவப்பிரகாசனென் றொருவ னிருக்கின்றனன், அவன்பாற் சென்று சிவலிங்கதாரணஞ்செய்து கொள்வாயாகவென்று திருவாய்மலர்ந்து மறைந்தருளினர். உடனே அவர் விழித்தெழுந்து நித்தியகன்மானுட்டான முடித்துச் சுவாமிகளிடத்திற்சென்று வணங்கி யஞ்சலியஸ்தராய், நிகழ்ந்த சங்கதிகளையும் அண்ணுமலையார் கட்டளையிட்டதையும் விவரணமாக விண்ணப்பஞ்செய்து, சிவலிங்கதாரணஞ்செய்யப் பெற்றுக்கொண்டு சந்நிதானத்தில் வசிக்குங் காலத்து ஓர்நாள் தமக்குச் சந்ததியில்லாமையா லுண்டாகிய மனவருத்தத்தைச் சந்நிதானத்திற் குறிப்பிக்கச், சுவாமிகள் திருவுளமிரங்கி அப்பா உனக்கு அண்ணுமலையார் கிருபையால் மூன்று புத்திரரும் ஒரு புத்திரியும் உளராவர். அவருள் மூத்தகுமாரனுக்கு நமது திருநாமந் தரித்து நமக்குத் தரல்வேண்டும், மற்ற புத்திரர்களையும் புத்திரியையும் உம்மிடத்து வைத்துக்கொள்ளல் வேண்டுமென்று விபூதிப் பிரசாதங் கொடுத்தருளினர்.

சுவாமிகள் கட்டளையிட்டபடியே மூன்று புத்திரரும் ஒரு புத்திரியும் உற்பவித்தனர். அவர்களில் முதற் புத்திரனுக்குச் சிவப்பிரகாசனென்றும் மற்றவர்கட்கு வேலையனென்றுங் கருணையனென்றும் ஞானம்பாளென்று நாமகரணமும் சிவலிங்கதாரணமுஞ் செய்து வளர்க்க வளருநாளில், சிவப்பிரகாச ரென்கிற சிரேட்ட குமாரர் கல்வியில் மிகத் தேர்ச்சி யுடையராய் ஞான சாஸ்திராப்பியாச விருப்பமுற்றுச் சுவாமிக ளிடத்திற் போந்து சங்கமதீட்சை பெற்றுக்கொண்டு, ஞானசாஸ்திரங்களையோதி யுணர்ந்து அவரிடத்து விடைபெற்றுச் சந்நிதானத்தினின்று மரிதினீங்கிச் சிவஸ்தல யாத்திரை செய்து வருகையில் அவ்விடத்து வசிக்கும் அண்ணுமலை ரெட்டியா ரென்பவர் இவரது கல்வித்திறத்தையும் ஞானசாஸ்திர முதிர்ச்சியையுங் கண்டு

மகிழ்ந்து, துறைமங்கலத்தின்கண் ஓர் திருமடம் அமைத்துக் கொடுத்துச் சம்ரக்ஷணை செய்துவந்தார். அதனால் அவருக்குத் துறைமங்கலம் சிவப்பிரகாசரென்று திருநாமம் வழங்கிவருகின்றது. இதுநிற்க, துறையூரில் அரசாட்சிசெய்திருந்த இலிங்கதுரையென்பவர் தந்தமையனுக்குந் தமக்குநேரிட்ட மனவருத்தத்தினுற் காசியாத்திரையின்பொருட்டு அநேக சைந்நியங்களோடு பிரயாணப்பட்டுச் செல்லுகையில், திருவண்ணுமலை நாதனைத் தரிசனஞ் செய்துகொண்டு அவ்விடத் தெழுந்தருளியிருக்குஞ் சிவப்பிரகாச சுவாமிகளின் மகிமைகளைக் கேள்வியுற்றுச் சுவாமிகள் சந்நிதானத்திற்சென்று வணங்கி யஞ்சலியஸ்தராய் நின்றனர். அப்போது சுவாமிகள் திருவுள மகிழ்ச்சியோடு உமது மனோபீஷ்டம் நிறைவேறுக வென்று ஆசீர்வதித்து விபூதிப் பிரசாத மளித்தனுப்ப, அவர் காசிக்குச் சென்று மீண்டு வரும்பொழுது சுவாமிகள் சந்நிதானத்து வந்து தரிசனஞ்செய்து விபூதிப் பிரசாதம் பெற்றுக்கொண்டு அஞ்சலியஸ்தராய் நிற்கையில் துறையூரில் தமையன் இறந்தமையால் அரசுக்கொருவருமின்மையை மந்திரி பிரதானிகள் முதலியோர்கள் ஆலோசித்துக் காசிக்குச் சென்ற இளவரசரான இலிங்கதுரை திருவண்ணுமலையிற் சிவப்பிரகாசசுவாமிகள் சந்நிதானத்தில்வந் திறங்கி யிருக்கின்றசெய்தியுணர்ந்து, இவர்களெல்லோரு மங்குச்சென்று அரசற்குச் செய்யத்தகும் மரியாதைகளனைத்துஞ்செய்து, நிகழ்ந்த சமாசாரங்களைச்சொல்லியமாத்திரத்தில், அரசனு மனவருத்தமுற்று ஒருவாறுதேறி இது சிவப்பிரகாசசுவாமிகளின் சந்நிதானப்பெருமையையென்று கருதிச், சுவாமிகளுக்கு உடல் பொருள் ஆவி மூன்றுஞ் சத்தியமாக ஒப்பித்துவிட்டேன். அடியேனை அடிமைகொண்டு சிவலிங்கதாரணஞ்செய்து சிவபூசைக்குஞ் சிவத்தியானத்துக்கும் யோக்கியனும்படி கடாக்ஷித்தருளல் வேண்டுமென்று பிரார்த்திக்க, அங்ஙனமே சிவலிங்கதாரணஞ் செய்து அடிமைகொண்டருளப், பின்பு அவ்வரசன் சுவாமீ! அடிமையோடுகூடவே துறையூருக்கெழுந்தருளிச் சதாதரிசனங் கொடுத்தருளல் வேண்டுமென்று வேண்ட, அவ்வண்ணமே திருக்கூட்டத்தோ டெழுந்தருளிச் செல்லுகையில் நெறிக்கணுள்ள பெண்ணையாறு மிகப்பெருகி வரலைக்கண்ணுற்ற சிலர் சந்நிதானத்தில் விண்ணப்பஞ் செய்தனர். சுவாமிகள் அவர்கள் கையில் விபூதிப்பிரசாதங்கொ

டுத்தருளி இதை யப்பிரவாகத்தி லிட்டுச் சிவிகையைவிடக் கட்டளை யிட்டனர். அவர்களங்ஙனமே செய்து சிவிகையை நடத்த அப்பிரவாக மடங்கிக் கணைக்காலளவாக அச்சிவிகையின் பின் திருக்கூட்டத்தனைவரும் சென்று கரைசேர்ந்தனர். இவ் வற்புதத்தை அரசன்கண்டு மகிழ்ந்து சுவாமிகளோடு துறையூரின்கண் வந்தெய்தித் தமையனுக்குச் செய்யவேண்டிய நீர்க்கடன் முதலியவற்றைச் செய்து முடித்து அரசுசெலுத்தி வருநாளில் தனதரண்மனைக்கெதிரில் ஓர் திருமடம் சிறப்பாக வமைத்துக் கொடுத்துப் பூசைநைவேத்தியத்தின் பொருட்டுச் சர்வமானிய மாகச் சிலகிராமங்களைச் சாசன மெழுதிக்கொடுத்தது மன்றி நாள்தோறும் அரண்மனையி லிருந்து நைவேத்தியத்திற்கு வேண்டும் சாமக்கிரியைகளும் பத்துப்பொன்னும் அனுப்பிச் சுவாமிகளையுந் திருக்கூட்டத்தையும் அன்போடு பாதுகாத்துத் தினமும் தரிசனஞ் செய்துகொண் டிருந்தனன்.

சுவாமிகள் அவ்விடத்துள்ள சில அடியவர்களுக்குத் தீட்சை தாரணமுதலிய செய்துகொண்டு சுவயலீலானந்தமா யெழுந்தருளி யிருக்குநாளில் ஓர்நாள், திருவாவடுதுறையிற் குருதரிசனஞ் செய்யவேண்டுமென்னும் பேரன்போடு அவ்விடம் விட்டுத் திருக்கூட்டத்தோடு சகல விருதுவாத்திய ஆடம்பரங்களுடனே பிரயாணப்பட்டுத் திரிசிரபுரத்தின்கணுள்ள தலத்தார் மகத்தார் மடத்தார் அந்நாட்டார்முதலியோருக்குத் தமதுநல்வரவு தெரிவிக்க அவர்களனைவரு மொருங்கு கூடிவந்து தரிசித்து வணங்கித் துதித்து மகிழ்ந்து பட்டணப்பிரவேசமாக அழைத்துக்கொண்டுபோகும்போது, தீவட்டிகளுக்கெண்ணெ யில்லாமையினாலும் அகால மானமையினாலும் யாவரும் மனவருத்தப்பட, அதைச் சுவாமிகளுணர்ந்து திருக்கூட்டத்திலோர் தம்பிரானை அருகழைத்து நீ காவேரியில் ஸ்நானனுட்டானஞ்செய்து குடங்களி லந்நீரைப் பூரித்து ஆட்களின் றலைமீதெடுப்பித்துக்கொண்டுவந்து விட்டெரித்துக் கருமமுடிப்பாயாகவெனக் கட்டளையிட்டருளத், தம்பிரான் அங்ஙனமே செய்ய யாதொரு குறைவுமின்றிச் சுவாமிகள் சகல விபவத்தோடும் சாரமாமுனிவர் ஆச்சிரமத்திற் சென்றிறங்கிப் பூசை முடித்து மாதுபூதேசுரரைத் தரிசித்து நைவேத்தியஞ் செய்துகொண்டு சிவிகைமேலேறி அவ்விடம் விட்டுத் திருச்சோற்றுத் துறையென்னுந் தலத்துக்குச் சமீபத்திற் செல்லும்போது

மார்க்கமத்தியில் ஓரால விருட்ச நிழலிலிருந்த வோர் குட்ட ரோகி கண்டு வணங்கிக் கைகூப்பி நின்று வருத்தமுறுவதைச் சுவாமிகள் அவனிடுக்கனுக்கிரங்கித் தமது திருவாயிற்றம்பலத்தை உமிய அந்நோயாளி அதை யிதுதான் நமது தீராப்பிணிக்கும் பவப்பிணிக்கும் பரமௌஷதமென்று கருதி அன்போடெடுத்துப் புசித்த வளவில் அக்குஷ்டந் தீர்ந்து திவ்வியதேகம் பெற்றுத் திருக்கூட்டத் தொருவனா யிருந்தனன்.

பின்பு சோழவம்மிசத் தரசரில் ஓரரசன் பிரமகத்தி தோஷத்தாற் குணபேதப்பட்டூர்தோறு மலைந்து திரிந்துகொண் டிருந்தனன். அவன் சுவாமி சகலசம்பிரமத்துடனே பல்லக்கிற் செல்வதைக்கண்டு விரைந்தோடிவந்து கையாற் சிவிகையைப்பற்றி மறுத்தனன். அப்பொழுது சுவாமிகள் அங்குள்ளவர்களை நோக்கி இவன் யாரென்று வினவினர். அவர்கள் அவனது விருத்தாந்தத்தை விவரணமாகச் சொல்லத் திருவுளமிரங்கித் திருக்கரத்தால் விபூதியை அவன்மீது தெறித்த உடனே அப்பிரமகத்தி தோஷமும் குணபேதமும் நீங்கப் பரமசந்துஷ்டனாய்ச் சுவாமிகளைப் பலமுறை பணிந்து பரவி நற்குண நற்செய்கை யுடையவனாய்த் தனதரண்மனைக்கட்கென்று அரசுசெய்திருந்தனன்.

அங்கிருந்து திருக்கலையநல்லூருக்குச் சமீபத்திற் செல்லும்போது நெறியில் அவ்வூர்ச் சிவஸ்தலத்தருச்சகராகிய ஆதிசைவப் பிராமணருடைய புத்திரனொருவன் சர்ப்பந்தீண்டி இறந்ததனாற் பிரேதத்தைத் துக்காக்கிரந்தரா யழுதலறிக்கொண்டு மயானத்திற் கெடுத்துச் செல்லச், சுவாமிகள் நோக்கி யப்பிரேதத்தின் பின் செல்லுகின்றவரைச் சமீபத்திலழைத்து நிகழ்ந்த செய்தியைக்கேட்டுத் திருவுளமிரங்கி, இச்சிறுவன் உயிர்பெற்றெழின் நமக்குக் கொடுப்பீர்களாவென, அவர்கள் இவ்வுயிர் நீங்கிய பிரேதத்தைத்தானா கொடுக்கவேண்டுமென்று மனவருத்தத்தோடுரைக்கக்கேட்டு, அந்தச் சங்கற்பம் உங்கட்கேன், உங்கட்கு உபயோகமற்ற பிரேதந்தானே, அதைக் கொடுக்க ஏன் மனமில்லையென, மாதவர்மகிமை யெங்ஙன மிருக்குமோ வென்று அவர்களனைவரு மவ்வாறே செய்ய வுடன்பட்டார்கள். உடனே சுவாமிகள் தமது திருக்கரத்தால் திருநீறெடுத்து மந்திரித்து அப்பிரேதத்தின்மீது தெறித்துத் திருஞானக்கூத்தாவென்று தமது

திருவாய்மலர்ந் தழைத்தமாத்திரத்தில், சுவாமீ யென்று துயிலொழிந் தெழுந்தவன்போ லெழுந்தோடிவரச், சுவாமிகள் இரண்டு திருக்கரங்களாலுமெடுத்து மார்போடணைத்து முத்தமிட்டுத் தண்டிகையின் மீது வைத்துக்கொண்டு திருவாவடுதுறை ஆதீனம்போய்ச்சேர்ந்து ஆசிரியராகிய நமச்சிவாயமூர்த்திகளைக் கண்டு தரிசித்து வணங்கி, அவர்கட்டளையினுல் அவ்வாதீனத்தினின்றும் சிதம்பரத்திற்குச் சென்றது முதல் மீண்டும் ஆதினம் வந்து சேர்ந்தது வரையினடந்த செய்திகளையுந் தெய்வீகமகிமைகளையும் ஆதியோடந்தமாய் விண்ணப்பஞ் செய்யக்கேட்டு மிகவும் ஆனந்தமடைந்து, பழையபடியே ஆதீனத்தைச் சார்ந்த சர்வாதிகாரங்களையும் சிவப்பிரகாச சுவாமிகளிடத் தொப்பித்துவிட்டு நமச்சிவாய மூர்த்திகள் குகைக்கெழுந்தருளினர்.

சிவப்பிரகாசசுவாமிகள் ஆதீனத்தில் திருக்கூட்டத்தோடு வசித்திருக்குநாளில், நமச்சிவாய மூர்த்திகட்கு விதேக முத்தியடையுங்காலம் நேரிட, அப்போது அருகிருந்து அவ்வாசிரியருக்குச் செய்யவேண்டிய சமாதிக்கிரியைகளைச்செய்து, பின்பு தரிசனுர்த்தமாக அக்குருமூர்த்தத் திருவுருவமைப்பித்து அவ்விடத்துப் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் மகாகுருபூசை மகேஸ்வரபூசை முதலிய கணராதனைகளும் முடித்துத், தம்மையடைந்தோர்கட் கனுக்கிரகஞ் செய்துகொண்டு சிலகாலம் அவ்விடத்து வசித்திருந்து, பின்பு திருக்கூட்டத் தொருவருங் கல்வித்திறம் சாஸ்த்திரப் பயிற்சி முதலிய ஞானசாதகங்களிற் சிறப்புற்றவருமாகிய வோர் தம்பிரானுக்குச் சைவாதீனக்குரு பரம்பரை மேன்மேலும் விருத்தியாகும் பொருட்டு ஆகம விதிப்படி ஆசாரியாபிஷேகஞ் செய்து, மறைஞானதேசிகரென்னு மபிஷேகத் திருநாமஞ் சூட்டி, ஆத்மார்த்த நடேசுவர பூசையு மெழுந்தருளப்பண்ணிக்கொடுத்து, இச்சைவ பரம்பரை தழைத்தோங்க அடியார்கட் கனுக்கிரகஞ் செய்துகொண்டு நம்மைப்போல் இவ்வாதினத்தைப் பரிபாலித்துவரக் கடவீரென்று ஆசீர்வதித்து அதிகாரவுடையவரைத் தாம் ஆத்மார்த்தமாக வைத்துக்கொண்டு திருவண்ணுமலைக் கெழுந்தருளிச் சிலகாலம் அவ்விடத்து வசித்திருந்தனர்.

அப்பொழுது திருவாவடுதுறையிற் சின்னப்பண்டாரச் சந்நிதிகளாக இருந்த மறைஞானதேசிகர் பரிபூரண மடைந்தசெய்

தி தெரிந்து திருவாவடுதுறைக் கெழுந்தருளி அம்பலவாணதேசிகரை அபிஷேகஞ் செய்து ஆதீனத்தில் வைத்துவிட்டு மீண்டுந் திருவண்ணுமலைக் கெழுந்தருளத் திருவுளங்கொண்டு அநேகத் திருக்கூட்டத்தோடு பிரயாணப்பட்டு வருகையில் மார்க்கமத்தியில் தமக்கு விதேகமுத்தியெய்துங் காலமணித்தாக அதைத் திருவுள்ளத்துணர்ந்து திருப்பட்டீச்சுரம் வள்ளலார்கோயில் நலையூர் திருச்சத்திமுற்றம் திருக்குடந்தை யென்னுமிப்பஞ்ச ஸ்தலமத்தியிலுள்ள நவலிங்க தீர்த்தக்கரையில் கூடார மடிப்பித்துச் சிவிகையினின்றிறங்கி யிருந்து திருவாவடுதுறைக்குத் தம்பிரான்களை அனுப்பி அம்பலவாணதேசிகரை வரவழைத்து அவரை நோக்கி அப்பா! சிவசங்கற்பத்தால் நமதாதீனம் சைவாதீனம் வீரசைவாதீனமென் றிரண்டாயிற்று; இனி இவ்விரண்டு ஆதீனங்களும் உலகத்தில் சிறப்புற்றிருத்தல் வேண்டு மன்றோ! ஆதலால் நீ சைவாதீனத்தைப் பரிபாலனஞ் செய்தல் வேண்டும். திருவண்ணுமலையில் வீரசைவாதீனத்துக்கு ஞானக்கூத்தரை அபிஷேகஞ் செய்தனுப்பல்வேண்டும் என்றுரைத்து அவருக்கு அந்த நவலிங்கதீர்த்தக்கரையில் மண்டபமமைத்து வீராகமவிதிப்படி சிவலிங்கதாரணதிட்சையும் சங்கமதிட்சையும் ஆசாரியாபிஷேகமுஞ் செய்து திருவண்ணுமலையிலுள்ள வீரசைவாதீனத்தைப் பரிபாலனஞ் செய்துவரக் கடவையென்று ஆசிர்வதித்துத் திருவாவடுதுறைக்காகத் திவ்விய தேசங்களி லேற்பட்டிருக்கின்ற மடங்களில் அறுபத்துநான்கு மடங்களையும் அவற்றின் வருமானங்களையும் ஞானக்கூத்தருக்குச் சுவாதீனஞ் செய்து கொடுத்துவிட்டு, அந்த நவலிங்க தீர்த்தக்கரையில் சிவபூசை மகேஸ்வரபூசை முதலியவைகளை நிறைவேற்றித் திருக்கூட்டத்தாரோடு ஐந்துதினம்வரையில் அவ்விடத்திலேயே வசித்திருந்து ஆறுநாள் ஸ்நானஞ்செய்து ஆத்மார்த்தபூசையும் நிறைவேற்றிக்கொண்டு பஞ்சாட்சரதல நோக்கிச் சிரசின்மீது குவித்த அஞ்சலியஸ்தராய்த் தரிசனஞ் செய்துநிற்கையில், அவ்விடத்துள்ளார் யாவரும் ஆச்சரியமும் அச்சமு மடையத்தக்கதாகப் பூமி பமொன்று வெடிக்க அதினின்றும் ஓரொளிப் பிழம்புதோன்றிற்று; அப்பேரொளிப் பிழம்பின்வழியாய்ச் சுவாமிகள் திருமேனி கரைந்து மறைந்தது. அவ்வற்புதத்தைக் கண்டு பேரானந்தமுற்று ஆடிப்பாடிப் பரவசமாயினர். அதைச் சமீபத்திலுள்ள சோழமகா

திருவாய்மலர்ந் தழைத்தமாத்திரத்தில், சுவாமீ யென்று துயிலொழிந் தெழுந்தவன்போ லெழுந்தோடிவரச், சுவாமிகள் இரண்டு திருக்கரங்களாலுமெடுத்து மார்போடணைத்து முத்தமிட்டுத் தண்டிகையின் மீது வைத்துக்கொண்டு திருவாவடுதுறை ஆதீனம்போய்ச்சேர்ந்து ஆசிரியராகிய நமச்சிவாயமூர்த்திகளைக் கண்டு தரிசித்து வணங்கி, அவர்கட்டளையினால் அவ்வாதீனத்தினின்றும் சிதம்பரத்திற்குச் சென்றது முதல் மீண்டும் ஆதினம் வந்து சேர்ந்தது வரையினடந்த செய்திகளையுந் தெய்வீகமகிமைகளையும் ஆதியோடந்தமாய் விண்ணப்பஞ் செய்யக்கேட்டு மிகவும் ஆனந்தமடைந்து, பழையபடியே ஆதீனத்தைச் சார்ந்த சர்வாதிகாரங்களையும் சிவப்பிரகாச சுவாமிகளிடத் தொப்பித்துவிட்டு நமச்சிவாய மூர்த்திகள் குகைக்கெழுந்தருளினர்.

சிவப்பிரகாசசுவாமிகள் ஆதீனத்தில் திருக்கூட்டத்தோடு வசித்திருக்குநாளில், நமச்சிவாய மூர்த்திகட்கு விதேக முத்தியடையுங்காலம் நேரிட, அப்போது அருகிருந்து அவ்வாசிரியருக்குச் செய்யவேண்டிய சமாதிக்கிரியைகளைச்செய்து, பின்பு தரிசனார்த்தமாக அக்குருமூர்த்தத் திருவுருவமைப்பித்து அவ்விடத்துப் பிரதிஷ்டை செய்து கும்பாபிஷேகம் மகாகுருபூசை மகேஸ்வரபூசை முதலிய கனாராதனைகளும் முடித்துத், தம்மையடைந்தோர்கட் கனுக்கிரகஞ் செய்துகொண்டு சிலகாலம் அவ்விடத்து வசித்திருந்து, பின்பு திருக்கூட்டத் தொருவருங் கல்வித்திறம் சாஸ்த்திரப் பயிற்சி முதலிய ஞானசாதகங்களிற் சிறப்புற்றவருமாகிய வோர் தம்பிரானுக்குச் சைவாதீனக்குரு பரம்பரை மேன்மேலும் விருத்தியாகும் பொருட்டு ஆகம விதிப்படி ஆசாரியாபிஷேகஞ் செய்து, மறைஞானதேசிகரென்னு மபிஷேகத் திருநாமஞ் சூட்டி, ஆத்மார்த்த நடேசுவர பூசையு மெழுந்தருளப்பண்ணிக்கொடுத்து, இச்சைவ பரம்பரை தழைத்தோங்க அடியார்கட் கனுக்கிரகஞ் செய்துகொண்டு நம்மைப்போல் இவ்வாதீனத்தைப் பரிபாலித்துவரக் கடவீரென்று ஆசீர்வதித்து அதிகாரவுடையவரைத் தாம் ஆத்மார்த்தமாக வைத்துக்கொண்டு திருவண்ணாமலைக் கெழுந்தருளிச் சிலகாலம் அவ்விடத்து வசித்திருந்தனர்.

அப்பொழுது திருவாவடுதுறையிற் சின்னப்பண்டாரச் சந்நிதிகளாக இருந்த மறைஞானதேசிகர் பரிபூரண மடைந்தசெய்

தெரிந்து திருவாவடுதுறைக் கெழுந்தருளி அம்பலவாணதேசிகரை அபிஷேகஞ் செய்து ஆதீனத்தில் வைத்துவிட்டு மீண்டுந் திருவண்ணாமலைக் கெழுந்தருளத் திருவுளங்கொண்டு அநேகந் திருக்கூட்டத்தோடு பிரயாணப்பட்டு வருகையில் மார்க்கமத்தியில் தமக்கு விதேகமுத்தியெய்துங் காலமணித்தாக அதைத் திருவுள்ளத்துணர்ந்து திருப்பட்டீச்சுரம் வள்ளலார்கோயில் நல்லூர் திருச்சத்திமுற்றம் திருக்குடந்தை யென்னு மிப்பஞ்ச ஸ்தலமத்தியிலுள்ள நவலிங்க தீர்த்தக்கரையில் கூடார மடிப்பித்துச் சிவிகையினின்றிறங்கி யிருந்து திருவாவடுதுறைக்குத் தம்பிரான்களை அனுப்பி அம்பலவாணதேசிகரை வரவழைத்து அவரை நோக்கி அப்பா! சிவசங்கற்பத்தாற் நமதாதீனம் சைவாதீனம் வீரசைவாதீனமென் றிரண்டாயிற்று; இனி இவ்விரண்டு ஆதீனங்களும் உலகத்தில் சிறப்புற்றிருத்தல் வேண்டு மன்றோ! ஆதலால் நீ சைவாதீனத்தைப் பரிபாலனஞ் செய்தல் வேண்டும். திருவண்ணாமலையில் வீரசைவாதீனத்துக்கு ஞானக்கூத்தரை அபிஷேகஞ் செய்தனுப்பல்வேண்டும் என்றுரைத்து அவருக்கு அந்த நவலிங்கதீர்த்தக்கரையில் மண்டபமமைத்து வீராகமவிதிப்படி சிவலிங்கதாரணதீட்சையும் சங்கமதீட்சையும் ஆசாரியாபிஷேகமுஞ் செய்து திருவண்ணாமலையிலுள்ள வீரசைவாதீனத்தைப் பரிபாலனஞ் செய்துவரக் கடவையென்று ஆசிர்வதித்துத் திருவாவடுதுறைக்காகத் திவ்விய தேசங்களி லேற்பட்டிருக்கின்ற மடங்களில் அறுபத்துநான்கு மடங்களையும் அவற்றின் வருமானங்களையும் ஞானக்கூத்தருக்குச் சுவாதீனஞ் செய்து கொடுத்துவிட்டு, அந்த நவலிங்க தீர்த்தக்கரையில் சிவபூசை மகேஸ்வரபூசை முதலியவைகளை நிறைவேற்றித் திருக்கூட்டத்தாரோடு ஐந்துதினம்வரையில் அவ்விடத்திலேயே வசித்திருந்து ஆறுநாள் ஸ்நானஞ்செய்து ஆத்மார்த்தபூசையும் நிறைவேற்றிக்கொண்டு பஞ்சாட்சரதல நோக்கிச் சிரசின்மீது குவித்த அஞ்சலியஸ்தராய்த் தரிசனஞ் செய்துநிற்கையில், அவ்விடத்துள்ளார் யாவரும் ஆச்சரியமும் அச்சமு மடையத்தக்கதாகப் பூமி படீரென்று வெடிக்க அதினின்றும் ஓரொளிப் பிழம்புதோன்றிற்று; அப்பேரொளிப் பிழம்பின்வழியாய்ச் சுவாமிகள் திருமேனி கரைந்து மறைந்தது. அவ்வற்புதத்தைக் கண்டு பேரானந்தமுற்று ஆடிப் பாடிப் பரவசமாயினர். அதைச் சமீபத்திலுள்ள சோழமகா

ராஜா வுணர்ந்து அங்குப்போந்து அம்பலவாண தேசிகரையும் ஞானக்கூத்த சிவப்பிரகாசரையும் தரிசித்துப் பணிந்து அங்கு நிகழ்ந்த தெய்வீகமகிமைகளை அவர்கள் கூறக்கேட்டு மிகுந்த சந்தோஷ மடைந்து முன்னர்த் தேகவியோக மடைந்த தம்முடைய தமையனுன விசய சோழமகாராஜா குமாரனுக்கு நேரிட்ட பிரமகத்தி தோஷத்தையுங் குண பேதத்தையும் நிவர்த்தி செய்தருளிய மகத்தாகிய குருமூர்த்தியென்று தமது மந்திரி முதலியோர்களா லுணர்ந்து அதன்பின்னர் அதிக அன்போடு அங்கண்மிகச் சிறந்ததோ ராலய மமைத்து அதிற் சிவலிங்க பிரதிட்டை செய்வித்து ஞானக்கூத்த சிவப்பிரகாச சுவாமிகள் திருக்கரத்தாற் கும்பாபிஷேகமு மியற்றுவித்து நித்திய நைமித்திகங்கள் குறைவின்றி முற்றுப்பெறத்தக்க வருவாயுள்ள சில கிராமங்களைச் சர்வமான்னியமாக சிலாசாசனத்தோடேற்படுத்தி அங்ஙனமே நிறைவேற்றிவந்தனர். ஞானக்கூத்த சிவப்பிரகாச சுவாமிகள் சிலகாலம் ஆண்டு வசித்திருந்து, பின்பு அக்குரு பணிவிடைகளை நடப்பித்தற்குச் சில தம்பிரான்களை நியமித்து ஆசிரியர் கட்டளைப்படி துறையூர்க்குச் சென்று அங்குச் சில நாள் வசித்திருந்து பின்னர்த் திருக்கூட்டத்தோடு திருவண்ணமலைக் கெழுந்தருளி அங்கு அன்பர்களுக்குச் சிவலிங்கதாரண திட்சையும் அதி தீவிரதர சத்திநிபாதர்களுக்கு ஞானோபதேசமுஞ் செய்துகொண்டு வீரசிங்காசன கர்த்தராக வீற்றிருந்தனர்.

சரித்திரம் முற்றிற்று.

---

இச்சரித்திரம் திருவாவடுதுறை யாதீனத்துப் பண்டாரச் சந்நிதிகளாகிய அம்பலவாண தேசிகராற் றிருவாய் மலர்ந்தருளப்பட்ட நெஞ்சுவிடுதூது, பண்டாரக் கலம்பகம் என்னு நூல்களினின் றெடுத்துச் சுருக்கமாக வெழுதப்பட்டது.

முற்றிற்று.

---



உ

திருச்சிற்றம்பலம்.

# அத்துவிதவெண்பா

## மூலமும் உரையும்.

### பாயிரம்.

விநாயகர் துதி.

பெத்த மலமகற்றிப் பேதமறத் தானாக்குஞ்
சித்தன் சிவப்பிரகா சச்சிவன்செய் - யத்துவிதச்
சைவநூ லுண்மைதனைத் தந்திமுகத் தைங்கரநற்
றெய்வமே யென்னுளத்திற் சேர்.

(இதன் பொருள்.) பெத்தமல மகற்றி - அநாதியே சகசமாயான் மாவினதிச்சா ஞானக்கிரியைகளின் வியாபாரத்தைத் தடுத்திராநின்ற ஆணவமல சத்தியினது வியாபாரத்தைப் போக்க அளித்த மாயாதேக போக சம்பந்தத்தினாற் பரிபாகத்தை வரச்செய்து பரிபாகம் வந்தவளவி லம்மலசத்தியினது வியாபாரத்தைப் போக்கி,பேதமறத் தானாக்குஞ்சித்தன் - தற்சொரூபத்துக்கு மான்மசொரூபத்துக்கும் பேதமறத் தற்சொரூபமேயாகச்செய்யுஞ் சாமர்த்தியபரனாகிய, சிவப்பிரகாசச் சிவன்செய் - சிவப்பிரகாச தேசிகனென்னுஞ் சிவனாலருளிச்செய்யப்பட்ட, அத்துவிதச் சைவநூ லுண்மைதனை - சிவனுக்கு மான்மாவுக்கு மபேதமாகிய அத்துவித சம்பந்தத்தினைச் சாதியாநின்ற ஆகமங்களில் வாதுளாகமப் பிரகாரந் தமிழாற் கூறப்பட்ட அத்துவித வெண்பாவினதுண்மைப்பொருளை, தந்திமுகத் தைங்கரநற் றெய்வமேயென்னுளத்திற் சேர்- யானைமுகத்தினையுந் துதிக்கையுடனைந்துகரத்தினையு முடைய நல்ல சிவப்பிரகாசவாரணமே அடியேனுடைய விருதயத்தில் விளங்கச் செய்வாயாக, என்றவாறு.

எந்நூ லுரைப்பினும் அந்நூற்குப்பாயிரம் உரைத்துரைக்கவென்பது மரபு என்னை? "ஆயிரமுகத்தா னகன்றதாயினும் பாயிரமில்லது பனுவலன்றே" என்றலின், அப்பாயிரம் பொதுச்சிறப்பென இருவகை. அவற்றுட் பொதுப்பாயிரம் எல்லாநூன்முகத்தும் உரைக்கப்படுவது. இனிச் சிறப்புப்பாயிரம். வணக்க மதிகார மென்றிரண்டுஞ் சொல்லச் சிறப்பென்னும் பாயிரமாஞ்சீர்; "ஆக்கியோன்பெயரே வழியே யெல்லை, நூற்பெயர்யாப்பே நுதலியபொருளே, கேட்போர்பயனோ டாயெண்பொருளும், வாய்ப்பக்காட்டல் பாயிரத்தியல்பே" என்

னும் வசனத்தால் இந்நூலினை யருளிச்செய்தவர் யாவரென்னில், சற்சனசுத்த சிவாசார சம்பன்னரான விபூதி ருத்திராட்ச பஞ்சாட்சர மந்திரபரிபூரணரான ஏகலிங்க நிஷ்டாபரரான சத்துச்சித்தானந்த நித்தியபரி பூரணரான இயமநியமாசனப் பிராணாயாமப் பிரத்தியாகாரத் தியானதாரணை சமாதி அஷ்டாங்கயோக நிரதரான சமயவிசேஷ நிருவாண ஆசாரியாபிஷேக கர்த்தரான வேதாந்த சித்தாந்த சமரசானு பவங்களுக்கு அநுக்கிரக கர்த்தரான பரசமய நிக்கிரக சிவசமய பரிபாலகரான சட்ஸ்தல நிராபார வீரசைவ சமயஸ்தாபனாசாரியரான திருவண்ணாமலை மடம் வீரசிங்காதனத்துக்குக் கர்த்தரான சிவப்பிரகாச சுவாமிகள்,

திங்களணிசிவனருள்செய் வாதுளா கமமதனிற் றிகழ்சாரத்தை
எங்கள்பவப் பிணிதீர்க்கத் திரட்டி யத்து விதவெண்பா வெனநன்கீந்தான்
துங்கமுறு மெய்கண்டான் சந்ததிக்கோர் தீபமெனத் துதிபெற்றோங்கித்
தங்கருணைத் திருத்துறையூர்ச் சிவப்பிரகா சப்பெரும்பேர் தரித்துளானே.

செய்யதிரு வாவடுதண் டுறைநமச்சி வாயகுரு தேசி கோத்மன்
றுய்யகராசாதனனு யபிடேகந் திருநாமஞ் சூடப்பெற்றோ
னையதில்லை யம்பலவன் பொருட்டாயத் துவிதசைவ வங்கலிங்கந்
தையல்பங்கன் சொற்படியே தரித்தசிவப்பிரகாசத் தவத்தான் மாதோ.

இந்நூற்கு முன்னூல் யாதென்னில்? சிவபெருமானு லருளிச்செய்யப்பட்ட இருபத்தெட்டுத் திவ்வியாகமங்களில் வாதுளாகமமெனவும், இந்நூல் செய்யுட்டொகை யெவ்வளவென்னில் சகக - எனவும், இந்நூற்பெயர் யாதென்னில், சர்வாகமசார வத்துவித வெண்பாவெனவும், இந்நூற்செய்யுள் செய்யுள் விகற்பத்தில் யாதெனில், பெரும்பாலும் வெண்சீர் வெண்டளை யான்வந்த வெண்பா வெனவும், இந்நூற்கருத்தியாதென்னில், இலிங்காங்கசையோகத்தினை யுணர்த்துதலெனவும், இந்நூலினைக் கேட்குமவர்கள் யாவரென்னில், இரண்டாவது ஞானக்கூத்தச் சிவப்பிரகாச சுவாமி முதலாயின சந்நிதிச் சங்கமர்களெனவும், இந்நூலாற் பிரயோசனம் யாதென்னில், சிவசாயுச்சிய மெனவும், உணர்க. இந்நூல் பொதுவென்று முண்மையென்று மிரண்டுவகைத்து. இவையிற்றுண் முந்திப்பொதுவை நூற்றெண்பத் தொன்பது வெண்பாவினு லருளிச்செய்கின்றன ரென்றவாறு.

பாயிரமுற்றிற்று.

---

## நூல்.

சிற்றம் பலவா சிவனே சிவாயபவ
வற்றம் பறிக்கு மரனாகிக் - குற்றமென்றுஞ்
சாராத சைவமென்ற சம்பந்த மிங்ஙனெனச்
சீரார் திருவாயாற் செப்பு.

(இ-ள்.) சிற்றம்பலவா - நித்தியநிட்கள நிரஞ்சன நிராலம்ப வகண்டாகார சச்சிதாநந்த சுத்தசிவ சொரூபமத்தியி லான்மாக்களைக் குறித்தெழும் இலயபோக வதிகாரமென்னும் நிட்கள நிருத்தத்தினையும், மகாமாயா மயமகா சபாபித்திகையில் மாந்திரிகனெழுதிய பஞ்சாட்சர பஞ்ச தெசாட்சர சம்மேளன சக்ரவிக்கிரகத்தில் ஸ்ரீகண்ட விக்கிரகத்தை யதிட்டித்ததுவாய் நின்று சகள நிருத்தத்தினையும் பண்ணுமழகிய திருச்சிற்றம்பலத்தை யுடையவரே, சிவனே - அநாதியே சிவதத்துவமென்னும் சாட்குண்ணியாபி வியத்தமாகிய சர்வ மங்களத்தினையுடையவரே, சிவாய - ஆகமங்களிற்கூறிய மகாவாக்கியப் பொருளே, பவவற்றம் பறிக்குமரனாகி - ஆன்மாக்கள் செனனமரணத்தை யுறப்போக வாஞ்சையினைப்பண்ணும் அதோனியாமிகா சத்தியினையும் அப்போகவாஞ்சையுமில்லாமற் றன்னைச் சிவனைப் பிறிதொன்றினையுந் தோன்றாது மோகமாய்மறைக்கும் ஆவாரக சத்தியினையுமுடைய வாணவமலத்தினைப் போக்குவதற்கோர் சிறந்ததுணையாய், குற்றமென்றுஞ்சாராத - எக்காலத்தினுங் குற்றத்தைப் பொருந்தாத, சைவமென்ற சம்பந்தம் - சிவனுக்கு மான்மாவுக்குமுள்ள சம்பந்த விலக்கணத்தினை, சீரார்திருவாயாற் செப்பு - சிறப்பினையுடைய தேவரீர் திருவாக்கினு லருளிச்செய்யவேண்டும், எ-று. (௧)

[இவ்வழிகேட்குமாணுக்கர்க் கவ்விறையுரைக்கு முத்தரம் உரைக்கின்றார்.]

முன்னைப் பிறப்பின் முயன்றசைவ வத்துவிதர்
பின்னைப் பிறவாமற் பேரருளிற் - றம்மைக்
கொடுத்தருளா நந்தந்தாங் கொள்கையோர் தங்கட்
கடுத்ததிதெ னுதாக மம்.

(இ-ள்.) முன்னைப் பிறப்பின் முயன்றசைவ வத்துவிதர் பின்னைப் பிறவாமல் - பூர்வசென்மத்திற் சரியை கிரியா யோகங்களைச் சாதித்த சிவயோகிகள் வரப்பிரசாதத்தினாலே சுகவாமதேவ சௌபாதாதியர்களைப்போலப் பூர்வ சென்ம ஸ்மரணையுடனே பிறந்து மறுபடியோர் சென்மத்தை யடையாமல், பேரருளிற் றம்மைக் கொடுத்தருளா நந்தந்தாங் கொள்கையோர் தங்கட் கடுத்ததிதெ னுதாக மம் - சிவபெருமானிடத் தநந்யபத்தி பண்ணிப் பெருமை பொருந்திய திருவருளி லழுந்திச் சிவாநந்த சொரூபமாயிருக்குஞ் சாங்குசித்தர்கட்காகமங்க ளிதனைச் செய்யவேண்டு மிதனைவிட வேண்டுமெனக் கூறா, எ-று. ()

[இவர்களைக்குறித்துக் கூறாத தேதனாலென்னில்
அதற்குத்தரங் கூறுகின்றார்.]

வேண்டும் வகைநடப்பார் வேண்டாமை யாதொன்று
மீண்டொன்று மில்லை யெனுமதனாற் - பூண்டவருண்
முத்தர்தமக் கன்று முரணும் பிறப்பறுக்கும்
பத்தர்தமக் கேபகர்வம் பார்.

(இ-ள்.) வேண்டும் வகைநடப்பார் - திருவருள்வேண்டி நடத்தினபடிக்கே நடக்குமவர்கள் ஆகையால், வேண்டாமை யாதொன்று மீண்டொன்று மில்லை யெனுமதனால் - அவர்கள் மனவாக்குக் காயத்தினது செயல்களெல்லாம் அருளினது செயல் ஆகையால் இதனைச் செய்யவேண்டும் விடவேண்டுமென்னுந் தன்மை அப்பருவத்தவர்கட் கில்லை ஆகலின், பூண்டவருண் முத்தர்தமக் கன்று - திருவருள்தாமாக விருக்குஞ் சீவன்முத்தர்கட்குச் சாத்திரந் தேவையில்லை, இதற்குதாரணம். திருவாசகம் "கூறுநாவேமுதலாகக் கூறுங்கரணமெல்லாநீ, தேறும்வகைநீதிகைப்புநீ தீமைநன்மைமுழுதுநீ, வேறோர்பரிசிங்கொன்றில்லை மெய்ம்மையுன்னைவிரித்துரைக்கிற், றேறும்வகையென்சிவலோகா திகைத்தாற்றேற்றவேண்டாவோ" "அன்றேயென்ற னாவியுமுடலு முடைமையெல்லாமுங், குன்றேயனையா யென்னை யாட்கொண்டபோதே கொண்டிலையோ, வின்றோரிடையூ றெனக்குண்டோ வெண்டோண்முக்க ணெம்மானே, நன்றேசெய்வாய் பிழைசெய்வாய் நானோவிதற்கு நாயகமே" சித்தியார் "ஞாலமதின்ஞானநிட்டையுடையோர்கட்கு நன்மையொடுதீமையிலைநாடுவதொன்றில்லைச், சீலமில்லைத்தவமில்லைவிரதமோடாச்சிரமச் செயலில்லைத்தியானமில்லைச்சித்தமில்லைக், கோலமில்லைப்புலனில்லைக் கரணமில்லைக் குறியில்லைக்குணமில்லைக் குலமுமில்லைப், பாலருடனுன்மத்தர் பசாசர்குணமருவிப் பாடலினோடாடலிவை பயின்றிடினும்பயில்வார்" 'சலமிலனாய் ஞானத்தா' லென்னுஞ் செய்யுளில், 'உலகினிலென்செயலெல்லாமுன்விதியேநீயே யுண்ணின்றுஞ்செய்வித்துஞ்செய்கின்றாய்' யென்றும், சிவஞானதீபம் 'சித்தமுறுநினைவுரைகள் தொழில்பொய்வாய்மைதீமைநலம்விருப்புவெறுப்பின்பதுன்பம், வைத்தபொருண்மடிமுயற்சி' யென்றும், 'சாத்திரம்புத்தகம் பூசைசமயமொடுதருக்கந் தந்திரமந்திரம்யோகந்தவம்விரதஞ்சீல, மேத்தரியபாவனையெண்சித்திகளேமுதலா மெப்பயனுமுத்திவிலக்கென வொருசொல்லதனாற், றீர்த்தவன்மெய்த்தேசிகனும்' என்றும் கூறியவற்றாற் கண்டுகொள்க. இனிப் பிரபஞ்சோன்முகமாகிய பிராகிருதர்கட்குஞ் சொல்லவேண்டுவதில்லை. பின்னை யாவர்க்கென்னில், முரணும் பிறப்பறுக்கும் பத்தர்தமக் கேபகர்வம் பார் - மாறுபாட்டினைச் செய்யும் செனனமரணத்தைப் போக்கிக்கொள்ள வேண்டுமென்னும் வைராக்கியராகிய சிவபத்தர்களைக்குறித்தே சொல்லவேண்டுவது நீயுமத்தன்மையையுடைய வினயபரனா யிருக்கின்றனையாகையாற் கூறுவோங் கேட்பாயாக, எ-று.

முத்தர்தமக்கன்றென்பதற்கும், பத்தர்தமக்கென்பதற்கும் (உ-ம்.) சித்தியார் "பண்டைநற்றவத்தாற்றோன்றிப்பரமனைப்பத்திபண்ணுந், தொண்டரைத் தானேநாயகதியினிற்றெருகுப்பன்மார்க்கர், கண்டநூலோதிவீடுகோதலிப்பவர்கட்கீசன், புண்டரீகத்தாள்சேரும்பரிசினைப்புகலலுற்றும்" என்பதனுற் கண்டு கொள்க. (ந)

[மேற் சிவபெருமானுக்கு மான்மாவுக்கு முள்ள வத்துவிதசம்பந்த விலக்கணத்தைக் கூறுவான் றொடங்கி முதற்கட்புறப்பத்தியி னதிலக்கணத்தினையும் அகப்பத்தியி னதிலக்கணத்தினையுங் கூறுகின்றார்.]

புறப்பத்தி யென்று மகப்பத்தி யென்றுஞ்
சிறப்புடைய வாகமங்கள் செப்பும் - புறப்பத்தி
பேதமதா யர்ச்சிக்கை பேதமிலா வர்ச்சனையே
யோதுமகப் பத்தியென வோர்.

(இ-ள்.) புறப்பத்தி யென்று மகப்பத்தி யென்றுஞ் சிறப்புடைய வாகமங்கள் செப்பும் - அநாதிமலமுத்தனுகிய பரமசிவன் சிருட்டிகாலத்தில் சாதாக்கிய புவனத்திருக்கும் பிரணவர் சுக்குமர் முதலாயின அணுசதாசிவர் பதின்மரைக் குறித்தருளிச் செய்யப்பட்ட திவ்வியாகமங்களிற் சிவனை வழிபடு முபாசனுகாண்ட மிரண்டு விதமாகச்சொல்லப்படும்; அவ்விரண்டில், புறப்பத்தி பேதமதா யர்ச்சிக்கை - புறம்பாகவழிபடுதலாவது தனக்குஞ் சிவனுக்குந் தாசமார்க்கமாகவுஞ் சற்புத்திரமார்க்கமாகவும் பேதமாகவிருந்துவழிபடுதல், பேதமிலா வர்ச்சனையே யோதுமகப் பத்தியென வோர் - தனக்குஞ் சிவனுக்குஞ் சகமார்க்கஞ் சன்மார்க்கமாகவிருந்து அபேதமாக வழிபடுதலே யகப்பத்தியென வறிவாயாக, எ-று. (ச)

[மேற்புறப்பத்தி யகப்பத்தி யிவ்விரண்டுவகைப்படு மென்பதை மேல்வகையாக விரித்துச்சொல்லுவான் றொடங்கி யிவ்வெண்பாவிற் றொகுத்துக் கூறுகின்றார்.]

பூசிப்பித் தேகல் சரியை கிரியையது
பூசித்துப் போகைமிகு மன்பிறைற் - பூசித்
தகலாமை யோகமென வன்றமல ஞேதுஞ்
சகலா கமமுரைக்குந் தான்.

(இ-ள்.) பூசிப்பித் தேகல் சரியை - சரியாவானுக்குள்ள நியமம் பரார்த்தமாகிய சிவாலயங்களில் பூசைக்குவேண்டிய திரவியங்களைக்கொடுத்து அர்ச்சகர்களாற் பூசிப்பித்துப் போகுகை, கிரியையது பூசித்துப் போகை - கிரியாவானுக்குள்ள நியமம் பூசைக்குவேண்டுந் திரவியங்களை யமைத்துக்கொண்டு தானாகத் தனதாத்மார்த்த சிவலிங்கத்தைப் பூசித்துப்போகுகை, மிகு மன்பினாற் பூசித் தகலாமை யோகமென வன்றமல ஞேதுஞ் சகலா கமமுரைக்குந்

தான் - அடங்காதபத்தியினுல் ஆத்மார்த்தமாகப் பூசித்த சிவலிங்கத்தை விட்டு நீங்காமற் றனது அுலாங்கத்திலே தரிப்பதுவே யோகம், அறிவிற்றரிப்பதுவே ஞானமெனச் சிருட்டிகாலத்துச் சிவனுலருளிச்செய்யப்பட்ட சிவாகமங்கள் செப்பும், எ-று.

இதற்கு (உ-ம்) சர்வோத்தராகமம் "சாமான்யமிஷிரகஞ் சைவாசுத்த வீரஞ்சதுர்விதம், சரியாக்கிரியஞ்சயோகஞ்சி யாக்ஞானமேவக்கிரமேணஜா") என்பதனுற் காண்க. (ரு)

[மேற்கூறிய சரியையின திலக்கணத்தை வகையாக விரித்தருளிச் செய்கின்றார்.]

எட்டுவித வர்ச்சனைக வீரொட் டுபசார
முட்ட வியற்றி முடிப்பித்துக் - கட்டகலப்
பாடிப் பணிந்து பரிவொடுஞ்சுற் றிப்போகை
கூடுஞ் சரியைக் குறி.

(இ-ள்.) இப்பிரவஞ்சத்துட் சகலரில் மந்தபரிபாகத்தையுற்று ஞானுசாரியனை யடைந்து சமயதீட்சைபெற்று இயமநியமங்களைப் பேணிக் கதிரவனெழுமுன் கடிகையைந்தென வெழுந்து விபூதிதரித்துச் சிவபெருமானைத் தியானித்து ஆகமப்பிரகாரம் சவுசதந்ததாவள்ளிய ஸ்நானுனுஷ்ட்டான முதலியனவற்றைச் செய்து தனது நந்தனவனம் புகுந்து மலர்முதலியன கொய்து மாலைகளாகக் கட்டிக்கொடுத்தலோடு சிவாலயம் புகுந்து திருவலகு திருமெழுக்கிட்டுப் பூசாதிரவியங்களை யர்ச்சகர்கள் கையிற்கொடுத்து அபிடேக அட்டவிதார்ச்சனை சோடசோபசாரங்களுடன் செய்வித்துப் பிரதெக்ஷிண நமஸ்கார தோத்திர முதலியனவெல்லாஞ் செய்து தனதிஷ்ட்ட நிறைவேறப் பிரார்த்தித்துக்கொண்டு ஆலயத்தை விட்டரிதினீங்கி ஆசாரியனையும் அடியார்களையும் வழிபட்டு அதிதிபூசையும் பண்ணி இந்நியமந் தப்பாமல் நித்தியகன்மத்தை நிறைவேற்றிப் பின்பு தனதுத்தியோகத்திற் செல்லுதல்சரியைச் சின்னங்களாம், எ-று.

(இதற்குதாரணம்.)

"கெந்தமட் சதைபூவாரங் கிளர்துகிலே பனந்தான்
சந்தமா ரமுதடைக்காய் தானிவை யெட்டோடேத்திப்
பந்தம தகலப்பத்தர் பரிந்துபூ சாதிசெய்யு
மந்தமில் சிவனைக்கூடு மட்டவர்ச் சனையீதாமால்"

சித்தியார் "தாதமார்க்கஞ் சாற்றிற் சங்கரன்றன்கோயிற் றலமலகிட்டிலகுதிருமெழுக்குஞ்சாத்திப், போதுகளுங் கொய்து பூந்தார்மாலைகண் ணிபுனிதற்குப்பலசமைத்துப்புகழ்ந்துபாடித், தீதிறுவிளக்கிட்டுத் திருநந்தவனமுஞ்செய்துதிருவேடங்கண்டாலடியேன்செய்வ, தியாதுபணியீரொன்றுபணிந்தவர்தம் பணியுமியற்றுவதிச் சரியைசெய்வோ ரீசனுலகிருப்பார்" என்பவற்றுற் கண்டுகொள்க.

(சா)

பூசையுப சாரங்கள் பொற்பொடுதான் செய்தரனை
யாசையி னோர்பா லமர்வித்துப் - பேசியந
லோமம் புரிந்தகல லுற்ற கிரியையது
வாமற்றை யோகமுறைப் பாம்.

(இ-ள்.) முன்சொன்ன சமயாசாரந் தவறாம லொழுகுகையால் மந்ததர பரிபாகம்பிறந்து ஞானசாரியனை யடைந்து விசேஷ திட்சைபெற்றுக்கொண்டு ஆத்மார்த்த சிவலிங்கத்தையுந்தரப்பெற்றுப் பூசைக்குவேண்டிய வுபகரணங்களையெல்லா மமைத்துக்கொண்டு முன்சமயதிட்சையிற் சொல்லிய நித்தியநியமங்களை யெல்லாமுறையேசெய்து பின்போ ராதனத்திலிருந்து பூதசுத்தியந்தரியாகமுஞ் செய்துகொண்டு சவுரமுதல் சண்டாந்தமாக மந்திரக்கிரியா பாவனைகளில் லோபமில்லாமற் சிவலிங்கத்தைப் பூசித்துப் பெட்டகத்திற் சிவபெருமானை யெழுந்தருளப் பண்ணிவைத்துப் பின்பு சிவாக்கினியை யுண்டுபண்ணி அச்சிவாக்கினியினிடத்தும் ஆசாரியரிடத்துஞ் சிவாகமத்தி னிடத்தும் பூசித்து மத்தியா னுனுட்டானமும் பண்ணி அதிதிபூசையுஞ்செய்து தனதுத்தியோகத்திற் செல்லுதல் கிரியை, இதற்கு உ-ம். சித்தியார் "புத்திரமார்க்கம்புகலிற்புதியவிரைப்போது புகையொளிமஞ்சன மமுதுமுதல்கொண்டைந்து, சுத்திசெய்தாசன மூர்த்திமூர்த்திமானுஞ் சோதியையும்பாவித்தாவாகித்துச்சுத்த, பத்தியினலர்ச்சித்துப்பரவிப்போற்றிப் பரிவினொடுமெரியில்வருகாரியமும்பண்ணி, நித்தலுமிக்கிரியையினைநிகழ்த்துவோர்க ணின்மலன்றனருகிருப்பர்நினையுங்காலே" என்பதனாற் கண்டுகொள்க. (எ)

[மேல்யோகவிதியை யுணர்த்துகின்றார்.]

சைவஞ் சிவத்துடனே சம்பந்த மாதலெனச்
சைவா கமமுறைக்குஞ் சத்தியங்கேள் - செவ்விதாய்
நீங்காம லுட்புறம்பு நீங்காத நற்சிவனை
நீங்காமை சைவ நினை.

(இ-ள்.) சைவஞ் சிவத்துடனே சம்பந்த மாதலெனச் சைவாகம முறைக்குஞ் சத்தியங்கேள் - சைவமென்னும் பதத்துக்குப்பொருள் சிவசம்பந்தம் அஃதாவது, அநாதிமலமுத்தமாகிய சிவத்துடனே ஆதிமலமுத்தமாகிய வான்மா இரண்டறக்கலந்திருக்கை யென்று சிவாகமங்க ளுண்மையாகச் சொல்லும்; அக்கலப் பெப்படியென்னில், செவ்விதாய் - நன்றாய், நீங்காம லுட்புறம்பு நீங்காத நற்சிவனை நீங்காமை சைவ நினை-சித்துச்சடமாகிய சர்வத்திலு முள்ளும் புறம்பு மெள்ளுக்குளெண்ணெய்போலப் பரிபூரணமாய் நிறைந்திருக்குங் குற்றமற்ற சிவபெருமானை நீயுமுனதுள்ளும் புறம்பும் விட்டு நீங்காம லிரண்டறக் கலந்திருத்தற்கே சைவமென்னும் பெயரொன்றறிவாயாக, எ-று. (அ)

[மேற்சில சமயிகள் சொல்லும் சம்பந்தங்களுக்குத் தூஷணஞ்சொ
ல்லி யத்துவிதசம்பந்தமே சம்பந்தமெனச் சாதிக்கின்றார்.]

பேத மபேதமல்லாப் பேதாபே தம்மெனவே
யோதுகின்ற நீதி யுவர்ப்புற்றுத் - தீதிலரு
ளத்துவித சைவ மரணெனக்கண் டார்சிவனோ
டத்துவித நீங்கா தவர்.

(இ-ள்.) பேதம் - சிவனுக்கு மான்மாவுக்கும் இருளுக்கும் வெளியாகிய ஆகாயத்துக்கு மெப்படியோ அப்படிப் பேதமென்னில் ஒன்றுக்கொன்று பிரயோசனமில்லாமற்போ மாகையால் அப்படிப் பேதஞ்சொல்லும் பாடாணவாதி முதலாயினோர் சொல்லும் பேதசித்தாந்தமும், அபேதம் - சிவனுக்குமான்மாவுக்கும் பொன்னுக்கும் பணதிக்கும்போல அபேதமென்னிற் பெறுவானும் பேறுமில்லாத மாயாவாதி முதலாயினோர் சொல்லும் அபேத சித்தாந்தமும், அல்லாப் பேதாபேதம் மெனவே - சிவனுக்கு மான்மாவுக்குஞ் சொல்லும்பொருளும் போலப் பேதாபேதமாகச் சொல்லின் மயக்கசித்தாந்தமாய் நிஷ்பிரயோசனமுமாகச் சொல்லுஞ் சிவாவேசவாதி சித்தாந்தமுமாம், ஓதுகின்ற நீதி யுவர்ப்புற்று - இப்படிச்சொல்லும் அவசித்தாந்த மார்க்கங்களைவிட்டு, தீதிலருளத்துவித சைவ மரணெனக்கண்டார் - நின்மலமாகிய திருவருளுக்கு முதன்மையாகிய சிவத்தில் உடலு முயிரும் கண்ணொளியு மாதித்தனொளியுங் கலந்து நிற்றல்போலச் சிவாகமங்களிற் சொல்லுமிரண்டற்ற அத்துவித சம்பந்தமே உயிர்க்குறுதியென வறிந்த சைவர்கள், அத்துவித நீங்கா ரவர் - இவ் வத்துவித சம்பந்தத்தை நீங்கார்கள், எ-று. (கூ)

[ஆனா லவ்வத்துவித சம்பந்தம் உடற்கோ உயிர்க்கோ வென்னில் இவ்வான்மா பெத்தாவத்தையி லுடலோடுகலந் துடலாய்ப் பிறிவுபடா திருக்கையா லிவ்வுடலுக்கே முந்தச் சிவசம்பந்தம் வேண்டுமென வுணர்த்துகின்றார்.]

ஆசூச மென்னு மவ்வுட னீங்கவென்று
மாசூச மில்லா வரனுடனே - நேசமுடன்
சம்பந்தங் கொண்டுவிடாத் தன்மையது சைவமலாச்
சம்பந்தம் பேதசம்பந் தம்.

(இ-ள்.) ஆசூச மென்னு மவ்வுட னீங்க - இத்தூலதேகம் பிரகிருதி வழித்தாகிய பஞ்சபூத பரிணம சுக்கில சுரோணிதமூல சத்த தாதுமயமாகிய கன்மவேதுவாய் ஆகாரநித்திரை பயமைதுனதிகளுடனேகூடி அசுத்தமாய் நரைதிரை மூப்புக்களுடனே யவலமாய்ப் பிறந்திறந்து வருகையா லான்மாவு மிவ்வுடலுடனே யிரண்டறக்கலந்து தேகான்மாவா யிருக்கையா லித்தூலவுடற்குண மறும்படியாகத் தூலவுடலில், என்றும் ஆசூசு மில்லா வரனுடனே - எக்காலமு நின்மலமாகிய பரமசிவசொரூப சகள மூர்த்திக்காதாரமாகிய இஷ்

ட்டலிங்கத்துடனே, தேசமுடன் சம்பந்தங் கொண்டுவிடாத் தன்மையது சைவம் - அன்றிஞற் சிரசுமுதலிய தானங்களில் விட்டு நீங்காமற்றரித்து வழிபடுந் தன்மையதே சைவம்; இப்படியன்றி, அலாச் சம்பந்தம் பேதசம்பந்தம் - விட்டுநீங்கியிருக்குஞ் சம்பந்தமெல்லாம் பேதசம்பந்தம் எ-று. (௧௦)

(இதற்கு உ-ம்.) [illegible] ॥

[illegible] ।
[illegible] ।
[illegible] ।
[illegible] ॥
[illegible] ।
[illegible]'' என்பவற்றாற்காண்க.

[ஆயி னிச்சம்பந்த மித்தூலதேகத்துக்கு மாத்திரமோ தூலசூட்சும காரணமாகிய மூன்று தேகங்களுக்குந் தனித்தனி வேண்டுமோ வென்னிற் றனித்தனியே வேண்டுமென் றுணர்த்துகின்றார்.]

ஆன விலய வதிகார மாமூன்று
மானதனு மூன்றி லவலமறத் - தானினிய
சம்பந்த நீங்காமை சைவமெனு மாகமங்கள்
சம்பந்தஞ் சொல்லுந் தரம்.

(இ-ள்.) ஆன விலயவதி காரமா மூன்றும்-ஆத்தும ரட்சகார்த்தமாகப் பரமசிவனுல் அருளே திருமேனியாகக் கொள்ளப்பட்ட லயபோக வதிகாரமென்றும், சத்தியுக்த பிரவர்த்தனென்றுஞ் சிவன் சதாசிவன் ஈசனென்றும், நிட்களம் நிட்களசகளம் சகளமென்றும் பெயரினையுடைய இஷ்டப் பிராண பாவமென்னு மூவகை இலிங்கங்களையும், ஆனதனு மூன்றி லவலமறத் தானினிய சம்பந்த நீங்காமை - ஆன்மாவினிச்சா ஞானக்கிரியையையாவரிக்கு மலசத்தியினது வியாபாரத்தைச் சிறிது நீக்கு நிமித்தம் அநந்தேசுரமூர்த்தி பிரேரகத்தால் அசுத்தமாயையி லுண்டாக்கப்பட்ட கலை வித்தை ராக சமஷ்டியாய்ப் புருட பாவமாயிருக்குங் காரண தேகத்திலும், பிரகிருதி சென்னியமா யகங்காரங்களினது வழித்தாகிய ஞானேந்திரிய கன்மேந்திரிய சத்தாதிபூதங்கள் முதலிய தத்துவங்கட்கெல்லாங் காரணமாய் அஷ்டவர்க்க சாத்துவிக குணாத்மகமாய் மனோ சங்கற்ப வத்துவிச்சபடுத்தி தத்துவமாகிய சூட்சும தேகத்திலும், முன்னர்க்கூறிய குணத்திலையுடைய தூலதேகத்திற் சிரசு முதலிய தானங்களிலும், இம்மூவகைத் தேகங்களினுலு மாகாமிய கன்மங்களைப்பண்ணிச் சஞ்சிதமாகக் கட்டிவைத்துக்கொண்டதிரு லமூக்கேறி அஞ்ஞானத்தையே பண்ணுமவ்வசுத்தகுண நீங்கத்தக்கதாக வம்மூவகை யுட்லுள்ளும் விட்டுநீங்காமலிருப்

[மேற்சில சமயிகள் சொல்லும் சம்பந்தங்களுக்குத் தூஷணஞ்சொ
ல்லி யத்துவிதசம்பந்தமே சம்பந்தமெனச் சாதிக்கின்றார்.]

பேத மபேதமல்லாப் பேதாபே தம்மெனவே
யோதுகின்ற நீதி யுவர்ப்புற்றுத் - தீதிலரு
ளத்துவித சைவ மரணெனக்கண் டார்சிவனோ
டத்துவித நீங்கா தவர்.

(இ-ள்.) பேதம் - சிவனுக்கு மான்மாவுக்கும் இருளுக்கும் வெளியாகிய ஆகாயத்துக்குமெப்படியோ அப்படிப் பேதமென்னில் ஒன்றுக்கொன்று பிரயோசனமில்லாமற்போ மாகையால் அப்படிப் பேதஞ்சொல்லும் பாடாணவாதி முதலாயினோர் சொல்லும் பேதசித்தாந்தமும், அபேதம் - சிவனுக்குமான்மாவுக்கும் பொன்னுக்கும் பணதிக்கும்போல அபேதமென்னிற் பெறுவாறும் பேறுமில்லாத மாயாவாதி முதலாயினோர் சொல்லும் அபேத சித்தாந்தமும், அல்லாப் பேதாபேதம் மெனவே - சிவனுக்கு மான்மாவுக்குஞ் சொல்லும்பொருளும் போலப் பேதாபேதமாகச் சொல்லின் மயக்கசித்தாந்தமாய் நிஷ்பிரயோசனமுமாகச் சொல்லுஞ் சிவாவேசவாதி சித்தாந்தமுமாம், ஓதுகின்ற நீதி யுவர்ப்புற்று - இப்படிச்சொல்லும் அவசித்தாந்த மார்க்கங்களைவிட்டு, தீதிலருளத்துவித சைவ மரணெனக்கண்டார் - நின்மலமாகிய திருவருளுக்கு முதன்மையாகிய சிவத்தில் உடலு முயிரும் கண்ணொளியு மாதித்தனொளியுங் கலந்து நிற்றல்போலச் சிவாகமங்களிற் சொல்லுமிரண்டற்ற அத்துவித சம்பந்தமே உயிர்க்குறுதியென வறிந்த சைவர்கள், அத்துவித நீங்கா ரவர் - இவ் வத்துவித சம்பந்தத்தை நீங்கார்கள், எ-று. (௬)

[ஆனா லவ்வத்துவித சம்பந்தம் உடற்கோ உயிர்க்கோ வென்னில் இவ்வான்மா பெத்தாவத்தையி லுடலோடுகலந் துடலாய்ப் பிறிவுபடா திருக்கையா லிவ்வுடலுக்கே முந்தச் சிவசம்பந்தம் வேண்டுமென வுணர்த்துகின்றார்.]

ஆசூச மென்னு மவ்வுட னீங்கவென்று
மாசூச மில்லா வரனுடனே - நேசமுடன்
சம்பந்தங் கொண்டுவிடாத் தன்மையது சைவமலாச்
சம்பந்தம் பேதசம்பந் தம்.

(இ-ள்.) ஆசூச மென்னு மவ்வுட னீங்க - இத்தூலதேகம் பிரகிருதி வழித்தாகிய பஞ்சபூத பரிணாம சுக்கில சுரோணிதமூல சத்த தாதுமயமாகிய கன்மவேதுவாய் ஆகாரநித்திரை பயமைதுனாதிகளுடனேகூடி அசுத்தமாய் நரைதிரை மூப்புக்களுடனே யவலமாய்ப் பிறந்திறந்து வருகையா லான்மாவு மிவ்வுடலுடனே யிரண்டறக்கலந்து தேகான்மாவா யிருக்கையா லித்தூலவுடற்குண மறும்படியாகத் தூலவுடலில், என்றும் ஆசூச மில்லா வரனுடனே - எக்காலமு நின்மலமாகிய பரமசிவசொரூப சகள மூர்த்திக்காதாரமாகிய இவ்

ட்டலிங்கத்துடனே, நேசமுடன் சம்பந்தங் கொண்டுவிடாத் தன்மையது சைவம் - அன்பினுற் சிரசுமுதலிய தானங்களில் விட்டு நீங்காமற்றரித்து வழிபடுந் தன்மையதே சைவம்; இப்படியன்றி, அலாச் சம்பந்தம் பேதசம்பந்தம் - விட்டுநீங்கியிருக்குஞ் சம்பந்தமெல்லாம் பேதசம்பந்தம் எ-று. (௧0)

(இதற்கு உ-ம்.) ஶ்ருதௌ ॥

யே த்வத்ர ப்ராஹ்மணா: ஶ்ரோத்ரியா: பவித்ரதேஹிகம் ப்ராஹ்மணஸ்ய தே |
த்ஸாக்ஷபவித்ரம் லிங்கதாரணம் ஶைவதாரணம் |
குசஸ்த நாமமோ ஶைவலா ஶைவோ: |
தீக்ஷாஹித ஸாக்ஷாநாந்த்ய யாலிங்கதாரண ஸூத்ரம் ||

“ஶைவாகமசநஸ்யாணாம் ஸிவலிங்காதிதாரண: |
யாந்த ஸ்வதேஹாநாம் லிங்கதாரணஸூத்ரம்.” என்பவற்றுற்காண்க.

[ஆயி னிச்சம்பந்த மித்தூலதேகத்துக்கு மாத்திரமோ தூலசூட்சும காரணமாகிய மூன்று தேகங்களுக்குந் தனித்தனி வேண்டுமோ வென்னிற் றனித்தனியே வேண்டுமென் றுணர்த்துகின்றார்.]

ஆன விலய வதிகார மாமூன்று
மானதனு மூன்றி லவலமறத் - தானினிய
சம்பந்த நீங்காமை சைவமெனு மாகமங்கள்
சம்பந்தஞ் சொல்லுந் தரம்.

(இ-ள்.) ஆன விலயவதிகாரமா மூன்றும்-ஆத்ம ரட்சகார்த்தமாகப் பரம சிவனால் அருளே திருமேனியாகக் கொள்ளப்பட்ட லயபோக வதிகாரமென்றும், சத்தியுக்த பிரவர்த்தனென்றுஞ் சிவன் சதாசிவன் ஈசனென்றும், நிட்களம் நிட்களசகளம் சகளமென்றும் பெயரினையுடைய இஷ்டப் பிராண பாவமென்னு மூவகை இலிங்கங்களையும், ஆனதனு மூன்றி லவலமறத் தானினிய சம்பந்த நீங்காமை - ஆன்மாவினதிச்சா ஞானக்கிரியையையாவரிக்கு மலசத்தியினது வியாபாரத்தைச் சிறிது நீக்கு நிமித்தம் அநந்தேசுரமூர்த்தி பிரேரகத்தால் அசுத்தமாயையி னுண்டாக்கப்பட்ட கலை வித்தை ராக சமஷ்டியாய்ப் புருட பாவமாயிருக்குங் காரண தேகத்தினும், பிரகிருதி சென்னியமா யகங்காரங்களினது வழித்தாகிய ஞானேந்திரிய கன்மேந்திரிய சத்தாதிபூதங்கள் முதலிய தத்துவங்கட்கெல்லாங் காரணமாய் அஷ்டவர்க்க சாத்துவிக குணாதிக்கமாய் மனோ சங்கற்ப வத்துநிச்சயபுத்தி தத்துவமாகிய சூட்சும தேகத்தினும், முன்னர்க்கூறிய குணத்தினையுடைய தூலதேகத்திற் சிரசு முதலிய தானங்களினும், இம்மூவகைத் தேகங்களினுலு மாகாமிய கன்மங்களைப்பண்ணிச் சஞ்சிதமாகக் கட்டிவைத்துக்கொண்டதினு லழுக்கேறி அஞ்ஞானத்தையே பண்ணுமவ்வசுத்தகுண நீங்கத்தக்கதாக வம்மூவகை யுடலுள்ளும் விட்டுநீங்காமலிருப்

பது ஆகவே, சைவமெனு மாகமங்கள் சம்பந்தஞ் சொல்லுந் தரம் - சிவாகமங்கள் சம்பந்தஞ் சொல்லும்விதி இத்தன்மைத்து, எ-று. (கக)

[தூலசூட்சம காரணமாகிய மூவகையுடலினும் இஷ்ட்டப் பிராண பாவமாகிய மூன்றிலிங்கங்களையும் விட்டு நீங்காமற் றரித்ததனால் வரும் பிரயோசன மென்னவெனி லிதுவெனச் சாற்றுகின்றார்.]

சகளமுதன் மூன்றினையுஞ் சாற்றுமுரு மூன்றி
லகல்வதறச் சம்பந்த மாதல் - சகல
சனன மறுக்குமின்பச் சம்பந்தஞ் சைவ
சனனமெனு மாகமங்க டாம்.

(இ-ள்) சகளமுதன் மூன்றினையுஞ் சாற்றுமுரு மூன்றி லகல்வதறச் சம்பந்தமாதல் - சகள சகளநிட்கள நிட்களமென்று சொல்லப்பட்ட இஷ்டலிங்கம் பிராணலிங்கம் பாவலிங்கமென்னு மூவகை யிலிங்கங்களை முன்சொல்லப்பட்ட தூலசூட்சும காரணமாகிய தேகங்களில் விட்டு நீங்காமற் றரிக்கப்பெறின், சகல சனனமறுக்கு மின்பச்சம்பந்தஞ் சைவ சனனமெனு மாகமங்கடாம்- தனக்குப் புசிப்பாகவருஞ் சத்தாதி போகங்களினது ரூப ருசி திருத்திகளை யந்தந்த லிங்கங்களுக் கற்பித்து அவ்விலிங்கப் பிரசாதமாகவே புசிக்க அதனாலிந்தச் சகலாவத்தையைப்பற்றி யெடுக்குஞ் சனன மரணங்களுக்கேதுவாகிய கன்மம் நாசமாம், கன்மம் நாசமாகவே யிதாகிதமறும், இதாகிதமறவே இருவினையொப்புவரும், அதனால் மலபரிபாகம் வரும், அதனால் சத்திநிபாதத்தன்மை வரும், அச்சத்திநி பாதத்தினாலே சிவாநந்தானுபவ முண்டாமென்று சிவனலருளிச் செய்யப்பட்ட சிவாகமங்கள் சொல்லும், எ-று. (கஉ)

[இன்னும் அதனையே வலியுறுத்திக் கூறுகின்றார்.]

காயத் தினுமனத்துங் காதலுறும் பாவகத்து
மாய முடிக்க மகிழ்ந்தருளா - லாய
சகளா திகளுடலிற் சம்பந்தஞ் சற்று
மகலாமை தான் சைவமாம்.

(இ-ள்.) காயத் தினுமனத்துங் காதலுறும் பாவகத்து மாயமுடிக்க - தானல்லாதவைகளைத் தானென் றுன்மாவைமயக்குந் தூலசூட்சுமகாரண தேகங்களினது குணங்களைப் போக்கத்தக்கதாக - மகிழ்ந்தருளாலாய சகளாதிகளுடலிற் சம்பந்தஞ் சற்று மகலாமைதான் சைவமாம் - காருண்ணியமே திருமேனியாகக்கொண்ட இஷ்ட்டப் பிராணபாவமாகிய சிவலிங்கங்களை யெக்காலத்தினும்விட்டு நீங்காமற் றரித்து யாதொருவிடயங்களையும் ரூப ருசி திருத்திகளாகப் பிரித்தவ் விலிங்கங்களுக் கற்பித் தப்பிரசாத மருந்து மவனே சைவனவன், எ - று. (கங)

[இவ்விட்டப்பிராண பாவலிங்கங்களினது சம்பந்தவேதுவாற் றத்துவ சுத்திவரும், அத்தத்துவ சுத்தியுடனே ஆணவ மலசுத்தியுமாம், அவ் வாணவ மலசுத்திவரவே யான்மசுத்திபிறந்து ஆன்மலாபமான சிவா நந்திய சம்பந்த வாழ்வுபெறலாம், அவ்வாழ்வு பெறவேண்டு மென் னுந் தாகமுடையோர்கட் கிவ்வகைச்சம்பந்தம் வேண்டுமென வுரைக்கின்றார்.]

உயிர்க்குயிராய் நீங்காம லுற்ற சிவனை
மயக்கமறக் காண மதித்து - மயக்கமற்ற
காயமது மூன்றிற் கருதுஞ் சிவமூன்று
மாயகலா தாதல்சம்பந் தம்.

(இ-ள்.) உயிர்க்குயிராய் நீங்காம லுற்ற சிவனை மயக்கமறக் காண மதித்து - அறிவுக்கறிவாய் இலயபோக வதிகாரங்கட் கதீதமாகிய சுத்தசிவாநந்திய வத்துவித வாழ்வை யுள்ளபடி பெற்றனுபவிக்க எந்த ஏதுக்களால் வருமென்று விசாரித்து, மயக்கமற்ற காயமது மூன்றிற் கருதுஞ் சிவமூன்று மாயகலா தாதல் சம்பந்தம்-மயக்குந் தொழிலைச்செய்யாது தீக்கையினாற் சுத்திகரிக்கப்பட்டிருக்குந் தூலசூட்சும காரணமாகிய முத்தேகங்களினு முணர்தற்கேதுவாகிய இஷ்டப்பிராண பாவமாகிய இலிங்களைத்தரித்து அவை யெக்காலத்தும் விட்டு நீங்காமலிருக்கவே யச்சம்பந்தத்தைத் தரும், எ-று. (கச)

உள்ளும் புறம்புமற்றை யுட்புறம்பு மாய்மூன்றாய்க்
கொள்ளுஞ் சிவாதி குறிக்குமுயிர் - கொள்ளு
முருமூன்றிற் சம்பந்த முற்றகலா தோங்க
வருமறிவி லத்துவித வாழ்வு.

(இ-ள்.) உள்ளும் புறம்புமற்றை யுட்புறம்பு மாய்மூன்றாய்க் கொள்ளுஞ் சிவாதி-உள்ளாகிய இலயலிங்கமும் புறம்பாகிய அதிகாரலிங்கமும் உட்புறம்பாகிய போகலிங்கமுமாகி மூன்றுவிதமாய்ப் பெயரினைக்கொண்ட இஷ்டப்பிராணபாவ லிங்கங்களை, குறிக்குமுயிர் கொள்ளு முருமூன்றிற் சம்பந்த முற்றகலா தோங்க வருமறிவி லத்துவித வாழ்வு - மலபெத்தனாகிய ஆன்மாகொண்ட தூலசூட்சும காரணமாகிய மூவகை யுடல்களினும் விட்டு நீங்காத சம்பந்தத்தை யுற்று மேன்மேலு மிகுந்த அன்பு பொங்கியிருக்கவே சுத்த சிவாநந்திய வத்துவித சம்பந்த வாழ்வுவரும், எ-று. (கரு)

அங்கமுயிர் தானாக வானசிவம் லிங்கமதா
யிங்கிசைந்த தென்றா லிறைவனுட - னங்ககலா
தப்படியே லிங்கத்தோ டத்துவிதந் தானாக
நிற்பதுவே கற்புடைமை நில்.

(இ-ள்.) அங்கமுயிர் தானாக - சுகரூபியாயிருக்கு மான்மாவின திச்சா ஞானக்கிரியைகளின் வியாபாரத்தை அநாதியே தடுத்திராநின்ற வாணவமலத்

தினையும் அதோனியாமிகாமல சத்திவியாபாரத்துக் கேதுவாய்ப் பழவினையை யும் மாயா தேகபோக சம்பந்தத்தினு லவ்விரண்டு மலபெந்தங்களையும் போக்கி யிவனுக்குள்ள அநாதி சுகசொரூபமாகிய சிவாநந்தாநுபூதியைத் தரும்பொருட்டுப் பரமசிவன் அநந்தேசுரர் முன்னிலையாக அசுத்த மாயையினைக் கலக்கிக் காரணசூட்சும தூலதேகங்களைச் சிருட்டித்துக் கூட்டக்கூடிய வான்மாக்கள் படிகமும் ஆகாசமும்போலச் சார்ந்ததின் வண்ணமாய் நிற்குங் காலத்து அநுத்மா வாயனுற்பிதனுய்ப் போய்விடாமல், ஆனசிவம் லிங்கமதா யிங்கிசைந்ததென்றால்-அநாதி நின்மலமான சுத்தசிவந்தானே இஷ்டப் பிராணபாவமாயம்மூவகை யுடலினுங்கலந் தவ்வுடலால்வரும் போகங்களை யற்பித்துக்கொள்ள வருமானல், இறைவனுட னங்ககலா தப்படியே - அநாதி முத்த சுத்த சிவத்துட னிரண்டறக்கலந் திருக்குமாப்போல, லிங்கத்தோ டத்துவிதந் தானுகநிற்பதுவே கற்புடைமை நில் - நீயு மவ்விலிங்கங்களுடன்கூடி யவ்விடத்தவனருளிச்செய்தபடியே யவ்வுடற் றன்மையற்று அவ்விலிங்கவடிவமா யிரண்டற்று நிற்கு மதுவே கற்புடைமை யாகையா லப்படியே நிற்பாயாக, எ-று. (௧௬)

நீங்கா தறிவி னிகழ்சிவத்தி னத்துவிதந்
தாங்காண வேண்டுமெனுந் தாகமுளார் - நீங்காத
வம்முதலா மூன்று மனவரத மத்துவிதந்
தம்முருவிற் பற்றிவிடார் தாம்.

(இ-ள்.) நீங்கா தறிவி னிகழ்சிவத்தி னத்துவிதந் தாங்காண வேண்டுமெனுந் தாகமுளார்-அநாதியே தன்னிடத்திருக்குஞ் சிவாத்வித விளக்கத்தைத் தெரிசிக்க வேண்டுமென்னும் விருப்பத்தையுடைய பத்திமான்கள், நீங்காத வம்முதலா மூன்று மனவரத மத்துவிதந் தம்முருவிற் பற்றிவிடார் தாம் - ஒன்றைவிட்டொன்று நீங்காமலிருக்கு மிஷ்டப்பிராணபாவமாகிய மூன்று லிங்கங்களையு மெக்காலத்தினுந் தமது தூலசூட்சுமமாகிய வங்கங்களினு மிரண்டறக் கலந்திருப்பார்கள், எ-று. (௧௭)

[மேற் சற்காரியவாதஞ் சாற்றுகின்றார்.]

தன்னியல்பிற் சம்பந்தஞ் சாற்று மதுபோல
மன்னுஞ் சிவாதிகளை மன்னிவிடாப் - பின்னமற்ற
சம்பந்த மற்றக்காற் சற்கா ரியஞ்சிதையு
மிம்பந்த சம்பந்த மே.

(இ-ள்.) தன்னியல்பிற் சம்பந்தஞ் சாற்று மதுபோல - சுத்தாவத்தையிற் சுத்தான்மாவுக்குத் தன்னியல்பாவது தனக்கந்நிய சாதியாகிய மலகன்ம மாயைகளையுந் தன்சாதியாகிய சிவன் முத்த பரமுத்தர்களையு நீங்கிச் சுத்தனாகிய சிவாநந்த சுவானுபூதிச் சம்பந்தவான்களைப்போல, மன்னுஞ் சிவாதிகளை மன்னிவிடாப் பின்னமற்ற சம்பந்த மற்றக்கால் - இச்சகலா வத்தையிலும் நிலைமைபெற்றுவரும் இஷ்டமாதி சிவலிங்கங்களைத் தனது மூவகை யுடலினும் விட்டு நீங்காமற் றரித்திருத்தலே சற்காரியம். இஃதன்றி அச்சிவலிங்கங்களுக்

குந் தனக்கும் பேதமாய்விட்டு நீங்கியிருப்பானுயின், சற்காரியஞ் சிதையு மிம்பந்த சம்பந்த மே - சற்காரியவாதந் தன்னிடத்தில்விட்டு நீங்கிப்போம், அச்சற்காரிய வாதம்போகவே இப்பிரபஞ்சத்தி லழுத்தாகின்ற மலமாயாதி சம்பந்தம் விட்டுநீங்காது, எ-று. (கஅ)

[இங்ஙனஞ் சிவலிங்கத்தைத் தரித்திராகின்ற தேகமுஞ் சிவசொரூபமே யாமென்பதற்கோர் திட்டாந்தமிட் டருளிச்செய்கிருர்.]

பூமிதனி லிங்கம் பொருந்தவே தாபித்திட்
டாமிலய போக வதிகார - மேவியிட
வர்ச்சனைசெய் தாற்பூமி யானசிவ கேத்திரமா
மர்ச்சனையா லிவ்வுடலு மாம்.

(இ-ள்.) பூமிதனி லிங்கம் பொருந்தவே தாபித்திட் டாமிலய போக வதிகார மேவியிட வர்ச்சனைசெய் தாற்பூமி யானசிவ கேத்திரமாம் - ஓர் சுத்தபூமியிற் கருஷணுதிமுதலிய வாலயத்துளோர் சிவலிங்கத்தை யாகமவிதிப்படிதாபித்து அந்தச்சிவலிங்கத்தில் இலயபோகவதிகார மூர்த்திகளை ஆவாகனம்பண்ணி யச்சிவலிங்கத்தை வழிபடவே யச்சிவலிங்கத்துக் காதாரமாயிருந்த வத்தானமுஞ் சிவஸ்தலமானதுபோல, அர்ச்சனையா லிவ்வுடலு மாம் - இவ்வங்கத்தலத்திலும் இஷ்டமுதலிய சிவலிங்கங்களைத் தாபித்துப்பூசிக்கையா லிவ்வங்கத்தலமுஞ் சிவலிங்கத்தலமேயாம், எ-று. (கக)

அண்ட மதனி லரியலிங்கந் தாபித்தா
லண்டஞ் சிவாலயமா மாங்கதுபோற் - பிண்டத்திற்
றற்பரமாம் லிங்கமது தாபித்தா லத்தநுவுஞ்
சிற்பரனார் கோயிலெனத் தேர்.

(இ-ள்.) அண்ட மதனி லரியலிங்கந் தாபித்தா லண்டஞ் சிவாலயமா மாங்கதுபோல் - இவ்வண்டத்திலோர் தானங்குறித்துச் சொல்லுதற்கரிதாகிய தோர் சிவலிங்கத்தைத்தாபித்து வழிபடவே யத்தானமு மச்சிவனுக்காலயமானதுபோல, பிண்டமதிற் றற்பரமாம் லிங்கமது தாபித்தா லத்தநுவுஞ் சிற்பரனார் கோயிலெனத் தேர் - பிண்டமாகிய விவ்வங்கத்தலத்தினுந் தனக்குமேலொருபரமின்றித் தனக்குத்தானே பரமாகிய சிவபெருமானமருங் கோயிலெனவே யறிவாயாக, எ-று. (உ0)

[அண்டபிண்ட மிரண்டிடத்தினுஞ் சிவலிங்கத்தினைத் தாபிக்கவே யத்தலங்களுக்கு வரும்பெயரினையு மகிமையினையு முணர்த்துகின்றார்.]

அண்டபிண்ட மென்ன வறியுந் தலமிரண்டி
லண்டர்தோழு தேத்து மரியலிங்க - முண்டாகத்
தாபித்துப் பேருஞ் சராசரம தாகுமெனத்
தாபிக்கு மாகங்க டாம்.

(இ-ள்.) அண்டபிண்ட மென்ன வறியுந் தலமிரண்டில் - இவ்வண்டத்து ஓர் புனிதமாகிய தானத்தின்கண்ணும் பிண்டமெனச் சொல்லுமோர் சுத்த தேகத்தின்கண்ணும், அண்டர்தொழு தேத்து மரியலிங்க மூண்டாகத் தாபித்துப் பேருஞ் சராசரம தாகுமென - தேவர்களாற் பூசிக்கப்பட்ட சிவலிங்கத்தை மந்திரபூர்வமாகத் தாபிக்கவே யண்டத்திற் ரூபித்திருக்குஞ் சிவலிங்கத்துக்குத் தாபரலிங்கமெனவும் பிண்டத்திற் ரூபித்திருக்குஞ் சிவலிங்கத்தினுக்குச் சரலிங்க மெனவும் பெயராமென்று, தாபிக்கு மாகங்க டாம் - இங்ஙனந் தாபித்துரைக்குஞ் சிவாகமங்கள், எ-று. (௨௧)

அண்டத்திற் ரூபித்த தாந்தா பரலிங்கம்
பிண்டத்திற் ரூபிக்கப் பெற்றக்காற் - கொண்டபெய
ரானசர லிங்கமென வன்றே சிவாகமங்க
ளீனமற வேயுரைக்கு மே.

(இ-ள்.) அண்டத்திற் ரூபித்த தாந்தா பரலிங்கம் பிண்டத்திற் ரூபிக்கப் பெற்றக்கால் - அண்டத்திற்ரூபிக்கப்படுந் தாவர சிவலிங்கத்தினைப் பிண்டத்திற்ரூபிக்கப் பெறுங்காலத்து, கொண்டபெய ரானசர லிங்கமென வன்றே சிவாகமங்க ளீனமற வேயுரைக்கு மே - அவ்விலிங்கத்தினுக்குச் சரலிங்கமெனப் பெயராமென்று சிவாகமங்க ளனாதியே குற்றமறவுரைக்கும், எ-று.

இச்சிவலிங்கங்கள் சிறிதுபெரிதா யிருந்தனவாயினு மச்சிவலிங்கங்களிற் ரூபித்திருக்கு மூர்த்தியொன்றென்பதனைக்குறித் துரைத்ததெனவறிக. (௨௨)

[மேல் அத்தாவர லிங்கத்தினுக்குஞ் சங்கம லிங்கத்தினுக்குந் திட்டாந்த பூருவமாகத் தாரதம்மியமுண்டென வுணர்த்துகின்றார்.]

சரமசர மென்னவிங்ஙன் சாற்று முயிரிற்
சரமறிவு மிக்கதுபோற் சம்பு - சரமசரந்
தானுகி லும்ப்ரசன்னஞ் சாற்றுஞ் சரத்திலெனத்
தானு கமமுரைக்குந் தான்.

(இ-ள்.) சரமசர மென்னவிங்ஙன் சாற்று முயிரிற் சரமறிவு மிக்கதுபோல் - ஆன்மவருக்கமெல்லா மோர்சாதியாயினுஞ் சரமென்று சொல்லப்பட்ட தேவர் நரர் மிருகம் பட்சி ஊர்வன நீர்வாழ்வனவென்னு மறுவகைச் சரதேகங்களைப்பற்றிய உயிர்வருக்கங்களெல்லாம் ஓரறிவுமுத லைவகையறிவும் விளங்கப் பெற்றிருக்கும், அசரமாகிய விருட்சமுதலிய தேகங்களைப்பற்றிய வுயிர்களெல்லாம் ஓரறிவே விளங்கப்பெற்றிருக்கும், ஆதலால் அவற்றுள் சர அறிவே சிறந்ததுபோல, சம்பு சரமசரந் தானுகிலும் பிரசன்னஞ் சாற்றுஞ் சரத்திலெனத் தானுகம முரைக்குந் தான் - அசரமாகிய தாவரலிங்கத்தினுஞ் சரமாகிய சங்கமலிங்கத்தினும் சிவபெருமான் சமவியாபகமா யிருந்தாலும் தாவரலிங்கத்திலிருப்பதிலுஞ் சங்கமலிங்கத்தில் விசேஷ பிரசன்னமாயிருப்பனென்று ஆகமங்கள் சொல்லும், எ-று. (௨௩)

[அண்டத்தலம் பிண்டத்தலமிரண்டுஞ் சடமாகையாற் பிண்டத்தலத்தைச் சரமென்று விசேடித்து ஆகமங்கள் சொல்லுகைக்கேது எங்ஙனமெனின் னுரைக்கின்றார்.]

சீவனுறும் பிண்டத்திற் செல்வச் சிவலிங்கஞ்
சீவனைத்தன் சம்பந்தஞ் செய்துபிண்டங் - கோவிலாத்
தான்கொண்டு சீவன் றனைப்பூசிக் கப்பூசை
தான்கொள்ள லாற்சரமாந் தான்.

(இ-ள்.) சீவனுறும்பிண்டத்திற் செல்வச்சிவலிங்கஞ் சீவனைத்தன் சம்பந்தஞ்செய்து - சீவசையோகத்தினால் வளர்ச்சிமுதலிய குணத்தையுடைய பிண்டமென்னும் இத்தேகத்தில் ஞான திக்கத்தினையுடைய சிவலிங்கத்தினைத் தாபிக்கவே யச் சிவலிங்கத் தேகாபிமானியாகிய சீவனை யிரண்டறக்கலந் தவ்வுயிர்ச்செயலைக் காட்டாது தம்முள்ளடக்கி, பிண்டங்கோயிலாத் தான் கொண்டு சீவன் றனைப்பூசிக்கப் பூசைதான்கொள்ளலாற் சரமாந்தான் - அச்சீவன தபிமானத்தலமாகிய தேகத்தைத் தனது கோயிலாகக்கொண்டு தன்னுளடங்கியிருக்குஞ் சீவனுனவன் றன்னைப்பூசிக்கத் தானப்பூசையினைக் கொள்ளலானும் அச் சீவனுக்குத் தான் சீவனாகஇருக்கையானு மத்தேகத்துக்குஞ் சரமெனப் பெயராயிற்று, எ-று. (உச)

[பூசிக்கத்தக்க பதார்த்தங்களை இலிங்காற் பிதமாக்கிப் பிரசாதமாகப் புசிப்போர்கட் கொருகாலும் வினை யேறாதென வருளிச்செய்கின்றார்.]

அங்கமாங் காலத் தரியபொறி யெச்சிலது
வங்கருந்தல்போ லருளாம் லிங்கத்தா-லிங்கருந்து
நன்மைப் பிரசாத நன்றருந்து வார்பேதக்
கன்மத் தகப்படார் காண்.

(இ-ள்.) அங்கமாங் காலத் தரியபொறி யெச்சிலது வங்கருந்தல்போல் - ஆன்மா பெத்தாவத்தையிற் றேகாத்மாவா யிருக்குங் காலத்துத் தன திந்திரியங் காட்டத் தனக்குப் போகமாகவருஞ் சத்தாதி விடயங்களை இந்திரிய வுச்சிட்டமாகப் புசிக்குமாறுபோல இச்சுத்தாவத்தையில், அருளா லிங்கத்தா லிங்கருந்து நன்மைப் பிரசாத நன்றருந்து வார்பேதக் கன்மத் தகப்படார் காண் - அருளே திருமேனியாகும் ஆசாரமாதி மகாலிங்கங்கள் காட்ட வப்பதார்த்தத்தினது ரூபருசிதிருத்திகளை இஷ்டப்பிராண பாவமென்னுமிலிங்கங்களுக்கு அற்பித்து அப்பிரசாதத்தை நன்றாகப் புசிக்குமவர்கள் நானாவிதமாகிய கன்மபெந்தத் தகப்படார்கள், எ-று. (உரு)

[மேற்றேகபெந்தமு மவர்கட்கில்லையென வருளிச்செய்கின்றார்.]

அங்கமது லிங்கத்துக் காலயம தாக்கிலிங்க
சங்கமுற வேயுயிரைத் தாபித்திட் - டங்கமதா

லுண்பதுபோற் சம்புவினு லுற்றபிர சாதமுண்ணும்
பண்புடையார்க் கில்லையங்கம் பார்.

(இ-ள்.) அங்கமது லிங்கத்துக் காலயமதாக்கிலிங்க சங்கமுற வேயுயிரைத் தாபித்திட்டு - ஆன்மா கன்மத்துக் கிடாகிய சுகதுக்கபோகங்களை அனுபவித்தற் காதாரமாகிய தூலதேக முதலிய தேகங்களை இஷ்டலிங்க முதலிய விலிங்கங்களுக் காலயமாகக் கொடுத்துத் தேக மாதாரமாக விருந்த அவ்வான்மா தனக்கவ் விலிங்க மாதாரமாக ஆசாரியர் தாபிக்கப்பெற்றுப் பின்பு - அங்கமதா லுண்பதுபோற் சம்புவினுலுற்ற பிரசாத முண்ணும் பண்புடையார்க் கில்லையங்கம் பார் - முன்பத்தேக முன்னிலையாக விடயபோகங்களை யனுபவிக்குமதுபோல விச்சிவலிங்க முன்னிலையாகச் சிவப்பிரசாதமாக வனுபவிக்குங் குணத்தையுடைய சிவனேசர்கட்குச் சரீரபெந்தமில்லை, எ-று. (உசு)

[இங்ஙன மிவ்விலிங்கங்க ளாதாரமாக இவ்விலிங்கங்களுடன் ஏகிபாவ மா யற்பண வவதான நிட்டையி லயராமனிற்போர் பெறும்பேறிது வென வறைகின்றார்.]

ஆனலிங்கந் தன்னுடனே யத்துவித மானவுயிர்
ஞானலிங்கந் தானகலா நல்லறிவு - தானிறைந்து
தானற்ற போதிலிங்கந் தானாய்முன் னின்றபர
ஞானத் தநுவாகு நாடு.

(இ - ள்.) ஆனலிங்கந் தன்னுடனே யத்துவிதமானவுயிர் - இங்ஙனங் கூறிய இட்டலிங்கமுதலிய வற்பண வவதானங்களி லயர்ச்சியில்லாது நிற்குமான்மா, ஞானலிங்கந் தானகலா நல்லறிவுதா னிறைந்து - மேலாகிய நின்மல சிற்சத்திமானுகிய சுத்த சிவானந்த சாட்சாத்காரத்தைப்பெறு மறிவு விளங்கி, தானற்றபோது - அநாதியே யாவாரகத்தைச் செய்யுமலக லுஷிதமாக விளங்கித் தானென்று நிற்குந் தனது போதமாகிய சிற்றறிவு நீங்கும் அச்சிற்றறிவுநீங்கவே, இலிங்கந்தானாய் - மகா லிங்கமென்னுஞ் சுத்தசிவந் தானுகி, முன்னின்ற பரஞானத் தநுவாகு நாடு - அச்சிவனது சிற்சத்தியே தனக்குத் தாரகமாகத் தான் நின்மல சிவானந்தாநுபூதியைப் பெற்றிருக்குமென்றறிவாயாக, எ-று. ()

[இவ்வளவு மிலிங்கதாரண மகிமையை யுரைத்து மேலிலிங்கதாரண மில்லாத சுத்தசைவர் முதலிய சைவர்கள் கூறுஞ் சங்கைக்குத்தர மிசைய வுரைக்கின்றார்.]

நீறுடனே கண்டிகைக ணின்றசிவ சம்பந்தப்
பேறதன்றோ வென்னிலது பேசக்கேள் - கூறுகின்ற
மந்திரமுங் கோமயமு மாநிலஞ் சுத்தஞ்செய்ய
வந்ததுபோன் மற்று மதி

(இ-ள்.) நீறுடனேகண்டிகைக ணின்ற சிவசம்பந்தப் பேறதன்றோ வென்னிலது பேசக்கேள் - முற்கூறிய பேறுபெறுவதற்கு இத்தேகத்தி லிலிங்கத்

தைத் தாரணமாகச் செய்துகொள்ள வேண்டுமோ வீபூதி ருத்திராட்சங்கள் எங்குந் தானாய்ப் போக்குவர வற்றுநின்ற சிவபெருமானது சொரூபமன்றோ ஆகையா லவ்வீபூதி ருத்திராட்சங்களினது சம்பந்தத்தினாலே அப்பேறு கிடையாதோ வென்னினுடனே கிடையாது அதேனென்னிற் சொல்லக்கேள், (அவ்வீபூதி ருத்திராட்சங்கள் உட்சமயங்களாறினுக்குஞ் சரியை யாதி நான்கு பாதத்தினையுடைய பெயர்கட்கும் பொது வாகையால் அவரவர்கள் பரிபாகத்துக்குத்தக்க பதமுத்தியைக் கொடுப்பனவல்லது மேலாகிய முத்தியை யுடனே கொடுக்கமாட்டா. அம் முத்திக்கேதுவாகிய பரிபாகத்தைக் கிரமத்திலே வரப் பண்ணும்.) அதற்குத் திட்டாந்தம். மந்திரமுங் கோமயமு மாகிலஞ் சுத்தஞ்செய்ய வந்ததுபோன் மற்று மதி - பூசை பண்ணுவதற்கோர் தானத்தைச் சுத்தி பண்ணுவதற்கு ஆகமங்களிற் கூறிய அஸ்த்திர மந்திரமும் பசுவின் சாணகமும் முந்தத் தானசுத்தியினைப்பண்ணு மதுபோல, வீபூதி ருத்திராட்சங்களும் சிவலிங்கதாரணத்துக்கு யோக்கியமான தேக பரிசுத்தத்தினைப் பண்ணுமென்றறிவாயாக, எ-று. (உஅ)

[வீபூதி ருத்திராட்சதாரணமே சிவலிங்க தாரணத்துக்கு யோக்கியமென வோர் திட்டாந்தத்தினை லருளிச்செய்கின்றார்.]

மங்கிலியம் பூண வருமினிய மங்கைதன
தங்க மணியா லழகுசெய்யு - மிங்கிதுபோ
லானசிவ சம்பந்த மாமுடலஞ் சுத்திசெய்ய
வானதிரு நீறுமுத லாம்.

(இ-ள்.) மங்கிலியம் பூண வருமினிய மங்கைதன தங்கமணியா லழகுசெய்யு மிங்கிதுபோல் - ஓர் கன்னிகையை யோர்புருஷன்தனது பாரியாகத் திருமங்கிலிய தாரணம் பண்ணவருங் காலத்து அக்கன்னிகை மஞ்சள்பூசி மற்றைய வாபரணங்களினாலே தனதங்கத்தை யலங்காரம்பண்ணிக் கொள்ளுமாறுபோல, ஆனசிவ சம்பந்தமா முடலஞ் சுத்திசெய்ய வானதிருநீறு முதலாம் - அருளே சொரூபமாகிய சிவலிங்க தாரணம் பெறுந் தேகசுத்தியின்பொருட்டு வீபூதிமுதலியன தரிப்பனவாம், எ-று. (உகூ)

[சிவலிங்கதாரண முடையவனுக்கே சைவனென்னும் பெயரெனச் சாற்றுகின்றார்.]

பூண்ட பணிதியது பொற்புடைய நாயகனுக்
கீண்டுரிய ளென்ன திவடன்னை - யீண்டொருவன்
பாரியென மங்கிலியம் பண்ணுதல்போ லிங்கசங்க
காரணத்தாற் சைவனென்று காண்.

(இ-ள்.) பூண்ட பணிதியது பொற்புடைய நாயகனுக் கீண்டுரிய ளென்னாது - அழகினையுடைய வோர்கன்னிகை தரிக்கு மற்றைய வாபரணத்தி னலங்காரம் இங்கிவளொருவன் பாரியென்றறிவியாது, இவடன்னை யீண்டொ

ருவன் பாரியெனத் திருமங்கிலியம் பண்ணுதல்போல் - இவ்விடத் திவளை யொருவன் பாரியெனத் திருமங்கிலிய தாரணமே அறிவிக்கு மதுபோல, லிங்க சங்க காரணத்தாற் சைவனென்று காண் - சிவலிங்கதாரண காரணத்தாற் சைவனென்றறிவாயாக, எ-று. (௩௦)

[அப்படியாறு லிவனையுஞ் சைவனென்று சொல்லாது வீரசைவனென்று சொல்லுவானே னென்னில் மேற்கூறுகின்றார்.]

பிரமாங்கந் தன்னிற் பிறந்திறக்கும் பேதக்
கருமாங்கக் கட்டைக் கடக்க - வரும்வீரம்
பெற்றசிவ சம்பந்தப் பேறதனால் வீரசைவ
முற்றபெய ரொன்றே யுணர்.

(இ-ள்.) பிரமாங்கத்தன்னிற் பிறந்திறக்கும்பேதக் கருமாங்கக் கட்டைக் கடக்கவரும் வீரம் - பிரமதேவனது சூட்சுமாங்கமாகிய மனச் சங்கற்பத்தினாலாகிய இப்பிரமாண்டத்து ளொருவன் செய்யும் புண்ணியபாவத்துக் கீடாகவருஞ் செனனமரணமுதலிய கற்பனைகள் யாவையுங் கடப்பனென்னுமுறுதி, பெற்றசிவ சம்பந்தப் பேறதனால் வீரசைவமுற்ற பெயரொன்றேயுணர் - மற்றொருசமயங்களினும் வாராதென நினைந் திச்சமயத்திற்புகுந்து இவ்வாசாரியரால் தீக்ஷைபெற் றிவ்விலிங்காங்க சையோகத்தையுற்ற வனுபவத்தினா லவ்வீரம் வருகையால் அதற்கே வீரசைவமெனப் பெயராயிற்றென் றறிவாயாக, எ-று. ()

[காயத்தினாற்செய்யுங் கன்மங்களைக் காயபெந்தமென்றும் அப்பெந்தங்களெல்லாந் தீக்ஷாகாலத்திற் காயசுத்திபண்ணவே யகன்றிடுமென்று மூன்று வெண்பாவினால் மொழிகின்றார்.

கட்டிவைக ளென்றுனக்குக் கட்டுரைக்கக் கேளவலப்
பட்ட வுடலோடு பதிந்தவகை - கட்டமாங்
காமங் கடுஞ்சொற் கடியகொலை கட்களவு
மாமிங் கிதாகிதத்தோ டாம்.

(இ - ள்.) கட்டிவைக ளென்றுனக்குக் கட்டுரைக்கக்கேள் - காயத்தினாற் செய்வனவற்றையு மச்செய்கைகளாலேறிக் கட்டுப்பட்டிருக்குங் கன்மபெந்தங்களையும் நன்றாக விரித்துனக்குச் சொல்லுவோங் கேட்பாயாக, அவலப்பட்டவுடலோடு பதிந்தவகை - அச்செய்கைகள் வீணாகிய விவ்வுடலிற் கூடப்பிறந்த வகையையுடையனவாயிருக்கும் அவையாவை யென்னில், கட்டமாங் காமங் கடுஞ்சொற் கடியகொலை கட்களவு மாமிங்கி தாகிதத்தோடாம் - தனக்கிகத் தும்பரத்து முபாதியினைத் தரும் பிறர்மனைநயத்தல் ஒருவனிடத்துக் குரோதத்தினால் அபவாதமுதலிய சொல்லைப் பழிபடச்சொல்லுதல் எவ்வகைப்பட்ட வுயிர்வர்க்கங்களையு மிரக்கமின்றிப் பதைக்கவதைத்தல் உண்டவுடன் தன தறிவினைமயக்கிப் பின்னிரயத்தில் விழுத்துங் கள்ளினையுண்கை அனுவத்தனையா

யினும் பிறர்பொருளினை யபகரித்தல் இவைமுதலிய வகிதங்களா லேறுவனவே பாவபெந்தம் இவைகளைச் செய்யாதிருப்பனவே புண்ணியபெந்தம் ஆகிய இவையாம், எ-று. (ஙஉ)

தந்தைதா யுற்றூர் தநயர்மனை யாளுறவு
வந்தபெருஞ் சாதி மரபொழுக்க - மந்திபகற்
சூதகங்க ளேடணைகள் சொற்றதிரி காலமெனும்
வாதனைக ளான வவை.

(இ-ள்.) தந்தைதா யுற்றூர் தநயர்மனை யாளுறவு வந்தபெருஞ் சாதி மரபொழுக்கம்-பிதா மாதா சகோதரர் புத்திரர் மனையாள் சுற்றத்தார் இனத்தார் தத்தம் வருணத்துக்குத்தக்க வொழுக்கம், அந்திபகற் சூதகங்க ளேடணைகள் சொற்ற திரிகாலமெனும் வாதனைகளானவவை - உதயாதியத்தமன காலங்களிற் செய்யு நியமங்கள் சென்னுசுச மரணுசுச முதலியவைகள் திரவியவாஞ்சை செல்காலம் நிகழ்காலம் எதிர்காலமென்னு மவைகளால்வருஞ்செய்தி இவை முதலியவைகளெல்லாந் தேகத்தினால்வரும் பெந்தங்கள், எ-று. (ஙங)

இங்கிவைக ளெல்லா மிசைந்தவுடல் சங்கரனார்
தங்கி நடிக்குஞ் சராலயமாய்த் - தங்கருணைக்
கண்ணூறி தீக்கையினாற் கட்டறக்கண் டேதிரும்ப
வெண்ணா திருப்பதும் வீரம்.

(இ-ள்.) இங்கிவைகளெல்லா மிசைந்தவுடல் சங்கரனார் தங்கிநடிக்குஞ் சராலயமாய் - இங்ஙனங் கூறியபெந்தங்க ளெல்லாவற்றினையுமுடைய வித்தேகத்தினை இஷ்டலிங்கமிருந்து விளங்குஞ் சராலயமாக, தங்கருணைக்கண்ணூறி தீக்கையினாற் கட்டறக்கண்டே திரும்ப வெண்ணாதிருப்பதும் வீரம் - ஞாநாசாரியர் தமது காருண்ணியத்தாற் சட்சுமுதலிய தீட்சையினாற் சோதித்து வாசனையறப்போக்கி மந்திரரூபமாகச் செய்திருக்கு மவ்வுறுதியினைப்பற்றிப் பழையவாசனைகள் அயர்ந்தும் வந்தடராதபடி நிற்கையினாலும் வீரசைவமெனப் பெயராயிற்று, எ-று. (ஙச)

[மேலும் வீரமென்னும் பெயர் இவ்வேதுக்களினால் வந்ததென
நான்கு வெண்பாவினாற் சாதிக்கின்றார்.]

சாற்றுங் குருலிங்க சங்கமத்தி னல்லருளாற்
றேற்றும்ப்ர சாதச் சுகமருந்துந் - தோற்றந்
தடுமாற்ற மில்லாத தன்மை திரியா
நடுமாற்ற லால்வீர நாம்.

(இ - ள்.) சாற்றுங் குருலிங்க சங்கமத்தினல்லருளாற் றேற்றும் ப்ரசாதச் சுகமருந்துந்தோற்றம் - வேதாகமங்களினாற் கூறப்பட்ட குருவினிடத்தும் லிங்கத்தினிடத்துஞ் சங்கமத்தினிடத்தும் அநுக்கிரக நிமித்தமாக வுண்

டாகுஞ் சுத்தசித்த பிரசித்தமென்னும் பிரசாதத்தினையே கொள்வனென்னுந் தெளிவினையுடைய புத்தியில் - சற்றுந் தடுமாற்றமில்லாத தன்மை திரியாநடு மாற்றலால் வீரநாம் - சற்றுயினுந் தடுமாற்றமில்லாத தன்மையினைச் செயத் தம்பமாகத் தாபிக்கு முறுதியினைத் தருதலானும் வீரமெனப் பெயராயிற்று, எ-று. (௩௫)

நாமம்—நாம்என விகாரமாயிற்று.

[இன்னுமொரு திட்டாந்தத்தினாலும் வீரமெனச் சாதிக்கின்றார்.]

கணவன்பா லின்பமுறுங் கற்புடையாள் வேறோர்
கணவன்பா லின்பங் கருதி - யணைவுறு
ளாங்கதுபோ லிங்கத்துக் காருமன்பு வேற்றுலிங்கத்
தோங்கவிடா தாங்கதும்வீ ரம்.

(இ-ள்.) கணவன்பா லின்பமுறுங் கற்புடையாள் வேறோர் கணவன்பா லின்பங் கருதியணை வுறுளாங்கதுபோல் - கற்பினையுடைய வோர்மாதுதன்கணவனிடத் துண்டாகிய போகவிதங்களைப் புசித்து மகிழ்ச்சியினைப் பெறுவளேயல்லது பரபுருஷனைப் பார்த்தவனை யிச்சித்தவனிடத்துண்டாகு மின்பத்தினைக் கருதி யவனை யங்கீகரியாள் அதுபோல, லிங்கத்துக் காருமன்பு வேற்று லிங்கத்தோங்க விடாதாங்கதும் வீரம் - இச்சைவனுக்குப் பதியாகிய இஷ்டலிங்கபூசை இஷ்டலிங்க தெரிசனம் இஷ்டலிங்கதீர்த்தம் இஷ்டலிங்க பிரசாதம் இஷ்டலிங்க நிஷ்டை யிஷ்டலிங்க தியானமே யல்லது பரார்த்தமாகிய சிவலிங்கங்களில் அன்புசெலுத்தாத வுறுதியைத் தருதலானும் வீரசைவமெனப் பெயராயிற்று. எ-று. (௩௬)

இவ்விரத மில்லாதா ரெவ்விரத ராயிடினு
மவ்வவரோ டொன்று யருந்தன்முத - லெவ்வெவையு
முள்ளத்தா லுந்நினையா துற்றதிடஞ் சற்றகலாக்
கொள்கைத்தாங் கோலமும்வீ ரம்.

(இ - ள்.) இவ்விரதமில்லாதா ரெவ்விரதராயிடினு மவ்வவரோடொன்று யருந்தன்முத லெவ்வெவையும் - இங்ஙனங் கூறிய இஷ்டலிங்க விரதமில்லாதபெயர்கள் மற்றைய விரதங்களிற் றலைப்பட்டு அவ்விரதங்களைச் சாங்கமாக வனுட்டித்து அதின் முக்கியரா யநேக சித்தியினைப் பெற்றிருந்தார்களேயாயினும் அவ்வவர்களுடன் கூடிப்புசித்தல் அவர்களைப் பரிசித்தல் அவர்களுடன் சகவாசம்பண்ணுதல் முதலெல்லாவற்றையும், உற்றதிடஞ் சற்றகலாக் கொள்கைத் தாங் கோலமும் வீரம் - மனதிலுநினையாத வுறுதியை அயர்ந்தும் விடாத கோட்பாட்டினையழகாக வுடையவர்களாகையாலும் வீரமெனபெயராயிற்று, எ-று. (௩௭)

வேணுமெனு மிச்சை விளையுமங்கத் தீமையிற
வேணுமென்ப தெல்லாமும் வேண்டாவென் - றுணியாய்

நிற்குமது லிங்க நிகழ்ச்சியதா யங்கமற
நிற்பதுவும் வீர நிலை.

(இ-ள்.) வேணுமெனுமிச்சை விளையுமங்கத் தீமையிற வேணுமென்ப தெல்லாமும் வேண்டாவென்றுணியாய் - தனதாகியபொருள்யா தொன்றினையும் பிறர்க்கீயாது சர்வமுந் தனக்கே வேண்டுமெனு மிச்சையினை யுண்டாக்கும் அங்கத்தினது பொல்லாத குணத்தினைப்போக்க வுறுதிகொண்டு யாதொரு விடயங்களிலேயும் இச்சைசெல்லாதடக்கி நிற்குமதுவே செம்மையாக, நிற்குமது லிங்கநிகழ்ச்சியதா யங்கமறநிற்பதுவும் வீரநிலை - இங்ஙனம் இச்சை செல்லாதடக்கிநிற்குங் காலத்தோ ரிச்சை யகமுயற்சியற வெழுவதுண்டெனில் அவ்விச்சையினை இலிங்கத்தின திச்சையாகக்கண்டு தேககுணமற நிற்பதுவும் வீரநிலைமை, எ-று. (௩அ)

[மேற்சற்காரியவாதஞ் சாதிக்கின்றார்.]

அண்டத்துண் டாவதுபோற் பிண்டத்துண் டாமதுவே
யண்டர் பெருமா னருள்செய்த - பண்டை
யருளா கமத்திற் கவிரோத மில்லாப்
பொருளாகு மேன்மைப் பொருள்.

(இ-ள்.) அண்டத்துண்டாவதுபோற் பிண்டத்துண் டாமதுவே - இவ்வண்டத்துக் குண்டாயிருக்கும் இலக்கணங்களைப்போலவே - இப்பிண்டத்தினுக்கு முண்டா யிருக்குமென்று, அண்டர்பெருமா னருள்செய்த பண்டையருளாகமத்திற்கு - தேவர்கட்குத் தேவனாகிய பரமசிவனு லருளிச்செய்யப்பட்ட அநாதியாயிருக்குந் திவ்வியாகமங்கட்கு, அவிரோதமில்லாப் பொருளாகு மேன்மைப்பொருள் - அவிரோதமில்லாமலிருப்பதே மேன்மையாகிய சற்காரியப் பொருள், எ-று.

அஃ தெங்ஙனமெனில் பஞ்சபூத பரிணமமாய் முப்பத்தாறு தத்துவங்களுடன் பஞ்சகலை யாதாரமா யண்டபுருஷனுடன் கூடிச் சிவனுக்குத் திருமேனியாக விருக்கையா லிவ்வண்டமும் அவ்விலக்கணங்களையெல்லா முடைத்தாகியிருக்கையா லிப்பிண்டமும் சிவபெருமானுக்கு ஆலயமாக விருத்தலே சற்காரியவாதம், எ-று. (௩௯)

[ஓர் திட்டாந்தத்தினுற் சிவலிங்கத்தை விடாமற் றரிக்கவேண்டுமென் றருளிச்செய்கின்றார்.]

ஆறேறு வார்க ளரியதெப்ப மங்கத்தின்
வேறாகா தார்கரையின் மேவுவர்க - ளாறேறார்
தெப்பமகன் றோர்க ளிதுபோற் சிவலிங்க
மற்பமகன் றோர்பிறப்பாழ் வார்.

(இ-ள்.) ஆறேறுவார்க ளரியதெப்ப மங்கத்தின் வேறாகா தார்கரையின் மேவுவர்கள் - கரைதெரியாது புனல்பெருகி நிலையழிந்துவரு மோர்பெரிய ஆற்

றினைக்கடக் தக்கரைசெல்லக் கருதினவராய் நல்ல நெட்டிமுதலிய தெப்பத் யதக் கைவிடாதுபற்றி நீந்துமவர்களே கரையேறுவார்கள், அங்ஙன நீந்துங் காலத்து, ஆறேனும் தெப்பமகன்றோர்க ளிதுபோற் சிவலிங்க மற்பமகன்றோர் பிறப்பாழ்வார் - கைதவறித் தெப்பத்தினை விட்டவர்கள் அக்கரைசெல்லா தப் புனலினு ளழுந்திவிடுவார்கள் அதுபோலப் பிறவிக்கடலைக் கடத்திவிடுந் தெப்பமாகிய சிவலிங்கத்தினைக் கணப்பொழுதாயினுங் கைவிட்டவர்கள் பிற விக்கடலு ளழுந்திவிடுவார்கள், எ-று. (சo)

[ஆனாற் சூக்ஷுமதேகமாகிய மனதிற் றியானதாரணை போதாதோ தூல தேகத்திலேயுஞ் சிவலிங்கதாரணம் வேண்டுமோ சிவலிங்க தாரணம் வேண்டாவென்னி லமையாதெனக் கூறுகின்றார்.]

தூலத்திற் றெப்பமுறிற் சூக்குமமு மாறேறுந்
தூலத்தின் றேற்சூக்கந் தானேறா - தூலத்தி
லிட்டலிங்க நிட்டையுறி லெய்துமன மும்மொன்றா
பட்டுவினை நீங்குமெனப் பார்.

(இ-ள்.) தூலத்திற் றெப்பமுறிற் சூக்குமமு மாறேறுந் தூலத்தின்றேற் சூக்கந்தானேறா - தூலதேகமானது கரையலைத்தோடு நதியைக்கடக்கத் தெப் பத்தைப்பிடித் தக்கரைசேருமிடத்துச் சூட்சுமதேகமானது தான்அரூபமாக விருந்தாலுந் தானாகக் கரைசேரமாட்டாது அத்தூலதேகத்தைப்பற்றியே கரை சேரவேண்டும் அதுபோல, தூலத்திலிட்ட லிங்கநிட்டை யுறிலெய்து மன மும் மொன்றுபட்டு வினைநீங்குமெனப்பார் - தூலதேகமும் இஷ்டலிங்க தாரணத்தைப்பெற்றுப் பரிசுத்தத்தினை யடைந்தா லிதனைக் கூடிநிற்கு மன முதலிய சூட்சுமதேகமும் பரிசுத்தத்தை யடையுமல்லது வேறுவிதத்தில் பரி சுத்தத்தை யடையமாட்டாதென் றறிவாயாக, எ-று. (சக)

காயத்தாற் செய்கருமங் காணுமனத் தாலகலா
வாயமனக் கன்மமறா வங்கத்தா - லாய
விருவினைக ளேறா திருமையினும் லிங்க
மருவிவிடா தார்க்கு மதி.

(இ-ள்.) காயத்தாற் செய்கருமங் காணுமனத்தா லகலாவாய மனக்கன் மமறா வங்கத்தால் - காயத்தினாற்செய்த புண்ணியபாவங்களுக்குத் தக்க சுக துக்கபலங்கள் காயத்தினால் அனுபவித்துத் தொலைப்பதொழிந்து மனத்தினால னுபவித்துத் தொலைக்கப்படா, மனத்தினாற்செய்த புண்ணியபாவங்களுக்குத் தக்கபலங்கள் மனத்தினா லனுபவித்துத் தொலைப்பதொழிந்து காயத்தினாலனு பவித்துத் தொலைக்கப்படா, வாக்குக்காயத்திலடங்கும் ஆதலால் வேறுகூறிலர். ஆய விருவினைக ளேறா திருமையினும் லிங்க மருவிடாதார்க்கு மதி - ஆகையா ற் காயம் மனம் என்று சொல்லப்பட்ட இவ் விரண்டிடத்தும் சிவசம்பந்தம்

வேண்டும், அச்சம்பந்த மிருக்கின் ஒருகாலு மனவாக்குக் காயங்களா லிருவி னைகளேரு, எ-று.

(இதற்கு உ-ம்.) சிவப்பிரகாசம் "உற்றதொழினினை வுரையா லிருவினையு முளவாமொன்று லொன்றழியா" தென்பதனுற் கண்டுகொள்க. (சஉ)

[மேல் வீரசைவ நடையல்லாதனவற்றை யெட்டு வெண்பாவினுற் காட்டுகின்றுர்.]

ஆகார நித்திரையோ டச்சமருண் மைதுனத்தா
லாகாப் பிறப்பா மருநரகிற் - போகாதே
தானருளாம் லிங்கத்தாற் றுனருந்தா தேவிடையந்
தானருந்தல் பேதநெறி தான்.

(இ-ள்.) ஆகார நித்திரையோ டச்சமருள் மைதுனத்தா லாகாப் பிறப் பாமருநரகிற் போகாதே - தனக்குவிதித்த நித்திய நியமத்தினைச் செய்யாது கைவிட்டு ஆகாரநித்திரை பயமைதுனுதிகளினுற் காலத்தைப் போக்கியவை களினுலேறிய பாவகன்மத்துக் கீடாகிய நரகயாதனையில் வெகுகால மடிபட் டுப் பின்பு ஈனயோனிகளிற் சென்மித்துப் போகாமல், தானருளாம் லிங்க த்தாற் றுனருந்தாதேவிடயந் தானருந்தல் பேதநெறி தான் - தனக்குவிதித்த நியமங்களிற் றவருது நின்று அயோக்கியமான விடயங்களிற் செல்லாது தன க்கு யோக்கியமாகவரும் விடயங்களையு முன்னிலை குறியாது சிவ னுபகரிக் கிறதாகக் கண்டவ்விடயத்தினைச் சிவனுக்கற்பித்துச் சிவப்பிரசாதமாய்ப் புசிக்குமவனே மும்மல பெந்தங்களினின்றும் விடப்பட்டுச் சிவானுக்கிரகத் தைப் பெறுவன், அங்ஙனம் புசியாது முன்னிலையைநாடி மாயாவிடயரூபமா யிந்திரிய உச்சிட்டமானவைகளை அநாற்பிதமாகப் புசிக்கின்றவனு மிவ் வீரசை வத்துக்குப் புறம்பு, எ-று. (சங)

மந்திரத்தி னுலே மருண்மாய மாந்தனுவைச்
சிந்திச் சிவனிருக்கச் செய்வித்து - வந்ததெல்லா
மான வருளிலிங்கத் தற்பித் தருந்தாத
வீனமதி யும்பேத மென்.

(இ-ள்.) மந்திரத்தினுலே மருண்மாய மாந்தனுவைச் சிந்திச் சிவனிருக் கச் செய்வித்து - மயக்கத்தினைத்தரு மாயாசம்பந்தமாகிய வித்தேகத்தினைத் தீக்ஷாகாலத்தில் மந்திரங்களினுற் சுத்திபண்ணி இஷ்டலிங்க மெழுந்தரு ளியிருக்கச் சிவாலயமாகச் செய்வித்துப் பின்பு, வந்ததெல்லாமானவரு ளிலி ங்கத்தற்பித் தருந்தாதவீனமதி யும்பேதமென் - தனக் கனுபவமாகவரும் விட யபோகங்களை யெல்லாஞ் சிவனுக் கற்பித்தருந்தாத கிஞ்சிஞ்ஞனு மிவ் வீர சைவத்துக்குப் புறம்பு, எ-று. (சச)

அஞ்சு பொறியி லடையும் விடயமெல்லா
மஞ்சுமுக மான வரனருந்த - வஞ்சமற

ஆட்டிப் பிரசாத முண்ணும லுண்பவருங்
காட்டியவப் பேதமெனக் காண்.

(இ-ள்.) அஞ்சுபொறியி லடையும் விடயமெல்லா மஞ்சுமுகமான வரனருந்த - இத் தூல சரீரத்திலிருக்கும் ஞானேந்திரியங்களாகிய சுரோத்திரந் தொக்கு சட்சு சிங்குவை யபக்கிராணமென்னும் பஞ்சேந்திரிய வழித்தாகவருஞ் சத்தாதி விடயங்களை யந்தந்தத் தானத்தினின்றும் பஞ்சசாதாக்கிய வடிவமான பிரசாதலிங்கமுத லாசாரலிங்க மீருகுமைவகை இலிங்கங்களுக்கும் அற்பிதமாக, வஞ்சமறவூட்டிப் பிரசாத முண்ணும லுண்பதுவுங் காட்டிய வப் பேதமெனக்காண் - மறவாம லற்பித் தவ்விலிங்கபிரசாதமாய்ப் புசியாது அநாற்பிதமாய் மாயாபதார்த்தமாகப் புசிப்பவனும் இவ் வீரசைவத்துக்குப் புறம்பு, எ-று. (சரு)

தனக்கினிய தெல்லாந் தலைவனுக்கற் பித்துப்
பினைக்கவலை மாற்றுபிர சாதங் - கனக்கவே
தானுண்டு வாழ்வதறத் தான்வேற தாய்வினையைத்
தானுண் பதும்பேதந் தான்.

(இ-ள்.) தனக்கினிய தெல்லாந் தலைவனுக் கற்பித்துப் பினைக்கவலைமாற்று பிரசாதங் கனக்கவேதானுண்டு வாழ்வதற - தனக்குப் புசிக்க யோக்கியமாக விருக்கும் பதார்த்தங்களைத் தனக்குத் தலைவனுகவிருக்கு மிஷ்டலிங்கமூர்த்திக் கற்பித் தப்பிரசாதத்தைத் தனது பிறவிக் கிலேசமறப்பெருமை பெறவுண்டு சிவானுபூதி மானுய் வாழுமதனைவிட்டு, தான்வேறதாய் வினையைத் தானுண்பதும் பேதந்தான் - தனக்கு வேருக வினைப்போகமாய் வரும்பதார்த்தங்களை யநாற்பிதமாய்ப் புசித்தலைச் செய்பவனு மிவ்வீரசைவத்துக்குப் புறம்பு, எ-று. (சசு)

கற்புடைய மங்கை கருதுமுடற் போகமெல்லா
மற்புதமாந் நாயகனுண் டன்பார - நிற்பதுபோ
லங்கசுகம் வாட்டி யரியலிங்க போகமுண்ணுந்
துங்கமறி யார்பேதத் தோர்.

(இ-ள்.) கற்புடையமங்கை கருதுமுடற்போகமெல்லா மற்புதமாந் நாயகனுண் டன்பார நிற்பதுபோல் - தன்கணவனையே தெய்வமெனக் கருதி வழிபடு மோர்கற்புடைய நாயகியானவள் தன்னிடத்துண்டாகிய போகங்களையெல்லாந் தன்னுயகன் புசித்துத் தன்னிடத் தன்புதரத் தானக்கணவன் பணியினிற்பதுபோல - அங்கசுகம்வாட்டி யரியலிங்க போகமுண்ணுந் துங்கமறியார்பேதத்தோர் - தனதங்க முன்னிலையாகவரும் விடயசுகங்களைத் தானுகப்புசியாது தனது நாயகனுகிய இஷ்டலிங்கத்துக் கற்பித் தவ்விலிங்க பிரசாதமாய்ப் புசிக்கும் வெற்றிப்பாட்டினை யறியாதவரு மிவ்வீரசைவத்துக்குப் புறம்பு, எ-று. (சஎ)

ஆருயிருக் காக வரும்பொருளைக் காயமுண்ணு
வேரதுபோ லிங்கத்துக் கேலாத - காருடைய
தீயவினை யுண்ணுத் தெளிவகன்று தான்புசித்துச்
சாய்வதுவும் பேதமது தான்.

(இ-ள்.) ஆருயிருக்காக வரும்பொருளைக் காயமுண்ணு வேரதுபோல் - நாவிபாஷாணமுதலிய விஷபதார்த்தங்களைப் புசிக்கின் இத்தேகத்தினின்று மிச்சீவனீங்கிப் போமெனக் கருதி யப்பதார்த்தங்களை இத்தேகம் புசியாத வாறுபோல, லிங்கத்துக் கேலாத காருடைய தீயவினையுண்ணுத் தெளிவக ன்று தான்புசித்துச் சாய்வதுவும் பேதமதுதான் - இவனுந் தனது அலாங்க த்திலிருக்கு மிஷ்டலிங்கத்திற் கற்பிக்க யோக்கியமல்லாத தீய பதார்த்தங்க ளைப் புசிக்கிற் றன்றேகத்தில் அச்சிவபெருமா னிரானென்பதனைக் குறித் தொரு காலுமுண்ணுன் அவ்விவேகமின்றிலிங்காற்பித யோக்கியமல்லாத தீய பதார்த்தங்களைப்புசித்து நரகத்தில் வீழ்வோனு மிச்சமயத்துக் கந்நியம், எ-று.

மருந்தருந்த மாதா மகவுறுநோய் தீரத்
திருந்தவமிர் தங்கொடுக்குஞ் சீர்போ - லரும்பொருள்க
ளுண்டுசிவ லிங்க முதவுபிர சாதமுண்ணு
துண்பவரும் பேதமென வோர்.

(இ-ள்.) மருந்தருந்த மாதா மகவுறுநோய் தீரத் திருந்தவமிர் தங்கொடுக் குஞ் சீர்போல் - தாயானவள் தனது முலையுண்ணுஞ் சிறுகுழந்தை மாந்தமுத லிய பிணிகளால் வருந்துதலைக்கண் டப்பிணி தீர்வதற்கேற்ற மருந்தினைக் கூட்டி யக்குழந்தைக்குக் கொடுத்நாற் போதாதென வக்குழந்தையினது வியா தி தீரவேண்டுமென்கின்ற விருப்பத்தினுற் முன் மருந்தையுண்டு தனது முலை யின் வழித்தாய்வரும் பாலை யக்குழந்தைக் குண்ணக்கொடுத்து அக்குழந்தையி னது பசியினையும் வியாதியினையுந் தீர்க்குமாறுபோல, அரும்பொருள்க ளுண்டு சிவ லிங்க முதவுபிர சாதமுண்ணு துண்பவரும் பேதமென வோர் - அச்சிவ னும் இவ்வான்மாவைப்பற்றிய வாணவமுதலிய வியாதியைப்போக்க மாயா போகங்களைத் தாங்கொண் டிவனுக்குப் பிரசாத போகமாகக்கொடுத் தவ்வியா தியினைப் போக்குவனென்பதை யறியாது மாயாபோகமாகவே யுண்பவனு மிவ் வீரசைவத்துக்குப் புறம்பு, எ-று. (சுக)

தனக்கொன்று தானல்லா தார்க்கொன்று செய்யிற்
கனத்தநர கென்றுரைத்தல் கண்டுங் - தனக்கிறையாஞ்
சங்கரனுக் குந்தனக்குந் தானுண்ட லாதிரண்டாய்ச்
சங்கைசெய்த லும்பேதந் தான்.

(இ-ள்.) தனக்கொன்று தானல்லா தார்க்கொன்று செய்யிற் கனத்தநர கென்றுரைத்தல் கண்டும் - இவ்வுலகத்தின்கண் ணேர்புருட ஞேர்தானத்துத்

தன்னோத்தாரோடிருந் துண்ணுதலைச் செய்யுமிடத் துண்பனவற்றிற் றனக் கொருவிதமும் அவர்களுக் கொருவிதமு மாகச்செய்யின் நரகத்தை யடைவ னென்று வசனங்க ளிருக்கக்கேட்டிருந்தும், தனக்கிறையாஞ் சங்கரனுக்குந் தனக்குந்தா னுண்டலா திரண்டாய்ச் சங்கைசெய் தனும்பேதந் தான் - தன் னுயிர்க்குயிராயிருக்குஞ் சிவபெருமானுக்குந் தனக்கு முண்பனவற்றில் அவற் கொருவிதமுந் தனக்கொருவிதமுமாகப் பண்ணுமவனு மிவ்வீரசைவத்துக்குப் புறம்பு, எ-று. (ரு0)

[மேலுந் திட்டாந்தமிட்டுக் கற்புநிலை சாதிக்கின்றார்.]

பொதுவாகி யுண்பாள் பொதுமாது கற்புத்
திதமா யொருவன்பாற் சேர்த்தி - விதமான
போகமுண்பாள் கற்புடையாள் போலவிட்ட லிங்கத்தாற்
போகமுண்டல் கற்புடைமைப் பொற்பு.

(இ-ள்.) பொதுவாகி யுண்பாள் பொதுமாது - தனக்கிவன் கணவனென் னுமோர் நியமமில்லாத பொதுமாதானவள் திரவியவாஞ்சையா லருந்தல் பொ ருந்தல் முதலியனவற்றைப் பலரிடத்து மங்கீகரிப்பள், கற்புத் திதமா யொரு வன்பாற் சேர்த்தி விதமான போகமுண்பாள் கற்புடையாள் போல - கற்பினை யுடைய வோர்மங்கை பரபுருஷனைக் கண்ணினாலேயும் பாராது தன் கணவனை யே தெய்வமெனக்கொண் டெப்போது மவன் வசப்பட்டவனிடத் துண்டாகிய போக விதங்களை யனுபவிப்பள்; அதுபோல, இட்ட லிங்கத்தாற் போகமுண் டல் கற்புடைமைப் பொற்பு - இவ்வீரசைவனும் பரார்த்தமுதலிய அந்நிய தேவ தாப் பிரசாத முதலியனவற்றை யங்கீகரியாமற் றன திஷ்ட்டலிங்கத்தால் வரு ம் பிரசாதபோகத்தை யனுபவிக்குமதுவே யழகான கற்புடைமை, எ-று. (ருக)

[இவ்வீரசைவனுக்கு அங்கத்தலமன்றி வேறோர் தலமில்லை யென்பதை விளம்புகின்றார்.]

இட்டலிங்கம் வாழு மினியதலம் பற்றிவினைக்
கட்டறுக்கும் வீரநிலை காதலறக் - கட்டவினை
தீர்க்க வரியதலஞ் சேர்வோமென நினையு
மூர்க்கருமப் பேதமென முன்.

(இ-ள்.) இட்டலிங்கம் வாழு மினியதலம் பற்றிவினைக் கட்டறுக்கும் வீர நிலை காதலற - அவாங் மனகோசரமாகிய சுத்தசிவோன் முகமாகிய பாவலிங் கம், பாவலிங்கோன் முகமாகிய பிராணலிங்கம், இவ் விரண்டிலிங்கப் பிரச ன்னமே இஷ்ட்டலிங்கம் (இஷ்ட்டலிங்கமென்பானேன் னெனிற்றனதனிஷ்ட்ட மாகியமலமாயாதி கன்மங்களைப்போக்கி இஷ்ட்டமாகிய சிவாநந்தாநுபூதியை க்கொடுக்கையா லிஷ்ட்டலிங்கமெனப் பெயராயிற்று) அவ்விஷ்ட்டலிங்கத்தில் ஆசாரலிங்கமுங் குருலிங்கமும், பிராணலிங்கத்தில் சிவலிங்கமுஞ் சங்கமலிங் கமும், பாவலிங்கத்திற் பிரசாதலிங்கமும் மகாலிங்கமும் ஆக ஆறுலிங்கமாய்

அவ்வாறுலிங்கத்தில் முப்பத்தாறுலிங்கமாய் அம்முப்பத்தாறி விருநூற்றுப்பதினறு வியாபாரபேதமாகிய சரலிங்கங்களுக்கு மதிகரணமாயிருக்கும் இஷ்ட்டலிங்கம், அவ்விஷ்ட்டலிங்கப் பிரதிஷ்ட்டைக்குத் தானமாக இத்தேகத்தைத் தீக்ஷாகன்மத்தினலே பூதபரிணமமாகிய சத்ததாதுக்கள் பஞ்சபூதங்கள் ஞானேந்திரியங்கள் கன்மேந்திரியங்கள் அந்தக்கரணங்கள்முதலிய தூல சூட்சும காரண தேகங்களை யெல்லாஞ் சோதித்து அந்தந்தத்தானங்களிலே இலிங்க மூர்த்தங்களைத்தாபித்துப் பின்பு இஷ்ட்டலிங்கத்தைத் தூலதேகத்திற் பிரதிஷ்ட்டைபண்ணிச் சரலிங்கப் பிரசன்னத்துவமாகிய மகாசிவதலத்தில் அகோராத்திரங் குடியிருப்பவன் இவ்வனுபவத்தை விட்டு, கட்டவினை தீர்க்க வரியதலஞ் சேர்வோமென நினையு மூர்க்கருமப் பேதமென முன் - தனது கன்மநாசமாக வேண்டுமென்று பரார்த்தமாகிய வோர் சிவலிங்கத்தானமா யிருக்குங் காசி இராமேச்சுரமுதலிய தலங்களைக்குறித்துப் போகவேண்டுமென்னு மூடனும் வீரசைவத்துக்குப் புறம்பென் றறிவாயாக, எ-று. (ருஉ)

வீரசைவனுக்கிஷ்ட்டலிங்க பாதோதகமேயல்லாது வேறுதீர்த்தமில்லை
யென்பதை விளம்புகின்றார்.

பரிவுடைய விட்டலிங்க பாததீர்த் தத்தால்
விரிவுடைய கன்மவினை வெட்டுந் - திரமதனை
விட்டுவினை தீர்க்க மிகுபுவியிற் றீர்த்தமெண்ணப்
பட்டவரும் பேதமெனப் பார்.

(இ-ள்.) பரிவுடைய விட்டலிங்க பாததீர்த் தத்தால் விரிவுடைய கன்மவினை வெட்டுந் திரமதனை விட்டு - மலகன்மமாயைகளிற் றுவக்குண்டிருக்குந் தன்னை இரட்சிக்கும்பொருட்டு மிகுந்த கிருபையினலான்மார்த்தமா யிஷ்ட்டலிங்கமென்னும் பெயரைத்தரித்தித்தேகத்திற் பிரசன்னமாக விருந்து அறுபத்தாறுகோடி தீர்த்தங்களும்வந்து பூசிக்குந்தமது பாததீர்த்தத்தை எப்போதுந் தந்திருக்கும் இந்தத்தூலதீர்த்தத்திலே மூழ்கியுஞ் சூட்சும தீர்த்தத்தை யுட்கொண்டும் பிரவாக நித்தியமாய்வரும் வினைகளைச்சேதிக்கு முறுதியைவிட்டு, வினைதீர்க்கமிகு புவியிற்றீர்த்த மெண்ணப்பட்டவரும் பேதமெனப்பார் - தன்னற்செய்யப்பட்ட வினைகளைப் போக்கிக்கொள்ளக் கங்கைமுதலிய பூததீர்த்தங்களிற் சென்றாட வேண்டுமென்னு நினைவினையுடைய பெயர்களும் வீரசைவர்களல்லவென வறிவாயாக, எ-று. (ருங)

[வீரசைவனுக்கு இஷ்ட்டலிங்கமூர்த்தி தெரிசனமேயன்றி வேறு
மூர்த்திதெரிசனம் வேண்டுவதில்லையென விளம்புகின்றார்.]

மூர்த்திகொண்ட விட்டலிங்க மூர்த்தியினற்றீயவினைத்
தீர்த்திடுநல் வீரத் திடமகலக் - கூர்த்தவினை
கட்டறுக்க வெண்ணிமிக்க காசினியி லோர்மூர்த்திக்
கிட்டமுறு மேழையும்பே தம்.

(இ-ள்.) மூர்த்திகொண்டவிட்ட லிங்கமூர்த்தியினாற் றீயவினைதீர்த்திடு நல்வீரத்திடமகல - தத்துவமூர்த்தி பிரபாவத்தோடு சன்மசாதாக்கியமென்னும் பெயரையுடைய இஷ்டலிங்கமூர்த்தியினை ஆன்மார்த்தமா யித்தேகத்தில் விட்டு நீங்காமற்றரித் தெந்நேரமும் பூசித்துச் சேவித்துத் தெரிசித்தற்பித்துச் சந்நிதானமாயிருந்து பொல்லாத வினைகளையெல்லாந் தீர்த்துக்கொள்ளு முறுதியைவிட்டு - கூர்த்தவினைகட்டறுக்க வெண்ணி மிகக்காசினியிலோர் மூர்த்திக்கிட்ட முறுமேழையும் பேதம்-தன்னைப் பெந்தியாநின்ற பொல்லாதவினைகளைப் போக்கிக்கொள்ளவெண்ணி இவ்வுலகத்திற் பலதலங்களினும் பரார்த்தமாக விருக்கும் பலமூர்த்திகளையுஞ் சேவிக்கவிரும்பும் பேதையு மிச்சைவைத்துக் கந்நியம், எ-று. (ருச)

[இத்தீக்கையை நம்பாதவனே பாதகனெனவுரைகின்றார்.]

அங்கந் திருக்கோயி லாக்கி யமலலிங்க
மங்கருளாற் றாபித் ததற்பின்பும் - பொங்கியதீச்
சூதகவங் கம்போலச் சூதகஞ்சுட் டும்புந்திப்
பாதகரும் பேதமெனப் பார்.

(இ-ள்.) அங்கந் திருக்கோயிலாக்கி யமலலிங்க மங்கருளாற்றாபித்ததற்பின்பும்-ஞானாசாரியரானவர் தமது தீட்சாசத்தியினால் மாயாகாரியமாகிய வித்தேகத்தைச் சுஸ்த்திகாரோகணமுதலிய தீட்சையினா லம்மாயாகாரியரூபத்தைப்போக்கி மந்திரசொரூபமாக்கி நின்மலமாகிய விஷ்டலிங்கத்தைப் பிரசன்னமுகமாய்ப் பரான்முகமின்றிப் பஞ்சாவத்தையினு மிவனுடைய அற்பணவவதானங்களைக் கைக்கொண்டு அநுக்கிரகம் பண்ணிக்கொண் டெழுந்தருளியிருக்கத்தாபித்து இவனுஞ் சந்நிதானம்விட்டுப் பிரியாமலிருக்கவும் அவ்வுறுதியைவிட்டேப் பின்னும், பொங்கிய தீச்சூதகவங்கம்போலச் சூதகஞ் சுட்டும் புந்திப்பாதகரும் பேதமெனப்பார் - அத்தேகத்துக்கு முன்புபோல நித்திய சூதகம் சென்னாசுச மரணாசுசமுதலிய சூதகங்களை யுண்டென்றனுட்டிக்கப்பட்ட அற்ப புத்தியையுடைய மகாபாதகனு மிச்சைவைத்துக்குப்புறம்பு, எ-று. (ருரு)

[இச்சைவனுக்குக் குலாசாரப்பற்றாகாதென வருளிச்செய்கின்றார்.]

தானர்ச் சகனாகித் தந்தைதாய் தாரமக்க
டானச் சிடுமெவருந் தம்பிறவி - யீனக்
குலவொழுக்கங் குன்றாக் கூட்டிக் கலக்கு
நலமிலனும் பேதமென நாடு.

(இ-ள்.) தானர்ச் சகனாகித் தந்தைதாய் தாரமக்க டானச் சிடுமெவரும் - தான்முன் அர்ச்சகமயத்திருந் தொருபரிபாகவிசேடத்தினா லிவ்வீரசைவத்தில் வந்து தீட்சாசத்தரா யிலிங்கதாரணத்தையும் பெற்றுச் சிவலிங்கார்ச்சகனாக விருப்பவன் பின்பு அதிக்கிரிதராய்வெற்றர்களாயிருக்குந் தந்தைதாய் பெண்சாதி பிள்ளைகளைத் தனக்குச் சம்பந்தமாக விரும்புமவனும், தம்பிறவி யீனக்குலவொ

மூக்கங் குன்றுறைக் கூட்டிக்கலக்கு நலமிலனும் பேதமெனநாடு - தமது பிறப்பிற்கொண்ட ஈனமாகிய குலாசார தருமத்தை விடாமலிருக்குமவனைக்கூடித் தானுங்குலாசார தருமத்தைவிடாது நன்மையை யிழந்தவனு மிச்சைவைத்துக் கர்நியமென் றறிவாயாக, எ-று. (ருசு)

[தீக்ஷையினாலேயே சாதிகன்மங் கெடுமென்பதற் கையமில்லை
யென வருளிச்செய்கின்றார்.]

காட்டம் பலவுங் கனலேயாய் நின்றதுபோ
னாட்டும் பலசாதி நட்டமுறத் - தீட்டுஞ்
சிவதீக்கை யாலே சிவசாதி யேயா
நவமறியா னும்பேத நாடு.

(இ-ள்.) காட்டம் பலவுங் கனலேயாய் நின்றதுபோல் - பலவகைத்தாய பெயர்பெற்றிருக்குங் காட்டங்கள் பலவும் எரியாநின்ற வக்கினியைச்சேர்ந் தெரிந் தப்பெயர்போய் அக்கினியெனப் பெயர்பெற்று நிற்றல்போல, நாட்டும் பலசாதி நட்டமுறத் தீட்டுஞ் சிவதீக்கை யாலே - முன்னை வினைக்கீடாகச் செனித்த வேதியர் அரசர் வணிகர் சூத்திரர் அநுலோமர் பிரதிலோமர் முதலிய பெயர்களாயினும் மலபரிபாக மிகுதியினால் ஞானாசாரியனை யடைந்தவராற் பண்ணப்படும் ஞானதீட்சையினாலே முன்சொன்ன சாதிதர்மங்கள்போய், சிவசாதி யேயாம் நவமறியா னும்பேத நாடு - சிவசாதியாயிருக்கும் அந்நலத்தை யறியாது பூருவசாதியைச் சொல்லுமவனு மிச்சைவத்துக் கர்நியமென் றறியக்கடவாய், எ-று. (ருஎ)

[சிவகதியைப்பெற்றும் பூருவ சாதிசொல்லும் அவனே பூமிக்குப்
பாரமென வுணர்த்துகின்றார்.]

சிவகுலத்தி லுற்பவித்த செல்வமறக் கேட்டா
லவகுலத்தைச் சொல்லு மவலச் - சவலையாய்
நின்றநில மாதினுக்கு நீண்டபெரும் பாரமதாய்
நன்றிலனும் பேதமென நாடு.

(இ-ள்.) சிவகுலத்தி லுற்பவித்த செல்வமறக் கேட்டா லவகுலத்தைச் சொல்லும் - சிவரூபமாகிய வாசாரியர் பண்ணுந் தீட்சையினாற் குருபுத்திரனாய்ச் சிவசாதியா யிருக்கும் பாக்கியத்தைப் பெற்றிருக்க அப்பாக்கியத்தை விட்டு உன்குலம் யாதெனக் கேட்போர்கட்குத் தான் முன்வினைக் கீடாகப்பிறந்த அவலமாகிய குலத்தைச் சொல்லும், அவலச் சவலையாய் நின்றநில மாதினுக்கு நீண்டபெரும் பாரமதாய் நன்றிலனும் பேதமென நாடு - அவலனை யொன்றுக்கும் வழக்கமற்றவனுமாய்ச் சகலத்தையுந் தாங்காநின்ற விப்பூமிதேவிக்கு மிகுந்த பாரமாய்ப் பாவச்செயலுடையானு மிச்சமயத்துக்குப் புறம்பு, எ-று. ()

(இ-ள்.) மூர்த்திகொண்டவிட்ட லிங்கமூர்த்தியினும் தீயவினைதீர்த்திடு நல்வீரத்திடமகல - தத்துவமூர்த்தி பிராபாவத்தோடு கன்மசாதாக்கியமென்னும் பெயரையுடைய இஷ்டலிங்கமூர்த்தியினை ஆன்மாத்தமாயிந்தேகத்தில் விட்டு நீங்காமற்றரித் தெந்நேரமும் பூசித்துச் சேவித்துத் தெரிசித்தற்பித்துச் சந்நிதானமாயிருந்து பொல்லாத வினைகளையெல்லாந் தீர்த்துக்கொள்ளு முறுதியைவிட்டு - கூர்த்தவினைகட்டறுக்க வெண்ணி மிக்காசிவியிலோர் மூர்த்திக்கிட்ட முறுமேழையும் பேதம்-தன்னைப் பெருந்தியாநின்ற பொல்லாதவினைகளைப் போக்கிக்கொள்ளவெண்ணி இவ்வுலகத்திற் பலதலங்களினும் பரார்த்தமாக விருக்கும் பலமூர்த்திகளையுஞ் சேவிக்கவிரும்பும் பேதைநுயிச்சைவைத்துக் கந்நியம், எ-று. (ருச)

[இத்திக்கையை நம்பாதவனே பாதகனெனவறைகின்றார்.]

அங்கந் திருக்கோயி லாக்கி யமலலிங்க
மங்கருளாற் ரூபித் ததற்பின்பும் - பொங்கியதீச்
சூதகவங் கம்போலச் சூதகஞ்சுட் டும்புந்திப்
பாதகரும் பேதமெனப் பார்.

(இ-ள்.) அங்கந் திருக்கோயிலாக்கி யமலலிங்க மங்கருளாற்ரூபித்ததற்பின்பும்-ஞானாசாரியரானவர் தமது தீட்சாசத்தியினால் மாயாகாரியமாகிய வித்தேகத்தைச் சஸ்த்திகாரோகணமுதலிய தீட்சையினு லம்மாயாகாரியருபத்தைப்போக்கி மந்திரசொருபமாக்கி நின்மலமாகிய விஷ்டலிங்கத்தைப் பிரசன்னமுகமாய்ப் பரான்முகமின்றிப் பஞ்சாவத்தையினு மிவனுடைய அற்பணவவதானங்களைக் கைக்கொண்டு அநுக்கிரகம் பண்ணிக்கொண் டெழுந்தருளியிருக்கத்தாபித்து இவனுஞ் சந்நிதானம்விட்டுப் பிரியாமலிருக்கவும் அவ்வுறுதியைவிட்டுப் பின்னும், பொங்கிய தீச்சூதகவங்கம்போலச் சூதகஞ் சுட்டும் புந்திப்பாதகரும் பேதமெனப்பார் - அத்தேகத்துக்கு முன்புபோல நித்திய சூதகம் செனனசூச மரணசூசமுதலிய சூதகங்களை யுண்டென்றனுட்டிக்கப்பட்ட அற்ப புத்தியையுடைய மகாபாதகனு மிச்சைவைத்துக்குப்புறம்பு, எ-று. (ருரு)

[இச்சைவனுக்குக் குலாசாரப்பற்றாகாதென வருளிச்செய்கின்றார்.]

தானைச் சகனுகித் தந்தைதாய் தாரமக்க
டானைச் சிடுமெவருந் தம்பிறவி - யீனக்
குலவொழுக்கங் குன்றாக் கூட்டிக் கலக்கு
நலமிலனும் பேதமென நாடு.

(இ-ள்.) தானைச் சகனுகித் தந்தைதாய் தாரமக்க டானைச் சிடுமெவரும் - தான்முன் அச்சமயத்திருந் தொருபரிபாகவிசேடத்தினு லிவ்வீரசைவத்தில் வந்து தீட்சாசத்தநு லிலிங்கதாரணத்தையும் பெற்றுச் சிவலிங்கார்ச்சகனுக விருப்பவன் பின்பு அதிலிதராய்வெற்றர்களாயிருக்குந் தந்தைதாய் பெண்சாதி பிள்ளைகளைத் தனக்குச் சம்பந்தமாக விரும்புமவனும், தம்பிறவி ஈனக்குலவொ

மூக்கங் குன்றுறாக் கூட்டிக்கலக்கு நலமிலனும் பேதமெனநாடு - தமது பிறப் பிற்கொண்ட ஈனமாகிய குலாசார தருமத்தை விடாமலிருக்குமவரைக்கூடித் தானுங்குலாசார தருமத்தைவிடாது நன்மையை யிழந்தவனு மிச்சைவைத்துக் கந்நியமென் றறிவாயாக, எ-று. (ருசு)

[தீக்ஷையினாலேயே சாதிகன்மங் கெடுமென்பதற் கையமில்லை யென வருளிச்செய்கின்றார்.]

காட்டம் பலவுங் கனலேயாய் நின்றதுபோ
னாட்டும் பலசாதி நட்டமுறத் - தீட்டுஞ்
சிவதீக்கை யாலே சிவசாதி யேயா
நவமறியா னும்பேத நாடு.

(இ-ள்.) காட்டம் பலவுங் கனலேயாய் நின்றதுபோல் - பலவகைத்தாய பெயர்பெற்றிருக்குங் காட்டங்கள் பலவும் எரியாநின்ற வக்கினியைச்சேர்ந் தெரிந் தப்பெயர்போய் அக்கினியெனப் பெயர்பெற்று நிற்றல்போல, நாட் டும் பலசாதி நட்டமுறத் தீட்டுஞ் சிவதீக்கை யாலே - முன்னை வினைக்கீடாகச் செனித்த வேதியர் அரசர் வணிகர் சூத்திரர் அநுலோமர் பிரதிலோமர் முத லிய பெயர்களாயினும் மலபரிபாக மிகுதியினால் ஞாநாசாரியரை யடைந்தவ ராற் பண்ணப்படும் ஞாநதீட்சையினாலே முன்சொன்ன சாதிதர்மங்கள்போய், சிவசாதி யேயாம் நவமறியா னும்பேத நாடு - சிவசாதியாயிருக்கும் அந்நலத் தை யறியாது பூருவசாதியைச் சொல்லுமவனு மிச்சைவத்துக் கந்நியமென் றறியக்கடவாய், எ-று. (ருஎ)

[சிவகதியைப்பெற்றும் பூருவ சாதிசொல்லும் அவனே பூமிக்குப் பாரமென வுணர்த்துகின்றார்.]

சிவகுலத்தி லுற்பவித்த செல்வமறக் கேட்டா
லவகுலத்தைச் சொல்லு மவலச் - சவலையாய்
நின்றநில மாதினுக்கு நீண்டபெரும் பாரமதாய்
நன்றிலனும் பேதமென நாடு-

(இ-ள்.) சிவகுலத்தி லுற்பவித்த செல்வமறக் கேட்டா லவகுலத்தைச் சொல்லும் - சிவரூபமாகிய வாசாரியர் பண்ணுந் தீட்சையினாற் குருபுத்திரனா ய்ச் சிவசாதியா யிருக்கும் பாக்கியத்தைப் பெற்றிருக்க அப்பாக்கியத்தை விட் டு உன்குலம் யாதெனக் கேட்போர்கட்குத் தான் முன்வினைக் கீடாகப்பிறந்த அவலமாகிய குலத்தைச் சொல்லும், அவலச் சவலையாய் நின்றநில மாதினுக்கு நீண்டபெரும் பாரமதாய் நன்றிலனும் பேதமென நாடு - அவலனா யொன்றுக் கும் வழக்கமற்றவனுமாய்ச் சகலத்தையுந் தாங்காநின்ற விப்பூமிதேவிக்கு மி குந்த பாரமாய்ப் பாவச்செயலுடையானு மிச்சமயத்துக்குப் புறம்பு, எ-று.()

[ஆசாரியனைப் பிதாவென்னாது வினைக்கீடாகச் செனிப்பித்த தந்தையைப் பின்னுந் தந்தையென லாகாதென்பதை யுணர்த்துகின்றார்.]

பற்றுங் குருகரத்திற் பாரப் பிறப்பகற்ற
வுற்றவரு ளாலே யுதிப்பித்த - மற்றவனைத்
தந்தையா ரென்னமுன்னந் தான்வினையி னாற்பிறந்த
தந்தையென்ப தும்பேதந் தான்.

(இ-ள்.) பற்றுங் குருகரத்திற் பாரப் பிறப்பகற்ற-சிவபிரானன்றானே தன்னைக்குறித் தாசாரிய மூர்த்தமா யெழுந்தருளிவந் தொருகாலுந் தீராத செனன மரணத்தினைத் தீர்த்துச் சிவாநந்தாநுபூதியைத் தரும்பொருட்டு, உற்றவரு ளாலே யுதிப்பித்த மற்றவனைத் தந்தையாரென்ன - தீட்சாகாலத்துத் தனது தூல சூக்கும காரணமாகிய தனுத்திரையங்களையுஞ் சேதித்துப் பின்பு எங்கும் வியாபியாயிருந்தாலும் ஆன்மவிளக்க மிருதயமாகையா லிருதயத்தானத்தைப் பற்றியிருக்கு மான்மாவை நாராச முத்திரையினால் வாங்கி யவ்வாசாரியர் தம திருதயத்தில் வைத்து மலத்திரையங்களு மாறச் சுத்தனாய்நினைந்து பின்னுந் தமது கரதலத்தினா லவனுடைய இருதயகமலத்திற் றமது புத்திரனாகப் பிறப்பித்திருக்குந் தேசிகனைப் பிதாவெனச் சொல்லாது மறந்தானாயினும் உன்பிதா யாரென்னில், முன்னந்தான் வினையினாற் பிறந்த தந்தையென் பதும்பேதந் தான் - தான் குருகரசாதகனாகப் பிறப்பதற்கு முன்வினைக் கீடாகத் தன்னைப் பிறப்பித்த புருடனைத் தந்தையென்று சொல்பவனு மிச்சைவத்துக் கந்நியம், எ-று. (௫௯)

[மேலாசாரியரிருக்குந் தலத்தினையே தனது தலமெனச்சாற்றா தவனிழிவு சாற்றுகின்றார்,]

பிறந்தவூ ரேதென்றாற் பேரருளா மாசா
னிறைந்த கரத்திற் பிறக்கச் - சிறந்தவூர்
தானுரையா தேவினையாற் றான்பிறந்த வூரொன்னு
மானமில ரும்பேத மாம்.

(இ-ள்.) பிறந்தவூ ரேதென்றாற் பேரருளா மாசா னிறைந்த கரத்திற் பிறக்கச் சிறந்தவூர் தானுரையாதே - ஒருவன் றன்னைநோக்கி நீ பிறந்தவூர் யாதென்னில் நிறைந்த பேரருளே திருமேனியாகிய வாசாரியனெழுந்தருளித் தீட்சா காலத்துத் தமது தீக்ஷாசத்தியினாற் றமது கரதலசாதனாகப் பிறப்பிக்கப் பிறந்ததலத்தையே தலமெனச் சொல்லாது, வினையாற்றான் பிறந்த வூரொன்னு மானமில ரும்பேத மாம் - தான் பூருவம் பண்ணின கன்மத்துக்கிடாக மாதாபிதாக்க ளிடமாக யோனி சாதகமாகப்பிறந்த வூரினது பெயரையுரைக்கு மானமில்லாதவனு மிச்சமயத்துக் கந்நியம், எ-று. (௬௦)

[மேலும் தீட்சாசத்தியினாற் றன் னுவுச்சிட்டத்தை ஆசாரியர் போக்கி யிருக்க வதனையெண்ணாது உச்சிட்டமுண்டே னெனவுரைக்கு மூட னுக்குச்சிட்ட மில்லையென வோர்திட்டாந்தமிட் டுரைக்கின்றார்.]

செம்பைக் குளிகையதாற் செம்பொன்ன தாக்குதல்போ
னம்பும்ப்ர சாதத்தை நல்லகுரு - வம்பான
வெச்சிறு விட்டிறக்க வேயருத்தி யுண்டுபின்னு
மெச்சிலெனுங் கொச்சையும்பே தம்.

(இ-ள்.) செம்பைக் குளிகையதாற் செம்பொன்ன தாக்குதல்போல் - ஓரிரசவாதிச் சித்தனானவன் அறவைத்திருக்குஞ் செம்பினிலாசைக்குளிகையைக் கொடுத் ததனைப்பற்றிய காளிதத்தைப்போக்கிப் பத்தரைமாற்றுத் தங்கமாக் கிய வாறுபோல, நம்பும் பிரசாதத்தை நல்லகுரு வம்பான வெச்சிறு விட்டிறக்க வேயருத்தி யுண்டுபின்னு மெச்சிலெனுங் கொச்சையும் பேதம் - மேலான சிவாநந்தாநுபூதியைத் தருமாசாரியருந் தீட்சாகாலத்துத் தமது தீட்சாசத்தியினால் நூலமுதலிய காய சுத்தியினைப்பண்ணி நாவி லனுகூதமாயிருக்கு முச்சிட்ட குதகத்தினைப்போக்கி யெல்லோரும் பரமென நம்பியிருக்கப்பட்ட பிரசாதத்தினைக் கொடுத்தப்பிரசாத மயமாய்ச் செய்திருக்கு நாக்கிற்குப் பழைய வாசனையைப்பற்றிப் பின்னும் அந்நாவிற் குச்சிட்டமுண்டென்னு மறிவினனு மிச்சமயத்துக்குப் புறம்பு, எ-று. (௬க)

[மேலு மித்தேகத்தைச் சிவதேகமெனக் காணாதவ னிழிவினைக் கழறுகின்றார்.]

நோக்காற் பரிசத்தா னுண்ணியவாக் காற்பிறவி
யாக்கு முடலை யரனுருவ - மாக்கினோ
நாமென் றவர்க்கதனை நம்பாத பாவிக்கு
மாமிங்குப் பேதமதம் மா.

(இ-ள்.) நோக்காற் பரிசத்தா னுண்ணியவாக் காற்பிறவி யாக்கு முடலை யரனுருவ மாக்கினோம் நாம் - யாம் எமது திருநோக்காலும் ஞானோபதேசத் தாலும் ஆன்மாவைச் சிவசொரூபமாகச் செய்தவனுக் கிருப்பிடமாகிய தேகத் தினையுஞ் சிவசொரூபமாகச் செய்தனம், என் றவர்க்கதனை நம்பாத பாவிக்கு மாமிங்குப் பேதமதம் மா-என்றுபதேசித்த வவ்வாசாரியா துபதேச வாக்கியத் தை யுண்மையாக நம்பாத பாவிக்கு மிச்சமயமந்நியம், எ-று. (௬உ)

[இங்ஙனங்கூறிய அப்பரிபாகற்குச் செய்யுந் தீக்கை பேததீக்கையென வுரைக்கின்றார்.]

செய்தசிவ தீக்கையினுஞ் சேர்ந்தகுரு வாசகத்து
மெய்தும்விசு வாசமற்ற வேழையராய் - மையலுறும்
புந்தியுடை யார்க்குப் புகன்றனவாம் பேதமதாய்த்
தந்தசிவ பூசாதி தான்.

(இ-ள்.) செய்தசிவ தீக்கையினுஞ் சேர்ந்தகுரு வாசகத்து மெய்தும்விசு வாசமற்ற வேழையராய்மையலுறும் புந்தியுடையார்க்குப் புகன்றதுவாம்-ஆசாரியராற் பண்ணப்பட்ட சிவதீட்சையினிடத்தும் அத்தீட்சையினைப் பண்ணுகின்ற வாசாரியரருளிச்செய்யும் வாக்கியத்தினிடத்தும் பற்றின்றி யீனத்தினையுமயக்கத்தினையுமுடைய புத்தியினர்களுக்குச் சொல்லப்பட்டனவாம், பேதமதாய்த் தந்தசிவ பூசாதி தான்-பேததீட்சை பேதபூசை முதலியன, எ-று. ()

[மேற்பேதபூசை விதியினையும் அபேதபூசை விதியினையு மிவையென் றருளிச் செய்யவேண்டுமென்ன வறைகின்றார்.

பேதமதாம் பூசையென்றாய் பேதமிலாப் பூசையென்று
மீதடியேற் கின்னமிதன் பகுதி - நீதியுடன்
மெய்யா விரித்துரைநீ மிக்ககரு ணாநிதியா
மையாசிற் றம்பலவா ணா.

(இ-ள்.) மிக்ககரு ணாநிதியா மையாசிற் றம்பலவா ணா - மிகுந்த கருணாநிதியாகிய ஐயனே திருச்சிற்றம்பலமுடையா னென்னு மதிகாரநாமத்தினையுடைய எனது கரதலத்திருக்கு மிஷ்டலிங்க கிருபாநிதியே, பேதமதாம் பூசையென்றாய் பேதமிலாப் பூசையென்றும் - முற்கூறிய வெண்பாவிற் பேதபூசையெனவும் அபேதபூசையெனவு மிரண்டு திறனாக வருளிச்செய்தனை, ஈதடியேற் கின்னமிதன் பகுதி நீதியுடன் மெய்யா விரித்துரைநீ - தேவரீர் அவ்விரண்டு திறத்தினையுடைய பூசாவிதியினையு மிஃதிஃதென விரித் தடியேற்குப் புலப்படமுறையாக வருளிச்செய்வீராக, எ-று. (௯௪)

[நீகேட்டவினாவுக்கு வாதுளாகமப் பிரகாரம் உத்தரஞ் சொல்வோமென வுரைக்கின்றார்.]

ஆகி லவைநீ யறிய விரித்துரைப்போம்
மோகக் குகனறிய முன்புநாந் - தாகமுடன்
வாதுளந் தன்னில் வகுத்துரைத்த தாமிதனை
யோதமிகு மன்பா லுணர்.

(இ-ள்.) ஆகி லவைநீ யறிய விரித்துரைப்போம் - இங்ஙனங் கூறிய பேதா பேத மென்னும் பூசையினது தன்மையை யுனக்குக் கேட்கவேண்டுமென்னும் விருப்பமுண்டாகையால் நன்றாக விரித்துச்சொல்வோங் கேட்பாயாக, மோகக் குகனறிய முன்புநாந் தாகமுடன் வாதுளந் தன்னில் வகுத்துரைத்த தாம் - முன்னாட் கைலாயகிரியில் இரத்தினசபையின்கண் நாம் தனித்திருக்கும் போது நம்முடைய புத்திரனாகிய சுப்பிரமண்ணியன் நம்மைவந்து வணங்கி இப்பொருளை யனுக்கிரகஞ் செய்யவேண்டுமென் றதிதாகமாய்க் கேட்க வவன் பரிபாகங் கண்டு வாதுளாகமப்பிரகார மப்பொருளை விரித்துச் சொன்னோம், இதனை யோதமிகு மன்பா லுணர் - அப்பொருளை யுனக்கு முரைப்போம் நீயு மிகுந்த அன்போடு கேட்பாயாக, எ-று. (௯௫)

நாமமொடு சாதி நயந்த குணங்கிரியை
யாமிவைக ளொன்றுமிலா தாமமல - ஞமன்று
நின்ற வுயிர்க்கிரங்கி நின்மலசிற் சத்தியுட
னன்றிசைந்து நின்றருளி ஞல்.

(இ-ள்.) நாமமொடு சாதி நயந்த குணங்கிரியை யாமிவைகளொன்றுமிலா தாமமல ஞம் - ஓர்நாம மோர்சாதி ஓர்குணமுதலியவைகளொன்றுமின்றி அநாதிமலமுத்தனும் நிர்நாம நிர்க்குணசொருபனுக விருப்பதுவே நமக்குண்மையாகிய அசாதாரண இலட்சணம், அன்று நின்ற வுயிர்க்கிரங்கி - அநாதியே நம்முடன் நித்தியவியாபகமாய்த் தற்சொருபம் விளங்காது கேவலக்கிடையாய்க் கிடக்கும் ஆன்மாக்கட் கம்மலத்தைப்போக்கிச் சிவாநந்தாநுபூதியைக் கொடுத்திரட்சிக்கவேண்டுமென்னுங் காருண்ணியத்தாற் றூல சூக்கும காரணபஞ்ச கிருத்தியநிமித்தம் இலயபோக வதிகாரராய்ச் சத்தியுக்த பிரவர்த்தராய்ச் சிவன்சதாசிவன் ஈசனுயிருந்து, நின்மல சிற்சத்தியுடனன்றிசைந்து நின்றருளிஞல்- மலரு மணமும்போல நம்மைவிட்டு நீங்காது சமவாய சிற்சத்தியுடன் கூடிக் கிருபையினுல், எ-று. (௬௬)

பஞ்சசத்தி தன்றன் பகுதியா லைந்துலிங்கம்
வஞ்சமறக் கண்டதனோ டாருகிப் - பொஞ்சியுயிர்க்
காயழிந்து பாகமுற வாக்குதலே நம்பொதுவென்
றேயுரைக்கு மாகமங்க ளே.

(இ-ள்.) பஞ்சசத்திதன்றன் - முற்கூறிய சிற்சத்திதானே தன்னிலாயிரத்திலோ ரங்கிசம் பராசத்தியாய் அதிலாயிரத்திலோரங்கிசம் ஆதிசத்தியாய் அதிலாயிரத்தி லோரங்கிசம் இச்சாசத்தியாய் அதிலாயிரத்தி லோரங்கிசம் ஞானசத்தியாய் அதிலாயிரத்தி லோரங்கிசம் கிரியாசத்தியாய் இதில் நமது சிற்சத்தியி னங்கிசமான பராசத்தியோடுகூடிப் பராபரனென்றும் ஆதிசத்தியோடுகூடி ஈசுரனென்றும் இச்சாசத்தியோடுகூடி இச்சிதாவென்றும் ஞானசத்தியோடுகூடி ஞாதாவென்றும் கிரியாசத்தியோடுகூடிக் கர்த்தாவென்றும் பெயர்பெற்றிருப்போம், பகுதியால்-அப்பஞ்சசத்திகளின்வழியாக, ஐந்துலிங்கம் வஞ்சமறக்கண்டு - முற்கூறும் பராசத்தியிற் பத்திலொருகூறு வலியினை யுடைத்தாகிய சிவசாதாக்கியந் தோன்றித் திரோதான சத்தியிற் பத்திலொருகூறு வலியினை யுடைத்தாகிய அமூர்த்தி சாதாக்கியந்தோன்றி இச்சாசத்தியிற் பத்திலொருகூறு வலியினை யுடைத்தாகிய மூர்த்தி சாதாக்கியந்தோன்றி ஞானசத்தியிற் பத்திலொருகூறு வலியினையுடைத்தாகிய கத்துரு சாதாக்கியந்தோன்றிக் கிரியாசத்தியிற் பத்திலொருகூறு வலியினை யுடைத்தாகிய கன்மசாதாக்கியந்தோன்றி, அதனோடாருகி - பராசத்திக்கு முற்கூறிய சிற்சத்தியிற் பத்திலொருகூறு வலியினை யுடைத்தாகிய மகாசாதாக்கியந்தோன்றி ஆகசத்திகளாறினுஞ் சாதாக்கியங்க ளாறுந்தோன்றி இஃதன்றி முற்கூறிய இலயபோக வதிகாரமூர்த்திகளால், பொஞ்சி யுயிர்க்காயழிந்து பாக முறவாக்குதலே நம்

பொதுவென்றே யுரைக்கு மாகமங்களே, பொலிவினையுடைய வுயிர்கட்குத் தநு கரண புவனபோகங்க ளாயினவைகளை மாயையினிடத் துண்டாக்குதலே சிருட்டி, அங்ஙன முண்டாயினவைகளைப் புசிக்குங் காலபரியந்த நிறுத்துதலே திதி, பின்பவைகளை மாயையினிடத் தொடுக்குதலே சங்காரம், அப்போகங்களை யின்பமாக மயக்கி ருசிப்பித்துப் புசிப்பித்தலே திரோபாவம், அஃதீ தெனப் பகுத்தறிவித்தலே அனுக்கிரகம், இக்கிருத்தியத்தாற் பலன் யாதென்னில் ஆன்மாக்களைப்பற்றிய மலத்திற்குப் பரிபாகம் வரச்செய்தலே, இத்தடத்த விலக்கணமே நமக்குப் பொதுவென வாகமங்கள் புகலும், எ-று. (௬௭)

[பதிபசுபாசங்களில் முந்தப்பதி யிலக்கண முணர்த்துகின்றார்.]

ஆறு மறிய வதுநிட் களமாதி
யோதியிட மூன்றுமூன் றும்முன்ன - நீதியினு
லோதுங் குருலிங்க சங்கமமே யென்றினிதா
யோதுஞ் சிவாகமங்க ளே.

(இ-ள்.) ஆறுமறியவதுநிட்கள மாதியோதியிடமூன்றும் - சிற்சத்திமுதலாறு சத்திகளினது படைப்பாகிய மகாசாதாக்கியமுத லாறு சாதாக்கியங்களைச் சொல்லுமிடத்து மகாசாதாக்கியமுஞ் சிவசாதாக்கியமும் நிட்களமாயிருக்கும், அமூர்த்தி சாதாக்கியமும் மூர்த்தி சாதாக்கியமும் நிட்கள சகளமாயிருக்கும், கத்துருசாதாக்கியமும் கன்மசாதாக்கியமும் சகளமா யிருக்கும், மூன்று முன்னம் நீதியினுலோதுங் குருலிங்க சங்கமமே யென்றினிதாயோதுஞ் சிவாகமங்களே-இந்த நிட்களமாதி மூன்றையுமே குருலிங்க சங்கமமென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட சிவாகமங்கள் நீதியோடு இனிமைபெற வோதும், எ-று. (௬௮)

இம்மூன்று வெண்பாவு மொருதொடரெனவறிக.

[மேல் வேதாந்தத்திற் கூறுந் தத்துவ மசிவாக்கியார்த்தமும் வாதுளாகமம் வீராகம முதலியவற்றிற் கூறிய குருலிங்க சங்கமமென்னும் வாக்கியார்த்தமு மொன்றெனக் கூறுகின்றார்.]

தற்பதமே சற்குருவாந் தொம்பதமே லிங்கமதா
மற்புதமா நல்ல வசிபதமே - பொற்புடைய
சங்கமந்தா னென்றே தகுஞ்சுருதி வாக்கியத்திற்
றங்கும் பொருளறியத் தான்.

(இ-ள்.) தற்பதமே சற்குருவாம் - (எழுத்தின் கூட்டத்துக்குப் பதமென்றும் பதத்தின் கூட்டத்துக்கு வாக்கியமென்றும் பெயராகையால்) ததுவென்னும் பதப்பொருளே சற்குருவாகும், தொம்பதமே லிங்கமதாம் - தொம்பதமென்னும் பதப்பொருளே லிங்கமாகும், அற்புதமாநல்ல வசிபதமே பொற்புடைய சங்கமந்தான் - ஆச்சரியமாகவிருக்கும் அசியென்னும் பதப்பொருளே அழகிய சங்கமமாகும், என்றேதகுஞ் சுருதிவாக்கியத்திற் றங்கும் பொருளறி

யத்தான் - வேதத்திற்கூறிய மகா வாக்கியத்தினது பொருளை விசாரிக்கி லிது வே யதன்பொருளென்று சொல்லத்தகும், எ-று. (௬௯)

[அதெப்படியென்னில் தற்பத வாச்சியமாகிய பிரமம் குரு, தொம்பத வாச்சியமான கூடத்தன் இலிங்கம், அசிபதவாச்சியம் ஆனையென்னு ஞ் சங்கமம் இக்கருத்தை மறுவெண்பாவில் விளங்கக் கூறுகின்றார்.]

ஆதலினு லிங்கமது வங்கமதாஞ் சங்கமத்துக்
கோதுஞ் சரமுயிரா மவ்வுயிர்க்குப் - போதமதாய்
நிற்குங் குருபரனே நித்தியமா மும்முதலு
நிற்குமொன்றை யொன்றுவிடா மல்.

(இ-ள்.) ஆதலினு லிங்கமது வங்கமதாஞ் சங்கமத்துக்கு - ஆதலால் இலிங்கந்தானே சங்கமத்துக் குடலாயிருக்கும், ஓதுஞ் சரமுயிராம் - முற்கூறிய சங்கம மவ்விலிங்கத்துக் குயிராயிருக்கும், அவ்வுயிர்க்குப் போதமதாய் நிற்குங் குருபரனே - குருவே சங்கமத்துக் கறிவாயிருக்கும், நித்தியமா மும்முதலு நிற்குமொன்றையொன்றையொன்றுவிடாமல்-இங்ஙனங்கூறிய மும்முதலு நித்தியமா யொன்றை யொன்றுவிடாம லொருமுதலாயே யிருக்கும், எ-று.

மும்முதலாகப் பகுத்துக்கூறியது கிரியாபேதம். முதலொன்றென்பதே கருத்து. இன்னு மிதன்கருத்து இவ்வுயிரை யிரட்சிக்கவேண்டுமென்னுஞ் சுத்தசிவத்தினது நினைவு இலயம் அதுவே சங்கமம், அந்நினைவுக்கிடமாய் இரட்சிக்கவேண்டுவ திப்படியெனப் பகுத்தது போகம் அதுவே லிங்கம், அப்பகுப்பின்படி யனுக்கிரகம் பண்ணினது அதிகாரம் அதுவே குருவென்கையாற் சங்கமத்துக் கிருப்பிடம் லிங்கம், சங்கம வியாபாரம் குரு, இன்னு மிதனை விரிக்கிற்பெருகும், குருமுகத்திற் கேட்டறிக. (௭௦)

நிற்கு நிலையீதா னின்றலிங்கந் தன்னுடனே
யற்புதமா மத்துவித மற்றக்காற் - பொற்புடனே
யானகுரு சங்கமத்தி லத்துவித மில்லையெனத்
தானுரைக்கு மாகமங்க டாம்.

(இ-ள்.) நிற்கு நிலையீதா னின்றலிங்கந் தன்னுடனே - சிவலிங்கமுடலாய்ச் சங்கமமுயிராய்க் குருபோதமாய்க் குணகுணிபாவமா யொருமுதலாயிருக்குஞ் சிவலிங்கத்துடனே, அற்புதமாமத்துவித மற்றக்கால் - தேகியாயிருக்குமான்மாவுக் கற்புதமான அத்துவித சம்பந்தமில்லா திருந்தக்கால், பொற்புடனே யான குருசங்கமத்தி லத்துவிதமில்லையெனத் தானுரைக்கு மாகமங்கடான் - அழகிய குருவினுடைய சம்பந்தமுஞ் சங்கமத்தினுடைய சம்பந்தமு மில்லாமற் போய்விடுமென் றாகமங்கள் கூறும், எ-று. (௭௧)

[இலிங்காத்துவித மில்லாதிருந்தாற் குருலிங்க சங்கமப்பிரசாத முதலிய வத்துவிதமு மில்லாமற்போமென விசைக்கின்றார்.]

இலிங்கத்தோ டத்துவித மற்றக்கான் மற்றினிய
சங்கமத்தி னோடரிய சற்குருவிற் - றங்கியிடு

பொதுவென்றே யுரைக்கு மாகமங்களே, பொலிவினையுடைய வுயிர்கட்குத் தனு கரண புவனபோகங்க ளாயினவைகளை மாயையினிடத் துண்டாக்குதலே சிருட்டி, அங்ஙன முண்டாயினவைகளைப் புசிக்குங் காலபரியந்த நிறுத்துதலே திதி, பின்பவைகளை மாயையினிடத் தொடுக்குதலே சங்காரம், அப்போகங்களை யின்பமாக மயக்கி ருசிப்பித்துப் புசிப்பித்தலே திரோபாவம், அஃதீ தீதெனப் பகுத்தறிவித்தலே அனுக்கிரகம், இக்கிருத்தியத்தாற் பலன் யாதென்னில் ஆன்மாக்களைப்பற்றிய மலத்திற்குப் பரிபாகம் வரச்செய்தலே, இத்தடத்த விலக்கணமே நமக்குப் பொதுவென வாகமங்கள் புகலும், எ-று. (௬எ)

[பதிபசுபாசங்களில் முந்தப்பதி யிலக்கண முணர்த்துகின்றார்.]

ஆறு மறிய வதுநிட் களமாதி
யோதியிட மூன்ருமூன் றும்முன்ன - நீதியினு
லோதுங் குருலிங்க சங்கமமே யென்றினிதா
யோதுஞ் சிவாகமங்க ளே.

(இ-ள்.) ஆறுமறியவதுநிட்கள மாதியோதியிடமூன்ரும் - சிற்சத்திமுதலாறு சத்திகளினது படைப்பாகிய மகாசாதாக்கியமுதலாறு சாதாக்கியங்களைச் சொல்லுமிடத்து மகாசாதாக்கியமுஞ் சிவசாதாக்கியமும் நிட்களமாயிருக்கும், அமூர்த்தி சாதாக்கியமும் மூர்த்தி சாதாக்கியமும் நிடகள சகளமாயிருக்கும், கத்துருசாதாக்கியமும் கன்மசாதாக்கியமும் சகளமா யிருக்கும், மூன்று முன்னம் நீதியினுலோதுங் குருலிங்க சங்கமமே யென்றினிதாயோதுஞ் சிவாகமங்களே-இந்த நிட்களமாதி மூன்றையுமே குருலிங்க சங்கமமென்று சிறப்பித்துச் சொல்லப்பட்ட சிவாகமங்கள் நீதியோடு இனிமைபெறவோதும், எ-று. (௬அ)

இம்மூன்று வெண்பாவு மொருதொடரானவறிக.

[மேல் வேதாந்தத்திற் கூறுந் தத்துவ மசிவாக்கியார்த்தமும் வாதுளாகமம் வீராகம முதலியவற்றிற் கூறிய குருலிங்க சங்கமமென்னும் வாக்கியார்த்தமு மொன்றெனக் கூறுகின்றார்.]

தற்பதமே சற்குருவாந் தொம்பதமே லிங்கமதா
மற்புதமா நல்ல வசிபதமே - பொற்புடைய
சங்கமந்தா னென்றே தகுஞ்சுருதி வாக்கியத்திற்
றங்கும் பொருளறியத் தான்.

(இ-ள்.) தற்பதமே சற்குருவாம் - (எழுத்தின் கூட்டத்துக்குப் பதமென்றும் பதத்தின் கூட்டத்துக்கு வாக்கியமென்றும் பெயராகையால்) ததுவென்னும் பதப்பொருளே சற்குருவாகும், தொம்பதமே லிங்கமதாம் - தொம்பதமென்னும் பதப்பொருளே லிங்கமாகும், அற்புதமாநல்ல வசிபதமே பொற்புடைய சங்கமந்தான் - ஆச்சரியமாகவிருக்கும் அசியென்னும் பதப்பொருளே அழகிய சங்கமமாகும், என்றேதகுஞ் சுருதிவாக்கியத்திற் றங்கும் பொருளறி

யத்தான் - வேதத்திற்கூறிய மகா வாக்கியத்தினது பொருளை விசாரிக்கி லிது வே யதன்பொருளென்று சொல்லத்தகும், எ-று. (௬௯)

[அதெப்படியென்னில் தற்பத வாச்சியமாகிய பிரமம் குரு, தொம்பத வாச்சியமான கூடத்தன் இலிங்கம், அசிபதவாச்சியம் ஆறுயென்னுஞ் சங்கமம் இக்கருத்தை மறுவெண்பாவில் விளங்கக் கூறுகின்றார்.]

ஆதலினு லிங்கமது வங்கமதாஞ் சங்கமத்துக்
கோதுஞ் சரமுயிரா மவ்வுயிர்க்குப் - போதமதாய்
நிற்குங் குருபரனே நித்தியமா மும்முதலு
நிற்குமொன்றை யொன்றுவிடா மல்.

(இ ள்.) ஆதலினு லிங்கமது வங்கமதாஞ் சங்கமத்துக்கு - ஆதலால் இலிங்கந்தானே சங்கமத்துக் குடலாயிருக்கும், ஓதுஞ் சரமுயிராம் - முற்கூறிய சங்கம மவ்விலிங்கத்துக் குயிராயிருக்கும், அவ்வுயிர்க்குப் போதமதாய் நிற்குங் குருபரனே - குருவே சங்கமத்துக் கறிவாயிருக்கும், நித்தியமா மும்முதலு நிற்குமொன்றையொன்றையொன்றுவிடாமல்-இங்ஙனங்கூறிய மும்முதலு நித்தியமா யொன்றை யொன்றுவிடாம லொருமுதலாயே யிருக்கும், எ-று.

மும்முதலாகப் பகுத்துக்கூறியது கிரியாபேதம். முதலொன்றென்பதே கருத்து. இன்னு மிதன்கருத்து இவ்வுயிரை யிரட்சிக்கவேண்டுமென்னுஞ் சுத்தசிவத்தினது நினைவு இலயம் அதுவே சங்கமம், அந்நினைவுக்கிடமாய் இரட்சிக்கவேண்டுவ திப்படியெனப் பகுத்தது போகம் அதுவே லிங்கம், அப்பகுப்பின்படி யனுக்கிரகம் பண்ணினது அதிகாரம் அதுவே குருவென்கையாற் சங்கமத்துக் கிருப்பிடம் லிங்கம், சங்கம வியாபாரம் குரு, இன்னு மிதனை விரிக்கிற்பெருகும், குருமுகத்திற் கேட்டறிக. (௭0)

நிற்கு நிலையீதா னின்றலிங்கந் தன்னுடனே
யற்புதமா மத்துவித மற்றக்காற் - பொற்புடனே
யானகுரு சங்கமத்தி லத்துவித மில்லையெனத்
தானுரைக்கு மாகமங்க டாம்.

(இ - ள்.) நிற்கு நிலையீதா னின்றலிங்கந் தன்னுடனே - சிவலிங்கமுடலாய்ச் சங்கமமுயிராய்க் குருபோதமாய்க் குணகுணிபாவமா யொருமுதலாயிருக்குஞ் சிவலிங்கத்துடனே, அற்புதமாமத்துவித மற்றக்கால் - தேகியாயிருக்குமான்மாவுக் கற்புதமான அத்துவித சம்பந்தமில்லா திருந்தக்கால், பொற்புடனே யான குருசங்கமத்தி லத்துவிதமில்லையெனத் தானுரைக்கு மாகமங்கடான் - அழகிய குருவினுடைய சம்பந்தமுஞ் சங்கமத்தினுடைய சம்பந்தமு மில்லாமற் போய்விடுமென் றாகமங்கள் கூறும், எ-று. (௭௧)

[இலிங்காத்துவித மில்லாதிருந்தாற் குருலிங்க சங்கமப்பிரசாத முதலிய வத்துவிதமு மில்லாமற்போமென விசைக்கின்றார்.]

இலிங்கத்தோ டத்துவித மற்றக்கான் மற்றினிய
சங்கமத்தி னேடரிய சற்குருவிற் - றங்கியிடு

மத்துவித மற்றதனு லில்லைப்பிர சாதமென
வுத்தமமா மாகமமோ தும்.

(இ-ள்.) இலிங்க சம்பந்தமில்லாவிட்டால் சங்கம சம்பந்தமுஞ் சற்குருசம்பந்தமும் பிரசாத சம்பந்தமுமில்லாமற் போய்விடுமென் றுகமங்களிசைக்கும், எ-று.

[பிரசாதமற்றால் ஞானேதயமாகாதெனப் பேசுகின்றார்.]

பிரசாத மற்றாற் பிறப்பறுக்கு ஞானப்
பரமான தில்லையில்லை யாகக் - கரவாம்
பிறப்பறுவ தில்லையில்லை யென்றுயிர்மே லன்பின்
சிறப்பாற் சிவாகமஞ் செப்பும்.

(இ-ள்.) பிரசாதமற்றாற் பிறப்பறுக்குஞானப் பரமான தில்லையில்லையாக- பிரசாத சம்பந்தமில்லையாகி லுற்பத்தி நாசத்தினை யகற்றுஞ் சிவஞான முதயமாகமாட்டாது. சிவஞான முதயமாகாதகாலத்து, கரவாம் பிறப்பறுவ தில்லை யில்லையென்று - தன்னை முதலாகக்காட்டா தநாதியே யான்மாவினுடன் சகசமாய்க் கூடிநின்று செனனமரணத்தை யுண்டாக்கு மாணவமல சம்பந்தமு மாறாதென்று, உயிர்மேலன்பின் சிறப்பாற் சிவாகமஞ் செப்பும் - உயிர்களிடத்து வைத்திருக்கு மன்பின்மிகுதியாற் சிவாகமங்கள் சொல்லும், எ-று. (எ௩)

வாக்கியமீ தாகையினு லேயிலிங்கந் தன்னைவிடாப்
பாக்கியமா மத்துவிதப் பண்புடையார்க் - கூக்கரிய
நல்லகுரு சங்கமத்தி னுடரிய வத்துவித
வல்லபமுண் டென்றே மதி.

(இ - ள்.) வாக்கியமீ தாகையினு லேயிலிங்கந் தன்னைவிடாப் பாக்கியமா மத்துவிதப் பண்புடையார்க்கு - ஈசுரவாக்கிய மிப்படியிருக்கையாற் சிவலிங்கத்தை விட்டுநீங்காமற்றரித்த அத்துவித வாழ்வினையுடைய சற்குணவான்களுக்கு - ஊக்கரிய நல்ல குருசங்கமத்தி னுடரிய வத்துவித வல்லபமுண்டென்றேமதி - நினைத்தற்கரிய நல்ல சற்குருசங்கமத்தி னறிதற்கரிய வத்துவித சம்பந்தமுண்டாமென்றே யறிந்துகொள், எ-று. (எச)

எமக்குப் பொதுவா மினியலிங்க நாம
முனக்குப் பொதுவுடம்பு நீயா - மனக்கவலை
தன்னாற் பிறந்திறந்து தானினிய பாகமுற
றன்னானீ யேயங்கந் தான்.

(இ-ள்.) எனக்குப் பொதுவாமினிய லிங்கநாமம் - நாமசாதி குணங்கிரிகைகளற் றகண்டாகாரமாய் நிர்நாம நிர்க்குணமே சொருபமாகுந் தன்னியல்பினையுடைய நாமும் உன்பொருட்டிலிங்க சொரூபமாக விருப்பதுவே நமக்குப் பொதுவிலக்கணம், உனக்குப் பொதுவுடம்பு நீயாம் - நீயுஞ் சிவாநந்தா

நுபூதியைப் பெறுந்தன் னியல்பினையற்று அநாதியே மல சகிதமா யம்மலத்தி னுக்குப் பரிபாகம் வரும்பொருட்டுக் கன்மத்துக்கீடாக நாம்கொடுக்கு மாயா தேகமே நீயாயிருக்குமதுவே யுனக்குப் பொதுவிலக்கணம், மனக்கவலைதன னுற் பிறந்திறந்து தானினியபாகமுற றன்னுனீயேயங்கந்தான் - மனக்கவ லையினல் நானுவிதமாகிய செனனமரணங்களையுற்று அதனுல்வருஞ் சுகதுக்க ங்களை யனுபவித் தவ்வநுபவத்தினுல் மலபரிபாகம் வருதலால் விதேக கைவ ல்லியம் வருமளவும் பொதுவியல்பாகையா லத்தேகமே நீ, எ-று. (எரு)

ஆதலினு லிங்கத்தோ டங்கமக லாததுவே
நீதியுட னீநம்மை நீங்காமை - யீதென்னக்
குன்ரு மறையிற் குலவுமகா வாக்கியத்தி
லன்ருேதி ஞேமதுகேட் பாய்.

(இ-ள்.) ஆதலினு லிங்கத்தோ டங்கமகலாததுவே நீதி - ஆகையால் நமது சொரூபமாகிய சிவலிங்கத்துட னுனது சொரூபமாகிய தேகம்விட்டு நீங்காம லிருப்பதுவே சற்காரியவாதம், உடனீ நம்மை நீங்காமை யீதென்னக்குன்ரு மறையிற்குலவு மகாவாக்கியத்தி லன்ருேதினே மதுகேட்பாய் - தன்னியல்பே யிருக்கு நமதுசுத்த சிவசொருபத்தைத் தீட்சையினுல் மும்மல பெந்தங்களு நிவர்த்தியாய் விதேக கைவல்லியசுத்தான்மாவாயிருக்கு நீகலந்துடனுக விரு க்குந் தன்மையினையு மிங்ஙனமெனக் கெடுதலில்லாத வேதத்திற்கூறு மகாவா க்கியத்தி லநாதியே சொல்லியிருக்கின்ருே மவ்வர்த்தத்தை இன்னு முனக்கு விளங்கச்சொல்லுவோங் கேட்பாயாக, எ-று. (எசு)

தற்பதமே லிங்கந் தகுமங்கந் தொம்பதமா
நிற்கு மசிபதமே நேரயிக்கப் - பொற்பதென
வங்கலிங்க சங்கமென வன்றே சுருதிசொன்னேந்
தங்கியசற் காரியத்தாற் ருன்.

(இ-ள்.) தற்பதமேலிங்கம் - தற்பத வாக்கியார்த்தமே லிங்கம், தகுமங் கந் தொம்பதமாம் - தகுதியினையுடைய தொம்பத வாக்கியார்த்தமே யங்கம், நிற்கு மசிபதமே நேரயிக்கப் பொற்பதென - அவ்விலிங்கத்தினுக்கு மவ்வங்க த்தினுக்கு மேகீபாவமாகிய ஐக்கமே அசிபத வாக்கியார்த்தமெனநிற்கும், அங்கலிங்க சங்கமெனவன்றே சுருதிசொன்னேந் தங்கிய சற்காரியத்தாற்ருன் - ஆகையாற் றத்துவமசியென்ருலும் லிங்காங்க சையோக மென்ருலும் ஏக வாக்கியார்த்தமெனச் சுருதியிற் சொன்னேம் சற்காரிய வாதமாகையால்,எ-று.

இங்ஙனங் கூறிப்போந்த வொன்பது வெண்பாவு மொருதொடரெனக் கொள்க.

[முற்கூறிய லிங்கத்தின தங்க நான்குவித மென்பவற்றினையும் அத னுமமுதலியவற்றினையு நான்கு வெண்பாவினுற் கூறுகின்ருர்.]

உயிர்க்குடலம் பிண்டம்போ லுற்றலிங்கந் தானு
நயப்புடைய பிண்ட நமக்கு - மயக்கமற்ற

வங்கப்பிரத் தியாங்க மருஞ்சாங் குபாங்கமெனத்
தங்குமிவை நான்கி லிங்காங் கம்.

ஆன சிரசு முகமிதய மங்கமற்றை
யான பொறிபிரத்தி யங்கமதா - மீனமிலாச்
சூலமுதற் பத்துஞ் சொலுஞ்சாங்க மாடைமுந்நூல்
மாலிகைசந் தாபரண மும்.

சொற்ற வுபாங்கமிவை சொற்றவைக ளீரிரண்டு
முற்றவங்க மாகு முவப்புடனே - நற்றவத்தோ
ரொன்றாகி நின்றிடலு மோர்ந்துதியா னித்திடலு
நன்றாகப் பூசைசெய்த லும்.

நோக்கிக் கருணையெய்தி நோன்பின் றகுதிதனக்
கேற்கும்பே றீயு மியற்கையினு - லூக்கரிய
வானகன்ம சாதாக் கியமபிதா னங்கமக்கிங்
கானதுநீ யன்பா லறி.

க-ம். வெண்பா.

(இ - ள்.) உயிர்க்குடலம் பிண்டம்போல் - உயிரொன்னு மான்மாவிற்குப் பிண்டமென்னு மிவ்வுட லாதார மானாற்போல, உற்றலிங்கந்தானு நயப்புடைய பிண்டநமக்கு - ஒருகுணங்குறியின்றி நிராலம்பமாக விருக்கின்ற நாமும் நீ நம்மைக்குறித்துப் பண்ணுந் தியானபூசை முதலியவைகளை யங்கீகரித்துக்கொண்டு உன்னை இரக்ஷிக்கும்பொருட்டு நலத்தினைத் தராநின்ற இவ் விஷ்டலிங்கத்தையே யாதாரமாகக் கொண்டிருப்போம், மயக்கமற்ற வங்கப் பிரத்தியாங்கமருஞ் சாங்குபாங்கமெனத் தங்குமிவை நான்கும் லிங்காங்கம்- அவ்விலிங்கந்தானு மங்கப் பிரத்தியாங்க சாங்க வுபாங்கங்களுடனேகூடி மயக்கமறவிருக்கும், எ-று.

உ-ம். வெண்பா.

(இ-ள்.) ஆனசிரசு முகமிதயமங்கம்-சிரசு முகமிதயமென்னு மிவையங்கம், மற்றையான பொறிபிரத்தியாங்கம் - வக்ஷஸ்தலம் - கண்டம் - தனம் - வாகு- நாபி - உதரம் - நேத்திரம் - நாசி - கன்னம் - அஸ்தம் - பாதம் - தொடை - முழந்தாள் - பாதாங்குலி - முதலிய வுறுப்புகளே பிரத்தியாங்கம், ஈனமிலாச் சூலமுதற்பத்துஞ் சொலுஞ்சாங்கம் - குற்றமற்றசூலம்-பரசு - சுடர் - வாள்- வயிரம் - பணி - பாசாங்குசம், மணி - அபயம் - வரதம் - இவை முதலாயின சாங்கம், ஆடைமுந்நூல் மாலிகை சந்தாபரணமும் - வஸ்திரம் - ஆபரணம் - மாலை - இவை முதலாயினவைகளும், எ-று.

ங-ம். வெண்பா.

(இ-ள்.) சொற்ற வுபாங்கமிவை-சொல்லப்பட்ட இவைகளுபாங்கம், சொற்றவைக ளீரிரண்டு முற்றவங்கமாகி-இங்ஙனங் கூறிய அங்கப்பிரத்தியாங்க சா

ங்கவுபாங்கமென்னு நால்வகை யங்கத்துடனே கூடின சிவலிங்கத்தை நமது சொரூபமாகக்கொண்டு, உவப்புடனே நற்றவத்தோ ரொன்ருகி நின்றிடலு மோர்ந்து தியானித்திடலு நன்ருகப் பூசைசெய்தலும் - மிகுந்த விருப்பத்தோடு குற்றமற்ற தவத்தினையுடைய மேலோர்கள் நம்மைக்கருதி நிட்டை பண்ணுவதினையுந் தியானம் பண்ணுவதினையும் பூசைபண்ணுவதினையும், எ-று.

சு-ம். வெண்பா.

(இ-ள்.) நோக்கிக் கருணையெய்தி-நமது ஞானக்கண்ணிஞற் கிருபையோடு பார்த்து, நோன்பின் றகுதிதனக் கேற்கும்பே றீயுமியற்கையினுல் - அவரவர்கள்பண்ணு மனுஷ்டிப்புக்குத்தக்க பலத்தினைக்கொடுக்கு மியற்கையினுல், ஊக்கரியவானகன் மசாதாக் கியமபிதானங் நமக்கிங் கானதுநீயன்பாலறி - நினைத்தற்கரிய நமக்குக் கன்மசாதாக்கியனென்னும் பெயராயிற்றென் றறிவாயாக, எ-று.

[அங்கப்பிரத்தியாங்க சாங்கவுபாங்க விலக்கணங்கட் குதாரணம் வாதுளாகம சுலோகம்.]

"அங்கப்பிரத்தியாங்கசாங்கஞ்ச வுபாங்கஞ் சதுரோபவேது
சிரோவத்திரஞ்ச விருதயமங்கஞ் சேதிப்பிரகீர்த்திதம்
வக்ஷகண்டத் தனவாகு நாபிகுக்ஷி யுதரந்ததா
நேத்திரநாசியகர்ணௌச பாணிபா தௌத்தாங்குலி
ஊருசாநுசெங்கேசப் பிரத்தியங்கஞ் சேதிக்த்யதே
மூர்த்திநாங்குணரூபந்து சாங்கஞ்சே திப்பிரகீர்த்திதம்
குணஞ்சிந்ந மிதஞ்ஞேயந்தகுணந்தசசாபவேது
குணஞ்சத்தியம் பிரதாபஞ் சதுர்பேத்தியா நுக்கிரகந்ததா
தாரித்திரமாயாவிவந்நஞ் சாநாகஞ் சங்கிருதிரோவசா
ஏர்த்தேகுணர்ப்புரோக்தா தேஷாம் லக்ஷணமுச்சியதே
திரிகுணசூலமித்யுக்தம் சத்தியஞ் பரசுரிஷ்யதே
கட்கமீசப்பிரதாபோந்துற் பேத்தியம் வச்சிரமிட்சியதே
ஈச்சியநுக்கிரகஞ் சைவவபயஞ் சப்பிரச்சசியதே
ரிதீச்சியாநாகரூபந்து பாசமாயா சொரூபகம்
விவிந்நமங்கு சஞ்சைவ கண்டாநாதமகம்விதுஃ
சங்கிராமக்கிநிரூபங்சியாத் பாசாநாம்பச் சிமசாக்கிருதிஃ
ஏதேவைகுணரூபாசச் சாங்கஞ்சே திப்பிரகீர்த்திதம்
வஸ்திரோபவீதமாலாச கெந்தமா பரணந்ததா
ஆசனுவரணஞ்சைவ வுபாங்கஞ்சே திகீர்த்திதம்மிதி" யென்பவற்ருனறிக.

[மேற் சைவசம்பந்த நான்குவிதமென நவிற்றுகின்ருர்.]

காணப் படுமேநாங் கட்டுரைக்குஞ் சைவநம்மோ
டானமுடன் சம்பந்த மானவரே - பேணுசைவ

சம்பந்த நாலுவித சம்பந்தந் தானுமச்
சம்பந்த பேதமுரைப் பாம்.

(இ-ள்.) காணப்படுமேநாங் கட்டுரைக்குஞ் சைவநம்மோ டானமுடன் சம்பந்த மானவரோ - இப்படி யங்கப்பிரத்தியாங்க சாங்கவுபாங்கத்துட னம்மையொருவர் தியானம்பண்ண வவரது தியானத்தி லந்தரூடமாகத் தெரிசனங்கொடுக்கு நம்மாலே வுறுதியாகச் சொல்லப்படுஞ் சைவமாவது அன்பினாலே நம்முட னிரண்டறக் கலந்திருக்கும் சம்பந்தர்க்கேயப்பெயர், பேணு சைவசம்பந்த நாலுவித சம்பந்தந்தானு மச்சம் பந்தபேதமுரைப்பாம் - அப்படி யங்கீகரித்துச் சொல்லப்பட்ட சைவசம்பந்த நான்கு பிரகாரமாயிருக்கும், அந்நான்குவித சம்பந்தங்களையு மேற்சொல்லுவோங்கேட்பாயாக, எ-று.

வீரசைவஞ் சுத்தசைவ மிக்க மிசிரசைவஞ்
சாருஞ்சா மானியமாஞ் சைவமென - வோரிலிவை
நான்காகுஞ் சம்பந்த நாட்டு மிதன்பகுதி
யீங்குரைப்பக் கேள்சத்தி யம்.

(இ-ள்.) வீரசைவஞ் சுத்தசைவமிக்க மிசிரசைவஞ் சாருஞ் சாமானியமாஞ்சைவமென வோரிலிவை நான்காகும் - வீரசைவமெனவும் சுத்தசைவமெனவும் மிசிரசைவமெனவும் பொருந்திய சாமானிய சைவமெனவும் நான்குவிதமாகச் சொல்லப்படும், சம்பந்தநாட்டு மிதன்பகுதி யீங்குரைப்பக்கேள் சத்தியம் - இங்ஙன நான்குவிதமாகப் பிரித்துச் சொலலப்பட்ட சைவத்தின துண்மையைத் தனித்தனியே சொல்லுவோங் கேட்பாயாக, எ-று.

இதற்கு உ-ம். வாதுளாகமம் "சைவஞ் சதுர்விதஞ்ஞேயஞ் சாமாந்யஞ் சுருணுஷண்முகா - சாமாந்யம் மிஸ்ருதஞ்சைவா சுத்தவீரம் யதாக்கிரமம்" (அங) என்பதனுற்காண்க.

[முந்தச் சாமான்னிய சைவத்தின துண்மையை இரண்டு வெண்பாவினுற் கூறுகின்றார்.]

கண்டிகை நீறு கருதுதண்டு குண்டிகையாய்க்
கண்ட வுபாங்கமிதிற் காதலொடு - மண்டியநற்
றீக்கை குருவாற் செறிந்தணிந்து முப்பொழுது
மூக்கவநுட் டானமுனுற் றி.

நாமிருக்குங் கோயி னயந்தணுகி நன்றிசெய்த
ருமியற்றிப்பாடித் தளர்ந்துருகித் - தாமினிது
சுற்றிப் பலகாற் பணிந்துதொடர் வோடகல
லுற்ற சரியை யுணர்.

[இவ்விரண்டு வெண்பாவு மொருதொடர்.]

(இ-ள்.) கண்டிகைநீறு கருதுதண்டு குண்டிகையாய்க் கண்ட வுபாங்கமதிற் காதலொடு - விபூதிருத்திராட்சந் தண்டு கமண்டலமென்று சொல்

லப்பட்ட வுபாங்கங்களின் மிகுந்த வாசைபற்றி, மண்டியநற்றீக்கை குருவாற் செறிந்தணிந்து முப்பொழுது மூக்கநுட்டானமுஞற்றி - சிறப்புமிக்கநல்ல சமயதீட்சையினை யாசாரியரிடமாகப் பண்ணிக்கொண்டு பின்பு அச்சாதனங் களைத் தரித்துத் திரிகால ஸ்நாநநுட்டானமுஞ்செய்து, எ-று. (அச)

(இ-ள்.) நாமிருக்குங்கோயில் - நமதிருப்பாகிய வாலயத்தில் விருப்பத்து டன் சென்று - நன்றிசெய்தருமியற்றி. திருவலகிட்டுத் திருமெழுக்குச் சாத்தித் தனக்கியன்றன கொடுத்து, பாடித்தளர்ந்துருகித் தாமினிதுசுற்றிப் பலகாற்ப ணிந்துதொடர்வோ டகலநுற்ற சரியையுணர் - பிரதட்சிண நமஸ்காரதெரிச னந் தோத்திர முதலியனவற்றை யென்பு நெக்குவிட வுருகியன்பினுற் பலகா லுஞ் செய்துவருவதுவே சரியையெனச் சொல்லப்படுமென் றறிவாயாக, எ-று.

மற்றிவர்க்குக் கற்பு மதியிலிங்கங் கண்டவிடத்
துற்றுவழி பாடுசெய்த லேயன்றி - மற்றிதுவே
யென்னுங்கற் பில்லா வியற்கையாற் பேரிவர்க்கு
மன்னுஞ்சா மானியசை வம்.

(இ-ள்.) மற்றிவர்க்குக்கற்பு மதியிலிங்கங் கண்டவிடத் துற்றுவழி பாடு செய்தலேயன்றி - இச்சரியைத் தொழிலுடையவர்களது நியமம் எல்லோ ராலும் வழிபடப்பட்ட சிவலிங்கங் கண்டவிடத்துப்போய் வழிபட்டுவருவ தேயல்லாமல், மற்றிதுவேயென்னுங் கற்பில்லா வியற்கையாற் பேரிவர்க்கு மன்னுஞ் சாமானியசைவம் - இவர்கள் வழிபடுஞ் சிவலிங்க மிதுவென வோர் நியமமில்லாது பொதுவாக வழிபடுகையா லிவர்கட்குச் சாமானிய சைவமெ னப் பெயராயிற்று, எ-று. (அரு)

சாமானியம் - பொது.

[மேல் மிசிரசைவங் கூறுகின்றார்.]

சாமா னியமாகுஞ் சைவமிது மற்றிவர்போ
லாமரிய சாங்கமுபாங் கம்மணிந்தே - சேமமுட
னல்ல சிவலிங்க நண்புடனு சானருளா
லல்லலறப் பெற்றவர னே.

சவுசமுதற் சண்டாந்த மாவரணமெல்லா
மவரவர்தம் மந்திரத்தாலர்ச்சித் - தெவவரையுந்தா
மர்ச்சிக்குநல்லரனே யாமென்னப் பாவிக்குங்
கற்பு மிசிரசைவங் காண்.

[இவ்விரண்டுவெண்பாவு மொருதொடர்.]

(இ-ள்.) சாமானியமாகுஞ் சைவமிது மற்றிவர்போலா மரிய சாங்கமு பாங்கம் மணிந்தே - சாமானியசைவ விலக்கணமும் இவர்களைப்போலவே விபூ திருத்திராட்ச தண்டுகமண்டல முதலிய சாதனமுந் தரித்துக்கொண்டு, சேமமுடனல்ல சிவலிங்க நண்புடனு சானருளா லல்லலறப் பெற்றவ்வரனே-

ஞானசாரிய ரிடமாக விசேஷதீட்சையைப் பண்ணிக்கொண்டு அவ்வாசாரியராற் றனக்கென வோர் சிவலிங்கத்தைத் தரித்திரவான் நிட்சேபத்தைக் கண்டதுபோல வெழுந்தருளப் பண்ணிக்கொண்டு, எ-று. (அஎ)

(இ-ள்.) சவுரமுதற் சண்டாந்த மாவரணமெல்லா மவரவர் தம்மந்திரத்தாலர்ச்சித்து-சூரியன்முதற் சண்டேசுராந்தமாகிய ஆவரணதேவதைகளை யவரவர்க்குரித்தான மந்திரங்களினு லர்ச்சித்து, எவரையுந் தானர்ச்சிக்கு நல்லரனேயாமென்னப் பாவிக்குங்கற்பு மிசிரசைவங்காண் - பின் பம்மூர்த்திகளையெல்லாந் தன்னாற் பூசிக்கப்படும் அச்சிவனுடனே யொன்றாகக் கூட்டியேகமாகப் பாவிக்குங் கற்பினு லதற்கு மிசிரசைவமெனப் பெயராயிற்றென்றறி, எ-று.)

[மிசிரசைவமென்னும் பெயர்க் கின்னுமோரேது வுரைக்கின்றார்.]

ஈங்கிவர்க டாம்பூசை யில்லாரோ டுண்டன்முத
லாங்கவைகள்வர்ச்சியா ராதலினு - லோங்குபெயர்
தான்மிசிர மென்று தகுதியுட னுகமங்க
டான்மிகவுஞ் சொல்லியிடுந் தான்.

(இ-ள்.) ஈங்கிவர்க டாம்பூசை யில்லாரோ டுண்டன் முதலாங்கவைகள் வர்ச்சியா ராதலினுல் - இங்ஙனங்கூறிய மிசிரசைவர்கள் சிவதீட்சைமாத்திரமே செய்துகொண்டு சிவபூசைபண்ணும லிருக்குமவர்கள் கிருகத் தன்னுதிகளையும் வர்ச்சியாமற் புசிக்கையாலும், ஓங்குபெயர்தான் மிசிரமென்று தகுதியுட னுகமங்க டாமிகவுஞ் சொல்லியிடுந்தான் - அவர்கட்குச் சிறந்தபெயர் மிசிரசைவமென்று ஆகமங்கள் இடைவிடாதுகூறும், எ-று. (அக)

சொல்லுமுபாங் கஞ்சாங்கஞ் சோர்வறவே தானினிய
நல்லசிவ தீக்கையினு னன்கணிந்து - சொல்லியநற்
பூசைக் கதிகாரம் பொற்புறவா சானருளாற்
பேசியநற் றீக்கையும்பெற் று.

ஆவரண தேவதையு மாஞ்சவுர சண்டாந்த
மாவதுவும் லிங்கமது வாவதறிந் - தாவலுடன்
மந்திரமுந் தந்திரமு முத்திரையு மற்றுமிக
வுந்துமுப சாரமிரொட் டும்.

வாகனமுஞ் சந்து மகிழ்கர்ப்பூ ரம்புழுகு
மாகுமிவை யொன்றிலொன்றின் ருகாம - லாகுங்
கருஷணையா திப்பிரதிட் டையந்த மாதி
வருபிரதிட் டையுச்சவாந் தம்.

உச்சவம தாதி யுளபிராச் சித்தமந்த
மர்ச்சனைகள் சிங்கா தனமதனில் - நிச்சயமா
மாதார சத்தி முதலுன் மனையந்த
மோதியநற் பீடமர்ச்சித் து.

நல்ல வரனை நயந்து சிவாசனத்தின்
மெல்லவிருத்தி விருப்பினு - லல்லலறப்
பூசித்துமந்திரமே யாதிபொரு ளீருகப்
பேசுமதி லோபமறப் பின்.

சொல்லும்ப்ராச் சித்தமுற்றுஞ் சோர்வறவேசெய்தசுத்தம்
புல்லலறச் சுத்தமாம் பொற்பினு - னல்லபெயர்
சுத்தசைவ மாகுமிது சொல்லிரண் டாகுமிவைக்
கொத்தபெயர் சொல்வோ முணர்.

[இவ்வாறு வெண்பாவுமொருதொடர்.]

(இ-ள்.) சொல்லுமுபாங் கஞ்சாங்கஞ் சோர்வறவே தானினிய நல்லசிவ தீக்கையினுல் நன்கணிந்து - சமய விசேஷமென்னுந் தீட்சையைப்பெற்று விபூதிமுதலிய சாதனங்களையுந்தரித்து அதற்குரிய வநுட்டானத்தில் நின்றவ்வநுட்டான பெலத்தால் பின்னும் ஆசனமூர்த்தி மூலங்களை வித்தாரமாயறிந்து சவுராதி சண்டாந்தமான தேவதைகளை மிசிரமாகக் கலவாமற் பிரித்துப் பூசையினைச் சாங்கமாகப் பண்ணவேண்டுமென்னும் விருப்பத்தினையுடையவன், சொல்லியநற்பூசைக் கதிகாரம் பொற்புறவாசானருளாற் பேசிய நற்றீக்கையும்பெற்று - அவ்வதிகாரத்தைப் பெறும்பொருட் டவ்வாசாரியரை வழிபட்டவ்வாசாரியரால் நிருவாணமென்னுங் கிரியாவுத்திரி தீட்சையினைச் செய்துகொண்டு, எ-று. (கூ0)

(இ-ள்.) ஆவரண தேவதையு மாஞ்சவுர சண்டாந்த மாவதுவும் - ஆவரணமாகவைத்துப் பூசிக்குஞ் சூரியன்முதல் சண்டேசுராந்தமாகக் கூறிய பரிவாரதேவதைகளினது சொரூபத்தினையும், லிங்கமது வாவதறிந்து - சிவலிங்கத்தினது சொரூபத்தினையு நன்ருகக் குருமுகமாகக் கேட்டறிந்து, ஆவலுடன் மந்திரமுந் தந்திரமு முத்திரையுமற்று மிகவுந்து முபசார மீரொட்டும் - மிகுந்த வாசையினு லவ்வாவரண தேவதைகளையு மச்சிவலிங்கத்தினையும் பூசிக்கு மந்திரக்கிரியா பாவனைகளிலேயுஞ் சோடச வுபசாரங்களிலேயும், எ-று. (கூக)

(இ-ள்.) வாகனமுஞ் சந்து மகிழ்கர்ப்பூ ரம்புழுகு மாகுமிவை யொன்றிலொன் றின்ருகாமல் - அலங்காராசனம், ரதம், விமானம், ரிஷபம், நாகபீட முதலிய வாகனங்களிலேயும், கெந்தபுட்ப முதலிய பூசாத்திரவியங்களிலேயுமொன்றுங் குறையாமல் குறைந்தால் மிகுந்த அபசாரம் வருமென வஞ்சிப் பூசைக்கு வேண்டுவன்வாகிய பூசாத்திரவியங்கள் முழுவதுஞ் சம்பாதித்து வைத்துக்கொண்டு, ஆகுங் கருஷணையாதி பிரதிட்டை யந்தமாதி வருபிரதிட்டை யுச்சவாந்தம் - பரார்த்த விஷயத்தில் ஓர்சிவலிங்கப் பிரதிட்டைபண்ணுங் காலத்ததற்கேற்றதோர்தானத்திற் பொன்னேர்பூட்டியுழுது அவ்வாலயத்துக்குக் கோலிய வெல்லையிலுள்ள மண்ணினைப்புருஷப் பிரமாணமாகக் கல்லியெடுத்துப்போட்டு மறுபடி நதிமணல் கொண்டுவந்துபரப்பிச் சலம்விட்டு அஸ்தபாதத்தினுற் கெட்டிபண்ணிச் சிற்பப்பிரகாரங் கெர்ப்பக்கிருகமுதலிய

வாகிய வாலயத்தைச் சமைத்து அவ்வாலயத்துட் சிவலிங்கப் பிரதிட்டை பண்ணுதல் பரியந்தம் ஓர்கிரியை. இதற்கே கருஷணாதி பிரதிட்டை யென்பது. மேலுச்சவமாவன உச்சவ விக்கிரகங்களை யுண்டுபண்ணி விதி முறையில் வாஸ்த்து சாந்தி அங்குராற்பணம் துஜாரோகணமுதற் பத்துநாளுச்சவக் கிரியையுஞ்செய்து அபமிருத்து ஸ்நானமுஞ்செய்து துஜா அவரோகணமட்டும் ஓர்கிரியை, எ-று. (கூஉ)

(இ-ள்.) உச்சவமதாதி யுளபிராச் சித்தமந்தம் - இவ்வுச்சவாதிகளில் மந்திரக்கிரியாபாவனை திரவியமுதலியவற்றால்வரு நூனாதிகங்கள் தீர விதித்தபடி செய்தல் பிராயச்சித்தம், இவைகளே கருஷணாதி பிரதிட்டை பிரதிட்டாதியுச்சவம் உச்சவாதி பிராயச்சித்தம். இவற்றின் விரிவை காமிகாதி யாகமங்களிற் காண்க. மேலான்மார்த்த பூசைக்குக் கருஷணாதி விதியெங்ஙன மென்னில் கருஷணமாவது பூஜாஸ்தானமான மடத்தைக் கருஷணாதியாகச் செய்வித்து மண்டபத்தின் மத்தியிலிருக்கும் வேதிகையில் அலங்காராசனமாகிய சிங்காதனபீடமிட் டப்பீடசுத்திபண்ணிப் பின்பு அஸ்தபாதப் பிரக்ஷாளனஞ்செய்துகொண்டு பின்பு ஆசமனம் அங்கந்நியாசங் கரந்நியாசம் பிராணாயாமஞ்செய்து அகோரத்தாற் பிராயச்சித்தஞ்செய்துகொண்டு பின்பு சாமான்னியார்க்கியந்தாபித்துக்கொண்டு அப்பீடத் தக்கினிபாகத்திற் சிவசூரியனைப் பூசித்துப் பூர்வாதி துவாரத்தில் துவாரபாலகரைப் பூசித்துப் பின்பவ் வாசனத்தில் ஆவரணமாகக் கணபதி கந்தன் - சரஸ்வதி - மகாலட்சுமி - நந்தி - மகாகாளர் - கங்கை - யமுனை - முதலிய தேவதைகளைப் பூசித்துப் பின்பு நைருதிதிக்கில் வாஸ்து வாதிபதி பிர்மாவைப் பூசித்துப் பின்பு ஆசமனம் அங்கந்நியாசம் கரந்நியாசம் பிராணாயாமமுதலிய அந்தரியாகத்தைப் பண்ணுவது ஆன்மசுத்தி. பின்பு பூசாஸ்தானத்தை நிரீக்ஷணாதியஷ்ட்ட சமுஸ்காரமுஞ்செய்து சத்தி ஜாலத்தை நிறைப்பது ஸ்தானசுத்தி. பின்பு விதிப்படி விசேஷார்க்கியத்தைத் தாபித்து அந்த சலத்தை ஒரு புட்பத்தினாற் பூசாத்திரவியங்களின் மீது புரோக்ஷித்து நிரீக்ஷணாதி யஷ்ட்ட சமுஸ்காரஞ்செய்தல் திரவியசுத்தி. இவைகளைச்செய்துகொண்டு பின்பு பிஞ்சுவேதிகையில் ஸ்நானவேதிகையைச் சுத்திபண்ணிவைத்துச் சகுஸ்தாசனம் பூசித்து அவ்வேதிகையில் பெட்டகக் கோயிலி லெழுந்தருளியிருக்குஞ் சுவாமியை யெழுந்தருளப்பண்ணிப் பாத்தியாசமனங்கொடுத்து நிர்மாலியங்கழித்துப் பின்பு லிங்கசுத்தியாக அபிஷேக திரவியங்களினா லபிஷேகம்பண்ணிப் பின்பு திருவொற்றாடைசாத்தி வஸ்திராபரணந்தரித்துப் புட்பந்தரித்து, எ-று. (கூங)

(இ-ள்.) நல்ல வரனை நயந்து சிவாசனத்தின் மெல்ல விருத்தி விருப்பினா லல்லலறப் பூசித்து - பின்பு சிங்கந்தாங்கு மவ்வலங்காரபீடத்திற் சுவாமியை இராசவுபசாரமாக மெல்ல வெழுந்தருளப்பண்ணிப் பின்பு ஆதாரசத்திமுத லூன்மனாசத்திபரியந்தமான சிவாசனங்கொடுத்து ஈசானாதிவத்திரமுதல் அங்கப் பிரத்தியாங்க சாங்க வுபாங்கமாகிய வித்தியாதேகங்கொடுத்துப் பின்பு சுத்த

சிவத்தை அவ்வித்தியாதேக மூர்த்தத்துக்குயிராகத்தாபிப்ப தாவாகனம். ஆவாகனம்பண்ணிச் சுவாகாந்தமாக அர்க்கியங்கொடுத்துப் பின்பு இந்த மூர்த்தியினிடமாக வெழுந்தருளி யிருக்கவேண்டுமென்று தியானிப்பது தாபனம். தனதபிமுகமாகத் தியானிப்பது சந்நிதானம், பூசைகொண் டருளவேண்டுமெனத் தியானிப்பது சந்நிரோதனம், இப்படிப் பாவனைபண்ணினபின்பு மனோன்மனிசத்தியையும் அஷ்டதள பத்மத்தீசான தளத்தி லாவாகனம் பண்ணுமட்டுங் கருஷ்ணுதி பிரதிட்டை, இதன்மேற் பாத்தியாசமனங்கொடுத்துப் பாவனுபிஷேகத்தைப்பண்ணி வஸ்திராபரணம் கந்தபுட்ப முதலியவெல்லாந் தரித்து அஷ்டபுஷ்பஞ்சாத்தி இலயாங்க போகங்களும் பிரித்துச் சாத்தி நைவேத்திய தூபதீபாதி நிருத்தகீத பிரதட்சிண நமஸ்கார தோத்திர பிரார்த்தனை முதலியவெல்லாஞ்செய்து பின்பு நிரோதார்க்கியமுங் கொடுத்து அக்கினிகாரிய முதலியவெல்லாஞ்செய்து அப்பால் அப்பூசாபலத்தைச் சிவாற்பணம்பண்ணிப் பிரார்த்தித்துப் பரான்முகார்க்கியமுங் கொடுத்துச் சண்டேசுர பூசைபண்ணுதல் பரியந்தம் உச்சவம், மந்திரமே யாதிபொரு ளீருகப் பேசியதிலோபமறப்பின் - மந்திரக்கிரியா பாவனைகளில்வரும் வைகல்யம் அக்கிரியையினைச் செய்யுமிடத்தில் இந்திரியாதி யந்தக்கரணங்கள் மறுவிடையத்திற் சென்றதால் வரும் வைகல்யம் திரவிய நூனுதிகங்களால் வரும் வைகல்யம் இவைகளெல்லாந் தீரச்செபங்கள் தியானங்கள் பண்ணுதல் பிராயச்சித்தம், எ-று. (கூச)

(இ-ள்.) சொல்லும்பராச் சித்தமுற்றுஞ் சோர்வறவே செய்தசுத்தம் புல்லறச் சுத்தமாம் பொற்பினு னல்லபெயர் சுத்தசைவ மாகும் - இங்ஙன மாகமங்களில்விதித்த பிரகாரஞ் சாங்கமாகச்செய்து அசுத்தமில்லாது சுத்தமாகவிருக்கு மழகினுல் இதற்குச் சுத்தசைவமெனப்பெயராம் - இது சொல்லி விரண்டாகுமிவைக் கொத்தபெயர் சொல்வோமுணர் - இச் சுத்தசைவமு மிரண்டுவகையாம், இவற்றின் பெயரினைத் தெரியச்சொல்லுவோ மறிவாயாக, எ-று. ()

ஆன பரார்த்தமொன்றொன் றான்மார்த்த மாமென்னத்
தானினிய சைவநா லுனுக்கு - மானவிவை
தாமிரண்டும் பூசிப்பர் தங்குஞ் சிவத்துவச
ரானவர்க ளென்றே யறி.

(இ-ள்.) ஆனபரார்த்த மொன்றொன்றான்மார்த்த மாமென்னத்தானினிய சைவநா லுனுக்கும் - சுத்தசைவ மிரண்டு திறத்தராவர் யாவரொன்னில் ஆன்மார்த்த பூசையோடு பரார்த்தபூசை பண்ணுமவர், பரார்த்த பூசையன்றி ஆன்மார்த்த பூசைமாத்திரம் பண்ணுமவரெனப் பிரித்தாகமங்கள் சொல்லும் பரார்த்த சிவலிங்கமாவன - சுவாயம்புவம் - தேவபிரதிட்டை - ரிஷிபிரதிட்டை - இராசபிரதிட்டை முதலியன, வான்மார்த்த சிவலிங்கமாவன, வாணம் - படிகமுதலியன, ஆனவிவை தாமிரண்டும் பூசிப்பர் தங்குஞ் சிவத்துவச ரானவர்களென்றே யறி - இங்ஙனங்கூறிய ஆன்மார்த்தம் பரார்த்தமென்னு மிரண்டி

டத்தும் பூசிப்போர் ஆதிசைவராகிய சிவப்பிராமணர்களென் றறிவாயாக, எ-று. (கசு)

சொல்லுஞ் சிவத்துவசர் சொற்றவிரண் டர்ச்சனைக
ளல்லலறச் செய்த லறமாகு - மல்லாதா
ராம்வருண நாலினுக்கு மான்மார்த்த பூசைசெய்ய
யாம்பரிவா லேயுரைத்த தாம்.

(இ-ள்.) சொல்லுஞ் சிவத்துவசர் சொற்றவிரண்டர்ச்சனைக ளல்லலறச் செய்தலறமாகும் - நமது திருமுகத்திற் பிறந்தவர்களென்று சொல்லப்பட்ட சிவத்துவசர் ஆகமங்களிற்கூறிய வான்மார்த்த பரார்த்தமென்னு மிரண்டிடத்தும் பிறவிக்கிலேசமறப் பூசிப்பதே தர்மமாகும், அல்லாதா ராம்வருண நாலினுக்கு மான்மார்த்த பூசைசெய்ய யாம் பரிவாலே யுரைத்த தாம் - அச்சிவத்துவசரன்றிப் பிரமாவினுடைய முகத்திற் புசத்திற் றுடையிற் பாதத்திற் பிறந்த பிராமணர் - அரசர் - வைசியர்-சூத்திரர் என்று சொல்லப்பட்ட நாலு வருணத்தோர்களும் அநுலோமர் பிரதிலோமரும் பரார்த்தபூசை பண்ணப் படாது, அவர்கட் கான்மார்த்தபூசை பண்ணுதலேயாம் அன்போடுகூறிய ஆகம விதியாம், எ-று. (கஎ)

ஓதுகின்ற நால்வருணத் துற்றவர்தாஞ் சுத்தரான
வோதும் பரார்த்தத்தைப் பூசிக்கி - னீதிகுன்றும்
பஞ்சமதாம் பூமிமிகும் பார்வேந்தர்க் கின்னுவா
மஞ்சப் புவிகலக மாம்.

(இ-ள்.) ஓதுகின்ற நால்வருணத்துற்றவர்தாஞ் சுத்தரான வோதும் பரார்த்தத்தைப் பூசிக்கில் - வேதாகமங்களாற் சொல்லப்பட்ட நாலு வருணத்தோர்களும் ஆகமப்பிரகாரந் தீட்சாசுத்தர்களாய்ச் சுத்தசைவர்களா யிருக்கினும் முன்சொல்லப்பட்ட பரார்த்தபேதங்களைப் பூசித்தார்களாயின், நீதிகுன்றும்பஞ்சமதாம் பூமிமிகும் பார்வேந்தர்க் கின்னுவா, மஞ்சப்புவிகலகமாம் - அவர்களிருக்குந் தேசத்தில் ஞாயம்வழுவும், மழையின்மையால் விளைவற்று மிகுந்த பஞ்சமுண்டாம், அத்தேசத்தில் அரசர்களுக்கும் வாராத கிலேசங்களெல்லாம் வரும், அத்தேசத்திலுள்ள சகலபிராணிகளும் பயத்தையடையக் கலகம் உண்டாம், எ - று. (கஅ)

[இவ்விரண்டுவெண்பாவு மொருதொடர்.]

முப்பொறியான் மந்திரமே யாதிபொரு ளீறுகச்
செப்பிவரு முச்சவம தந்தமா - முப்பொழுதுஞ்
செய்தவைவயி லோபமதாற் சேருமசுத்தமெனு
மல்லலற வேபிராச்சித் தம்.

சொற்றபடி செய்துசுசி யாயசுசி நீக்குதலா
லுற்றபெயர் சுத்தசைவ மோவென்னச் - சொற்றபெய

றொன்று கமங்க ளியல்பா வெடுத்துரைக்கு
மின்றோர் தறியஃதி னால்.

(இ - ள்.) காலை மத்தியான சாயங்காலமென்னும் மூன்று காலங்களினு மனவாக்குக் காயங்களினாற் பண்ணுஞ் சிவபூசை சிவத்தியானம், முப்பொறி யாவன மனம் வாக்கு காயம், இவைகளில் மனதினாற் பண்ணுவது தியானம், அதாவது பரமாதனமுதலிய வாதனத்திருந்து பிராணயாமத்திற் சூனிய கும் பகத்தினின்று தனக்கிஷ்டமாகிய சாலம்ப நிராலம்பமாகுங் குறிகளி லொ ன்றை இருதய முதற்றுவாத சாந்தபரியந்தமாகிய தானங்களிற் றனக்கியை ந்ததோர் தானங்களில்வைத்துச் சலனாத்மகமின்றி நிற்சலனமா யமுந்தவைத் தக்குறியை அபிவியக்தமாகப் பாராமற் பார்க்குகை - வாக்கினாற்செய்வது சங்கிதை முதலிய மந்திரங்களைத் தத்தம் பீசாட்சரங்களுட னிரசுவதீர்க்க புலிதாதி யுடன்படுத் துச்சரிக்கை, காயத்தினாற்செய்வது - கரசரணாதியங்கங் களினால் முப்பத்திரண்டு முத்திரைமுதலிய கிரியைகளைச் சாங்கமாகச்செய்கை இவைகளை இங்ஙனஞ் செய்யாமையினால் வரும் வைகல்யம் மந்திரலோபத் திர வியலோபங் கிரியாலோபங்களினாலேவரும் வைகல்யம், இவைகள் கருவஷ் ணந்தொடங்கி யுச்சவாந்தமட்டு மாகையால் இப்படித் திரிசந்தியாகாலமுஞ் செய்யுங் காலத்துவரும் பூசைத் தாழ்வெல்லாந்திர ஆகமங்களிற்கூறிய பிர காரஞ்செய்து அசுத்தத்தை நீக்கிச் சுத்தசைவனா யிருக்கையா லிச்சைவத்துக் குச் சுத்தசைவமென் றாகமங்கள் கூறும் தன்மையை யூகித்தறிவாயாக, எ-று.

[ஆயி னித்தீக்கையினையும் பேததீக்கை யென்பதற்கோர்
திட்டாந்தமிட் டுணர்த்துகின்றார்.]

கன்னா யதனைக் கனகமய மாக்கியக்காற்
பின்னா யெனும்பேர் பிழைபடா - வன்னதனாற்
றீய பொருள்க டினஞ்சுசிசெய் யுந்தீக்கை
யாயதுவும் பேததீக் கை.

(இ-ள்.) கன்னாயதனைக் கனகமயமாக்கியக்காற் பின்னாயெனும்பேர் பிழை படா வன்னதனால் - ஓர்காலத் தோர்கம்மியனோர்சிலையை யோர்நாயினதுரு வாகச் செய்துவைத்தனன், அந்நாயினைப் பின் போர்காலத் தோர்சித்தனோர் மருந்தினா லச்சிலையைப் பொன்னிறமாகச் செய்தனன், அப்பொழுது மவ்வுரு க்குலையாமையால் முன்கன்னாயெனவிருந்து பின் பொன்னாயென வாயிற்றன்றி அப்பெயர் போகாததுபோல, தீயபொருள்க டினஞ்சுசிசெய் யுந்தீக்கையா யதுவும் பேததீக்கை - இத்தூல சூக்குமகாரணமென்னுந் தேகங்களைத் தீட் சையினான்மாற்றி இஷ்டப்பிராண பாவலிங்கரூபமாய்ச் செய்யாதபடியால் அப்படிச் சுத்திபண்ணவேண்டிற்று, அத்தேகத்தைக் கெடாமல் அத்தேகத்தி லேதானே மந்திரத்தால் நியாசம்பண்ணுகையா லந்நியாசபலன் அப்போது மாத்திரமே சுத்தியைத் தருமாதலால் அத்தீக்கைக்கும் பேததீக்கையெனப் பெ யராயிற்று, எ-று.

(௪0௧)

முப்பொறியு மந்திரமு முற்றுந் திரவியமுந்
தப்பறவே பாசத் தகுதியா - லிப்பொருள்கள்
யாவுந் திரவியமா மான்மாவுக் காதலினல்
யாவு முயிர்க்குப்பேத மாம்.

(இ-ள்.) முப்பொறியு மந்திரமு முற்றுந் திரவியமுந் தப்பறவேபாசத் தகுதியா லிப்பொருள்கள் யாவுந்திரவியமாமான்மாவுக் காதலினல் - மனவாக்குக் காயங்களு மற்றுள்ள பூசாதிரவியங்களு மசுத்தமாயா சம்பந்தங்கள் அவற்றின் தொனியாத்மகமாகிய சத்தகோடி மகாமந்திரங்களும் நாதாந்தமாகிய நிட்களப் பிரகாசரூபங்களுஞ் சுத்தமாயா சம்பந்தங்கள் அவையெல்லாம் பாசபதார்த்தமென்பது நிச்சயம், சித்துருபமாயிருக்கின்ற வான்மாவைக்குறித்து இங்ஙனங் கூறியவைகள்யாவுஞ் சடபதார்த்தமாகையால், யாவு முயிர்க்குப் பேதமாம் - அவ்வான்மாவுக்கு அபேத சாட்சாத்காரத்தைத் தரமாட்டா, எ-று.

இதற்கு உ-ம். சித்தியார். 'பாசஞானத்தாலும் பசுஞானத்தாலும் பார்ப்பரிய பரம்பரனைப் பதிஞானத்தாலே - நேசமொடு முள்ளத்தே நாடிப்பாத நிழற்கீழ்நில்' என்பதனுற் கண்டுகொள்க. (கoஉ)

[ஆன்மா தனக்குப் பேதசாதியாகிய சடபதார்த்தங்களை நீங்கினு லல்லது தனக் கபேதமாயிருக்குஞ் சிவாநந்தாநுபூதி கிடையாதாகையா லிவைகளினுல்வரும் பேறும் பேதமேயெனப் பேசுகின்ருர்.]

பேதமது வான பெரும்பொருள்க ளாற்சிவனை
நீதியினு லர்ச்சித்து நின்றதாற் - றீதகன்ற
பேறுஞ்சா லோகமொடு சாமீப் பியமென்னக்
கூறுஞ் சிவாகமங்கள் கொள்.

(இ-ள்.) பேதமதுவான பெரும்பொருள்க ளாற்சிவனை நீதியினு லர்ச்சித்து நின்றதாற் றீதகன்றபேறும் - சித்துருபமாகிய சிவனைத் தானுஞ் சித்துருபமாகச் செபித்துச் சிற்பதார்த்தங்களாற் பூசியாமற் றன்னைக் குறித்தந்நியமாகிய சடபதார்த்தங்களினுற் முனுஞ் சடருபமாகவிருந்து சிவனைப் பூசிக்கையால் வரும் நல்ல பேறுயாதென்னில், சாலோகமொடு சாமீப் பியமென்னக் கூறுஞ் சிவாகமங்கள் கொள் - சிவசாலோக்கிய சாமீப்பியசாருப்பியங்களென் றுகமங்கள் சொல்லும் நீ யறிந்துகொள், எ-று. (கoந)

[இன்னு மிங்ஙனங்கூறிய பேதங்கள்யாவும் மகாவாக்கியத்துடன் சம்மதிகூடா தாகையாற் பேதமென்பதே நிச்சயமெனக் கூறுகின்ருர்.]

சொல்லு மருச்சனைகள் சொற்றபுறப் பூசையென்றுஞ்
சொல்லியதீ தன்றியுநீ சொல்லக்கேள் - வல்லமகா
வாக்கியத்தின் முப்பதத்தின் வாய்மையினு லேபுறமென்
றுக்கியது நாம மறி.

(இ-ள்.) சொல்லுமரிச்சனைகள் சொற்றடுறப்பூசையென்று சொல்லிய தீதன்றியு நீ சொல்லக்கேள் - இங்ஙனங்கூறிய சாமானிய மிசிரசுத்தமென்னுஞ் சைவர்கள், தாசபாவகமாகவும் சற்புத்திரமார்க்க பாவகமாகவும் சகயோகபாவகமார்க்கமாகவுமிருந்து மனவாக்குக் காயங்களால் மாயா பதார்த்தங்களைக் கொண்டு பூசிக்கின்றமையால் பேதமென்று சொன்னோம் அல்லாமலின்னுஞ் சொல்லுவோங் கேட்பாயாக, வல்லமகாவாக்கியத்தின் முப்பதத்தின் வாய்மையினாலேபுற மென்றுக்கியது நாமமறி - வேதாகமங்களால் வல்லபமாகக் கூறிய தன்மை முன்னிலை படர்க்கையென்னு மூன்றுவாக்கியங்களுக்குந் தத்துவமசியென்னு மூன்றுபதத்தினுக்கு மொத்திராது. எங்ஙனமெனின் அது-நான்-ஆனேனென்னும் வாக்கியத்திசையாதாயினும், சிவத்துவமசி, சிவோகமசி, சிவோயமஸ்தியென்னுந் தன்மைமுன்னிலை படர்க்கை வாசகங்களினு மிசையா தாகையாலும் இன்னு மிவ்வாக்கிய மொவ்வொன்றில் மூன்றாய் ஆகவொன்பதாம் இவைகள் விரிக்கிற்பெருகும். இதனைக் குருமுகத்தாற் கேட்டறிக, இவ்வர்த்தங்களுடனிசையாதாகையாற் பேதமென நாமமிட்டாகமங்கள் கூறியவாறறிக, எ-று. ()

[மேல் அபேதவிலக்கண மீதெனவறைகின்றார்.]

பெத்தமுத்தி ரண்டினிலும் பேராத வத்துவித
மொத்துறுதல் சற்கா ரியமென்னும் - புத்தியது
வுண்டாகச் சத்தி பதியவரு நூலுணர்ந்து
கொண்டாரும் பத்தியுதிக் க.

(இ-ள்.) பெத்தமுத்திரண்டினிலும் பேராதவத்துவித மொத்துறுதல் சற்காரியமென்னும் புத்தியதுவுண்டாக-தன்னியல்பாகிய முத்திகாலத்திற் சிவனை விட்டு நீங்காமலிருப்பதுவே யுண்மையெனு மறிவுண்டாக, சத்திபதியவருநூலுணர்ந்துகொண்டாரும் பத்தியுதிக்க - மலபரிபாக மிகுதியாற் சிவனுடைய ஸ்ரீ பாதசத்தி இவனிடத்திலேபதிய அச் சிவசத்தி விளக்கத்தாற் றேகாதி பிரவஞ்சித்தி லுபரதிசெனித்துப் பதிபசுபாச விலக்கணங்களையுங் கிரமமாகப் பிரித்தறியச் சிவாகமங்களையோதி அச்சிவாகமவிளக்கத்தா லச்சத்திக்குமேலாகிய சற்பத்தி பிறக்க வச்சற்பத்தியால், எ-று. (க0ரு)

[மேல் பேததீக்கை விதியினை யறைகின்றார்.]

பொற்கடமா வைப்புலவன் பொங்குதழ லில்லுருக்கி
யற்புதமாஞ் சிங்கவுரு வாக்குதல்போற் - சற்குருவாற்
சங்கற்ப காயமறச் சம்புவுரு வாகிநிற்ற
றங்கிய மெய்த் தீக்கையது தான்.

(இ-ள்.) பொற்கடமா வைப்புலவன் பொங்குதழ லில்லுருக்கி யற்புதமாஞ்சிங்கவுரு வாக்குதல்போல் - மதத்தினை யுடையதோர் யானையினது வுருவம்போலப் பொன்னினாற் சமைத்திருந்ததனை யோர்கம்மிய னவ்வுருவினையு மப்பெயரினையுமாற்றி யதனை யுடைத்தோர்குகையினி லடைத் தழலினில் வைத்துருக்கி யாச்சரியத்தினையுடைய சிங்கத்தின துருவமாகச் செய்தமைபோல,

சற்குருவாற் சங்கற்பகாயமறச் சம்பு வுருவாகிநிற்றல் தங்கியமெய்த் தீக்கையதுதான் - ஞானசாரியரானவர் பிரமாவினுடைய மனச் சங்கற்பத்தினாற் கன்மத்துக் கீடாகப் பூதபரிணாமமா யனுசிதமாகச் செய்யப்பட்டிருக்கு மித்தேகத்தை ஞானாக்கினியாற் றகித்துத் திவ்வியதேகமாக்கி அத்திவ்வியதேகத்தினிடமாக இருக்குமான்மாவைச் சிவசொரூபமாகச் செய்தலே அபேதஞானசாம்பவதீட்சை, எ-று.

[இன்னும் அத்தீட்சையினது மகிமையைக் கூறுகின்றார்.]

வேட்டு வளிப்புழுவின் மேனியறத் தன்னுருவங்
கூட்டுதல்போல் ஞானக் குருராயன் - நீட்டு
மருட்காயம் வாட்டி மகாலிங்க மென்னுந்
திருக்காயஞ் செய்தன்மெய்த் தீக்கை.

(இ - ள்.) வேட்டுவளிப்புழுவின் மேனியறத்தன்னுருவங் கூட்டுதல்போல் - வேட்டுவளியென்னுங் குளவியானது பச்சைப்புழுவைத் தேடியெடுத்துக்கொட்டி அக்கொட்டுக் கப்புழுபதையாம லிருந்ததானால் லப்புழுவை யெடுத்துத் தன் கூட்டிலடைத் தடிக்கடி கொட்டிக்கொட்டி யப்புழுவின துருவத்தைமாற்றித் தனதுருவமாகச் செய்வதுபோல, ஞானக்குருராயன் நீட்டுமருட்காயம் வாட்டி மகாலிங்கமென்னுந் திருக்காயஞ்செய்தல் மெய்த்தீக்கை - ஞானசாரியரானவர் இருவினையொப்பு மலபரிபாகமுள்ள சீடனைச்சோதித்து அழைத்துப் பின்பு ஞானசாம்பவமாகிய சட்சுவாதி யறுவகைத்தீட்சையா லவனது மாயாதேகத்தைப்போக்கி மந்திரதேகமாகச் செய் தச்சீவனையுஞ் சிவசொரூபமாகச்செய்தலே மெய்மையாகிய தீட்சை, எ-று. (௧௦௭)

[இன்னு மதன்மகிமை மூன்றுவெண்பாவினாற் கூறுகின்றார்.]
[இம்மூன்று வெண்பாவு மொருதொடர்.]

தானென்னும் வீரசைவ தந்திரங்கண் டாவலுட
னானென்னுங் காய மொழித்தருள - வானகுரு
தேசிகனைக் கண்டு தினம்வழிபா டன்பதனா
லாசையுடன் செய்தாசா னால்.

சாங்கமுபாங் கங்கருணை சற்குருவாற் றீக்கைபெற்றிட்
டாங்கதுநீங் காதே யணிந்தருளை - நீங்காத
வின்பு மிகவே யிசைந்தகலா தேயிருக்க
வன்பு மிகுமாசை யால்.

நல்லுயி ராந்தன்னை நல்வீர சைவமுடன்
வல்லசைவ தந்திரமும் வண்மையுடன் - வல்ல
குருபரனை நம்மைக் குறைவறவர்ச் சிப்பித்
திருமையறல் வீரசைவ மே.

(இ-ள்.) தானென்னும் வீரசைவதந்திரங்கண்டாவலுட னூனென்னுங்காய மொழித்தருள - நிகரற்றுத்தானே தானுயிருக்கு மவ்வீரசைவத்தின துண்மையைச்சாதிக்கும், வீராகமம் - அசிந்தியாகமம், வாதுளாகமம்-மகுடாகமமுதலிய வாகமங்களை நிச்சயமாகவறிந்து சைவத்தில் மிகுந்தவாசைபற்றி மாமிசமயமாக விருக்கு மித்தேகத்தை மாற்றிச் சிவசொரூபமாகச் செய்யும்பொருட்டு, ஆன குருதேசிகனைக்கண்டு - அருளேதிருமேனியாக வெழுந்தருளாநின்ற ஞானுசாரியனைத்தேடிச் சென்றடைந்து, தினம்வழிபாடன்பதனு லாசையுடன் செய்தாசானுல், அவ்வாசாரியருக்குத் தன்னிடத்தன்பு பெருக நாடோறும் பத்தியினுற் பணிவிடைசெய் தவ்வாசாரியரால், எ-று. (க0ரு)

(இ-ள்.) சாங்கமுபாங்கங்கருணை சற்குருவாற்றீக்கை பெற்றிட்டாங்கது நீங்காதே யணிந்தருளை - சமயவிசேஷ நிருவாணதீட்சாதிக்கனுய் விபூதிமுதலிய சாங்கவுபாங்கங்களைவிட்டு நீங்காமற் றரித்துக்கொண் டான்மார்த்த சிவ பூசையையுஞ் செய்து, நீங்காதவின்புமிகவே யிசைந்தகலாதே யிருக்கவன்புமிகுமாசையால் - அவ்வனுட்டானத்திலே நின்று மேலாகிய சிவசாயுச்சியத்தையடைந்து சிவானந்தாநுபூதியைப் பெறவேண்டுமென்னு மிகுந்த தாகத்தையுடைத்தா யிருக்கையால் எ-று. (க0சு)

நல்லுயிராந்தன்னை நல்வீரசைவமுடன் வல்லசைவதந்திரமும் வண்மையுடன்வல்ல குருபரனுல் - அப்படி மேலாகிய முத்தியைப் பெறவேண்டுமென்னுந் தாகத்தினையுடைய சுத்தாத்மாவானவன் நன்மைமையத்தரும் வீரசைவத்தினை விளக்கமாகச்சொல்லும் வீராகமமுதலியவற்றுட் சுத்தசைவ மிசிரசைவ முதலிய விலக்கணத்தைச்சொல்லு மாகமங்களையு நன்றுகவறிந்து தீட்சிக்கிற வீரசைவாசாரியனை யதிட்டித்துக்கொண்டு ஞானதீட்சையைச் செய்வித்து, நம்மைக் குறைவற வர்ச்சிப்பித் திருமையறல் வீரசைவமே-நம்மையுமேக தேசப்படுத்தாமல் பூசிப்பித் திகபரபோகங்களையும் விடுவித்து மேலாகிய சிவானந்தாநுபூதியைக் கொடுப்போம் அதுவே வீரசைவ வனுபவம், எ-று. (க0எ)

[மேல்வீரசைவரது விதியினை நாலுவெண்பாவினுற் பொதுப்பட வுணர்த்துகின்றுர்.]

அங்கமுயி ராயுயிர்க்கிங் காந்தொழில்கள் செய்திடினு
மங்கஞ்சு தந்திரமா மற்றதுபோ - லிங்கமது
வர்ச்சிப்பித் துக்கொள்ள வல்லார் சுதந்திரமற்
றர்ச்சிப்பர் வேறறவம் மா.

(இள்.) அங்கமுயிரா யுயிர்க்கிங்காந் தொழில்கள்செய்திடினு மங்கஞ்சுதந்திரமா மற்றதுபோல் - தனக்கெனவோரறிவற்றுச் சடமாயிருக்கு முடலானது சித்தாயிருக்குமுயிரைக் கலந்தவ்வுயிர்போன் றவ்வுயிர்வேண்டிய கருமங்களையெல்லாஞ் செய்யினுஞ் சுதந்திரமுதலிய சுகதுக்கானுபவ மவ்வுடலுக்கில்லாதனபோல, லிங்கமது வர்ச்சிப்பித்துக்கொள்ள வல்லார் சுதந்திரமற்றர்ச்சிப்பர் வேறறவம்மா - இச்சிவலிங்கமுஞ் சுதந்திரகீனனுகிய வான்மாவைக் கலந்தவ

னைக் கொண்டு பூசையானவற்பண வவதானமுதலியவெல்லா மங்கீகரித்துக் கொள்ளுதலு மத்தன்மைத்தாகையா லிவ்வீரசைவர்கள் கவலையற்றுச் சுதந்திர மற்றுப் பேதமற்று நாமேதாமாக விருப்பர்களிந்தப்பூசையே யாச்சரியமான பூசை எ-று. (௧0அ)

தாமற் றதனாற் றகும்பூசை செய்வதில்லை
யாமற்ற தாலோபம் யாதுமிலை - யாமதனாற்
குற்றமில்லை குற்றமில்லை யாகப் பிராச்சித்த
மற்றவர்கட் கில்லையில்லை யாம்.

(இ-ள்.) தாமற்றதனாற்றகும்பூசை செய்வதில்லை - தானென்பது ஞேயம், யாமென்பது ஞாதுரு - ஞாதுருவினுடைய வியாபாரமே ஞானம் இம்மூன்றுங் கழன்று ஞேயமேதானாய்ச் சுட்டற்றுச் சுவாநுபூதிமான்களாயிருக்கும் வீரசைவர்கட்கு மனவாக்குக் காயங்களை யசைத்துச் சிவனுக்கு ஆசனமூர்த்தி மூலங்களைக் கற்பித்துப் பேதமாயர்ச்சியார்கள், யாமற்றதாலோபம் யாதுமிலையாமதனால் - யாமென்னும் ஞாதுருவிறந்து ஞேயமாய் நிற்கையால் மந்திரக்கிரியா பாவனையால்வரும் லோபங்களு மவர்கட்கில்லையாகும் ஆகலான், குற்றமில்லை குற்றமில்லையாகப் பிராச்சித்த மற்றவர்கட்கில்லை யில்லையாம் - அவர்கட் கொருகாலுங் குற்றமேறுவதே யில்லையாகையாற் பிராயச்சித்தமு மவர்கட்கில்லையாம், எ-று. (௧0௯)

இல்லை இல்லை என்பது நிச்சயமென்பதைக்
காட்டவந்த வடுக்குமொழி.

தன்னைத்தந் தாற்குத் தகுதி நமைக்கொடுத்தல்
பின்னைக் கொடையில்லைப் பேசுங்கா - லன்னதனால்
நாமவனாய் நின்றுசெய்வோ நஞ்செயற்குக் குற்றமென்று
மாவதில்லை யாவதில்லை யாம்.

(இ-ள்.) தன்னைத்தந்தாற்குத் தகுதிநமைக்கொடுத்தல் பின்னைக்கொடையில்லைப் பேசுங்கால் - தேகாதி பிரவஞ்சமெய்யாய்ச் சர்வவிடயமுந் தானாய்த் தனக்குமேலொரு கர்த்தாவில்லையெனச் சர்வசுதந்திரனாயிருந்தவன் பரிபாக விசேஷத்தால் தேகாதி பிரவஞ்சத்தைப் பொய்யெனக்கண்டு சர்வ விடயத்திலேயுநின்று பிரிந்து தனக்கு மேலொரு கர்த்தாவுண்டெனக்கண்டு தன் சுதந்திர வீனத்தையுமறிந்து தன்னை முழுவது நமக்குக் கொடுத்து நம்முட்புகுந்தவனுக்கு நாம் பிரதியுபகாரமாய்க் கொடுக்குங் கொடை யேதென்னில் அவன் நமக்குச் சமானசாதியாகையால் நம்மையே கொடுப்போம் நம்மையன்றி மற்றவையெல்லாஞ் சொல்லுமிடத்தவனுக்கு விடயமல்ல வாதலால் வேறுகொடையில்லை, இதற்கு, உ-ம். "தந்ததுன்றன்னைக் கொண்டதென்றன்னை" யென்னுந் திருவாசகத்தானறிக. சிவசமான சாதியென்பதற்கு உ-ம். "சித்தியார் சீவனுமிச்சாஞானக் கிரியையாற் சிவனையொப்பன்" என்பதனானும் - சிவன்சீவ

னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்பதனானும், காயமொழிந்தக்காலெங்குமாய்க் கருதரன்போனிற்பன், என்பதனும், சீவனர் சிவனைையறிந்தபின் சீவனர்தாமே சிவனுயிருப்பரோ, என்பதனுனும், ஜீவோ - ஷிவஹா - ஷிவோ - ஜீவஹா - ஜீவகேவலஞ் ஷிவஹா - பாசபந்தபவோஜீவஹா - பாசமுத்தே சதாஹிவஹா - என்பதனுனுமறிக, அன்னதனுல் நாமவனுய்நின்றுசெய்வோ நஞ்செயற்குக் குற்றமென்று மாவதில்லை யாவதில்லையாம் - ஆகையினுலே நாமவனுகவே நின்று செய்யவேண்டிய கிருத்தியத்தைச் செய்வோம், அக்கிருத்தியம் நமது கிருத்தியமாதலால் இராகத் துவேஷாதிகளுடனேகூடிச் செய்வதாயிராது நம்முடைய செய்திக்குக் குற்றமேருது பிராயச்சித்தமு மதற்கில்லை யில்லை, எ-று.

[இதற்கு, உ-ம். திருவாசகம் 'பாதகங்கள் செய்திடினும் பணியாக் கிவிடுமே' என்பதனுலும், சித்தியார். 'சலமிலனுய் ஞானத்தாற் றனையடைந்தார்தம்மைத் தானுக்கி' என்பதனுலுங்கண்டுகொள்க. இவ்வடுக்கும் அப்பொருளது.]

ஆவா கனமும் விசர்ச்சனமும் யாதுமில்லை
யாமா மவர்பூசை யாச்சரிய - நாவாரச்
சொல்ல வவர்விரதஞ் சொற்கடங்கா வாதலினு
லில்லை யவர்க்கிணையா க.

(இ - ள்.) ஆவா கனமும் விசர்ச்சனமும் யாதுமில்லை யாமா மவர்பூசை யாச்சரியம் - ஏகதேசப் பொருளுக்கே ஆவாகன விசர்ச்சன முதலியன பரிபூரணப் பொருளுக்கவை கூடா. ஆகையா லவ்வீரசைவர்களுடைய பூசையே ஆச்சரியமானபூசை, நாவாரச்சொல்ல வவர்விரதஞ் சொற்கடங்காவாதலினுலில்லை யவர்க்கிணையாக - ஆகையா லவர்களுடைய ஞானவிரதத்தை நாவாரச் சொல்ல வேண்டுமென்முற் சொல்லுக்கடங்காதவர்கட் கிப்புவியி லிணையாகச் சொல்லப்படுவோருமில்லை, எ-று. (கககக)

[ஆகையால் நமக்கு வீரசைவத்திலேயே மிகுந்தபட்சமென வுணர்த்துகின்முர்.]

ஆதலினு லத்துவித சைவமது வீரசைவ
மோது மதனி லுவப்புநமக் - கீதல்லா
தானதனி லன்பின்ருே வாமென் னிலப்பகுதி
யானுரைப்ப நீயின் றறி.

(இ - ள்.) ஆதலினுலத்துவித சைவமதுவீர சைவமோதுமதனிலுவப்பு நமக்கு - ஆகையினுலே அத்துவிதசைவமென்பது வீரசைவமே யவ்வீரசைவத்திலேயே நமக்குமிகுந்த விருப்பம், ஈதல்லாதான தனிலன்பின்ருேவா மென்னிலப்பகுதியானுரைப்ப நீயின்றறி - ஆதலா லிவ்வீரசைவத்திலே யல்லது மற்ற சைவத்தில் விருப்பமில்லையோவென்று கேட்கிலவையிற்றினிடத்திலேயும் விருப்பமுண்டு, ஆனுலும் இப்படிச் சம்பூரணமாயிராது, தாரதம்மியமுண்டு, அத்தாரதம்மிய மெப்படியென்னிற் சொல்லுவோங்கேட்பாயாக, எ-று. (ககஉ)

நிற்பனவாய் நில்லா தியங்குதலா னல்லுயிர்மே
லெப்பொழுது மன்பா மிதினடக்கும் - பொற்புடைய
வானவுயிர் மேலதிக மன்பதுவா மவ்வுயிரா
மானிடர்மே லன்பதிக மாம்.

(இ-ள்.) மகாசங்காரகாலத்திற் றூலசூக்கும காரணமாகிய தேகாதி பிரவஞ்சங்களெல்லா மாயையிலேயொடுங்க வக்காலத்துத் தமோமயமாகக் கேவலப்பட்டிருக்கு முயிர்களைப்பற்ற வக்கேவலநீங்கிச் சிருட்டிகாலத்திற் சகலாவத்தையைப்பற்று முயிர்களிடத்துப் பட்சம் விசேஷமாயிருக்கும், அதேனென்னில் மாயாதேகபோக சம்பந்தத்தினாலேயே ஆணவமலத்துக்குப் பரிபாகம் வரவேண்டும், அம்மாயாதேகபோக சம்பந்த மக்கேவலத்தி லில்லாமையாலெனவறிக. இனிச் சகலத்திலேயுஞ் சூட்சுமதேக சம்பந்தமேயல்லது தூலதேக சம்பந்தமில்லா தாகாசத்தைப்பற்றிக் கிடக்குஞ் சிலவுயிர்கள், அஃதேனென்னில் சாதியாயுப்போகமென்னும் பிராரத்தகன்ம பரிபாக மில்லாமையா லெனவறிக, ஆகையா லச்சூக்குமதேக சம்பந்தமாயிருக்கு முயிர்களைப் பற்றத் தூலதேகசம்பந்தத்தினையுடையவர்களிடத்திலே பட்சமதிகமாகவிருக்கும், அத்தூலதேக சம்பந்தங்களுக்குட் டாபராதிகளில் மலைமுதலிய வுயிர்களைப்பற்ற வோரறிவினையுடைய விருட்சமுதலிய வுயிர்களிடத்துப் பட்சமதிகமாகவிருக்கும், அவ்வுயிர்களைப்பற்றிச் சஞ்சரிக்கு முயிர்களில் நீர்வாழுஞ்சாதிமுதல் கிருமிகீடமுதலிய வுயிர்களிடத்துப் பட்சமதிகமாகவிருக்கும், அவ்வூர்வனவாகிய வுயிர்களைப்பற்றப் பறப்பனவாகிய பக்ஷிகளிடத்தில் பட்சம் விசேஷமாக விருக்கும், அப்பட்சிகளைப்பற்ற நடப்பனவாகிய நாற்கால் மிருகங்களில் பட்சம்விசேஷமாகவிருக்கும், அம்மிருகங்களைப்பற்ற மானிடயோனியில் வருமுயிர்களிடத்தில் பட்சம்விசேஷமாகவிருக்கும், எ-று. (௧௧௩)

மானிடரி னன்கு வருணத் ததிகமன்பு
தானவ் வருணத் தகுதியா - லானமறை
வேதியர்பா லன்பதிகம் வேதியரிற் கண்டிகைநீ
றீதணிவார் பாலதிக மென்.

(இ - ள்.) மானிடசென்மத்தில் அநுலோமர் - பிரதிலோமர்-அந்தராளர் விராத்தியரென்றும் சங்கரசாதியென்றுஞ் சொல்லப்பட்ட வுயிர்களினும் நான்குவருணத்தவர்களிடத்தில் விசேஷபட்சம் - அவர்களில் வேதப்பிராமணர்களிடத்தில் விசேஷபட்சம், அப்பிராமணரில் விபூதி ருத்திராட்சந் தரித்தவர்களிடத்தில் பட்சம் அதிகம், எ-று. (௧௧௪)

மற்றிவைக டக்கையினன் மன்னியக லாதணியப்
பெற்றவர்பா லன்பதிகம் பேசுங்கான் - மற்றிவையோ
டாந்தீர்த்த மூர்த்திதல மானவைகள் சேவிக்கத்
தான் சரிப்பார் பாலதிகந் தான்.

(இ-ள்.) முன்சொன்ன விபூதிருத்திராட்சங்களைத் தீட்சாசுத்தர்களாகி யெக்காலத்தினும்விட்டு நீங்காமற்றரிக்கு மவர்களிடத்து விசேஷபட்சம், அவர்களிற் றீட்சாவான்களாய் விபூதிருத்திராட்சதாரிகளாய் எப்போதும் பூப்பிரதக்ஷிணம்பண்ணிக் கங்கைமுதலிய தீர்த்தங்களிற் சென்றுமுடியுஞ் சிவஸ்தலவாசங்கள் பண்ணியுஞ் சிவமூர்த்திகளைத் தெரிசனம்பண்ணியு மிதிலே நியமமாகச் சஞ்சரிக்கு மவர்களிடத்திற் பட்சமதிகம், எ-று. (கக௫)

இங்கிவரி னங்கோயி லெய்திநம்மைச் சேவித்திட்
டங்கருந்து வோமென் றருவிரதந் - தங்குனர்பா
லன்புமிக்க தாகு மவரிலதி கஞ்சொல்லி
னின்பமுட னேயியல்பா க.

(இ-ள்.) தீர்த்தயாத்திரை பண்ணுவோர்களினும் நமது சிவாலயத்திற்சென்று நம்மைத் தெரிசனம்பண்ணி லல்லது புசிக்கிறதில்லையென்னு நியமம் பூண்டிருக்கு மவர்களிடத்து விசேஷபட்ச மியல்பாகவிருக்கும், எ-று. (கக௬)

நம்மைப்பூ சித்தன்றி நாமருந்தோ மென்பவர்பா
லம்ம வதிகமன்ப தாமவரி-னன்மைமிகு
மர்ச்சனைக ளெட்டு முபசார மீரெட்டுங்
கற்பனையா யேவிரத மாய்.

ஒன்று குறைந்தாலு முண்ணு விரதமதாய்
நின்றருச்சிப் போமென்று நிட்டையுடன் - குன்றுமற்
பூசிப் பவர்தாம் புனிதர்தம்பா லேமிகவு
மாசை யுடை யோமென் றறி.

(இ-ள்.) இயல்பாய்வரும் பத்தியினாலே நம்மைப் பூசைபண்ணினாலல்லது புசியோமென்னும் விரதத்தை யுடையவர்களிடத்து மிகுந்தபட்சம், அவரினும் சோடசோபசாரத்துடன் அட்டவிதார்ச்சனைகளு நியமமாகக் கற்பித்துக்கொண்டு இந்த வுபசாரங்களி லொன்றுகுறைந்தாலும் புசிக்கிறதில்லையென்று விரதமாய்க்கொண் டர்ச்சித்து அதுவே நிட்டையாகவிருக்கும் புனிதரிடத்து மிகவும் விருப்ப நமக்கென்றறிவாயாக, எ-று. (கக௭)

[மேலிதனையுந் தமதங்கசுகமென வறிவிக்கின்றார்.]

சொற்றவைக ளெல்லாநம் மங்கசுக மாதலினா
லுற்றவிவர் வேண்ட லுறும்பதங்கள் - பற்றுமன்பா
னம்மா லவர்பெற்றார் நாடிலிங்க வர்ச்சனையி
தம்மா பிராணசுகங் கேள்.

(இ-ள்.) சொற்றவைகளெல்லா நம்மங்கசுகம் - இங்ஙனஞ்சொன்ன தீர்த்தயாத்திரை விபூதி ருத்திராட்சதாரணஞ் சிவபூசை முதலியனவெல்லாம் நமது திருமேனியைக் குறித்தவர்கள் செய்தலினாலது நமக்குத் தேகசுகமாயிற்று, ஆதலினாலுற்ற விவர்வேண்டலுறும் பதங்கள் - இவர்கள் கருதியது பதமுத்தியாகையால், பற்றுமன்பா னம்மாலவர்பெற்றார் - நாமுமவர்கள் மீதுவைத்த பட்

சத்திஞற் சாலோகமுதலிய பதங்களைக் கொடுக்கப்பெற்றுர்கள், நாடிலிங்கவர் ச்சனையீது - இப்பூசையை நன்ருக விசாரிக்கில் நமது தேகபூசையாகவிருக்கும், அம்மா பிராணசுகங்கேள் - இனி நமக்காச்சரியமாக வான்மசுகத்தைச் சொல்லு வோங்கேள், எ-று. (கக௮)

[மேற்பிராணசுகங் கூறுகின்ருர்.]

அழியாத வாருயிரா லாவலுட னம்மை
யொழியாம லன்பா லுருகித் - தெளிவாலே
யர்ச்சிப் பதுநமக்கிங் கான பிராணசுக
மர்ச்சனைசெய் வாரிடத்தம் மா.

(இ-ள்.) அழியாதவாருயி ராலாவலுடனம்மை யொழியாமலன்பாலுருகித் தெளிவாலேயர்ச்சிப்பது நமக்கிங்கானபிராணசுகம், அநித்தியமாகிய தேகாதி களிஞற் செய்யும் பூசையைவிட்டு எக்காலமு மழிவில்லாமல் நித்தியமாயிருக்கு மான்மஞானத்திஞல் மிகுந்த ஞேயம்பற்றித் தேககற்பனையிறந் தகண்டாகார மாயிருக்கும் நம்மைத் தாஞந்தத்துவாதீதஞய்க் கேவலசகலங்கள்நீங்கி வியாபி யாய் மாருதபேரன்பிஞற் பாவனையிறந்து குழைவுபற்றித் தாக்காமற்ருக்கிநிற் கும்வீரசைவபூசையே நமக்குப் பிராணசுகத்தைத் தரும்பூசை, அர்ச்சனைசெய் வாரிடத்தம்மா - அர்ச்சனைசெய்வோர்களிடத் ததுவே யாச்சரியம், எ-று.

இதற்கு (உ-ம்.) சித்தியார் - "அறியாமையறிவகற்றி யறிவினுள்ளே யறி வுதனையருளிஞ லறியாதேயறிந்து, குறியாதேகுறித்தந்தக் கரணங்களோடுங் கூடாதேவாடாதே குழைந்திருப்பையாகில்" என்றும், தேவாரம். மைப்படிந்த கண்ணுளுந்தானுங்கச்சி மயானத்தான் வார்சடையான் மாசொன்றில்லா, ஞெ ப்புடையனல்லஞெருவனல்ல ஞேருரனல்ல ஞுவமையில்லி, யப்படியனவ்வுரு வனவ்வண்ணத் தனவனருளேகண்ணுகக்காண்பதல்லா, லிப்படியனிவ்வுருவ னி வ்வண்ணத்தனிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணுதே" என்றும், 'தேக மறந்து திருவருளாய்நின்று சிவபோகம்விளையப் புணர்நெஞ்சே' என்றும், 'அன்புசிவமென்றறிந்து கொண்டோமே' என்றும், 'பாவிக்க வேண்டாமாண்ட பரனருள்பற்றிஞேர்க்கே' என்றும், வழித்தலைப்படுவான் முயல்கின்றேனுன்னை ப்போலென்னைப் பாவிக்கமாட்டேன்'என்றும், வருவனவற்ருற் கண்டுகொள்க()

[மேற்பிராணசுக வல்லபத்தை நான்குவெண்பாவாற் கூறுகின்ருர்.]

மக்கண்மேன்மாதர் மகிழுமன்பி னும்மனந்த
மிக்கதென்ரு லும்மமையா மெய்யாசை - மிக்கதனைச்
சொல்லவென்ருற் சொல்லுக் கடங்கா பிராணலிங்க
வல்லபமாம் வீரசைவ வாழ்வு.

(இ-ள்.) மக்கண்மேன்மாதர் மகிழுமன்பினும் மனந்தமிக்கதென்ருலும் மமையாமெய்யாசை-மாதாவுக்குச் சிறுகுழந்தைகளிடத்திருக்கும் பட்சத்தைப் பார்க்கினு மனந்தங்கோடி மடங்குபட்ச மென்போமென்ருலும் அந்தமட்டி

லடங்காது, நமக்குப் பிராணலிங்கபூசை பண்ணுவோரிடத்தியல்பாயெழும்பட்சம், மிக்கதனைச்சொல்லவென்றாற் சொல்லுக்கடங்காபிராணலிங்க வல்லபமாம் வீரசைவ வாழ்வு-மிகுந்த அப்பட்சத்தை யிவ்வளவென்று தொகைப்படுத்தி நாவினாற் சொல்லப்படாதோவென்னில் நம்முடைய வாக்கினாலேயு மளவிட்டுச்சொல்லப்படாது, அத்தன்மையதாகும் பிராணலிங்க மகிமை, அப்படிப்பட்ட பிராணலிங்கபூசை பண்ணுமவர்களன்றோ வீரசைவ வாழ்வினையுடையவர்கள், எ-று.

மிக்கதுவாற் பூசையென்ற பேரால்வே றன்றென்னத்
தக்கதன்ற தென்னென்னிற் சாற்றக்கே - டொக்ககல்லின்
மாணிக்கம் வாழ்தருவிற் கற்பதரு தேனுவதிற்
காணின்மிக்க காமதே னு.

(இ - ள்.) மிக்கதுவாற்பூசையென்றபேரால் வேறன்றென்னத் தக்கதன்ற தென்னென்னிற் சாற்றக்கேள் - கிரியாபூசை யோகபூசை ஞானபூசையென்று சொல்லப்பட்ட பூசைகளில் ஞானபூசையே மேலானபூசையென்று சொல்லப்படும், பூசையென்னும் பெயரினாலதைக்கொள்ளு நமக்கு மப்படிப்பூசிக்கு மான்பமாவுக்குங் கிஞ்சித்பேத தாதாத்மிக முண்டென்றும் சொல்லப்படும், அக்கிஞ்சித்பேதமும் அப்பூசையினாலேயே யறவேண்டு மாதலால் முன் சொன்ன பேத பூசைக்குங் கிஞ்சித் பேததாதாத்மிக பூசைக்கும் வேகுதாரதம்மிய முண்டு, அத்தாரதம்மிய மென்னெனிற் சொல்லுவோங்கேள் - தொக்க கல்லின் மாணிக்கம் வாழ்தருவிற் கற்பதரு தேனுவதிற்காணின் மிக்ககாமதேனு - மண்ணிற் கிடக்கும் கல்லுக்குட்சாதி யொற்றுமை பற்றிக்கல்லெனப் பெயர் பெற்றாலும் மகாப் பிரகாசமாய் விலைமதிக்கப்படாததாகிய மாணிக்கக் கல்லுக்கும், பூமியிலிருக்கும் விருட்சங்களுக்குட் சாதியொற்றுமைபற்றி விருட்சமெனப் பெயர் பெற்றாலும் தேவலோகத்துள்ளதா யறிவோடுகூடிக் கேட்டவெல்லாந்தருங் கற்பக விருட்சத்திற்கும், இந்நாட்டிற் சஞ்சரிக்கும் தேனுவுக்குட்சாதி யொற்றுமைபற்றித் தேனுவெனப்பெயர் பெற்றாலும் தேவலோகத்து வசிப்பதா யறிவோடு கேட்டவெல்லாந்தரும் காமதேனுவுக்கும் தாரதம்மிய மெப்படியோ அப்படித் தாரதம்மிய மாம், எ-று. (௧௨௧)

மிருகமதிற் சிங்க மிகுமொலியில் வேத
முருவமதி லிங்க மொளியிற் - பெரியகதிர்
தன்ம மதனிற் சிவதன்ம மக்கரத்திற்
பன்னிலருட் பஞ்சாக் கரம்.

(இ-ள்.) காட்டிற்றிரியு மான் மரைமுதலிய மிருகங்களுக்குள் யானை முதலிய மிருகங்களை யடக்கு மிருகேந்திரனாகிய சிங்கம்போலவும், இவ்வுலகத்துண்டாகிய மற்றைக்கலைகளுக்குட் பதக்கிரம ஜடைகளுடன் உதாத்தானுதாத்த சுரமாய்ச் சகல தேவதைகளுக்கும் பிரீதியைச் செனிப்பிக்கும் வேதகோஷம் போலவும், கண்ணாற் காணப்பட்ட வுருவங்களுக்குட் டெரிசனமாத்திரத்திலே செனன மரணத்தைப் போக்குவதாகிய சிவலிங்கத்தின துருவம்போலவும், நட்சத்திர நவக்கிரகப் பிரகாசம் சந்திரப் பிரகாசம் அக்கினிப் பிரகாசங்களுக்

குட் பூத விருளையோட்டிக் காலகற்பனைகளுக் கெல்லாமெல்லை யினைத் தந்து ஆயிரங்கிரணங்களுடனே கூடிய சூரியப்பிரகாசம் போலவும், பாசதர்மம் பசு தர்மங்களுக்குள் இருவினையொப்பு மலபரிபாகத்தைப் பண்ணுஞ் சிவபுண்ணி யம்போலவும், அகாராதி க்ஷகாராந்தமாகிய ஐம்பத்தோ ரட்சரங்களுக்குட் பஞ் சாட்சரம்போலவுந் தாரதம்மிய முண்டு, எ-று. (கஉஉ)

சுவையி லமுதமின்பிற் சொல்லும்பே ரின்பஞ்
சபையிற் கனகசபை சாற்று - மிவையிவைகண்
மிக்கதுபோற் பூசையினிற் பூசை பிராணலிங்க
மிக்கதிது சத்தியமே மெய்.

(இ-ள்.) சுவையிலமுதம் - இவ்வுலகத்தி லறுவிதமாகச் சொல்லப்பட்ட ருசியுள்ள பதார்த்தங்களுக்குள் உட்கொண்டால் நரைதிரை மூப்புகளை மாற்றி மிருதமாகப் போகாமல் நித்தியத் துவத்தைப் பண்ணுந் தேவலோகத்திற்றெய்வ யோக்கியமாயிருக்குந் தேவாமிர்தமும், இன்பிற் சொல்லும் பேரின்பம் - உல க விஷயானந்தங்களுக்குள் ஒருகாலு நீங்காததாய்த் தெவிட்டாததாய் நித் திய திருத்தியாயிருக்கும் மோட்சானந்தமும், சபையிற் கனகசபை - தாம்பிர சபை இரசிதசபை இரத்தினசபை முதலிய சபைகளுக்குட் பஞ்ச கிருத்திய நிமித்தமாக ஆனந்த நிருத்தம் பண்ணுங் கனகசபையும், சாற்று மிவை யிவை கண் மிக்கதுபோற் பூசையினிற் பூசை பிராணலிங்கமிக் கதிது சத்தியமே மெய்-சொல்லப்பட்ட அவற்று ளிவைசிறந்தனபோல அங்க சுகத்தைத் தருங் கிரியாபூசைக்கும் ஆன்ம சுகத்தைத் தரும்பிராண லிங்கபூசையாகிய ஞான பூசைக்கு மித்தனை வித்தியாச முண்டாகையினு லிதுவேசத்தியமான மெய்ப் பூசை, எ-று. (கஉங)

[ஆகையா லிவ்வீரசைவாசாரியர் நால்வகைத்தீட்சையுஞ்
செய்ய யோக்கியரென நவிற்றுகின்றார்]

மெய்யாம் பிராணலிங்க வத்துவித வீரசைவர்
பொய்யாத வீரமுடன் புந்திசெய்யின் - மெய்யான
சாமா னியமீறுய்ச் சாற்றியநாற் றீக்கைசெய்ய
வாமாகுந் தேசிகரம் மா.

(இ - ள்.) மெய்யாம் பிராணலிங்க வத்துவித வீரசைவர் - யதார்த்த சொருபமாகிய பிராணலிங்கமென்னும் பெயரையுடைய ஞானலிங்கத்துடன் விட்டுநீங்காதவத்துவித சம்பந்தத்தையுடைய வீரசைவாசாரியர், பொய்யாத வீரமுடன் புந்திசெய்யின் மெய்யான சாமானியமீறுய்ச் சாற்றியநாற்றீக்கை செய்யவாமாகுந்தே சிகரம்மா-ஆராய்ந் தறியுமிடத்துப் பொய்மையின்றிச் சற் காரியவாதமாயிருக்கும் வீரசைவதீட்சை மெய்மையாகிய சுத்தசைவதீட்சை மிசிரசைவதீட்சை சாமானியசைவதீட்சை இந்நால்வகைத் தீட்சையும் பண்ணு ஞ் சாமர்த்தியத்தை யுடையவர், எ-று.

அம்மாவென்பது ஆச்சரியப்பொருள்தரும் இடைச்சொல். (கஉச)

[மேற்சுத்தசைவாசாரியர் முதலியோர் செய்யுந்
தீட்சையினைச் செப்புலுற்ருர்.]

சுத்தசைவர் சுத்தமுதன் மூன்ருன தீக்கைசெய்ய
வுத்தமர்தா மாகு முயர்மிசிரர் - வைத்த
விருவகைத்தீக் கைக்குரியர் சாமா னியர்தா
மொருவகைதீக் கைக்குரிய ரே.

(இ-ள்.) சுத்தசைவர் சுத்தமுதன் மூன்ருனதீக்கை செய்யவுத்தமர்தாம்- சுத்தசைவத்திற் சுத்தசைவாசாரியர் வீரசைவாசாரியர் பண்ணும் வீரநிராபாரதீட்சை தவிரக் குண்டமண்டல வேதிகையிட்டுச் சிவாக்கினியை யுண்டுபண்ணிக் கிரியாவுத்திரியாகிய நிற்பீசசபீச லோகதன்மணி சிவதன்மணிமுதலிய தீட்சையோடு மிசிரசைவர்க்குப் பண்ணப்பட்டவிசேஷ தீட்சை சாமானிய சைவர்க்குப் பண்ணப்பட்ட சமயதீட்சையாகிய இம்மூவகைத் தீட்சையும் பண்ணவதிகாரிகளாவார், ஆகுமுயர்மிசிரர்வைத்த விருவகைத்தீக்கைக்குரியர் - மிசிரசைவாசாரியர் முன்சொன்னவீரசைவ தீட்சை சுத்தசைவதீட்சை இவ்விரண்டுந் தவிர மிசிரசைவத்துக்குள்ள சமயதீட்சை விசேஷ தீட்சை ஆகிய இவ்விரண்டும்பண்ண வதிகாரியாவார், சாமானியர்தாமொருவகைத் தீக்கைக்குரியரோ - சாமானிய சைவாசாரியர் முன்சொன்னமூவகைத் தீட்சையுந் தவிர சமயதீட்சைக்குமாத்திர மதிகாரியாவார், எ-று. (கஉரு)

[இந்நால்வகைச் சைவத்துள் இது நமக்குடல் இது நமக்குயி
ரெனப் பிரித்துரைக்கின்ருர்.]

ஆதலினு லத்துவித வீரசைவ மேசீவ
னுேதுகின்ற சுத்தசைவ மோடரிய - நீதியுள்ள
சாமா னியமீருஞ் சைவமஃ தங்கமஃ
தாமா மெனுமா கமம்.

(இ - ள்.) ஆதலினு லத்துவித வீரசைவமேசீவன் - இப்படி மூவித சைவத்துக்குமேலாயிருக்கையினுலே யத்துவித சம்பந்தத்தையுடைய வீரசைவமே நமக்குச் சீவனுகவிருக்கும், ஓதுகின்றசுத்தசைவமோடரிய நீதியுள்ளசாமானிய மீருஞ்சைவமஃதங்கமஃதாமாமெனு மாகமம் - சொல்லப்பட்ட சுத்தசைவ முதல் சாமானியசைவமீருகுஞ் சைவமெல்லா நமதங்கமாமென்றே யாகமங்கள் சொல்லும், எ-று.

சொற்ற படியே சொலுஞ்சுத்த சைவர்முத
லுற்றவர்க்குத் தாரதம்ய முள்ளதாங் - குற்றமற்ற
வானவதி காரத் தடைவாம் வழிபாடு
தானியற்ற லேதகுதி தான்.

(இ-ள். சொற்றபடியேசொலுஞ் சுத்தசைவர்முத லுற்றவர்க்குத் தாரதம்யமுள்ளதாம் - கிரமமாகச்சொல்லுமிடத்து வீரசைவர் சுத்தசைவர் மிசிர

சைவர் சாமானியசைவரென்னு நால்வகையோர்க்கும் தாரதம்மியமுண்டு ஆகையால், குற்றமறவான வதிகாரத்தடைவாம் வழிபாடுதானியற்றலே தகுதிதான் குற்றமற்ற அதிகாரக்கிரமமாக அவரவர்களை வழிபடுதலேநியாயம், எ-று. ()

ஒன்றதனுக் கொன்ருென் றுயர்ந்ததுவத் தீக்கையென
நன்றறிந்திட் டன்பா லனவரத - நின்று
வழிபாடு செய்தலறஞ் செய்யாரே யாகி
லிழிவார் பிறந்துநர கில்.

(இ-ள். இங்ஙனஞ்சொல்லப்பட்ட தீட்சைக ளொன்றுக்கொன்றதிகமாக விருக்குமென்பதை நன்ருகவறிந்துகொண்டு அனவரதமும் அன்புபற்றிநின்று சாமானியசைவர் தமக்குமேலானமூவகைச் சைவரையும் வழிபடக்கடவர், மிசிரர் தமக்குமேலான இருவகைச்சைவரையும் வழிபடக்கடவர், சுத்தசைவர் தமக்குமேலான வீரசைவரைவழிபடக்கடவர், இப்படிவழிபடுதலே தர்மம், இப்படிவழிபடாராயின் இழிவான யோனிகளிற்செனித்து நரகத்தாழ்ந்திடுவார்கள், எ-று. (கஉஎ)

[வீரசைவத் தீக்கையினது பெயரையீதென வுணர்த்துகின்ருர்]

வீரசைவ தீக்கை விதிக்கிலொரு மூவகைத்தாஞ்
சீருடனேமற்றதனைச் செப்பிடினே - வீரமுடன்
சாமா னியம்விசே டம்பின் னிராபார
மாமாம்பே ரீததற்கம் மா.

(இ-ள்.) சொல்லுமிடத்து வீரசைவதீட்சை மூவகைப்படும், அவை வீரசாமானிய தீக்கையென்றும் வீரவிசேட தீக்கையென்றும் வீரநிராபாரதீக்கையென்றும் பெயர்பெறும், எ-று. (கஉஅ)

[மூந்த வீரசாமானியதீட்சையைப் பண்ணிக்கொள்ள வருமவர்கள் பரிபாகத்தன்மையினையும், அவர்கள் பரிபாகமறிந் தவ்வாசாரியர் அத்தீட்சையினைப்பண்ணு முறைமை யினையும், அத்தீட்சையினைப் பண்ணிக்கொண்ட பெயர்கள் நடையினையும், வீரதீக்கைக்கு விருப்பென்னும் வெண்பாத் தொடங்கித் தீக்கைகுருகொடுக்கை யென்னும் வெண்பா வீருக முப்பத்தெட்டு வெண்பாவினுலுணர்த்துகின்ருர்.]

வீரதீக் கைக்கு விருப்புமிக்கு வந்தவர்க்கிங்
காரியனு மாசா னுபதேசித் - தாருகின்ற
மும்மலங்க ணீக்கு முறைமையது கேளிருண்ட
விம்மைப் பிறவியத னில்.

(இ - ள்.) வீரதீக்கைக்கு விருப்புமிக்கு வந்தவர்க்கு - இருவினையொப்பு மலபரிபாகம் பிறந்து தீவிரதரசத்திநி பாதத்தாற் சிவசாயுச்சியம் பெறவேண்டுமென்னு மதிதாகம்பிறந்து வீரசைவதீட்சை பண்ணிக்கொள்ள வேண்டு

மென வந்த மாணுக்கர்க்கு, ஆரியனுமாசான் - வேதாகம சாஸ்த்திரபுராண ஞானதிக்கத்தினுற் பூச்சியராயிருக்கும் வீரசைவாசாரியரானவர், உபதேசித் தாருகின்ற மும்மலங்கணீக்கு முறைமையதுகேள் - ஞானதீட்சையினைச்செய்து ஞானோபதேசம்பண்ணி மும்மலங்களையும் போக்குமுறைமையைச்சொல்லுவோங் கேட்பாயாக, இருண்டவிம்மைப் பிறவியதனில் - சிவஞானந்தோன்றுது மறப்பினைத்தரு மிவ்வுலகத் திம்மானிடப்பிறப்பில், எ-று. (கஉகூ)

பிறந்த பிறவிப் பெருங்குடும்பக் கொத்துச்
சிறந்தகுலத் தோடு செறியு - மிறந்தவன்பு
விட்டுச் சிவகுலத்திற் சென்மித் ததனிலன்பு
கட்டுறுத லாணவநீங் கல்.

(இ - ள்.) பிறந்தபிறவிப் பெருங்குடும்பக்கொத்துச் சிறந்தகுலத்தோடு செறியுமிறந்த வன்புவிட்டு - ஓர்வமிசத்தில் மாதாபிதாவினிடத் துற்பவித்து மாதாபிதா சகோதரர் புத்திரமித்திரர் என்று சொல்லப்பட்ட சமுசாரத்தில் பிணிப்புற்று அந்தச் சமுசாரமயமா யிருந்தவனுக் கதனி லுபரதிசெனிக்க அப்பாசவருக்கத்தி லிருக்கு மிகுந்த பற்றைப் பரிச்சேதமாக விட்டுக் கான்ற சோறுபோலக்கண்டு, சிவகுலத்திற் சென்மித் ததனிலன்பு கட்டுறுத லாணவ நீங்கல் - இனி யிந்தச் சமுசாரத்தினுல்வரும் போகவாஞ்சையைக் கைவிட்டு ஞானசாரியனை யடைந்து சிவகுலோற்பவனுக வேண்டுமென விருப்பம்வருதலே யாணவமல நீங்குவதற் கடையாளமென வறிவாயாக, எ-று. (கஙo)

நீங்கினின்ருர் தாங்க ணிகழ்சாதி வேந்தரிவ
ரீங்கிழியுஞ் சாதியென வெண்ணும - லாங்குநிற்றன்
மாயைமல நீக்கமென மற்றினிய வாகமங்க
ணேயமொடு சொல்லு நினை.

(இ - ள்.) நீங்கினின்ருர் தாங்க ணிகழ்சாதி வேந்தரிவ ரீங்கிழியுஞ் சாதியென வெண்ணும லாங்குநிற்றல் - அந்தச் சமுசாரத்தினின்றும் விடுபட்டவன் பின்பு நாமுயர்ந்தசாதி யிவர் தாழ்ந்தசாதியென நினையாமல் எல்லாத் தேகமும் பஞ்சபூத பரிணாமமேயெனக்கண்டு சாதிமானமற்று வேடமே பொருளாக வழிபடவருதலே, மாயைமலநீக்கமென மற்றினியவாகமங்க ணேயமொடுசொல்லுநினை - மாயாமலபெந்த நிவர்த்தியென வாகமங்க ணேயமாகச் சொல்லுமென வறிவாயாக, எ-று. (கஙக)

மூவேடணையின் முரணுடனே சென்றுமனம்
பாவாதகற்றிப் பழவினைநற் - றேவுளது
தான்றருவ னென்று தளராமை கன்மமலந்
தானறவே நிற்குந் தரம்.

(இ-ள்.) மூவேடணையின் முரணுடனே சென்றுமனம் பாவாதகற்றி - தனவாஞ்சை புத்திரவாஞ்சை மாதர்வாஞ்சையாகிய யிவைகளிற் றேனிற்படியும் வண்டுபோலவிழுந்து பற்றிக்கிடக்கு மனதை யதிற்செல்லாமல் நிறுத்தி, பழ

வினைநற் றேவுளது தான்றருவனென்று தளராமை கன்மமலந் தானறவே நிற்குந்தாம் - நாம்பூருவம்பண்ணின கன்மங்க ளிருக்கின்றன அக்கன்மங்கட் கேடாகச் சாதியாயுப்போகங்களை யற்பதிர்க்கமாகப் பரமசிவன் கூட்டிவைப் பானுகையாற் றனக்குள்ளது போகாது இல்லாது வாராதென்று தடுமோற்ற மில்லாமல் அவன் அவளதுவென்னு முன்னிலைகளை நாடாமல் நிற்பதே கன்ம மல நீக்கமென வறிவாயாக, எ-று. (கூஉ)

பரதாரத் தோடு பரதிரவி யங்க
டிரமாய்விடம்போற் றெசித்துப் - பரவுங்
கொலைகளவு கட்காமங் கூறுபர நிந்தை
சலமிதனை விட்டினிது தான்.

(இ-ள்.) பரதாரத்தோடு பரதிரவியங்க டிரமாய்விடம் போற்றெசித்து - பரநாரியோடு பரதிரவியம் பிரயாசமின்றி வலிய வருகிறதாக விருந்தாலும் அப்பதார்த்தங்களி லிச்சை செனியாமல் எக்காலத்தும் கரி கண்டகி விஷம் சிங்காதமுதலிய துக்கபதார்த்தங்களைக்கண்டா லெப்படி நடுக்கம்வருமோ வப் படி நடுநடுங்கிவிட்டு, பரவுங் கொலைகளவு கட்காமங் கூறுபரநிந்தை சலமி தனை விட்டினிதுதான் - நிந்தித்துச் சொல்லப்பட்ட கொலை ஒருவனை வஞ் சித்தவனது உடைமையை யணுரோணுவத்தனை யானுலும் அவனைக்காணுதப கரித்தல் சுராபானம்பண்ணல் தனது மனையாளையாயினும் விலக்கியநாளிற் புணர்தல் சொல்லப்பட்ட குலத்திற் றனத்திற் கல்வியில் நடையிற் பிறனைப் பழிகூறல் ஒருவர்மேற் கோபித்தல் இவைமுதலிய துர்க்குண மாகாவெனப் பரிச்சேதமாகவிட்டு, எ-று. (கூங)

இங்கிவைக ளெல்லா மினியசிவ தன்மமொடு
தங்கி வருமறத்திற் றுழ்வதற - வங்குறவே
வந்ததன்றி வாரா தவைவிடமென் றேயகலுஞ்
சிந்தைதிட மாகிநின்ற தின்.

(இ-ள்.) இங்கிவைகளெல்லாம் - இங்ஙனஞ் சொல்லப்பட்ட துர்க்குணங் களையெல்லாம் விடுவதன்றி, இனிய சிவதன்மமொடு தங்கிவருமறத் திற்றுழ் வதற - எந்நாளுஞ் சிவபுண்ணியத்தை விரும்பித் தப்பாமற் றன்மார்ச்சிதமா கப் பாபகன்மமேறாமல் மனைவாழ்க்கை நிமித்த முயற்சித்துக் கொண்டிருக் குங் காலத்து - அங்குறவே வந்ததன்றிவாரா தவைவிடமென்றே யகலுஞ் சிந் தை திடமாகி நின்றதில் - அம் முயற்சியினு லெவ்வளவு வருமோ வவ்வளவை யங்கீகரித்துக்கொண்டு அதன்மமாக வெழு முயற்சியால் வருபவைகளை விட மெனக்கருதிவிட்டு இவ்வுறுதி தப்பாது திடமாகி அதில் நிலைத்து, எ-று. ()

இடம்பொரு ளேவ லெனுமிவைகள் பூத
விடம்பட நின்றவைகள் வேண்டி - மடம்படவே
சற்குருவின் பாகவத்தாற் நீக்கிப்பித் தேசிவனை
யற்புதமாய்த் தாபித்த லாம்.

(இ-ள்.) இன்னுந் தான்குடியிருக்குமிடந் தனக்குபகரணமாக விருக்கும் பதார்த்தங்கள் தன்னேவலாளர் முதலிய வெல்லாமாயா பதார்த்தமாகையா லவைகள் பரிசுத்தமாகும் பொருட்டுச் சற்குரு சந்நிதானப்படுத்திப் பாவனுதிட்சை பண்ணுவித்து அவ்வேவலாளர்கட் கெல்லாஞ் சிவலிங்கதாரணமும் பண்ணுவித்துத் தானிருக்கும் மடத்துக்கு மடப்பிரதிட்டையும் லிங்கமூர்த்தியையுந் தாபித்துத் தானாளும் பண்டபதார்த்தங்களுக் கெல்லாஞ் சிவலிங்கமூர்த்தியையுந் தரிக்கவேண்டுமென்னும் விருப்பமுடையவனாய், எ-று. (கூரு)

குருவிடத்தும் லிங்கத்துங் கோட்பாடொன் றாகித்
திருவளருஞ் சற்குருவின் சேவை - யுரிமையுட
னேற்கிலது செய்திட் டினியலிங்க சேவைசெய்யென்
றுக்கிணைக்குட் பட்டவற்கன் பால்.

(இ-ள்.) குருவிடத்தும் லிங்கத்துங்கோட்பா டொன்றாகி - தனது மலமாயா கன்மங்களை நீக்கி மேலாகிய ஞானோபதேசத் தினைப்பண்ணும் ஞானசாரியரிடத்துந் தான் வழிபட்டுப் பூசிக்குஞ் சிவலிங்கத்தி னிடத்துந்தான் செய்யும் பத்தியை யங்கீகரிக்குஞ் சங்கமத்தினிடத்தும் ஏகபாவனை பண்ணி அகண்டாகாரமாகிய சிவபெருமானே நம்மை இரட்சிக்க இங்ஙன மூன்றுருவாக வந்தானெனக்கண்டு, திருவளருஞ் சற்குருவின் சேவையுரிமையுட னேற்கில் - எக்காலமும் ஞானவளத்தினையுடைய சற்குருசந்நிதானம் விட்டுப்பிரியாம லவருக்குக் கிருபைவரத் தொண்டுசெய்து வருங்காலத்து அவ்வாசாரியருக் கிவனிடத்துக்கிருபை செனித்ததானால் - இனிய லிங்கசேவை செய்யென்றுக்கிணைக் குட்பட்டவற்கன் பால் - அப்போதவ்வாசிரியர் அவன் பண்ணும் பணிவிடையை யங்கீகரித்து இனிச் சிவலிங்கதாரணத்தைப் பண்ணிக்கொண்டெக் காலமும் அவ் விலிங்கசேவையையே பண்ணக்கடவை யென்றனுக்கிரகம் பண்ண அவ்வனுக்கிரகத்துக்குடன்பட்ட மாணுக்கற் கன்பினால் பின்னுமவ்வாசிரியர் பண்ணும் அனுக்கிரகத்தின் திறத்தால், எ-று. (கூசு)

விதித்தசம யாசார மானசதா சார
மதித்ததனிற் சற்றும் வழுவிற் - கதித்த
தவநரகத் தாழ்வரெனத் தானு கமங்க
ளவமகல வேயுரைக்கு மாம்.

(இ-ள்.) விதித்த சமயாசாரம் - வீரசைவ சமயாசாரத்தில் விதித்த சடுத்தலாசாரம் பற்றி அங்கத்தலமாறும் லிங்கத்தலமாறு மறிந்து அற்பிதவவதானங்களிலே யயர்ச்சியில்லாமல் நடப்பது சமயாசாரம், ஆனசதாசாரம் - சதாசாரம் - நியதாசரம் - கெணுசாரம்ஆகிய வாசாரமூன்று, இவற்றுட் சதாசாரமாவது திட்சையினாலே பூருவசென்மம்போய்க் குருரூபமாவது, நியதாசாரமாவது லிங்கத்தினாலே குரக்குமனங்கெடுத்து லிங்கவிரதமாக நிறுத்துதல், கெணுசாரமாவது சங்கமபத்தியினாலே நாமென்னு மமதையற நிறுத்துதல் என்றறிக. மதித்ததனிற் சற்றும் வழுவிற்கதித்த நரகத்தாழ்வ ரெனத்தானாக மங்களவமகலவே யுரைக்குமாம். இப்படி விதித்துச் சொல்லப்பட்ட நியமங்களிற்

சற்றுவழுவுதல் வந்ததேயானால் வெகுவாகத்துன்பத்தைத் தரத்தக்க இரௌர வாதி நரகங்களில் விழுந்து ஒருகாலுங் கரையேருமற் போய்விடுவனென்றுகம ங்கள் சொல்லுமென்றுசாரியரனுக்கிரகம்பண்ண அவ்வாக்கியத்தைக் கேட்டுச் சீடன் செய்யும் விண்ணப்பம், எ-று. (கஙஎ)

ஆணைதப்பேன் றப்பிலுயி ரானதொழிப் பேனென்று
காணுமன்பா னின்றுருகிக் காதலால் - வீணும்
பவமகற்றென் றஞ்சிப் பரிவொடுதொண் டாருந்
தவமுடைமை கண்டருளாற் றூன்.

(இ-ள்.) ஆணைதப்பேன் - சுவாமிகள் கற்பித்த ஆஞ்ஞையின்படியே நட ந்துகொள்ளுகிறேன், தப்பி லுயிரானதொழிப்பேனென்று - இங்ஙனங் கற் பித்த சமயாசாரங்களில் நியமவழுக்கள் வந்தனவாயிற் பிராணனை விடுவே னிது நிச்சயமென்று, காணுமன்பா னின்றுருகிக் காதலால் வீணும் பவமகற்றெ ன்றஞ்சிப் பரிவொடு தொண்டாருந் தவமுடைமை கண்டருளாற்றூன் - நாண மின்றிச் சகலருமறியக் கண்களிற் சலப்பிரவாகம் வர வாய்விட்டலறி நெக்கு நெக்குருகி மயிர்க்குச்செறிய வாய்குழற மிகுந்த வாசையினுற் சந்நிதியில் நின்று சுவாமி யடியேன் வீணுகக் கெட்டுப்போகா நின்றேன் என்னுடைய செ னனமரணத்துக் கேதுவாகிய வாணவாதிபாசத்தைப் போக்கி இரட்சிக்கவே ண்டுமையனே யென்று பயபக்தி விசுவாசத்தோடு குருபணிவிடையைப் பண் ணிக்கொண்டு வெகுநாட் காத்திருக்கு மன்பினைக் கண்டு இவன் பரிபாகி இவ னே யிவ்வீரசைவ தீட்சைக்கு யோக்கியனென்று கிருபை கூர்ந்து அவ்வாசாரி யர் எ-று. (கஙஅ)

முன்னுளுபவாச முற்றுவித்துத் தாபித்த
மன்னுபஞ்ச கவ்விய மதுவருத்தி - மன்னுமைந்து
பூதசுத்தி யாகப் பொருந்தியதா னங்தொட்டுத்
தீதகற்றி மற்றைநா ளில்.

(இ-ள்.) தீட்சைபண்ணுங் காலத்துச் சீடனுடைய வயிற்றில் மலசலபெந் தங்க ளிருக்கலாகா இருக்கிற் றமோகுணதிக்கமா யிருக்குமென்னும் வசனத் தாற் றீட்சைக்கு விதித்த நாளுக்கு முன்னை நாட்டானே அவனைச்சுத்த வுப வாசமாகவைத்து நதிமுதலியவற்றில் சிவதீர்த்தங் கற்பித் ததனில் முழுகு வித்து விதிப்படி கூட்டி யிருக்கும் பஞ்சகவ்வியத்தைச் செனனங்கடோறு மார்ச்சித்திருக்கும் பாவமறச் சிவமந்திரத்தினுற் கொடுத்துப் பின்பு பூதசுத் தியாகும் வண்ணம், பூதசுத்தியாவன பிருதிவிபூதம் மூலாதாரந்தொடங்கிச் சுவாதிட்டானபரியந்தம் லிங்கத்தானத்திலே சதுரமாய்ப் பொன்வர்ணமாய்க் குலிசாயுதத்துடன் சத்த பரிச ரூபரச கந்தவத்தாய் லங்கென்னு மக்கரத்துடன் பிரமாவை அதிதேவதையாக வுடைத்தா யிருக்கும், அப்பூதத்தினையும் அம்மூர் த்தியினையுந் தியானம்பண்ணி, அத்தானத்தைப் பிர்மணே நமவென்று நியா சம்பண்ணிப் பத்திரபுட்பங்களினுலே அருச்சித்துத் தூபதீபங்கொடுத்தல், மே

லப்புப் பூதம் மணிபூரகமாகிய நாபித்தானத்திலே அர்த்த சந்திராகிருதியாய்ச் சுவேதவர்ணமாய்ச் சத்தபரிச ரூபரசமென்னு நான்கு குணத்தினை யுடையதாய் வவ்வென்னு மக்கரத்துடன் தாமரைப் பூவினையு முடைத்தாய் விஷ்ணுவை யதிதேவதையாகப் பெற்றிருக்கும், அப்புப்பூதத்தினையும் அத்தேவதையையுந் தியானம் பண்ணி யத்தானத்தைத் தொட்டு விஷ்ணுவே நமவென்று பத்திர புட்பஞ் சாத்தித் தூபதீபங்கொடுத்தல், தேயுப்பூதம் அனாகதமாகிய இருதயத் தானத்திற் றிரிகோணமாய்ச் சிவந்த நிறமாய்ச் சுவஸ்த்திக முத்திரையை யுடைத்தாய்ச் சத்தபரிசரூபகுணவத்தாய் ரவ்வென்னு மக்கரத்துடன் உருத்திரனை அதிதேவதையாக வுடைத்தாயிருக்கும், அப்பூதத்தினையும் அம்மூர்த்தியினையுந் தியானம் பண்ணி அத்தானத்தைத்தொட்டு ருத்திராயநமவென்று பத்திரபுட்பஞ்சாத்தித் தூபதீபங்கொடுத்தல், வாயுப்பூதம் - விசுத்தியாகிய கண்டத் தானத்தில் அறுகோணமாய் நீலவர்ணமாய் ஆறுபுள்ளியினை யுடைத்தாய்ச் சத்தபரிசகுணவத்தாய் யங்கென்னு மக்கரத்தையுடைத்தாய் மயேசுரமூர்த்தியை அதிதேவதையாகக் கொண்டிருக்கும், அப்பூதத்தினையும் அம்மூர்த்தியினையுந் தியானம்பண்ணி அத்தானத்தைத் தொட்டு மயேசுராயநமவென்று பத்திரபுட்பங்களினால் அருசித்துத் தூபதீபங்கொடுத்தல், ஆகாசபூதம் - ஆக்கினையாகிய லலாடத்தானத்தில் வட்டமாய்த் தூமவர்ணமாய் அமிர்தவிந்துவுடன் சத்த குணமொன்றுமாய் ஹங்கென்னு மக்கரத்துடன் சதாசிவமூர்த்தியை அதிதேவதையாக வுடைத்தாயிருக்கும், அப்பூதத்தினையும் அம்மூர்த்தியையுந் தியானம் பண்ணிச் சதாசிவாயநமவென்று அத்தானத்தைத்தொட்டுப் பத்திரபுட்பஞ்சாத்தித் தூபதீபங்கொடுத்தல் ஆம். இப்படித் தியானம்பண்ணிப் பூசிக்கவே பூத சுத்தியாகும். இந்தப்பிரகாரமுன்னை நாடானேபூத சுத்தியினைப்பண்ணி மறுநாள், எ-று. (கசச)

கோயின்மட மன்னுங் குலவுநதி தீரமற்று
மாயதரு நீழல்வன மாமிவற்று - ளாயவோர்பாற்
றீக்கைக் கியல்பாகச் செய்துசெல்வ மண்டபந்தான்
றாக்கிவிதா னஞ்செய்த துள்.

(இ-ள்.) கோயின்மடம் - சிவாலயம் பெரியோர்கள் வாசம்பண்ணுந் தானம், மன்னுங்குலவுநதிதீரம் - நித்தியமாய்வருங் கங்கை காவேரி முதலாகிய புண்ணியநதிதீரம், ஆயதருநீழல் - சந்தன சண்பக மந்தார பாரிசாதவகுள வில்வமுதலாகிய புண்ணியவிருட்சநிழல், வனமாமிவற்றுளாயவோர்பால் - நந்தனவன முதலாகியவோர் தானத்தில், தீக்கைக்கியல்பாகச்செய்து செல்வமண்டபந்தான் றாக்கிவிதானஞ்செய்ததுள் (அத்தானத்திற்குப் பூருவதட்சிண பச்சிமவுத்தரவக்கினி யீசானமுதலிய திக்கிலே பூமியைச்சமஞ்செய்து சிற்பர்களால் சிவாகமம், 'துவாரவசுதாதுரசபூத' மென்று செப்புகையால் துவாரம் - சு, வசு-அ, தாது-எ, ரசம்-சு, பூதம்-ரு, இம்முழங்களில் நாற்சதுரமாக நான்கு வாயில் விட்டுச் சுற்றிவரப் பன்னிரண்டு கால்களும் நடுவே நான்குகால்களும் ஆகப் பதினறுகால்களால்) தீக்ஷாமண்டப நிர்மித்து (இம்மண்டபத்தை ஒன்

பதிற்கொன்பது எண்பத்தொரு பதம் பண்ணி நடுவே ஒன்பது பதத்திலே நாலுகாலுங்கூட வேதிகைபோட்டு அவ்வேதிகையை அஷ்டதளபத்மமாக வரைந்து மண்டபமுழுவதையும் கண்ணாடிபோல நிர்மலமாக்கிப்) பட்டுமுதலிய மேற்கட்டிகட்டி முத்துக்குச்சுகள்விட்டு நானுவித சல்லியசவரங்களாலும் திவ்விய சுகந்தபுட்பம் குருவேர் மருக்கொழுந்து முதலியவற்ருலு மலங்கரித்து உபயபாரிசங்களிலும் வெண்கொற்றக் குடைநிறுத்தி எட்டுத்திக்கிலும் ரிஷபக் கொடிகட்டி மாந்தழையினல் நாலுவாயிலிலுந் தோரணங்கட்டி இளநீர் வாழைப்பழத்தாறு கரும்பு கமுகு முதலிய நாட்டி அஷ்டமங்கலப் பலகையிட்டுத் தூபதீபங்கொடுத்துப் பின்பு வாஸ்த்துசாந்தியங்குராற்பண முதலிய செய்து மண்டபபூசையினைப் பண்ணிச் சிவாஸ்த்திராயநமவென்று மண்டபத்திலிருக்கும் வேதிகையில் சலம் புரோட்சித்துச் சமார்ச்சனசமாலேபனம்பண்ணி அதன்மேலும் கவ்வியமுங் கோரோசனையுங் கூட்டிச் சமாலேபனம்பண்ணி நல்ல முத்தினையும் படிகக்கல்லினையும் பொடித்து அதனல் ரேகையுண்டாக்கிப் பத்மத்தை நடுவே நிர்மித்து அப்பத்மத்தின்மேல் நெல்லும் அதின்மேற் கோதுமையும் அதின்மேலுளுந்தும் அதன்மேலெள்ளும் அதன்மேற் பச்சரிசியும் பரப்பி இருதய மந்திரத்தினலே மாதிருகாசக்கரமெழுதி யர்ச்சித்ததன்மேல் பொற்கலசம் - வெள்ளிக்கலசம் தாம்பிரகலசம், இவை கிடையாதாயின் பவளம்போலச் சிவந்ததாய்க் கல்லுப்போருக்குத் துவாரமில்லாததாய்க் கருகாததாய் நன்ருய் வெந்ததாய்க்குறுகியும் நீண்டு மிராததாய்ப் பிரமாணமுள்ளதாயிராநின்ற ஐந்து மட்கலசமெடுத்து அக்கலசத்தை அஸ்திரமந்திரத்தாற் சுத்திபண்ணி மூவிழைநூல்கொண்டு எட்கிடை - நெற்கிடை - ஆனைக்கண் அளவாக அகோரமந்திரத்தாற் சுற்றித் தாபித்து ஐந்துகும்பத்தையுங்கூட்டி நடுக்கலசத்திற்சுற்றிப் பின்பு கீழ்கலசத்திலும் அதன்பின்பு தெற்குக்கலசத்திலும் பின்பு வட கலசத்திலும் பின்பு மேற்குக்கலசத்திலும் வளைத்துச்சுற்றிப் பின்பு சுற்றிவர வொன்பதிழை சுற்றிச்சலம் பூரிக்குங்கால் அச்சலத்தைக் கங்கை யமுனை சரஸ்வதி கோதாவிரி துங்கபத்திரை காவேரிமுதலிய மகா தீர்த்தங்களாகப் பாவித்து இருதய மந்திரத்தினலே நடுக்கலசத்திற் குறுணிசலத்துக்குக் குறையாமலும் மற்ற நாலுகலசங்களில் நானழி நானழி சலத்துக்குக் குறையாமலும் பூரித்துப் பின்பு மாவிலை அறுகு தருப்பை இவற்றைச் சிகாமந்திரத்தினலும் தேங்காய் அல்லது இளநீரைச் சிரோமந்திரத்தினலும் இவற்றேடு வெற்றிலை மாதுளம்பழமாகிய இவற்றைக் கலசங்கள்தோறும் வைத்துத் தற்புருஷ மந்திரத்தினல் மாணிக்கம் முத்துவயிரேியம் நீலம் பவளமாகிய பஞ்சரத்தினங்களை வைக்க, இவை கிடையாவாயின் சுவர்ணபுஷ்பம் வைத்துக் கும்பங்கள் தோறும் வேறுவேறு வஸ்திரந்தரித்துப் பின்பு ஐந்து கும்பத்தையுஞ் சுற்றி யிருதய மந்திரத்தினலே ஒரு வஸ்திரந் தரித்துக் கும்பத்தை மூர்த்திக்குத் தேகமாகவும், சலத்தை உதிரமாகவும், மந்திரத்தைப் பிராணனகவும் பஞ்சரத்தினங்களை அஸ்தியாகவும், நூல்நாடியாகவும் வஸ்திரத்தைத் தோலாகவுந், தேங்காயைச் சிரசாகவும் தருப்பையைக் குடுமியாகவும் மாவிலையைச் சடையாகவும், வெற்றிலையை நாக்காகவும், மாதுளம்பழவிதையைத் தந்தமா

கவுந் தியானம்பண்ணிக் கலசசுத்தியாக மூல மந்திரத்தினாலே எட்டுத்தரம் அபிமந்திரித்து அஸ்திர மந்திரத்தினாலே திக்குபந்தனம் பண்ணுக. பின்பு அக் கலசத்தில் மகாதீர்த்தங்களாக ஆவாகனம்பண்ணி அச்சலத்தைத் தேசோமய மாகப் பாவித்துப் பின்பு முப்பத்தாறு தத்துவங்களையும் பிரித்துக் கும்பங்கள் தோறுந் தனித்தனியே கலசத்தடியில் 'ஓம்ஹாம் ஆத்மதத்துவாயநம, ஆத்மதத் துவாதிபதியே பிர்மணேநம' என்றும், கலசத்தின் மத்தியில் 'ஓம்ஹாம் வித்தி யாதத்துவாயநம, வித்தியாதத்துவாதிபதியே விஷ்ணுவேநம' என்றும், கலசத் தின்முகத்தில் 'ஓம்ஹாம்சிவதத்துவாயநம, சிவதத்துவாதிபதியே ருத்திராயநம' வென்றும் அர்ச்சித்து, இரண்டுபக்கங்களிலு நந்தி மகாகாளனை யர்ச்சித்துப் பின்பு மத்தியகலசத்தில் 'பராசத்தியேநம, சாந்தியாதீதகலாயநம, சிவசாதாக் கியாயநம, சதாசிவமூர்த்தியேநம, ஈசானவத்திராயநம, அல்லமாப்பிரபுகுருப் பியோநம' வென்று மூர்த்திகளை யர்ச்சித்துப் பின்பு கிழக்குக்கலசத்தில் 'ஆதி சத்தியேநம, சாந்திகலாயநம, அமூர்த்தி சாதாக்கியாயநம, ஈசமூர்த்தியேநம, தற்புருஷவத்திராயநம, ரேவணசித்தேஸ்வராயநம' வென்றர்ச்சித்துப் பின்பு தெற்குக்கலசத்தில் 'இச்சாசத்தியேநம, வித்தியாகலாயநம, மூர்த்தி சாதாக்கி யாயநம, பிரமீசமூர்த்தியேநம, அகோர வத்திராயநம, மருளசித்தேஸ்வராய நம' வென்றர்ச்சித்துப் பின்பு வடக்குக்கலசத்தில் 'ஞானசத்தியேநம, பிரதிஷ் ட்டாகலாயநம, கர்த்துருசாதாக்கியாயநம, ஈசுரமூர்த்தியேநம, வாமதேவ வத் திராயநம, ஏகோராமையாயநம' வென்றர்ச்சித்துப் பின்பு மேற்குக்கலசத்தில் 'கிரியாசத்தியேநம, நிவர்த்திகலாயநம, கன்மசாதாக்கியாயநம, ஈசானமூர்த்தி யேநம, சத்தியோசாதவத்திராயநம, பண்டிதாராத்திரியாயநம' வென்றர்ச்சி த்து, இங்ஙனம் அர்ச்சிக்கும்பொழு தவ்வக்கும்பங்களில் அவ்வம்மூர்த்திகளை ஆவாகனஞ்செய்து. ஆவாகனம் ஸ்தாபனம் சந்நிதானம் சந்நிரோதனம் திக்குப ந்தனம் அவகுண்டனம் தாளத்திரையம் தேனுமுத்திரைமுதலிய அஷ்ட்ட சமு ஸ்காரமுஞ்செய்து பாத்தியாசமனார்க்கியங்கொடுத்துப் பாவனாபிஷேகம் கந்த புஷ்ப நைவேத்திய தாம்பூல தூபதீபமுஞ் சமர்ப்பித்துத் தீட்சைக்கு அநுக் ஞைபெற்றுச் சதுரமாகக் கும்பத்திற்கு நிருதிதிக்கில் திருமெழுக்கிட்டு இருதய த்தாற் பத்திரஞ்சாத்திப் பச்சரிசிபரப்பி நவபதமிட்டு அதில், பத்மம், தற்ப ணம், கும்பம், ரிஷபம், யுக்மசாமரம், ஸ்ரீவற்சலம், சொஸ்திகம், சங்கம், தீபம், ஆகிய அஷ்ட்டமங்கல மெழுதித்தத்தமந்திரங்கொண் டர்ச்சித்துப்பின்பு கோஷ்ட்டபூசைபண்ணி மத்தியே சிவதத்துவகோஷ்ட்டாயநம, பூர்வேசதா சிவதத்துவகோஷ்ட்டாயநம, அக்கினி ஈசுரதத்துவகோஷ்ட்டாயநம, தட்ச ணே வித்தியாதத்துவகோஷ்ட்டாயநம, நைருதிமாயாதத்துவகோஷ்ட்டாயநம, பச்சிமே, காலதத்துவகோஷ்ட்டாயநம, வாயுவே நியதிதத்துவகோஷ்ட்டா யநம, உத்தரே புருஷதத்துவகோஷ்ட்டாயநம, ஈசான்யே பிரகிருதிதத்துவ கோஷ்ட்டாயநம, வென்றர்ச்சித்துப் பின்பு ஒன்பது பாத்திரங்களையும் அஸ்த் திராயநமவென் றலம்பி நவகோஷ்ட்டங்களிலும் வைத்து, மத்தியே சுப்பிர திஷ்ட்ட பாத்திராயநம, பூர்வே சுசாந்தபாத்திராயநம, அக்கினி தேசோமய பாத்திராயநம, தட்சிணே அமிர்தபாத்திராயநம, நைருதி ரத்தினோதகபாத்தி

சற்குருவாற் சங்கற்பகாயமறச் சம்புவுருவாகிநிற்றல் தங்கியமெய்த் தீக்கை யதுதான் - ஞானசாரியரானவர் பிரமாவினுடைய மனச் சங்கற்பத்தினுற் கன் மத்துக் கீடாகப் பூதபரிணாமமா யனுசிதமாகச் செய்யப்பட்டிருக்கு மித்தே கத்தை ஞானக்கினியாற் றகித்துத் திவ்வியதேகமாக்கி அத்திவ்வியதேகத்தி னிடமாக இருக்குமான்மாவைச் சிவசொருபமாகச் செய்தலே அபேதஞானசாம் பவதீட்சை, எ-று.

[இன்னும் அத்தீட்சையினது மகிமையைக் கூறுகின்றார்.]

வேட்டு வளிப்புழுவின் மேனியறத் தன்னுருவங்
கூட்டுதல்போல் ஞானக் குருராயன் - நீட்டு
மருட்காயம் வாட்டி மகாலிங்க மென்னுந்
திருக்காயஞ் செய்தன்மெய்த் தீக்கை.

(இ - ள்.) வேட்டுவளிப்புழுவின் மேனியறத்தன்னுருவங் கூட்டுதல்போல் - வேட்டுவளியென்னுங் குளவியானது பச்சைப்புழுவைத் தேடியெடுத்துக்கொட் டி அக்கொட்டுக் கப்புழுபதையாம லிருந்ததானு லப்புழுவை யெடுத்துத் தன் கூட்டிலடைத் தடிக்கடி கொட்டிக்கொட்டி யப்புழுவின துருவத்தைமாற்றித் தனதுருவமாகச் செய்வதுபோல, ஞானக்குருராயன் நீட்டுமருட்காயம் வாட்டி மகாலிங்கமென்னுந் திருக்காயஞ்செய்தல் மெய்த்தீக்கை - ஞானசாரியரானவர் இருவினையொப்பு மலபரிபாகமுள்ள சீடனைச்சோதித்து அழைத்துப் பின்பு ஞானசாம்பவமாகிய சட்சுவாதி யறுவகைத்தீட்சையா லவனது மாயாதேகத் தைப்போக்கி மந்திரதேகமாகச் செய் தச்சீவனையுஞ் சிவசொருபமாகச்செய்த லே மெய்மையாகிய தீட்சை, எ-று. (க0எ)

[இன்னு மதன்மகிமை மூன்றுவெண்பாவினாற் கூறுகின்றார்.]
[இம்மூன்று வெண்பாவு மொருதொடர்.]

தானென்னும் வீரசைவ தந்திரங்கண் டாவலுட
னானென்னுங் காய மொழித்தருள - வானகுரு
தேசிகனைக் கண்டு தினம்வழிபா டன்பதனு
லாசையுடன் செய்தாசா னல்.

சாங்கமுபாங் கங்கருணை சற்குருவாற் றீக்கைபெற்றிட்
டாங்கதுநீங் காதே யணிந்தருளை - நீங்காத
வின்பு மிகவே யிசைந்தகலா தேயிருக்க
வன்பு மிகுமாசை யால்.

நல்லுயி ராந்தன்னை நல்வீர சைவமுடன்
வல்லசைவ தந்திரமும் வண்மையுடன் - வல்ல
குருபரனு னம்மைக் குறைவறவர்ச் சிப்பித்
திருமையறல் வீரசைவ மே.

(இ-ள்.) தானென்னும் வீரசைவதந்திரங்கண்டாவலுட னூனென்னுங்காய மொழித்தருள - நிகரற்றுத்தானே தானுயிருக்கு மவ்வீரசைவத்தின துண்மை யைச்சாதிக்கும், வீராகமம் - அசிந்தியாகமம், வாதுளாகமம்-மகுடாகமமுதலிய வாகமங்களை நிச்சயமாகவறிந்து சைவத்தில் மிகுந்தவாசைபற்றி மாமிசமயமாக விருக்கு மித்தேகத்தை மாற்றிச் சிவசொரூபமாகச் செய்யும்பொருட்டு, ஆன குருதேசிகனைக்கண்டு - அருளேதிருமேனியாக வெழுந்தருளாநின்ற ஞானசாரி யனைத்தேடிச் சென்றடைந்து, தினம்வழிபாடன்பதனு லாசையுடன் செய்தா சானுல், அவ்வாசாரியருக்குத் தன்னிடத்தன்பு பெருக நாடோறும் பத்தியினுற் பணிவிடைசெய் தவ்வாசாரியரால், எ-று. (கOரு)

(இ-ள்.) சாங்கமுபாங்கங்கருணை சற்குருவாற்றீக்கை பெற்றிட்டாங்கது நீங்காதே யணிந்தருளே - சமயவிசேஷ நிருவாணதீட்சாதிக்கனுய் விபூதிமுத லிய சாங்கவுபாங்கங்களைவிட்டு நீங்காமற் றரித்துக்கொண் டான்மார்த்த சிவ பூசையையுஞ் செய்து, நீங்காதவின்புமிகவே யிசைந்தகலாதே யிருக்கவன்புமிகு மாசையால் - அவ்வனுட்டானத்திலே நின்று மேலாகிய சிவசாயுச்சியத்தை யடைந்து சிவானந்தாநுபூதியைப் பெறவேண்டுமென்னு மிகுந்த தாகத்தை யுடைத்தா யிருக்கையால் எ-று. (கOசு)

நல்லுயிராந்தன்னை நல்வீரசைவமுடன் வல்லசைவதந்திரமும் வண்மை யுடன்வல்ல குருபரனுல் - அப்படி மேலாகிய முத்தியைப் பெறவேண்டுமென் னுந் தாகத்தினையுடைய சுத்தாத்மாவானவன் நன்மைமையத்தரும் வீரசைவத் தினை விளக்கமாகச்சொல்லும் வீராகமமுதலியவற்றுட் சுத்தசைவ மிசிரசைவ முதலிய விலக்கணத்தைச்சொல்லு மாகமங்களையு நன்முகவறிந்து தீட்சிக்கிற வீரசைவாசாரியனை யதிட்டித்துக்கொண்டு ஞானதீட்சையைச் செய்வித்து, நம்மைக் குறைவற வர்ச்சிப்பித் திருமையறல் வீரசைவமே-நம்மையுமேக தேச ப்படுத்தாமல் பூசிப்பித் திகபரபோகங்களையும் விடுவித்து மேலாகிய சிவானந் தாநுபூதியைக் கொடுப்போம் அதுவே வீரசைவ வனுபவம், எ-று. (கOஎ)

[மேல்வீரசைவரது விதியினை நாலுவெண்பாவினுற் பொதுப்பட வுணர்த்துகின்முர்.]

அங்கமுயி ராயுயிர்க்கிங் காந்தொழில்கள் செய்திடினு
மங்கஞ்சு தந்திரமா மற்றதுபோ - லிங்கமது
வர்ச்சிப்பித் துக்கொள்ள வல்லார் சுதந்திரமற்
றர்ச்சிப்பர் வேறறவம் மா.

(இள்.) அங்கமுயிரா யுயிர்க்கிங்காந் தொழில்கள்செய்திடினு மங்கஞ்சுதந் திரமா மற்றதுபோல் - தனக்கெனவோரறிவற்றுச் சடமாயிருக்கு முடலானது சித்தாயிருக்குமுயிரைக் கலந்தவ்வுயிர்போன் றவ்வுயிர்வேண்டிய கருமங்களை யெல்லாஞ் செய்யினுஞ் சுதந்திரமுதலிய சுகதுக்கானுபவ மவ்வுடலுக்கில்லாத னபோல, லிங்கமது வர்ச்சிப்பித்துக்கொள்ள வல்லார் சுதந்திரமற்றர்ச்சிப்பர் வேறறவம்மா - இச்சிவலிங்கமுஞ் சுதந்திரகீனனுகிய வான்மாவைக் கலந்தவ

ளைக் கொண்டு பூசையானவற்பண வவதானமுதலியவெல்லா மங்கீகரித்துக் கொள்ளுதலு மத்தன்மைத்தாகையா லிவ்வீரசைவர்கள் கவலையற்றுச் சுதந்திர மற்றுப் பேதமற்று நாமேதாமாக விருப்பர்களிந்தப்பூசையே யாச்சரியமான பூசை எ-று. (கoஅ)

தாமற் றதனாற் றகும்பூசை செய்வதில்லை
யாமற்ற தாலோபம் யாதுமிலை - யாமதனாற்
குற்றமில்லை குற்றமில்லை யாகப் பிராச்சித்த
மற்றவர்கட் கில்லையில்லை யாம்.

(இ-ள்.) தாமற்றதனாற்றகும்பூசை செய்வதில்லை - தானென்பது ஞேயம், யாமென்பது ஞாதுரு - ஞாதுருவினுடைய வியாபாரமே ஞானம் இம்மூன்றுங் கழன்று ஞேயமேதானாய்ச் சுட்டற்றுச் சுவாநுபூதிமான்களாயிருக்கும் வீரசைவர்கட்கு மனவாக்குக் காயங்களை யசைத்துச் சிவனுக்கு ஆசனமூர்த்தி மூலங்களைக் கற்பித்துப் பேதமாயர்ச்சியார்கள், யாமற்றதாலோபம் யாதுமிலையாமதனால் - யாமென்னும் ஞாதுருவிறந்து ஞேயமாய் நிற்கையால் மந்திரக்கிரியா பாவனையால்வரும் லோபங்களு மவர்கட்கில்லையாகும் ஆகலான், குற்றமில்லை குற்றமில்லையாகப் பிராச்சித்த மற்றவர்கட்கில்லை யில்லையாம் - அவர்கட் கொருகாலுங் குற்றமேறுவதே யில்லையாகையாற் பிராயச்சித்தமு மவர்கட்கில்லையாம், எ-று. (கoக)

இல்லை இல்லை என்பது நிச்சயமென்பதைக்
காட்டவந்த வடுக்குமொழி.

தன்னைத்தந் தாற்குத் தகுதி நமைக்கொடுத்தல்
பின்னைக் கொடையில்லைப் பேசுங்கா - லன்னதனால்
நாமவனாய் நின்றுசெய்வோ நஞ்செயற்குக் குற்றமென்று
மாவதில்லை யாவதில்லை யாம்.

(இ-ள்.) தன்னைத்தந்தாற்குத் தகுதிநமைக்கொடுத்தல் பின்னைக்கொடையில்லைப் பேசுங்கால் - தேகாதி பிரவஞ்சமெய்யாய்ச் சர்வவிடயமுந் தானாய்த் தனக்குமேலொரு கர்த்தாவில்லையெனச் சர்வசுதந்திரனாயிருந்தவன் பரிபாக விசேஷத்தால் தேகாதி பிரவஞ்சத்தைப் பொய்யெனக்கண்டு சர்வ விடயத்திலேயுநின்று பிரிந்து தனக்கு மேலொரு கர்த்தாவுண்டெனக்கண்டு தன் சுதந்திரனைத்தையுமறிந்து தன்னை முழுவது நமக்குக் கொடுத்து நம்முட்புகுந்தவனுக்கு நாம் பிரதியுபகாரமாய்க் கொடுக்குங் கொடை யேதென்னில் அவன் நமக்குச் சமானசாதியாகையால் நம்மையே கொடுப்போம் நம்மையன்றி மற்றவையெல்லாஞ் சொல்லுமிடத்தவனுக்கு விடயமல்ல வாதலால் வேறுகொடையில்லை, இதற்கு, உ-ம். "தந்ததுன்றன்னைக் கொண்டதென்றன்னை" யென்னுந் திருவாசகத்தானறிக. சிவசமான சாதியென்பதற்கு உ-ம். "சித்தியார் சீவனுமிச்சாஞானக் கிரியையாற் சிவனையொப்பன்" என்பதனானும் - சிவன்சீவ

னென்றிரண்டுஞ் சித்தொன்று மென்பதனாலும், காயமொழிந்தக்காலெங்குமாய்க் கருதரன்போனிற்பன், என்பதனும், சிவனார் சிவனாரையறிந்தபின் சீவனார்தாமே சிவனாயிருப்பரோ, என்பதனாலும், ஜீவோ - ஷிவஹா - ஷிவோ - ஜீவஹா - ஜீவகேவலஞ் ஷிவஹா - பாசபந்தபவோஜீவஹா - பாசமுத்தே சதாஷிவஹா - என்பதனானுமறிக, அன்னதனால் நாமவனாய்நின்றுசெய்வோ நஞ்செயற்குக் குற்றமென்று மாவதில்லை யாவதில்லையாம் - ஆகையினாலே நாமவனாகவே நின்று செய்யவேண்டிய கிருத்தியத்தைச் செய்வோம், அக்கிருத்தியம் நமது கிருத்தியமாதலால் இராகத் துவேஷாதிகளுடனேகூடிச் செய்வதாயிராது நம்முடைய செய்திக்குக் குற்றமேறுது பிராயச்சித்தமு மதற்கில்லை யில்லை, எ-று.

[இதற்கு, உ-ம். திருவாசகம் 'பாதகங்கள் செய்திடினும் பணியாக்கிவிடுமே' என்பதனாலும், சித்தியார். 'சலமிலனாய் ஞானத்தாற்றனையடைந்தார்தம்மைத் தானாக்கி' என்பதனாலுங்கண்டுகொள்க. இவ்வடுக்கும் அப்பொருளது.]

ஆவா கனமும் விசர்ச்சனமும் யாதுமில்லை
யாமா மவர்பூசை யாச்சரிய - நாவாரச்
சொல்ல வவர்விரதஞ் சொற்கடங்கா வாதலினா
லில்லை யவர்க்கிணையா க.

(இ - ள்.) ஆவா கனமும் விசர்ச்சனமும் யாதுமில்லை யாமா மவர்பூசை யாச்சரியம் - ஏகதேசப் பொருளுக்கே ஆவாகன விசர்ச்சன முதலியன பரிபூரணப் பொருளுக்கவை கூடா• ஆகையா லவ்வீரசைவர்களுடைய பூசையே ஆச்சரியமானபூசை, நாவாரச்சொல்ல வவர்விரதஞ் சொற்கடங்காவாதலினாலில்லை யவர்க்கிணையாக - ஆகையா லவர்களுடைய ஞானவிரதத்தை நாவாரச் சொல்ல வேண்டுமென்றாற் சொல்லுக்கடங்காதவர்கட் கிப்புவியி லிணையாகச் சொல்லப்படுவோருமில்லை, எ-று• (கககக)

[ஆகையால் நமக்கு வீரசைவத்திலேயே மிகுந்தபட்சமென வுணர்த்துகின்றார்.]

ஆதலினா லத்துவித சைவமது வீரசைவ
மோது மதனி லுவப்புநமக் - கீதல்லா
தானதனி லன்பின்றோ வாமென் னிலப்பகுதி
யானுரைப்ப நீயின் றறி.

(இ - ள்.) ஆதலினாலத்துவித சைவமதுவீர சைவமோதுமதனிலுவப்பு நமக்கு - ஆகையினாலே அத்துவிதசைவமென்பது வீரசைவமே யவ்வீரசைவத்திலேயே நமக்குமிகுந்த விருப்பம், ஈதல்லாதான தனிலன்பின்றோவா மென்னிலப்பகுதியானுரைப்ப நீயின்றறி - ஆதலா லிவ்வீரசைவத்திலே யல்லது மற்ற சைவத்தில் விருப்பமில்லையோவென்று கேட்கிலவையிற்றினிடத்திலேயும் விருப்பமுண்டு, ஆனாலும் இப்படிச் சம்பூரணமாயிராது, தாரதம்மியமுண்டு, அத்தாரதம்மிய மெப்படியென்னிற் சொல்லுவோங்கேட்பாயாக, எ-று. (ககஉ)

நிற்பனவாய் நில்லா தியங்குதலா னல்லுயிர்மே
லெப்பொழுது மன்பா மிதினடக்கும் - பொற்புடைய
வானவுயிர் மேலதிக மன்பதுவா மவ்வுயிரா
மானிடர்மே லன்பதிக மாம்.

(இ-ள்.) மகாசங்காரகாலத்திற் றூலசூக்கும காரணமாகிய தேகாதி பிரவஞ்சங்களெல்லா மாயையிலேயொடுங்க வக்காலத்துத் தமோமயமாகக் கேவலப்பட்டிருக்கு முயிர்களைப்பற்ற வக்கேவலநீங்கிச் சிருட்டிகாலத்திற் சகலாவத்தையைப்பற்று முயிர்களிடத்துப் பட்சம் விசேஷமாயிருக்கும், அதேனென்னில் மாயாதேகபோக சம்பந்தத்தினாலேயே ஆணவமலத்துக்குப் பரிபாகம் வரவேண்டும், அம்மாயாதேகபோக சம்பந்த மக்கேவலத்தி லில்லாமையாலெனவறிக. இனிச் சகலத்திலேயுஞ் சூட்சுமதேக சம்பந்தமேயல்லது தூலதேக சம்பந்தமில்லா தாகாசத்தைப்பற்றிக் கிடக்குஞ் சிலவுயிர்கள், அஃதேனென்னில் சாதியாயுப்போகமென்னும் பிராரத்தகன்ம பரிபாக மில்லாமையா லெனவறிக, ஆகையா லச்சூக்குமதேக சம்பந்தமாயிருக்கு முயிர்களைப் பற்றத் தூலதேகசம்பந்தத்தினையுடையவர்களிடத்திலே பட்சமதிகமாகவிருக்கும், அத்தூலதேக சம்பந்தங்களுக்குட் டாபராதிகளில் மலைமுதலிய வுயிர்களைப்பற்ற வோரறிவினையுடைய விருட்சமுதலிய வுயிர்களிடத்துப் பட்சமதிகமாகவிருக்கும், அவ்வுயிர்களைப்பற்றிச் சஞ்சரிக்கு முயிர்களில் நீர்வாழுஞ்சாதிமுதல் கிருமிகீடமுதலிய வுயிர்களிடத்துப் பட்சமதிகமாகவிருக்கும், அவ்வூர்வனவாகிய வுயிர்களைப்பற்றப் பறப்பனவாகிய பக்ஷிகளிடத்தில் பட்சம் விசேஷமாக விருக்கும், அப்பட்சிகளைப்பற்ற நடப்பனவாகிய நாற்கால் மிருகங்களில் பட்சம்விசேஷமாகவிருக்கும், அம்மிருகங்களைப்பற்ற மானிடயோனியில் வருமுயிர்களிடத்தில் பட்சம்விசேஷமாகவிருக்கும், எ-று. (ககங)

மானிடரி னான்கு வருணத் ததிகமன்பு
தானவ் வருணத் தகுதியா - லானமறை
வேதியர்பா லன்பதிகம் வேதியரிற் கண்டிகைநீ
றீதணிவார் பாலதிக மென்.

(இ - ள்.) மானிடசென்மத்தில் அனுலோமர் - பிரதிலோமர்-அந்தராளர் விராத்தியரென்றும் சங்கரசாதியென்றுஞ் சொல்லப்பட்ட வுயிர்களினும் நான்குவருணத்தவர்களிடத்தில் விசேஷபட்சம் - அவர்களில் வேதப்பிராமணர்களிடத்தில் விசேஷபட்சம், அப்பிராமணரில் விபூதி ருத்திராட்சந் தரித்தவர்களிடத்தில் பட்சம் அதிகம், எ-று. (ககச)

மற்றிவைக டக்கையினான் மன்னியக லாதணியப்
பெற்றவர்பா லன்பதிகம் பேசுங்கால் - மற்றிவையோ
டாந்தீர்த்த மூர்த்திதல மானவைகள் சேவிக்கத்
தான் சரிப்பார் பாலதிகந் தான்.

(இ-ள்.) முன்சொன்ன விபூதிருத்திராட்சங்களைத் தீட்சாசுத்தர்களாகி யெக்காலத்தினும்விட்டு நீங்காமற்றரிக்கு மவர்களிடத்து விசேஷபட்சம், அவர்களிற் றீட்சாவான்களாய் விபூதிருத்திராட்சதாரிகளாய் எப்போதும் பூப்பிரதக்ஷிணம்பண்ணிக் கங்கைமுதலிய தீர்த்தங்களிற் சென்றாடியுஞ் சிவஸ்தலவாசங்கள் பண்ணியுஞ் சிவமூர்த்திகளைத் தெரிசனம்பண்ணியு மிதிலே நியமமாகச் சஞ்சரிக்கு மவர்களிடத்திற் பட்சமதிகம், எ-று. (கக௫)

இங்கிவரி னங்கோயி லெய்திநம்மைச் சேவித்திட்
டங்கருந்து வோமென் றருவிரதந் - தங்குனர்பா
லன்புமிக்க தாகு மவரிலதி கஞ்சொல்லி
னின்பமுட னேயியல்பா க.

(இ-ள்.) தீர்த்தயாத்திரை பண்ணுவோர்களினும் நமது சிவாலயத்திற்சென்று நம்மைத் தெரிசனம்பண்ணி லல்லது புசிக்கிறதில்லையென்னு நியமம் பூண்டிருக்கு மவர்களிடத்து விசேஷபட்ச மியல்பாகவிருக்கும், எ-று. (கக௬)

நம்மைப்பூ சித்தன்றி நாமருந்தோ மென்பவர்பா
லம்ம வதிகமன்ப தாமவரி-னன்மைமிகு
மர்ச்சனைக ளெட்டு முபசார மீரெட்டுங்
கற்பனையா யேவிரத மாய்.

ஒன்று குறைந்தாலு முண்ணு விரதமதாய்
நின்றருச்சிப் போமென்று நிட்டையுடன் - குன்றாமற்
பூசிப் பவர்தாம் புனிதர்தம்பா லேமிகவு
மாசை யுடை யோமென் றறி.

(இ-ள்.) இயல்பாய்வரும் பத்தியினாலே நம்மைப் பூசைபண்ணினலல்லது புசியோமென்னும் விரதத்தை யுடையவர்களிடத்து மிகுந்தபட்சம், அவரினும் சோடசோபசாரத்துடன் அட்டவிதார்ச்சனைகளு நியமமாகக் கற்பித்துக்கொண்டு இந்த வுபசாரங்களி லொன்றுகுறைந்தாலும் புசிக்கிறதில்லையென்று விரதமாய்க்கொண் டர்ச்சித்து அதுவே நிட்டையாகவிருக்கும் புனிதரிடத்து மிகவும் விருப்ப நமக்கென்றறிவாயாக, எ-று. (ககஎ)

[மேலிதனையுந் தமதங்கசுகமென வறிவிக்கின்றார்.]

சொற்றவைக ளெல்லாநம் மங்கசுக மாதலினா
லுற்றவிவர் வேண்ட லுறும்பதங்கள் - பற்றுமன்பா
னம்மா லவர்பெற்றார் நாடிலிங்க வர்ச்சனையி
தம்மா பிராணசுகங் கேள்.

(இ-ள்.) சொற்றவைகளெல்லா நம்மங்கசுகம் - இங்ஙனஞ் சொன்ன தீர்த்தயாத்திரை விபூதி ருத்திராட்சதாரணஞ் சிவபூசை முதலியனவெல்லாம் நமது திருமேனியைக் குறித்தவர்கள் செய்தலினாலது நமக்குத் தேகசுகமாயிற்று, ஆதலினாலுற்ற விவர்வேண்டலுறும் பதங்கள் - இவர்கள் கருதியது பதமுத்தியாகையால், பற்றுமன்பா னம்மாலவர்பெற்றார் - நாமுமவர்கள் மீதுவைத்த பட்

சத்திறாற் சாலோகமுதலிய பதங்களைக் கொடுக்கப்பெற்றார்கள், நாடிலிங்கவர்ச்சனையீது - இப்பூசையை நன்றாக விசாரிக்கில் நமது தேகபூசையாகவிருக்கும், அம்மா பிராணசுகங்கேள் - இனி நமக்காச்சரியமாக வான்மசுகத்தைச் சொல்லுவோங்கேள், எ-று. (ககஅ)

[மேற்பிராணசுகங் கூறுகின்றார்.]

அழியாத வாருயிரா லாவலுட னம்மை
யொழியாம லன்பா லுருகித் - தெளிவாலே
யர்ச்சிப் பதுநமக்கிங் கான பிராணசுக
மர்ச்சனைசெய் வாரிடத்தம் மா.

(இ-ள்.) அழியாதவாருயி ராலாவலுடனம்மை யொழியாமலன்பாலுருகித் தெளிவாலேயர்ச்சிப்பது நமக்கிங்கானபிராணசுகம், அநித்தியமாகிய தேகாதிகளிறாற் செய்யும் பூசையைவிட்டு எக்காலமு மழிவில்லாமல் நித்தியமாயிருக்குமான்மஞானத்தினால் மிகுந்த ஞேயம்பற்றித் தேககற்பனையிறந் தகண்டாகாரமாயிருக்கும் நம்மைத் தானுந்தத்துவாதீதனாய்க் கேவலசகலங்கள்நீங்கி வியாபியாய் மாறாதபேரன்பினாற் பாவனையிறந்து குழைவுபற்றித் தாக்காமற்றாக்கிநிற்கும் வீரசைவபூசையே நமக்குப் பிராணசுகத்தைத் தரும்பூசை, அர்ச்சனைசெய்வாரிடத்தம்மா - அர்ச்சனைசெய்வோர்களிடத் ததுவே யாச்சரியம், எ-று.

இதற்கு (உ-ம்.) சித்தியார் - "அறியாமையறிவகற்றி யறிவினுள்ளே யறிவுதனையருளினா லறியாதேயறிந்து, குறியாதேகுறித்தந்தக் கரணங்களோடுங் கூடாதேவாடாதே குழைந்திருப்பையாகில்" என்றும், தேவாரம். மைப்படிந்த கண்ணாளுந்தானுங்கச்சி மயானத்தான் வார்சடையான் மாசொன்றில்லா, னொப்புடையனல்லனொருவனல்ல னோரூரனல்ல னுவமையில்லி, யப்படியனவ்வுருவனவ்வண்ணத் தனவனருளேகண்ணாகக்காண்பதல்லா, லிப்படியனிவ்வுருவ னிவ்வண்ணத்தனிவனிறைவ னென்றெழுதிக் காட்டொணாதே" என்றும், 'தேகமறந்து திருவருளாய்நின்று சிவபோகம்விளையப் புணர்நெஞ்சே' என்றும், 'அன்புசிவமென்றறிந்து கொண்டோமே' என்றும், 'பாவிக்க வேண்டாமாண்டபரனருள்பற்றினோர்க்கே' என்றும், வழித்தலைப்படுவான் முயல்கின்றேனுன்னைப்போலென்னைப் பாவிக்கமாட்டேன்' என்றும், வருவனவற்றாற் கண்டுகொள்க()

[மேற்பிராணசுக வல்லபத்தை நான்குவெண்பாவாற் கூறுகின்றார்.]

மக்கண்மேன்மாதர் மகிழுமன்பி னும்மனந்த
மிக்கதென்றா லும்மமையா மெய்யாசை - மிக்கதனைச்
சொல்லவென்றாற் சொல்லுக் கடங்கா பிராணலிங்க
வல்லபமாம் வீரசைவ வாழ்வு.

(இ-ள்.) மக்கண்மேன்மாதர் மகிழுமன்பினும் மனந்தமிக்கதென்றாலும் மமையாமெய்யாசை-மாதாவுக்குச் சிறுகுழந்தைகளிடத்திருக்கும் பட்சத்தைப் பார்க்கினு மனந்தங்கோடி மடங்குபட்ச மென்போமென்றாலும் அந்தமட்டி

லடங்காது, நமக்குப் பிராணலிங்கபூசை பண்ணுவோரிடத்தியல்பாயெழும்பட்சம், மிக்கதனைச்சொல்லவென்றாற் சொல்லுக்கடங்கா பிராணலிங்க வல்லபமாம் வீரசைவ வாழ்வு-மிகுந்த அப்பட்சத்தை யிவ்வளவென்று தொகைப்படுத்தி நாவினாற் சொல்லப்படாதோவென்னில் நம்முடைய வாக்கினாலேயு மளவிட்டுச்சொல்லப்படாது, அத்தன்மையதாகும் பிராணலிங்க மகிமை, அப்படிப்பட்ட பிராணலிங்கபூசை பண்ணுமவர்களன்றோ வீரசைவ வாழ்வினையுடையவர்கள், எ-று.

மிக்கதுவாற் பூசையென்ற பேரால்வே றன்றென்னத்
தக்கதன்ற தென்னென்னிற் சாற்றக்கே - டொக்ககல்லின்
மாணிக்கம் வாழ்தருவிற் கற்பதரு தேனுவதிற்
காணின்மிக்க காமதே னு.

(இ - ள்.) மிக்கதுவாற்பூசையென்றபேரால் வேறன்றென்னத் தக்கதன்ற தென்னென்னிற் சாற்றக்கேள் - கிரியாபூசை யோகபூசை ஞானபூசையென்று சொல்லப்பட்ட பூசைகளில் ஞானபூசையே மேலானபூசையென்று சொல்லப்படும், பூசையென்னும் பெயரினாலதைக்கொள்ளு நமக்கு மப்படிப்பூசிக்கு மான்பமாவுக்துங் கிஞ்சித்பேத தாதாத்மிக முண்டென்றும் சொல்லப்படும், அக்கிஞ்சித்பேதமும் அப்பூசையினாலேயே யறவேண்டு மாதலால் முன் சொன்ன பேத பூசைக்குங் கிஞ்சித் பேததாதாத்மிக பூசைக்கும் வேகுதாரதம் மிய முண்டு, அத்தாரதம்மிய மென்னெனிற் சொல்லுவோங்கேள் - தொக்க கல்லின் மாணிக்கம் வாழ்தருவிற் கற்பதரு தேனுவதிற்காணின் மிக்ககாமதேனு - மண்ணிற் கிடக்கும் கல்லுக்குட்சாதி யொற்றுமை பற்றிக்கல்லெனப் பெயர் பெற்றாலும் மகாப் பிரகாசமாய் விலைமதிக்கப்படாததாகிய மாணிக்கக் கல்லுக்கும், பூமியிலிருக்கும் விருட்சங்களுக்குட் சாதியொற்றுமைபற்றி விருட்சமெனப் பெயர் பெற்றாலும் தேவலோகத்துள்ளதா யறிவோடுகூடிக் கேட்டவெல்லாந்தருங் கற்பக விருட்சத்திற்கும், இந்நாட்டிற் சஞ்சரிக்கும் தேனுவுக்குட்சாதி யொற்றுமைபற்றித் தேனுவெனப்பெயர் பெற்றாலும் தேவலோகத்து வசிப்பதா யறிவோடு கேட்டவெல்லாந்தரும் காமதேனுவுக்கும் தாரதம்மிய மெப்படியோ அப்படித் தாரதம்மிய மாம், எ-று. (கஉக)

மிருகமதிற் சிங்க மிகுமொழியில் வேத
முருவமதி லிங்க மொளியிற் - பெரியகதிர்
தன்ம மதனிற் சிவதன்ம மக்கரத்திற்
பன்னிலருட் பஞ்சாக் கரம்.

(இ-ள்.) காட்டிற்றிரியு மான் மரைமுதலிய மிருகங்களுக்குள் யானை முதலிய மிருகங்களை யடக்கு மிருகேந்திரனாகிய சிங்கம்போலவும், இவ்வுலகத்துண்டாகிய மற்றைக்கலைகளுக்குட் பாதக்கிரம ஜடைகளுடன் உதாத்தானுதாத்த சுரமாய்ச் சகல தேவதைகளுக்கும் பிரீதியைச் செனிப்பிக்கும் வேதகோஷம் போலவும், கண்ணாற் காணப்பட்ட வுருவங்களுக்குட் டெரிசனமாத்திரத்திலே செனன மரணத்தைப் போக்குவதாகிய சிவலிங்கத்தின துருவம்போலவும், நட்சத்திர நவக்கிரகப் பிரகாசம் சந்திரப் பிரகாசம் அக்கினிப் பிரகாசங்களுக்

குட் பூத விருளையோட்டிக் காலகற்பனைகளுக் கெல்லாமெல்லை யினைத் தந்து ஆயிரங்கிரணங்களுடனே கூடிய சூரியப்பிரகாசம் போலவும், பாசதர்மம் பசு தர்மங்களுக்குள் இருவினையொப்பு மலபரிபாகத்தைப் பண்ணுஞ் சிவபுண்ணியம்போலவும், அகாராதி க்ஷகாராந்தமாகிய ஐம்பத்தோ ரட்சரங்களுக்குட் பஞ்சாட்சரம்போலவுந் தாரதம்மிய முண்டு, எ-று. (கஉஉ)

சுவையி லமுதமின்பிற் சொல்லும்பே ரின்பஞ்
சபையிற் கனகசபை சாற்று - மிவையிவைகண்
மிக்கதுபோற் பூசையினிற் பூசை பிராணலிங்க
மிக்கதிது சத்தியமே மெய்.

(இ-ள்.) சுவையிலமுதம் - இவ்வுலகத்தி லறுவிதமாகச் சொல்லப்பட்ட ருசியுள்ள பதார்த்தங்களுக்குள் உட்கொண்டால் நரைதிரை மூப்புகளை மாற்றி மிருதமாகப் போகாமல் நித்தியத் துவத்தைப் பண்ணுந் தேவலோகத்திற்றெய்வ யோக்கியமாயிருக்குந் தேவாமிர்தமும், இன்பிற் சொல்லும் பேரின்பம் - உலக விஷயானந்தங்களுக்குள் ஒருகாலு நீங்காததாய்த் தெவிட்டாததாய் நித்திய திருத்தியாயிருக்கும் மோட்சானந்தமும், சபையிற் கனகசபை - தாம்பிர சபை இரசிதசபை இரத்தினசபை முதலிய சபைகளுக்குட் பஞ்சகிருத்திய நிமித்தமாக ஆனந்த நிருத்தம் பண்ணுங் கனகசபையும், சாற்று மிவை யிவை கண் மிக்கதுபோற் பூசையினிற் பூசை பிராணலிங்கமிக் கதிது சத்தியமே மெய்-சொல்லப்பட்ட அவற்று ளிவைசிறந்தனபோல அங்க சுகத்தைத் தருங் கிரியாபூசைக்கும் ஆன்ம சுகத்தைத் தரும்பிராண லிங்கபூசையாகிய ஞான பூசைக்கு மித்தனை வித்தியாச முண்டாகையினு லிதுவேசத்தியமான மெய்ப் பூசை, எ-று. (கஉங)

[ஆகையா லிவ்வீரசைவாசாரியர் நால்வகைத்தீட்சையுஞ் செய்ய யோக்கியரென நவிற்றுகின்றார்]

மெய்யாம் பிராணலிங்க வத்துவித வீரசைவர்
பொய்யாத வீரமுடன் புந்திசெய்யின் - மெய்யான
சாமா னியமீறுய்ச் சாற்றியநாற் றீக்கைசெய்ய
வாமாகுந் தேசிகரம் மா.

(இ - ள்.) மெய்யாம் பிராணலிங்க வத்துவித வீரசைவர் - யதார்த்த சொரூபமாகிய பிராணலிங்கமென்னும் பெயரையுடைய ஞானலிங்கத்துடன் விட்டுநீங்காதவத்துவித சம்பந்தத்தையுடைய வீரசைவாசாரியர், பொய்யாத வீரமுடன் புந்திசெய்யின் மெய்யான சாமானியமீறுய்ச் சாற்றியநாற்றீக்கை செய்யவாமாகுந்தே சிகரம்மா-ஆராய்ந் தறியுமிடத்துப் பொய்மையின்றிச் சற்காரியவாதமாயிருக்கும் வீரசைவதீட்சை மெய்மையாகிய சுத்தசைவதீட்சை மிசிரசைவதீட்சை சாமானியசைவதீட்சை இந்நால்வகைத் தீட்சையும் பண்ணுஞ் சாமர்த்தியத்தை யுடையவர், எ-று.

அம்மாவென்பது ஆச்சரியப்பொருள்தரும் இடைச்சொல். (கஉச)

[மேற்சுத்தசைவாசாரியர் முதலியோர் செய்யுந்
தீட்சையினைச் செப்பலுற்றார்.]

சுத்தசைவர் சுத்தமுதன் மூன்றான தீக்கைசெய்ய
வுத்தமர்தா மாகு முயர்மிசிரர் - வைத்த
விருவகைத்தீக் கைக்குரியர் சாமா னியர்தா
மொருவகைதீக் கைக்குரிய ரே.

(இ-ள்.) சுத்தசைவர் சுத்தமுதன் மூன்றானதீக்கை செய்யவுத்தமர்தாம்- சுத்தசைவத்திற் சுத்தசைவாசாரியர் வீரசைவாசாரியர் பண்ணும் வீரநிராபாரதீட்சை தவிரக் குண்டமண்டல வேதிகையிட்டுச் சிவாக்கினியை யுண்டுபண்ணிக் கிரியாவுத்திரியாகிய நிற்பீசசபீச லோகதன்மணி சிவதன்மணிமுதலிய தீட்சையோடு மிசிரசைவர்க்குப் பண்ணப்பட்டவிசேஷ தீட்சை சாமானிய சைவர்க்குப் பண்ணப்பட்ட சமயதீட்சையாகிய இம்மூவகைத் தீட்சையும் பண்ணவதிகாரிகளாவார், ஆகுமுயர்மிசிரர்வைத்த விருவகைத்தீக்கைக்குரியர் - மிசிரசைவாசாரியர் முன்சொன்னவீரசைவ தீட்சை சுத்தசைவதீட்சை இவ்விரண்டுந் தவிர மிசிரசைவத்துக்குள்ள சமயதீட்சை விசேஷ தீட்சை ஆகிய இவ்விரண்டும்பண்ண வதிகாரியாவார், சாமானியர்தாமொருவகைத் தீக்கைக்குரியரே - சாமானிய சைவாசாரியர் முன்சொன்னமூவகைத் தீட்சையுந் தவிர சமயதீட்சைக்குமாத்திர மதிகாரியாவார், எ-று. (கஉரு)

[இந்நால்வகைச் சைவத்துள் இது நமக்குடல் இது நமக்குயி
ரெனப் பிரித்துரைக்கின்றார்.]

ஆதலினா லத்துவித வீரசைவ மேசீவ
னோதுகின்ற சுத்தசைவ மோடரிய - நீதியுள்ள
சாமா னியமீரூஞ் சைவமஃ தங்கமஃ
தாமா மெனுமா கமம்.

(இ - ள்.) ஆதலினா லத்துவித வீரசைவமேசீவன் - இப்படி மூவித சைவத்துக்குமேலாயிருக்கையினாலே யத்துவித சம்பந்தத்தையுடைய வீரசைவமே நமக்குச் சீவனாகவிருக்கும், ஓதுகின்றசுத்தசைவமோடரிய நீதியுள்ளசாமானிய மீரூஞ்சைவமஃதங்கமஃதாமாமெனு மாகமம் - சொல்லப்பட்ட சுத்தசைவ முதல் சாமானியசைவமீரூகுஞ் சைவமெல்லா நமதங்கமாமென்றே யாகமங்கள் சொல்லும், எ-று.

சொற்ற படியே சொலுஞ்சுத்த சைவர்முத
லுற்றவர்க்குத் தாரதம்ய முள்ளதாங் - குற்றமற்ற
வானவதி காரத் தடைவாம் வழிபாடு
தானியற்ற லேதகுதி தான்.

(இ-ள். சொற்றபடியேசொலுஞ் சுத்தசைவர்முத லுற்றவர்க்குத் தாரதம்யமுள்ளதாம் - கிரமமாகச்சொல்லுமிடத்து வீரசைவர் சுத்தசைவர் மிசிர

சைவர் சாமானியசைவரென்னு நால்வகையோர்க்கும் தாரதம்மியமுண்டு ஆகை யால், குற்றமறவான வதிகாரத்தடைவாம் வழிபாடுதானியற்றலே தருநிதான் குற்றமற்ற அதிகாரக்கிரமமாக அவரவர்களை வழிபடுதலேநியாயம், எ-று. ()

ஒன்றதனுக் கொன்றென் றுயர்ந்தநுவத் தீக்கையென
நன்றறிந்திட் டன்பா லனவரத - நின்று
வழிபாடு செய்தலறஞ் செய்யாரோ யாகி
விழிவார் பிறந்துநர கில்.

(இ-ள். இங்ஙனஞ்சொல்லப்பட்ட தீட்சைக ளொன்றுக்கொன்றதிகமாக விருக்குமென்பதை நன்றாகவறிந்துகொண்டு அனவரதமும் அன்புபற்றிநின்று சாமானியசைவர் தமக்குமேலானமூவகைச் சைவரையும் வழிபடக்கடவர், மிசி ரர் தமக்குமேலான இருவகைச்சைவரையும் வழிபடக்கடவர், சுத்தசைவர் தமக்குமேலான வீரசைவரைவழிபடக்கடவர், இப்படிவழிபடுதலே தர்மம், இப் படிவழிபடாராயின் இழிவான யோனிகளிற்செனித்து நரகத்தாழ்ந்திடுவார் கள், எ-று. (கஉஎ)

[வீரசைவத் தீக்கையினது பெயரையீதென வுணர்த்துகின்றார்]

வீரசைவ தீக்கை விதிக்கிலொரு மூவகைத்தாஞ்
சீருடனேமற்றதனைச் செப்பிடினே - வீரமுடன்
சாமா னியம்விசே டம்பின் னிராபார
மாமாம்பே ரீததற்கம் மா.

(இ-ள்.) சொல்லுமிடத்து வீரசைவதீட்சை மூவகைப்படும், அவை வீர சாமானிய தீக்கையென்றும் வீரவிசேட தீக்கையென்றும் வீரநிராபாரதீக்கை யென்றும் பெயர்பெறும், எ-று. (கஉஅ)

[மூந்த வீரசாமானியதீட்சையைப் பண்ணிக்கொள்ள வருமவர்கள் பரிபாகத்தன்மையினையும், அவர்கள் பரிபாகமறிந் தவ்வாசாரியர் அத்தீட்சையினைப்பண்ணு முறைமை யினையும், அத்தீட்சையினைப் பண்ணிக்கொண்ட பெயர்கள் நடையினையும், வீரதீக்கைக்கு விருப்பென்னும் வெண்பாத் தொடங்கித் தீக்கைகுருகொடுக்கை யென்னும் வெண்பா வீருக முப்பத்தெட்டு வெண்பாவினாலுணர்த்துகின்றார்.]

வீரதீக் கைக்கு விருப்புமிக்கு வந்தவர்க்கிங்
காரியனு மாசா னுபதேசித் - தாருகின்ற
மும்மலங்க ணீக்கு முறைமையது கேளிருண்ட
விம்மைப் பிறவியத னில்.

(இ - ள்.) வீரதீக்கைக்கு விருப்புமிக்கு வந்தவர்க்கு - இருவினையொப்பு மலபரிபாகம் பிறந்து தீவிரதரசத்திநி பாதத்தாற் சிவசாயுச்சியம் பெறவே ண்டுமென்னு மதிதாகம்பிறந்து வீரசைவதீட்சை பண்ணிக்கொள்ள வேண்டு

மென வந்த மாணுக்கர்க்கு, ஆரியனுமாசான் - வேதாகம சாஸ்த்திரபுராண ஞானுதிக்கத்தினுற் பூச்சியராயிருக்கும் வீரசைவாசாரியரானவர், உபதேசித் தாருகின்ற மும்மலங்கணீக்கு முறைமையதுகேள் - ஞானதீட்சையினைச்செய்து ஞானேபதேசம்பண்ணி மும்மலங்களையும் போக்குமுறைமையைச்சொல்லுவோங் கேட்பாயாக, இருண்டவிம்மைப் பிறவியதனில் - சிவஞானந்தோன்ருது மறப்பினைத்தரு மிவ்வுலகத் திம்மானிடப்பிறப்பில், எ-று. (கஉகூ)

பிறந்த பிறவிப் பெருங்குடும்பக் கொத்துச்
சிறந்தகுலத் தோடு செறியு - மிறந்தவன்பு
விட்டுச் சிவகுலத்திற் சென்மித் ததனிலன்பு
கட்டுறுத லாணவநீங் கல்.

(இ - ள்.) பிறந்தபிறவிப் பெருங்குடும்பக்கொத்துச் சிறந்தகுலத்தோடு செறியுமிறந்த வன்புவிட்டு - ஓர்வமிசத்தில் மாதாபிதாவினிடத் துற்பவித்து மாதாபிதா சகோதரர் புத்திரமித்திரர் என்று சொல்லப்பட்ட சமுசாரத்தில் பிணிப்புற்று அந்தச் சமுசாரமயமா யிருந்தவனுக் கதனி லுபரதிசெனிக்க அப்பாசவருக்கத்தி லிருக்கு மிகுந்த பற்றைப் பரிச்சேதமாக விட்டுக் கான்ற சோறுபோலக்கண்டு, சிவகுலத்திற் சென்மித் ததனிலன்பு கட்டுறுத லாணவ நீங்கல் - இனி யிந்தச் சமுசாரத்திலுல்வரும் போகவாஞ்சையைக் கைவிட்டு ஞானுசாரியனை யடைந்து சிவகுலோற்பவனுக வேண்டுமென விருப்பம்வருதலே யாணவமல நீங்குவதற் கடையாளமென வறிவாயாக, எ-று. (கநூ0)

நீங்கினின்ருர் தாங்க ணிகழ்சாதி வேந்தரிவ
ரீங்கிழியுஞ் சாதியென வெண்ணும - லாங்குநிற்றன்
மாயைமல நீக்கமென மற்றினிய வாகமங்க
ளேயமொடு சொல்லு நினை.

(இ - ள்.) நீங்கினின்ருர் தாங்க ணிகழ்சாதி வேந்தரிவ ரீங்கிழியுஞ் சாதியென வெண்ணும லாங்குநிற்றல் - அந்தச் சமுசாரத்தினின்றும் விடுபட்டவன் பின்பு நாமுயர்ந்தசாதி யிவர் தாழ்ந்தசாதியென நினையாமல் எல்லாத் தேகமும் பஞ்சபூத பரிணுமமேயெனக்கண்டு சாதிமானமற்று வேடமே பொருளாக வழிபடவருதலே, மாயைமலநீக்கமென மற்றினியவாகமங்க ளேயமொடுசொல்லுநினை - மாயாமலபெந்த நிவர்த்தியென வாகமங்க ளேயமாகச் சொல்லுமென வறிவாயாக, எ-று. (கநூக)

மூவேடணையின் முரணுடனே சென்றுமனம்
பாவாதகற்றிப் பழவினைநற் - றேவுளது
தான்றருவ னென்று தளராமை கன்மமலந்
தானறவே நிற்குந் தரம்.

(இ-ள்.) மூவேடணையின் முரணுடனே சென்றுமனம் பாவாதகற்றி - தனவாஞ்சை புத்திரவாஞ்சை மாதர்வாஞ்சையாகிய யிவைகளிற் றேனிற்படியும் வண்டுபோலவிழுந்து பற்றிக்கிடக்கு மனதை யதிற்செல்லாமல் நிறுத்தி, பழ

வினைநற் றேவுளது தான்றருவனென்று தளராமை கன்மமலந் தானறவே நிற்குந்தரம் - நாம்பூருவம்பண்ணின கன்மங்க ளிருக்கின்றன அக்கன்மங்கட் கேடாகச் சாதியாயுப்போகங்களை யற்பதீர்க்கமாகப் பரமசிவன் கூட்டிவைப் பானுகையாற் றனக்குள்ளது போகாது இல்லாது வாராதென்று தடுமாற்ற மில்லாமல் அவன் அவளதுவென்னு முன்னிலைகளை நாடாமல் நிற்பதே கன்ம மல நீக்கமென வறிவாயாக, எ-று. (கஙஉ)

பரதாரத் தோடு பரதிரவி யங்க
டிரமாய்விடம்போற் றெசித்துப் - பரவுங்
கொலைகளவு கட்காமங் கூறுபர நிந்தை
சலமிதனை விட்டினிது தான்.

(இ-ள்.) பரதாரத்தோடு பரதிரவியங்க டிரமாய்விடம் போற்றெசித்து - பரநாரியோடு பரதிரவியம் பிரயாசமின்றி வலிய வருகிறதாக விருந்தாலும் அப்பதார்த்தங்களி லிச்சை செனியாமல் எக்காலத்தும் கரி கண்டகி விஷம் சிங்காதமுதலிய துக்கபதார்த்தங்களைக்கண்டா லெப்படி நடுக்கம்வருமோ வப் படி நடுநடுங்கிவிட்டு, பரவுங் கொலைகளவு கட்காமங் கூறுபரநிந்தை சலமி தனை விட்டினிதுதான் - நிந்தித்துச் சொல்லப்பட்ட கொலை ஒருவனை வஞ் சித்தவனது உடைமையை யணுவேனுவத்தனை யானும் அவனைக்காணுதப கரித்தல் சுராபானம்பண்ணல் தனது மனையாளையாயினும் விலக்கியநாளிற் புணர்தல் சொல்லப்பட்ட குலத்திற் றனத்திற் கல்வியில் நடையிற் பிறனைப் பழிகூறல் ஒருவர்மேற் கோபித்தல் இவைமுதலிய துர்க்குண மாகாவெனப் பரிச்சேதமாகவிட்டு, எ-று. (கஙங)

இங்கிவைக ளெல்லா மினியசிவ தன்மமொடு
தங்கி வருமறத்திற் றூழ்வதற - வங்குறவே
வந்ததன்றி வாரா தவைவிடமென் றேயகலுஞ்
சிந்தைதிட மாகிநின்ற தின்.

(இ-ள்.) இங்கிவைகளெல்லாம் - இங்ஙனஞ் சொல்லப்பட்ட துர்க்குணங் களையெல்லாம் விவேகன்றி, இனிய சிவதன்மமொடு தங்கிவருமறத் திற்றூழ் வதற - எந்நாளுஞ் சிவபுண்ணியத்தை விரும்பித் தப்பாமற் றன்மார்ச்சிதமா கப் பாபகன்மமேறாமல் மனைவாழ்க்கை நிமித்த முயற்சித்துக் கொண்டிருக் குங் காலத்து - அங்குறவே வந்ததன்றிவாரா தவைவிடமென்றே யகலுஞ் சிந் தை திடமாகி நின்றதில் - அம் முயற்சியினு லெவ்வளவு வருமோ வவ்வளவை யங்கீகரித்துக்கொண்டு அதன்மமாக வெழு முயற்சியால் வருபவைகளை விட மெனக்கருதிவிட்டு இவ்வுறுதி தப்பாது திடமாகி அதில் நிலைத்து, எ-று. ()

இடம்பொரு ளேவ லெனுமிவைகள் பூத
விடம்பட நின்றவைகள் வேண்டி - மடம்படவே
சற்குருவின் பாகவத்தாற் றீக்கிப்பித் தேசிவனை
யற்புதமாய்த் தாபித்த லாம்.

(இ-ள்.) இன்னுந் தான்குடியிருக்குமிடந் தனக்குபகரணமாக விருக்கும் பதார்த்தங்கள் தன்னேவலாளர் முதலிய வெல்லாமாயா பதார்த்தமாகையா லவைகள் பரிசுத்தமாகும் பொருட்டுச் சற்குரு சந்நிதானப்படுத்திப் பாவனுதீட்சை பண்ணுவித்து அவ்வேவலாளர்கட் கெல்லாஞ் சிவலிங்கதாரணமும் பண்ணுவித்துத் தானிருக்கும் மடத்துக்கு மடப்பிரதிட்டையும் லிங்கமுத்திரையுந் தாபித்துத் தானுளும் பண்டபதார்த்தங்களுக் கெல்லாஞ் சிவலிங்கமுத்திரையுந் தரிக்கவேண்டுமென்னும் விருப்பமுடையவனாய், எ-று. (கூரு)

குருவிடத்தும் லிங்கத்துங் கோட்பாடொன் றாகித்
திருவளருஞ் சற்குருவின் சேவை - யுரிமையுட
னேற்கிலது செய்திட் டினியலிங்க சேவைசெய்யென்
றாக்கினைக்குட் பட்டவற்கன் பால்.

(இ-ள்.) குருவிடத்தும் லிங்கத்துங்கோட்பா டொன்றாகி - தனது மலமாயா கன்மங்களை நீக்கி மேலாகிய ஞானோபதேசத் தினைப்பண்ணும் ஞானசாரியரிடத்துந் தான் வழிபட்டுப் பூசிக்குஞ் சிவலிங்கத்தி னிடத்துந்தான் செய்யும் பத்தியை யங்கீகரிக்குஞ் சங்கமத்தினிடத்தும் ஏகபாவனை பண்ணி அகண்டாகாரமாகிய சிவபெருமானே நம்மை இரட்சிக்க இங்ஙன மூன்றுருவாக வந்தானெனக்கண்டு, திருவளருஞ் சற்குருவின் சேவையுரிமையுட னேற்கில் - எக்காலமும் ஞானவளத்தினையுடைய சற்குருசந்நிதானம் விட்டுப்பிரியாம லவருக்குக் கிருபைவரத் தொண்டுசெய்து வருங்காலத்து அவ்வாசாரியருக் கிவனிடத்துக்கிருபை செனித்ததானல் - இனிய லிங்கசேவை செய்யென்றாக்கினைக் குட்பட்டவற்கன் பால் - அப்போதவ்வாசிரியர் அவன் பண்ணும் பணிவிடையை யங்கீகரித்து இனிச் சிவலிங்கதாரணத்தைப் பண்ணிக்கொண்டெக் காலமும் அவ் விலிங்கசேவையையே பண்ணக்கடவை யென்றனுக்கிரகம் பண்ண அவ்வனுக்கிரகத்துக்குடன்பட்ட மாணக்கற் கன்பினால் பின்னுமவ்வாசிரியர் பண்ணும் அனுக்கிரகத்தின் திறத்தால், எ-று. (கூசு)

விதித்தசம யாசார மானசதா சார
மதித்ததனிற் சற்றும் வழுவிற் - கதித்த
தவநரகத் தாழ்வனெனத் தான கமங்க
ளவமகல வேயுரைக்கு மாம்.

(இ-ள்.) விதித்த சமயாசாரம் - வீரசைவ சமயாசாரத்தில் விதித்த சட்த்தலாசாரம் பற்றி அங்கத்தலமாறும் லிங்கத்தலமாறு மறிந்து அற்பிதவவதானங்களிலே யயர்ச்சியில்லாமல் நடப்பது சமயாசாரம், ஆனசதாசாரம் - சதாசாரம் - நியதாசரம் - கணாசாரம்ஆகிய வாசாரமூன்று, இவற்றுட் சதாசாரமாவது திட்சையினாலே பூருவசென்மம்போய்க் குருரூபமாவது, நியதாசாரமாவது லிங்கத்தினாலே குரக்குமனங்கெடுத்து லிங்கவிரதமாக நிறுத்துதல், கணாசாரமாவது சங்கமபத்தியினாலே நாமென்னு மமதையற நிறுத்துதல் என்றறிக. மதித்ததனிற் சற்றும் வழுவிற்கதித்த நரகத்தாழ்வ ரெனத்தானாக மங்களவமகலவே யுரைக்குமாம். இப்படி விதித்துச் சொல்லப்பட்ட நியமங்களிற்

சற்றுவழுவுதல் வந்ததேயானால் வெகுவாகத்துன்பத்தைத் தரத்தக்க இரௌரவாதி நரகங்களில் விழுந்து ஒருகாலுங் கரையேறுமற் போய்விடுவனென்றுகமங்கள் சொல்லுமென்றுசாரியரனுக்கிரகம்பண்ண அவ்வாக்கியத்தைக் கேட்டுச்சீடன் செய்யும் விண்ணப்பம், எ-று. (கஙஎ)

ஆணைதப்பேன் றப்பிலுயி ரானதொழிப் பேனென்று
காணுமன்பா னின்றுருகிக் காதலால் - வீணும்
பவமகற்றென் றஞ்சிப் பரிவொடுதொண் டாருந்
தவமுடைமை கண்டருளாற் றன்.

(இ-ள்.) ஆணைதப்பேன் - சுவாமிகள் கற்பித்த ஆஞ்ஞையின்படியே நடந்துகொள்ளுகிறேன், தப்பி லுயிரானதொழிப்பேனென்று - இங்ஙனங் கற்பித்த சமயாசாரங்களில் நியமவழுக்கள் வந்தனவாயிற் பிராணனை விடுவேனிது நிச்சயமென்று, காணுமன்பா னின்றுருகிக் காதலால் வீணும் பவமகற்றென்றஞ்சிப் பரிவொடு தொண்டாருந் தவமுடைமை கண்டருளாற்றன் - நாணமின்றிச் சகலருமறியக் கண்களிற் சலப்பிரவாகம் வர வாய்விட்டலறி நெக்குநெக்குருகி மயிர்க்குச்செறிய வாய்குழற மிகுந்த வாசையினுற் சந்நிதியில் நின்று சுவாமியடியேன் வீணுகக் கெட்டுப்போகா நின்றேன் என்னுடைய செனனமரணத்துக் கேதுவாகிய வாணவாதிபாசத்தைப் போக்கி இரட்சிக்கவேண்டுமையனே யென்று பயபக்தி விசுவாசத்தோடு குருபணிவிடையைப் பண்ணிக்கொண்டு வெகுநாட் காத்திருக்கு மன்பினைக் கண்டு இவன் பரிபாகி இவனே யிவ்வீரசைவ தீட்சைக்கு யோக்கியனென்று கிருபை கூர்ந்து அவ்வாசாரியர் எ-று. (கஙஅ)

முன்னுளுபவாச முற்றுவித்துத் தாபித்த
மன்னுபஞ்ச கவ்விய மதுவருத்தி - மன்னுமைந்து
பூதசுத்தி யாகப் பொருந்தியதா னங்தொட்டுத்
தீதகற்றி மற்றைநா ளில்.

(இ-ள்.) தீட்சைபண்ணுங் காலத்துச் சீடனுடைய வயிற்றில் மலசலபெருந்தங்க ளிருக்கலாகா இருக்கிற் றமோகுணுதிக்கமா யிருக்குமென்னும் வசனத்தாற் றீட்சைக்கு விதித்த நாளுக்கு முன்னை நாட்டானே அவனைச்சுத்த வுபவாசமாகவைத்து நதிமுதலியவற்றில் சிவதீர்த்தங் கற்பித் ததனில் முழுகுவித்து விதிப்படி கூட்டி யிருக்கும் பஞ்சகவ்வியத்தைச் செனனங்கடோறுமார்ச்சித்திருக்கும் பாவமறச் சிவமந்திரத்தினுற் கொடுத்துப் பின்பு பூதசுத்தியாகும் வண்ணம், பூதசுத்தியாவன பிருதிவிபூதம் மூலாதாரந்தொடங்கிச் சுவாதிட்டானபரியந்தம் லிங்கத்தானத்திலே சதுரமாய்ப் பொன்வர்ணமாய்க் குலிசாயுதத்துடன் சத்த பரிச ரூபரச கந்தவத்தாய் லங்கென்னு மக்கரத்துடன் பிரமாவை அதிதேவதையாக வுடைத்தா யிருக்கும், அப்பூதத்தினையும் அம்மூர்த்தியினையுந் தியானம்பண்ணி, அத்தானத்தைப் பிர்மணே நமவென்று நியாசம்பண்ணிப் பத்திரபுட்பங்களினாலே அருச்சித்துத் தூபதீபங்கொடுத்தல், மே

லப்புப் பூதம் மணிபூரகமாகிய நாபித்தானத்திலே அர்த்த சந்திராகிருதியாய்ச் சுவேதவர்ணமாய்ச் சத்தபரிச ரூபரசமென்னு நான்கு குணத்தினை யுடையதாய் வவ்வென்னு மக்கரத்துடன் தாமரைப் பூவினையு முடைத்தாய் விஷ்ணுவை யதிதேவதையாகப் பெற்றிருக்கும், அப்புப்பூதத்தினையும் அத்தேவதையையுந் தியானம் பண்ணி யத்தானத்தைத் தொட்டு விஷ்ணுவே நமவென்று பத்திர புட்பஞ் சாத்தித் தூபதீபங்கொடுத்தல், தேயுப்பூதம் அனுகதமாகிய இருதயத் தானத்திற் றிரிகோணமாய்ச் சிவந்த நிறமாய்ச் சுவஸ்த்திக முத்திரையை யுடைத்தாய்ச் சத்தபரிசரூபகுணவத்தாய் ரவ்வென்னு மக்கரத்துடன் உருத்திரனை அதிதேவதையாக வுடைத்தாயிருக்கும், அப்பூதத்தினையும் அம்மூர்த்தியினையுந் தியானம் பண்ணி அத்தானத்தைத்தொட்டு ருத்திராயநமவென்று பத்திரபுட்பஞ்சாத்தித் தூபதீபங்கொடுத்தல், வாயுப்பூதம் - விசுத்தியாகிய கண்டத் தானத்தில் அறுகோணமாய் நீலவர்ணமாய் ஆறுபுள்ளியினை யுடைத்தாய்ச் சத்தபரிசகுணவத்தாய் யங்கென்னு மக்கரத்தையுடைத்தாய் மயேசுரமூர்த்தியை அதிதேவதையாகக் கொண்டிருக்கும், அப்பூதத்தினையும் அம்மூர்த்தியினையுந் தியானம்பண்ணி அத்தானத்தைத் தொட்டு மயேசுராயநமவென்று பத்திரபுட்பங்களினுல் அருசித்துத் தூபதீபங்கொடுத்தல், ஆகாசபூதம் - ஆக்கினையாகிய லலாடத்தானத்தில் வட்டமாய்த் தூமவர்ணமாய் அமிர்தவிந்துவுடன் சத்த குணமொன்றுமாய் ஹங்கென்னு மக்கரத்துடன் சதாசிவமூர்த்தியை அதிதேவதையாக வுடைத்தாயிருக்கும், அப்பூதத்தினையும் அம்மூர்த்தியையுந் தியானம் பண்ணிச் சதாசிவாயநமவென்று அத்தானத்தைத்தொட்டுப் பத்திரபுட்பஞ்சாத்தித் தூபதீபங்கொடுத்தல் ஆம். இப்படித் தியானம்பண்ணிப் பூசிக்கவே பூத சுத்தியாகும். இந்தப்பிரகாரமுன்னே நாடானேபூத சுத்தியினைப்பண்ணி மறுநாள், எ-று. (கசச)

கோயின்மட மன்னுங் குலவுநதி தீரமற்று
மாயதரு நீழல்வன மாமிவற்று - ளாயவொர்பாற்
றீக்கைக் கியல்பாகச் செய்துசெல்வ மண்டபந்தான்
றாக்கிவிதா னஞ்செய்த துள்.

(இ-ள்.) கோயின்மடம் - சிவாலயம் பெரியோர்கள் வாசம்பண்ணுந் தானம், மன்னுங்குலவுநதிதீரம் - நித்தியமாய்வருங் கங்கை காவேரி முதலாகிய புண்ணியநதிதீரம், ஆயதருநீழல் - சந்தன சண்பக மந்தார பாரிசாதவகுள வில்வமுதலாகிய புண்ணியவிருட்சநிழல், வனமாமிவற்றுளாயவொர்பால் - நந்தனவன முதலாகியவோர் தானத்தில், தீக்கைக்கியல்பாகச்செய்து செல்வமண்டபந்தான் றாக்கிவிதானஞ்செய்ததுள் (அத்தானத்திற்குப் பூருவதட்சிண பச்சிமவுத்தரவக்கினி யீசானமுதலிய திக்கிலே பூமியைச்சமஞ்செய்து சிற்பர்களால் சிவாகமம், 'துவாரவசுதாதுரசபூத' மென்று செப்புகையால் துவாரம் - க, வசு-அ, தாது-எ, ரசம்-சு, பூதம்-ரு, இம்முழங்களில் நாற்சதுரமாக நான்கு வாயில் விட்டுச் சுற்றிவரப் பன்னிரண்டு கால்களும் நடுவே நான்குகால்களும் ஆகப் பதினாறுகால்களால்) தீக்ஷாமண்டப நிர்மித்து (இம்மண்டபத்தை ஒன்

பதிற்கொன்பது எண்பத்தொரு பதம் பண்ணி நடுவே ஒன்பது பதத்திலே நாலுகாலுங்கூட வேதிகைபோட்டு அவ்வேதிகையை அஷ்டதளபத்மமாக வரைந்து மண்டபமுழுவதையும் கண்ணாடிபோல நிர்மலமாக்கிப்) பட்டுமுதலிய மேற்கட்டிகட்டி முத்துக்குச்சுகள்விட்டு நானாவித சல்லியசவரங்களாலும் திவ்விய சுகந்தபுட்பம் குருவேர் மருக்கொழுந்து முதலியவற்றாலு மலங்கரித்து உபயபாரிசங்களிலும் வெண்கொற்றக் குடைநிறுத்தி எட்டுத்திக்கிலும் ரிஷபக்கொடிகட்டி மாந்தழையினால் நாலுவாயிலிலுந் தோரணங்கட்டி இளநீர் வாழைப்பழத்தாறு கரும்பு கமுகு முதலிய நாட்டி அஷ்டமங்கலப் பலகையிட்டுத் தூபதீபங்கொடுத்துப் பின்பு வாஸ்த்துசாந்தியங்குராற்பண முதலிய செய்து மண்டபபூசையினைப் பண்ணிச் சிவாஸ்த்திராயநமவென்று மண்டபத்திலிருக்கும் வேதிகையில் சலம் புரோட்சித்துச் சமார்ச்சனசமாலேபனம்பண்ணி அதன்மேலும் கவ்வியமுங் கோரோசனையுங் கூட்டிச் சமாலேபனம்பண்ணி நல்ல முத்தினையும் படிகக்கல்லினையும் பொடித்து அதனால் ரேகையுண்டாக்கிப் பத்மத்தை நடுவே நிர்மித்து அப்பத்மத்தின்மேல் நெல்லும் அதின்மேற் கோதுமையும் அதின்மேலுளுந்தும் அதன்மேலெள்ளும் அதன்மேற் பச்சரிசியும் பரப்பி இருதய மந்திரத்தினாலே மாதிருகாசக்கரமெழுதி யர்ச்சித்ததன்மேல் பொற்கலசம் - வெள்ளிக்கலசம் தாம்பிரகலசம், இவை கிடையாதாயின் பவளம்போலச் சிவந்ததாய்க் கல்லுப்பொருக்குத் துவாரமில்லாததாய்க் கருகாததாய் நன்றாய் வெந்ததாய்க்குறுகியும் நீண்டு மிராததாய்ப் பிரமாணமுள்ளதாயிராநின்ற ஐந்து மட்கலசமெடுத்து அக்கலசத்தை அஸ்திரமந்திரத்தாற் சுத்திபண்ணி மூவிழைநூல்கொண்டு எட்கிடை - நெற்கிடை - ஆனைக்கண் அளவாக அகோரமந்திரத்தாற் சுற்றித் தாபித்து ஐந்துகும்பத்தையுங்கூட்டி நடுக்கலசத்திற்சுற்றிப் பின்பு கீழ்கலசத்திலும் அதன்பின்பு தெற்குக்கலசத்திலும் பின்பு வட கலசத்திலும் பின்பு மேற்குக்கலசத்திலும் வளைத்துச்சுற்றிப் பின்பு சுற்றிவர வொன்பதிழை சுற்றிச்சலம் பூரிக்குங்கால் அச்சலத்தைக் கங்கை யமுனை சரஸ்வதி கோதாவிரி துங்கபத்திரை காவேரிமுதலிய மகா தீர்த்தங்களாகப் பாவித்து இருதய மந்திரத்தினாலே நடுக்கலசத்திற் குறுணிசலத்துக்குக் குறையாமலும் மற்ற நாலுகலசங்களில் நாழுழி நாழுழி சலத்துக்குக் குறையாமலும் பூரித்துப் பின்பு மாவிலை அறுகு தருப்பை இவற்றைச் சிகாமந்திரத்தினாலும் தேங்காய் அல்லது இளநீரைச் சிரோமந்திரத்தினாலும் இவற்றோடு வெற்றிலை மாதுளம்பழமாகிய இவற்றைக் கலசங்கள்தோறும் வைத்துத் தற்புருஷ மந்திரத்தினால் மாணிக்கம் முத்துவயிரியம் நீலம் பவளமாகிய பஞ்சரத்தினங்களை வைக்க, இவை கிடையாவாயின் சுவர்ணபுஷ்பம் வைத்துக் கும்பங்கள் தோறும் வேறுவேறு வஸ்திரந்தரித்துப் பின்பு ஐந்து கும்பத்தையுஞ் சுற்றி யிருதய மந்திரத்தினாலே ஒரு வஸ்திரந் தரித்துக் கும்பத்தை மூர்த்திக்குத் தேகமாகவும், சலத்தை உதிரமாகவும், மந்திரத்தைப் பிராணனாகவும் பஞ்சரத்தினங்களை அஸ்தியாகவும், நூல்நாடியாகவும் வஸ்திரத்தைத் தோலாகவுந், தேங்காயைச் சிரசாகவும் தருப்பையைக் குடுமியாகவும் மாவிலையைச் சடையாகவும், வெற்றிலையை நாக்காகவும், மாதுளம்பழவிதையைத் தந்தமா

கவுந் தியானம்பண்ணிக் கலசசுத்தியாக மூல மந்திரத்தினலே எட்டுத்தரம் அபிமந்திரித்து அஸ்திர மந்திரத்தினலே திக்குபந்தனம் பண்ணுக. பின்பு அக் கலசத்தில் மகாதீர்த்தங்களாக ஆவாகனம்பண்ணி அச்சலத்தைத் தேசோமய மாகப் பாவித்துப் பின்பு முப்பத்தாறு தத்துவங்களையும் பிரித்துக் கும்பங்கள் தோறுந் தனித்தனியே கலசத்தடியில் 'ஓம்ஹாம் ஆத்மதத்துவாயநம, ஆத்மதத் துவாதிபதியே பிர்மணேநம' என்றும், கலசத்தின் மத்தியில் 'ஓம்ஹாம் வித்தி யாதத்துவாயநம, வித்தியாதத்துவாதிபதியே விஷ்ணுவேநம' என்றும், கலசத் தின்முகத்தில் 'ஓம்ஹாம்சிவதத்துவாயநம, சிவதத்துவாதிபதியே ருத்திராயநம' வென்றும் அர்ச்சித்து, இரண்டுபக்கங்களிலு நந்தி மகாகாளனை யர்ச்சித்துப் பின்பு மத்தியகலசத்தில் 'பராசத்தியேநம, சாந்தியாதீதகலாயநம, சிவசாதாக் கியாயநம, சதாசிவமூர்த்தியேநம, ஈசானவத்திராயநம, அல்லமாப்பிரபுகுருப் பியோநம' வென்று மூர்த்திகளை யர்ச்சித்துப் பின்பு கிழக்குக்கலசத்தில் 'ஆதி சத்தியேநம, சாந்திகலாயநம, அமூர்த்தி சாதாக்கியாயநம, ஈசமூர்த்தியேநம, தற்புருஷவத்திராயநம, ரேவணசித்தேஸ்வராயநம' வென்றர்ச்சித்துப் பின்பு தெற்குக்கலசத்தில் 'இச்சாசத்தியேநம, வித்தியாகலாயநம, மூர்த்தி சாதாக்கி யாயநம, பிரமீசமூர்த்தியேநம, அகோர வத்திராயநம, மருளசித்தேஸ்வராய நம' வென்றர்ச்சித்துப் பின்பு வடக்குக்கலசத்தில் 'ஞானசத்தியேநம, பிரதிஷ் ட்டாகலாயநம, கத்துருசாதாக்கியாயநம, ஈசுரமூர்த்தியேநம, வாமதேவ வத் திராயநம, ஏகோராமையாயநம' வென்றர்ச்சித்துப் பின்பு மேற்குக்கலசத்தில் 'கிரியாசத்தியேநம, நிவர்த்திகலாயநம, கன்மசாதாக்கியாயநம, ஈசானமூர்த்தி யேநம, சத்தியோசாதவத்திராயநம, பண்டிதாராத்திரியாயநம' வென்றர்ச்சி த்து, இங்ஙனம் அர்ச்சிக்கும்பொழு தவ்வக்கும்பங்களில் அவ்வம்மூர்த்திகளை ஆவாகனஞ்செய்து. ஆவாகனம் ஸ்தாபனம் சந்நிதானம் சந்நிரோதனம் திக்குப ந்தனம் அவகுண்டனம் தாளத்திரையம் தேனுமுத்திரைமுதலிய அஷ்ட்ட சமு ஸ்காரமுஞ்செய்து பாத்தியாசமனார்க்கியங்கொடுத்துப் பாவனுபிஷேகம் கந்த புஷ்ப நைவேத்திய தாம்பூல தூபதீபமுஞ் சமர்ப்பித்துத் தீட்சைக்கு அநுக் ஞைபெற்றுச் சதுரமாகக் கும்பத்திற்கு நிருதிதிக்கில் திருமெழுக்கிட்டு இருதய த்தாற் பத்திரஞ்சாத்திப் பச்சரிசிபரப்பி நவபதமிட்டு அதில், பத்மம், தற்ப ணம், கும்பம், ரிஷபம், யுக்மசாமரம், ஸ்ரீவற்சலம், சொஸ்திகம், சங்கம், தீபம், ஆகிய அஷ்ட்டமங்கல மெழுதித்தத்தமந்திரங்கொண் டர்ச்சித்துப்பின்பு கோஷ்ட்டபூசைபண்ணி மத்தியே சிவதத்துவகோஷ்ட்டாயநம, பூர்வேசதா சிவதத்துவகோஷ்ட்டாயநம, அக்கினி ஈசுரதத்துவகோஷ்ட்டாயநம, தட்ச ணே வித்தியாதத்துவகோஷ்ட்டாயநம, நைருதிமாயாதத்துவகோஷ்ட்டாயநம, பச்சிமே, காலதத்துவகோஷ்ட்டாயநம, வாயுவே நியதிதத்துவகோஷ்ட்டா யநம, உத்தரே புருஷதத்துவகோஷ்ட்டாயநம, ஈசான்யே பிரகிருதிதத்துவ கோஷ்ட்டாயநம, வென்றர்ச்சித்துப் பின்பு ஒன்பது பாத்திரங்களையும் அஸ்த் திராயநமவென் றலம்பி நவகோஷ்ட்டங்களிலும் வைத்து, மத்தியே சுப்பிர திஷ்ட்ட பாத்திராயநம, பூர்வே சுசாந்தபாத்திராயநம, அக்கினி தேசோமய பாத்திராயநம, தட்சிணே அமிர்தபாத்திராயநம, நைருதி ரத்திஞேதகபாத்தி

ராயநம, பச்சிமே அவ்வியக்தபாத்திராயநம, வாயுவே சுவ்வியக்தபாத்திராய நம, உத்தரோ சூரியபாத்திராயநம, ஈசானே சம்யுக்தபாத்திராயநம, என்று நவ பாத்திரங்களையு மர்ச்சித்துப் பின்பு மத்தியே க்ஷீரம் பூர்வேததி தட்சிணே இரு தம், உத்தரோகோசலம், பச்சிமே கோமயம் ஈசான்யே கோரோசனகுஜோதகம், ஆக்கினேயே பிஷ்ட்டம்நைருதி ரஜனி, வாயுவே ஆமலகமுமாகப் பூரித்து க்ஷீரத் தில் கௌசிகாயநம, ததியில் காசிபாயநம, இருதத்தில் பரத்துவாசாயநம, கோ சலத்தில் அத்திரியாயநம, கோமயத்தில் கௌதமாயநம, பிஷ்ட்டத்தில் உமா யைநம, ரஜனியில்சரஸ்வதியேநம, ஆமலகத்தில் லட்சுமியேநம, கோரோசன குஜோதகத்தில் பார்வதியேநம, வென்றர்ச்சித்துப் பின்பு மத்தியேசாந்தியாதீத கலாயநம, பூர்வேசாந்திகலாயநம, தட்சிணே வித்தியாகலாயநம, உத்தரோ பிர திஷ்ட்டாகலாயநம, பச்சிமே நிவர்த்திகலாயநம, வென்றர்ச்சித்துப் பின்பு நடு வட்டகையில் நிரீட்சணுதி நாலுமுத்திரையுங் கொடுத்து மூடி ஈசானம் ஓருருச் சேபித்துத் திக்குபந்தனம் அவகுண்டனந் தாளத்திரையந் தேனுமுத்திரை மகா முத்திரையுங்கொடுத்துப் பரிமீரகணம்பண்ணிக் கிழக்குவட்டகையில் மூடித்தற் புருஷம் இரண்டுருச்செபித்து மற்ற முத்திரையுங் கொடுத்து, தெற்குவட்டகை யில் மூடி அகோரம் மூன்றுருச்செபித்து மற்றமுத்திரையுங் கொடுத்து, வடக்கு வட்டகையில் மூடி வாமதேவம் நாலுருச்செபித்து மற்றமுத்திரையுங் கொடு த்து, மேற்குவட்டகையில் மூடிச் சத்தியோசாதம் ஐந்துருச்செபித்து மற்ற முத் திரையுங்கொடுத்து ஆக்கினேயத்தில் இருதயமோருருச்செபித்து நைருதியில் சிர மந்திரமோருருச்செபித்து வாயுவில் சிகாமந்திரமோருருச்செபித்து ஈசானியத் தில் சிவகாயத்திரி பன்னிரண்டுருச்செபித்துப் பின்பு கந்தாட்சதை புட்பஞ்சா த்தி நிரீட்சணுதியஷ்ட்ட சமுஸ்காரமுஞ்செய்து நைவேத்தியதாம்பூலஞ் சமர்ப் பித்துத் தூபதீபங்கொடுத்துச் சீடன் விரக்தனுனல் சங்காரக்கிரமமாகப் பண் ணிக் கிருகஸ்த்தனுனல் சிருட்டிக்கிரமமாகப் பண்ணிப்பின்பு சத்தியோசாத வாம அகோரதற்புருஷ ஈசானுப்பியோநமவென்று கோமயத்தைக் கோசலத்தி லும், கோசலத்தை நெய்யிலும் நெய்யைத்தயிரிலும் தயிரைப்பாலிலுங் கூட் டிப் பதினெருமந்திரத்தாற் புட்பஞ் சாத்தி மூடி ஈசானுதி பஞ்சப்பிரமத்தா லபிமந்திரித்துத் திக்குபந்தனம் அவகுண்டனம் தாளத்திரையம் தேனுமுத்திரை யுங்கொடுத்துக் கந்தாட்சதை புட்பஞ்சாத்தி நைவேத்திய தாம்பூலஞ் சமர்ப்பித் துத்தூபதீபங்கொடுத்துப் பின்பு கும்பத்துக்கீசானதிக்கில் நவகோட்டஞ் செய் து கும்பத்தை அஸ்த்திரத்தா லலம்பி நடுக்கோட்டத்தில் வைத்து இருதயத்தாற் சலம் பூரித்து மாந்தளிர் அறுகு நாகவல்லிதளம் தருப்பை தேங்காய் இவற்றை விதிப்படி வைத்துக் கும்பத்தைச்சிவமாகப்பாவனைபண்ணித் தத்துவத்திரையம் சத்திகலை, சாதாக்கியம் வத்திரம் மூர்த்திகளை யர்ச்சித்துப் பின்பு பாசுபதா ஸ்த்திரத்தை யர்ச்சித்து ஆவாகனுதி யஷ்ட்ட சமுஸ்காரமுஞ்செய்து நை வேத்தியதாம்பூல தூபதீபங்கொடுத்துப் பின்பு பூர்வாதி யெட்டுத்திக்கிலும் அனந்தாயநம, சூட்சுமாயநம, சிவோத்தமாயநம, ஏகநேத்திராயநம, ஏகருத்தி ராயநம, திரிமூர்த்தையேநம, ஸ்ரீகண்டாயநம, ஸ்ரீகண்டிநேநமவென்று அஷ்ட்

டவித்தியேஸ்வரர்களையும் ஆசனமூர்த்தி மூலங்களால் அர்ச்சித்துக் கந்தாட்சதை புட்பதூபதீபங்களாலர்ச்சித்து இங்ஙனங் கும்பஸ்த்தாபனம் பஞ்சகௌவியஸ்த்தாபனம் ஸ்த்தபனகலசஸ்த்தாபனம் பண்ணிக்கொண்டு பின்பு உடல்பொருளாவிமூன்றையுந் தரத்தக்க மாணுக்கனை யழைத்து, எ-று. (கசரு)

மந்திரமா நீரின் மகிழ்ந்து முழுகுவித்துச்
சந்தத் துகில்புனைந்து தானொளியே - வந்தநல்ல
நீறு புனைவித்து நிகழ்சுகந்த மாலைசந்து
நாறுகள பம்மணிவித் து.

(இ-ள்.) மந்திரமாநீரின்மகிழ்ந்து முழுகுவித்து - மந்திரதீர்த்தங்கற்பித்து அத்தீர்த்தத்தி லச்சீடனைமகிழ்ச்சி பிறக்கமுழுகுவித்து, சந்தத்துகில்புனைந்து - நல்லவெண்பட்டு வஸ்த்திரம் இரண்டுகொண்டு உடையுத்தரியமாகத் தரித்துக்கொள்ளச்சொல்லி - தானொளியேவந்த நல்லநீறுபுனைவித்து நிகழ்சுகந்தமாலைசந்துநாறுகளபம்மணிவித்து - மிகுந்தவெண்மையினை யுடைத்தாய்க் கற்பப்பிரகாரஞ் சமைந்திருக்கும் விபூதியைத் தரிப்பித்துச் சந்தனகளப கத்தூரிகளுந் திவ்வியாபரணங்களும் சுகந்தமலர்மாலைகளுந் தரிப்பித்து எ-று. (கசசு)

மண்டபத்தி னுள்ளே மகிழவோர் தானத்தை
விண்டமெழுக் காற்சதுரங் கொண்டவிடங் - கண்டவிடத்
துற்றருக்கி யந்தா னுரிமையுடன் ஞூபித்திட்
டுற்றெதிராய் மற்றிருத்திப் பின்.

(இ-ள்.) அந்த மண்டபத்தி லீசானதிக்கில் பிடிமுழஞ் சதுரமாக முன்சொன்ன மந்திரத்தினலே மெழுகி யொருபத்திரம்வைத்து பச்சரிசிபடி பரப்பி நாற்சதுரமுண்டாக்கி யந்தச் சதுரத்திலே யந்திரபீடமிட்டு ஒரு வட்டகையை அத்திரத்தாற்கழுவி இருதயத்தாற் சலம்பூரித்து நிரீட்சணுதி நாலுமுத்திரையுங்கொடுத்துப் பிரணவத்தா லொன்பதுபத்திரங்கிள்ளிச் சாத்தி யெழுதரமபிமந்திரித்துத் திக்குபந்தனம் அவகுண்டனந் தாளத்திரயந் தேனுமுத்திரைகொடுத்துக் கந்தாட்சதை புட்பஞ்சாத்தி நைவேத்தியதாம்பூலஞ் சமர்ப்பித்து இங்ஙனஞ் சாமானியர்க்கியந் தாபித்துக்கொண்டு பின்பு சீடனை நமஸ்கரிப்பித்துத் தமதெதிராக வோராதனத் திருக்கச்செய்து, எ-று. (கசஎ)

காயசுத்தி பண்ணிக் கருதியதா னங்கடனி
லாய விபூதி யணிவித்து - நேயமுடன்
றன்னைப் பணிவித்துச் சச்சிதா னந்தவொளி
துன்னுஞ் சிவகரம்வைத் து.

(இ-ள்.) காயசுத்திபண்ணிக் கருதியதானங்கடனிலாய விபூதியணிவித்து-முன்னைநாடானே பஞ்சகவ்வியங்கொடுத்துப் பூதசுத்தி பண்ணப்பட்டிருக்குஞ் சீடனுக்குக் கற்பமாகச் சமைந்திருக்கும் விபூதியைச் 'சிவாயவவுஷடு'வென்று

அவனிடதுகையில் வைப்பித்துச் 'சத்தியோசாத வவுஷடு' வென்று சலம் விடுவித்து நீரீட்சணுதி சுத்திபண்ணுவித்து மூடச்செய்து பிரணவ பஞ்சாக்கரங் கொண்டு பதினொருருச் செபிப்பித்து அச்கினிரிதிபஸ்மம், சலரிதிபஸ்மம், தலரிதிபஸ்மம், வாயுரிதிபஸ்மம், வியோமரிதிபஸ்மம், சோமரிதிபஸ்மம், சூரியரிதிபஸ்மம், ஆத்மரிதி பஸ்மம், ஆகவெட்டு மந்திரமுஞ் செபிப்பித்து, 'ஆங் ஆங் சிவாயநம' வென்று குழைப்பித்துப் பிரணவம் வளைந்துகராங் குஷ்ட்டங்களினாலே சிரசிலே 'ஓம் மகாதேவருத்திராயநம' வென்றும், நெற்றியில் 'ஓம்பிரமேந்திர ருத்திராயநம' வென்றும், வலதுசெவியில் 'பரமபஞ்சாக்கர ருத்திராயநம' வென்றும், இடதுசெவியில் 'நிராகாரசாகாரசம்பன்னருத்திராயநம' வென்றும், வலது நயனத்தில் 'ஓம்சோதிப்பிரகாச ருத்திராயநம' வென்றும், இடதுநயனத்தில் 'ஓம்பார்வதி பிராணநாயகருத்திராயநம' வென்றும், வலதுநாசியில் 'ஓம்பரிமளசுகந்த ருத்திராயநம' வென்றும், இடதுநாசியில் 'ஓம்சந்திரகளாயருத்திராயநம' வென்றும், சிங்குவையில் 'ஓம்பிரசாத தேவருத்திராயநம' வென்றும், வலதுகுஜத்தில் 'ஓம்கின்னரகிம்புருஷருத்திராயநம' வென்றும், இடதுகுஜத்தில் 'ஓம் தேவேந்திரருத்திராயநம' வென்றும், மார்பிற் 'கறைக்கண்டருத்திராயநம' வென்றும், உந்தியில் 'ஓம்நாராயணப்பிரியருத்திராயநம' வென்றும், வலதுமுழந்தாளில் 'ஓம்பரமேசுர ருத்திராயநம' என்றும், இடதுமுழந்தாளில் 'ஓம்தேவதேவசிகாமணிருத்திராயநம' என்றும், வலதுதோளில் 'ஓம்நாகபூஷணருத்திராயநம' வென்றும், இடதுதோளில் 'ஓம் கோதண்டருத்திராயநம' என்றும், வலதுவாகுவில் 'ஓம் அபையகரருத்திராயநம' என்றும், இடதுவாகுவில் 'ஓம் சின்மயருத்திராயநம' என்றும், வலதுமணிக்கட்டில் 'ஓம் ஈஸ்வரிபிராணநாயகருத்திராயநம' என்றும், இடதுமணிக்கட்டில் 'ஓம் கரதலசாந்தருத்திராயநம' என்றும், கண்டத்தில் 'ஓம் கறைக்கண்ட ருத்திராயநம' என்றும், பிடரியில் 'ஓம் பசுபதிருத்திராயநம' என்றும், முதுகில் 'ஓம் அகோரருத்திராயநம' என்றும், வலது விலாப்புறத்தில் 'ஓம் நிராமயருத்திராயநம' என்றும், இடதுவிலாப்புறத்தில் 'ஓம் நிராமய ருத்திராயநம' என்றும், குய்யத்தில் 'ஓம் கூசகக்ஷருத்திராயநம' என்றும், வலதுதொடையில் 'ஓம் இந்திரருத்திராயநம' என்றும், இடதுதொடையில் 'ஓம் கபாலருத்திராயநம' என்றும், வலதுகணைக்காலில் 'ஓம்சிவோத்தமருத்திராயநம' என்றும், இடதுகணைக்காலில் 'ஓம் ஏகநேத்திரருத்திராயநம' என்றும், வலது அங்குட்டத்தில் 'ஓம் தீர்த்தப்பிரசாதருத்திராயநம' என்றும், இடது அங்குட்டத்தில் 'ஓம் தாத்திருத்திராயநம' என்றும், விபூதிதரிப்பித்துச் சிரசு நெற்றி மார்பு இரண்டு தோளினும் ஆறங்குலந் தரிப்பித்து மற்றைத்தானங்களிலெல்லாமோரங்குலந் தரிப்பித்துப் பின்பு அக்கைகளை இருதயத்தாற் கழுவிக் கும்பமுத்திரையாகப் பிடிப்பித்து மூலமந்திரத்தினற் சிரசிலே புரோட்சிப்பித்துப் பின்பு, நேயமுடன் றன்னைப்பணிவித்து - மிகுந்த நேயத்தோடு தம்மை நமஸ்காரம் பண்ணுவித்து, சச்சிதாநந்தவொளி துன்னுஞ் சிவகரம்வைத்து - சச்சிதானந்த சிவசொரூபமாகத் தம்முடைய அஸ்தத்தைப் பாவனைபண்ணிச் சீடனுடைய சிரசிலே சிவ அஸ்தம்வைத்துப் பரிசதீட்சைபண்ணி, எ-று. (கசஅ)

மற்றுமைந்தன் றன்னை மகிழ்ந்து கருணையிறு
லுற்றகரம் பற்றி யுவப்பிறு - லுற்றவருள்
சந்ததமு நீங்காத் தகுதிபெற வேகினைந்து
தந்து சிவசமுகத் தை.

(இ-ள்.) மறுபடியுஞ் சீடனை மகிழ்ச்சியோடு கிருபையாகப் பார்த்து எப்போதுந் திருவருளைவிட்டுப் பிரியாம லருண்மயமாகத் தியானித்துப் பின்பு சீடன் கையைப்பிடித்துக்கொண் டெழுந்திருந்து தமது கணங்கள் கூடியிருக்குந் தானத்திற்சென்று எ-று. (கசகூ)

தெண்ட னிடுவித் தனுக்கிரகஞ் செய்வித்துக்
கொண்டுவந்து கும்பத்திற் ருபித்த - வண்டர்
பெருமானை யட்டாங்க பஞ்சாங்கத் தோடு
முரிமையுட னேபணிவித் து.

(இ-ள்.) தெண்ட னிடுவித் தனுக்கிரகஞ் செய்வித்து - அக்கணங்களின் சந்நிதானத்திற் றெண்ட னிடுவித்து அக்கணங்களுக் கிவன் தீட்சை பண்ணிக்கொள்ள வந்த செய்தியை யறிவித்து அவர்களாலேயுஞ் சீடனுக் கநுக்கிரகத்தைப் பண்ணுவித்து, கொண்டுவந்து கும்பத்திற்ருபித்த வண்டர் பெருமானை யட்டாங்க பஞ்சாங்கத்தோடு முரிமையுடனே பணிவித்து-பின்பு சீடனை யழைத்துக்கொண்டுவந்து ஈசானுதி பஞ்சவத்திரங்களையும் பிரபுமுதலாசாரியனையுந் தாபித்திருக்குங் கும்பத்தின் சந்நிதானத்திலே அஷ்டாங்க பஞ்சாங்கங்களுடன் நமஸ்காரம் பண்ணுவித்து, எ-று. (கரு௦)

தனக்கங் கெதிராகத் தன்மைந்தன் றன்னை
மனத்தினிருண் மாள விருத்திக் - கனத்தவினை
கிட்டா தொழியக் கிருபையிறுற் கங்கணத்தை
யிட்டமுற வேகட்டிப் பின்.

(இ-ள்.) தனக்கங்கெதிராகத் தன்மைந்தன் றன்னை மனத்தினிருள்மாள விருத்தி - சீடனைத் தமக்குமுன்பாகச் சொஸ்திகாசனங்கொடுத்து அவனறிவைப்பற்றிய வாணவாதி பாசங்களைக் கெடுக்க விருக்கச்சொல்லி, கனத்தவினை கிட்டாதொழியக் கிருபையிறுற் கங்கணத்தை யிட்டமுறவேகட்டிப் பின் - சீடனுற் சென்மங்கள்தோறு மார்ச்சிக்கப்பட்ட வெகுவாகக் கடடுப்பட்டிருக்குங் கன்மங்களெல்லா நாசத்தை யடையக் கிருபையிறுலே நூலில் மஞ்சள்பூசி மாந்தழைமுடிந்து அந்நூலாகிய ரட்சாபந்தனத்தை 'ஆத்மதத்துவாயநம, வித்தியாதத்துவாயநம, சிவதத்துவாயநம, ஆதாரசத்தியேநம, பிரகிருதிதத்துவாயநம, சத்தகோடிமகாமந்திராயநம, மாயாதத்துவாயநம, லகுளீசாயநம, அனந்தாயநம, திரியம்பகாயநம, பாபகன்மவிநாசாயநம' வென்றர்ச்சித்து வலதுகையிற் றரித்து அதில் 'பற்பாயநம' வென்று விபூதியிட்டுத் தூபதீபங்கொடுத்துப் பின்பு, எ-று. (கருக)

கட்டியதா ரந்தன் கனைகழற்பொற் பாதத்திற்
கட்டியபின் னீறுடனே கண்டிகையை - யிட்டமுறச்
சொல்லும் விதிப்படியே சோர்வறச்சாத் தித்தரித்துப்
புல்லிந் தியலிகிதத் தை.

(இ-ள்.) கட்டியதா ரந்தன் கனைகழற் பொற்பாதத்திற் கட்டியபின் - அனு சூத்திரபந்தாயநமவென்று ஒரு சூத்திரத்தைச் சீடனுடைய வலதுகைக்குந் தம துபாதத்துக்கும் நாடி சந்தானம்பண்ணித் தூபதீபங்கொடுத்துப் பின்பு, நீறுட னே கண்டிகையை யிட்டமுறச்சொல்லும் விதிப்படியே சோர்வறச்சாத்தித் தரித்து - விபூதியைக் குழைத்துச் சோடசதானங்களிலே, ஈசானுதிமந்திரங் கொண்டு தரித்து ருத்திராட்சத்தைச் சிரசுமுதலிய தானங்களிற்றரித்து, புல் லிந்திய லிகிதத் தை - பொருந்திய விந்தியலிகிதத்தை, எ-று. (கருஉ)

துடைத்திலிங்க நல்லிகிதந் தூய்மை யுடனே
யடுத்தநியா சத்தினு லார - மடுத்ததற்பின்
மாயா போகத்தின் மகிழ்ந்துபற்றி நீங்காத
தீயமனந் தூய்மையுற வே.

(இ-ள்.) துடைத்திலிங்க நல்லிகிதந் தூய்மையுடனே யடுத்த நியாசத்தி னுலாரமடுத்ததற்பின் - முற்கூறிய இந்திரிய லிகிதத்தைப்போக்கி அந்தந்தத் தானங்களில் ஆசாராதிலிங்க பீசாட்சரமாகிய சடாக்கரத்தை நியாசபூருவகமா கத் தாபித்து அதன்பின்பு, மாயாபோகத்தில் மகிழ்ந்து பற்றி நீங்காததீயமனந் தூய்மையுறவே - மாயாகாரியமாகிய சற்சந்தனவனிதாதிபோகங்களிலே மகிழ் ந்து தேனிற்படிந்த ஈப்போலக் கிடக்கும் அந்தக்கரணத்தைச் சுத்திபண்ணி, எ-று.

சுத்திசெய்யுமாறு 'மனோத்தியானே, சித்தேசிவா, புத்திதிடா, அகங்கா ரேஇங்கிருவாண' வென்று சொல்லி நாலுபத்திரம் இருதயத்தாற் சாத்தித் தூப தீபங்கொடுத்தல், இத்தீக்கை வீரசாமான்னிய தீக்கை யாகையால் இவர்கட்குக் காயசுத்திமாத்திரமே, சீவசுத்தி ஆத்மசுத்தி இரண்டு மிவர்கட்கில்லை. ஆகை யா லச்சுத்தி வீரவிசேடம் வீரநிராபாரசத்தென வறிக. (கருங)

அனலுருவச் சோதி யதுநினைந்து நல்ல
சலமதனி லேயிலிங்கந் தன்னை - யிலகவே
வாசமது செய்துபின்பு வானவிசு வாதிகபின்
றேசனைத்து மென்றெடுத் தே.

சிலைசுத்தி செய்துபிரா ணப்ரதிட்டை பண்ணி
நிலவுதப னஞ்செய்தபி டேக - மிலகவே
யாட்டியபின் னுடை யதுசாத்தி நல்லவொளி
நாட்டும் விபூதிதரித் து.

பூணநூல்பட் டாடை புகழ்கந்த மட்சதைபூச்
சேனுறச்சாத் தித்தூப தீபமது - வீணகல
வன்பாற் சமர்ப்பித்திட் டானவுப சாரமெலா
மின்பமுற வெய்துவித்த பின்.

நைவேத் தியம்பண்ணி நன்றாகத் தூய்மைசெய்திட்
டையமறத் தாம்பூல மற்பித்து - மெய்யான
மந்திர புட்ப மணிந்துவந் தித்தபின்ன
ருந்துமனுட் டானமுளுற் றி.

[இவைநான்கு வெண்பாவு மொருதொடர்.]

க-ம் வெண்பா.

(இ-ள்.) அனலுருவச் சோதி யதுகினைந்துநல்ல சலமதனிலே யிலிங்கந் தன்னை யிலகவே வாசமது செய்துபின்பு - விஷரோகை யருணபிந்துக்களின்றிப் பஞ்சசூத்திரப் பிரகாரமா யிருக்குஞ் சிவலிங்கத்தைப்பாஷாணசுத்தி நிமித்தம் ஒரு பாத்திரத்தைச் சுத்திபண்ணி யதிற் சலம் பூரித்துச் சலசுத்திசெய்து பின்பு சிவலிங்கத்தை யெடுத்து சுவாலாமாலா விருதாங்காய சுவாலினிஸ்த்தம் பருபிணே, நமசிவாய சாந்தாய பிர்ம்மணே லிங்கமூர்த்தையேநம வென்கின்ற மந்திரத்தினாலே ஜலாதிவாசம் பண்ணுவித்துப் பின்பு - வானவிசுவாதிகபின்றே சமனைத்துமென்றெடுத்தே, விசுவதச்சட்சுருத, விசுவதோபாகுருத, விசுவதப் பாது சம்பாகுப்பியாம், மிதிசம்வதாது, என்கின்ற மந்திரத்தினாற் சலம்விட் டெடுத்து, எ-று. (கருச)

உ-ம் வெண்பா.

(இ-ள்.) சிலைசுத்திசெய்து பிரா ணப்ரதிட்டைபண்ணி - மேலும் பாஷா ணசுத்தியின் பொருட்டு பஞ்சமிருத்திகை, பஞ்சதுவக்கு, பஞ்சபல்லவமுதலி யனவற்றால் அபிஷேகஞ்செய்து பின்பு தானியவாசஞ் செய்வித்துப்பின்பு பட் டுமெத்தையிலே ஒருவஸ்த்திரத்தால் மூடிச் சயனம் பண்ணுவித்துப் பின் பவ்விலிங்கத்தைக் கண்டத்திரையமாகப் பாவனைபண்ணி யப்பங்கில் தத்துவத் திரையத்தை யர்ச்சித்துப் பின்பு அச்சிவலிங்கத்தை ஐந்துபங்காகப் பாவித்து அப்பங்கில் பஞ்சகர்த்தர்களாகிய பிரமாதிகளை யர்ச்சித்துச் செவ்வே யெழுந் தருளப்பண்ணி மூலமந்திரத்தால் விபூதிதரித்துப் பின்பு சத்தியோ சாதவத் திரமுதலைந்துங் கனிட்டையாதியங்குட்டாந்தமாக நிசித்துப் பின்பு நேத்திரங் களை நிசித்துப்பின்பு ஆசனமூர்த்தி மூலங்களை யர்ச்சித்துப்பின்பு வித்தியா தேகங்கொடுத்துப் பின்பு இருதயாதிசடங்கங்களை அங்குஷ்ட்டாதிகனிஷ்ட்டா ந்தமாக நிசித்துப் பின்பு பிராண பிரதிஷ்ட்டைபண்ணி, பிராணபிரதிட்டை முதலிய செய்யுமாறு - விஸ்வாதிகோ ருத்திரோமகாரிஷி சர்வோபநிஷத்ருத் திர: தஸ்மோர்ருத்திராயநமோநம: என்கின்ற மந்திரத்தினாலே பிராணபிரதிஷ் ட்டை செய்து, ஆவாகனம் ஸ்தாபனம் சந்நிதானம் சந்நிரோதனம் திக்பந்த

னம் அவகுண்டனம் தாளத்திரையம் தேனுமுத்திரை முதலாயின கொடுத்த லாம். நிலவுதபனஞ்செய் தபிடேக மிலகவேயாட்டியபின் - விதிப்படி யமைத் திருக்கிற சுத்தோதகம் எண்ணெய் முதலிய வபிஷேக திரவியங்களை யெல் லாம் "ஓம்-சும்-சஹா-சஹா-சும்-ஓம்" தத்மஹேசாயவித்மஹி, வாக்விசுத்தாய தீமஹி, தந்நோசிவப்பிரஜோதயாது - என்கின்ற மந்திரங்களினாலும் நமக-சமக- என்னும் ஸ்ரீருத்திரங்களினாலும் அபிஷேகஞ்செய்து பின்பு ஸ்த்தபனகலச அபி ஷேகமும் பண்ணியபின், ஆடையதுசாத்தி நல்ல வொளிகாட்டும் விபூதிதரி த்து-திருவொற்றாடை சாத்திப் பரிவட்டங் தரித்து அதிதாவள்ளியமான விபூ தியுந்தரித்து, எ-று. (கருரு)

## ௩-ம் வெண்பா.

(இ-ள்.) பூணநூல்பட் டாடை புகழ்கந்த மட்சதைபூச் சேணுறச்சாத்தித் தூபதீபமது வீணகலவன்பாற் சமர்ப்பித்திட்டு - எக்யோபவீதம், பட்டுவஸ்த்தி ரம், சந்தனம், அட்சதை, புட்ப முதலியனவெல்லாந் தரித்துத் தூபதீபங்கொ டுத்து, ஆனவுபசாரமெலா மின்பமுற வெய்துவித்தபின் - மற்றுஞ் செய்யவே ண்டிய வுபசாரங்களையெல்லாம் அன்பினாற் செய்து பின்பு, எ-று. (கருசு)

## ச-ம் வெண்பா.

(இ-ள்.) நைவேத் தியம்பண்ணி நன்குகத் தூய்மைசெய்திட்டு - சித்திரா ன்னமுதலிய பலநைவேத்தியங்களுஞ் செய்து பாத்தியாசமனார்க்கியங்கொடு த்து, ஐயமறத்தாம்பூலமற்பித்து - தாம்பூலஞ் சமர்ப்பித்து, மெய்யானமந்திர புட்பமணிந்து வந்தித்தபின்னர் - அஷ்ட்டபுட்பந்தரித்துத் தோத்திரஞ்செய்து கிரியைகளை முடித்துப் பின்பு, உந்துமனுஷ்ட்டானமுஞற்றி - சீடனது அங்கத் தலத்தி லனுஷ்ட்டானத்தையுஞ் செய்து, எ-று. (கருஎ)

மைந்தனங்க மாங்கத்தை மற்றினிது சோதித்திட்
டிந்து தரனையங்கத் தேதரித்து - மைந்தனைத்தான்
வாயுப் பிராணனற வாங்கிநல்லிங் கப்ராணன்
றூய்மையுடன் செய்தக்குரோ தம்.

(இ-ள்.) மைந்தனங்க மாங்கத்தை மற்றினிது சோதித்திட்டு-பின்பு சீடன து கரத்தை பஞ்சகவ்வியமுதலான திரவியங்களால் அபிஷேகம்பண்ணி அஸ்த் திரத்தாற் புரோட்சித்துக் கரசோதனைபண்ணிப்பின்பு, இந்துதரனையங்கத் தே தரித்து மைந்தனைத்தான்-சீடனது மந்திராங்கத்தில் சந்திர சேகரனாகிய சிவலி ங்கப்பெருமானைச் சிரசுமுதலிய தானங்களிலே "அயம்மே அஸ்த்தோபகவான், அயம்மே பகவத்திர:, அயம்மே விஸ்வபேக்ஷஸம், அயம் சிவாபிமறுசென்மமா, அயம்மாதா, அயம் பிதா, அயம் சிவாதுராகமாது"என்ற மந்திரத்தினாற் றரித் துப்பின்பு புட்பந்தரித்துத் தூபதீபங்கொடுத்து, வாயுப் பிராணனற வாங்கிலிங் கப்ராணன் றூய்மையுடன் செய்தக்குரோ தம் - பின்பு பிராணவாயு வாதாரமா யிருந்த சிவனை லிங்கமாதாரமாகக்கற்பித்து, தூபதீபங்கொடுத்துப் பின்பு சடா

க்கரத்துடன் 'பஞ்சப்பிராணாயசுவாகா'வென் றுபதேசம்பண்ணிச் சிரசுமுதலாகிய தானங்களையும் அந்தந்த மந்திரத்தாற் றொட்டு லிங்கப்பிராணியாகச் செய்து பின்பு சாந்ததயா, எ-று. (கருஅ)

நன்றா யனுக்ரகித்து நாடும் வினையதுநீ
வென்றிடுவை யென்று விபூதிபட்டங் - குன்றாமற்
கட்டி யவலிகிதங் காதிற் சிவலிகித
மிட்டினிய வத்தமும்வைத் து.

(இ-ள்.) நன்றா யனுக்ரகித்து நாடும் வினையதுநீ வென்றிடுவை யென்று விபூதிபட்டங் குன்றாமற் கட்டி - பின்பு சீடனுக்குக் குருலிங்கசங்கமத்தினிடத்திற் கோபம் வராமற் காத்து அவர்களைச் சிவரூபமாகக்கண்டு வழிபடக்கடவாயென் றுபதேசித்து இனிச் சஞ்சிதமாகக் கட்டுப்பட்டுவரும் ஆகாமிய கன்மமேறாதபடிக்குச் செயிப்பாய் நீயென்று விபூதிதரித்து, அவலிகிதங் காதிற் சிவலிகித மிட்டினிய வத்தமும்வைத் து - பிரமனாற் பிராரத்தகன்மத்துக்கீடாக வமைக்கப்பட்ட வமைப்பெல்லாந் தள்ளிச் சிவகற்பனையாக்கிச் சிவாஸ்த்தம் சிரசினில்வைத்து, எ-று. (கருக)

பஞ்சாக் கரமாம் பரம வுபதேச
நெஞ்சமிடங் கொண்டு நிகழ்ந்தவன்பு - பொஞ்சவே
நற்கருணை யாலே நயந்துபதே சம்பண்ணி
யற்புதமா நோக்களித்தம் மா.

(இ-ள்.) பஞ்சாக் கரமாம் பரம வுபதேச நெஞ்சமிடங் கொண்டு நிகழ்ந்தவன்பு பொஞ்சவே - "ஹாம் - ஹீம் - ஹௌம்" என்னுஞ் சிரப்பல்லவங்களோடு பிரணவசகிதமாய் நகாராதியகாராந்தமாக ஸ்ரீபஞ்சாக்ஷரவுபதேசத்தை மிகுந்த கிருபையினாலே சீடனது காதுவழியாகப் புகுந்து அவனுடைய இருதயமே தானமாகவமர மிகுந்த அன்பு பெருகி, நற்கருணை யாலே நயந்துபதே சம்பண்ணி - கிருபையாலே மகிழ்ந் துபதேசத்தைச்செய்து, அற்புதமா நோக்களித்தம் மா - பின்னும் ஞானநோக்காற் பார்த்து, எ-று. (கசு0)

தூல வுடம்பிற் றெருகுமிந் திரியத்திற்
சாலப் பொருந்தத் தகுவிடயங் - கோலமதாங்
கண்ணாதி யாலிலிங்கங் காணுங் கருத்துணர்த்தி
யெண்ணியநற் பூசைதனக் கு.

(இ-ள்.) தூல வுடம்பிற் றெருகுமிந் திரியத்திற் சாலப் பொருந்தத் தகுவிடயம் - பின்னு மாசாரியர் சீடனைப்பார்த்து அவனது தூல்சரீரத்திற் பொருந்திய ஞானேந்திரியவழித்தாய் வரப்பட்ட சத்தாதிவிடயங்களையும், கோலமதாங்கண்ணாதி யாலிலிங்கங் காணுங் கருத்துணர்த்தி - அழகிய கண்முதலிய ஞானேந்திரியத் தானங்களினும் ஆசாராதி இலிங்கங்களிருந்தறிவிக்குந் தன்மையையு மறிவித்து, எண்ணியநற் பூசைதனக் கு - பின்பு கருதிச்செய்யும்பூசைக்கு, எ-று.()

சொல்லியதி லோர்காலஞ் சோர்வறவே யர்ச்சித்திட்
டல்ல லறத்தமையு மப்படியே - சொல்லும்
வழிபாடு நீங்காமை மன்னும் விரத
மழியாது நில்லென்றன் பால்.

(இ-ள்.) சொல்லியதி லோர்காலஞ் சோர்வறவே யர்ச்சித்திட்டு - பூசைக்கு விதித்த வுதயகாலம் மத்தியானகாலஞ் சாயங்காலமென்னு மூன்றுகாலங்களுக்குள் உனக்கு வீரசாமான்னிய தீட்சைமாத்திர மாதலால் உதயகால பூசைமாத்திரஞ் சாங்கமாகப்பண்ணி, மற்றகாலங்களில் பூசைகூடாதென்பது கருத்து. அல்லலறத்தமையு மப்படியே சொல்லும் வழிபாடுநீங்காமை - உனக்கித்திட்சையினைப் பண்ணுகின்ற நம்மையும் அப்படியே இடைவிடாமல் வழிபட்டு, மன்னும் விரதமழியாது நில்லென்றன்பால் - உனக்கு விதித்த 'சமயாசார விரதங்களிலொன்ருனுந் தாழ்வுவராமனிற்பாயாக வென்று கூறிப் பின்னும் அன்பினல், எ-று. (கசுஉ)

சிவலாஞ் சனைகண்டாற் சிந்தை யுருகி
நவமா யவர்நயப்ப நன்மை - கவலையற
முப்பொறியா லேற்றதொழின் முட்டாமற் செய்தருளிற்
றப்பறவா மென்றருளித் தான்.

(இ-ள்.) எவரிடத்தானுலும் விபூதி ருத்திராட்சஞ் சிவலிங்கதாரண முதலிய வஷ்ட்டாபரணங்களைக் கண்டாலவர்களை மிகுந்தவன்பினுல் வழிபட்டு அவர்கட் குன்னிடத்திற் பிரியம்வர மனவாக்குக் காயங்களினுலுபகரித்து அவர்களுடைய பணிவிடையை யன்பினுல் நடத்திக்கொண்டு வருவாயாக வென்றருளிச்செய்து, எ-று. (கசுங)

அற்பித் தருந்துநிட்டை சற்றசையி லாழ்நரகி
னிற்பிக்கும் லிங்கமுட னீங்கி - லுற்றவுடல்
விட்டுவிடென் றேயாணை மெய்யாகக் கற்பித்திட்
டிட்டமுட னேயுலகி னில்.

(இ - ள்.) அற்பித்தருந்து நிட்டைசற்றசையிலாழ்நரகில் நிற்பிக்கும் - யாதொருபதார்த்தங்களையு நீ புசித்தாலுனதிஷ்ட்டலிங்கத்துக் கற்பித்தவ்விலிங்கப்பிரசாதமாகக் கொள்வதன்றி மறதியினுலு மற்பியாமற் புசித்தனையாயின் ஆழ்ந்த நரகத்தில் விழுந் தொருகாலுங் கரையேறமாட்டாயென் றருளிச்செய்து, லிங்கமுடனீங்கி லுற்றவுடல் விட்டுவிடென்றே யாணைமெய்யாகக்கற்பித்திட்டு - அவ்விலிங்க முனதுதேகத்தைவிட்டு ஒருபாதிவசத்தா னீங்கிவிடுமானல நீயுமுனது தேகத்தை விட்டுவிடுவதேயல்லாமற் பின்னுமோர் சிவலிங்கத்தைத் தரித்துக்கொண் டிருக்கலாகாதென வுறுதியாகக் கற்பித்து, இட்டமுடனே யுலகினில் - இஷ்ட்டமாக வுவ்வுலகத்து, எ-று. (கசுச)

மாயப் பொருளைமிக்க மந்திரத்தாற் சுத்திசெய்ய
வாயதினிற் கோடி யதிகசுத்தி - மாயைமுற்றும்
நீக்கும் பரஞான சங்கமத்தால் மாயையெச்சி
னீக்கிப் பிரசாத நீ.

அற்பித் தருந்த லமலஞா னக்கிரியை
யுற்பத்தி யாக்குமிது வுண்மையாம் - பொற்பதனுன்
முத்திநிலங் காட்டிமல முற்றுமுடிக் கச்சரிக்குஞ்
சத்தியமாஞ் சங்கமந்தன் னை.

பாதம்பூ சித்த பவித்திரபா தோதகமுந்
தீதில் பவித்திரமாஞ் சேடமுநல் - லாதரவால்
லற்பித்தருந்த வருடலிங்கு மென்றினிது
கற்பித் திருளறுத்தல் காண்.

சிவபுரா ணங்கள் சிவாகமங்க ணன்மைத்
தவபுரா ணங்கண்முன் னோர் செய்த - சிவபத்தி
நற்கதைகள் கேளவல நாட்கழியா தேயென்றென்
றற்புதமாய்க் கற்பித்த லாம்.

(இந்நான்கு வெண்பாவு மொருதொடர்.)

க-ம் வெண்பா.

(இ-ள்.) மாயப்பொருளை மிக்கமந்திரத்தால் சுத்திசெய்ய வாயதனிற் கோடியதிகசுத்தி - மாயாகாரியமாகிய வஸ்த்துக்களை மேன்மையினையுடைய மந்திரங்களாற் சுத்திசெய்யு மதனைப்பார்க்கினும் கோடியத்தனை யதிகசுத்தியாகும் அஃதெங்ஙனமெனின், மாயைமுற்று நீக்கும் பரஞானசங்கமத்தால் மாயையெச்சினீக்கி - மாயையென்னும் பதார்த்தமுழுவதினையும் போக்காநின்ற மேலாகிய ஞானசங்கமத்தால் மாயையினதசுத்தத்தை நீக்கிச் சங்கமப்பிரசாதமாக வதனைநீயும், எ-று. (கசுரு)

உ-ம் வெண்பா.

(இ-ள்.) அற்பித்தருந்தலமல ஞானக்கிரியை யுற்பத்தியாக்கு மிதுவுண்மையாம் - உனது சிவலிங்கத்துக்கற்பித்த பிரசாதத்தினை நீபுசிக்கில் நின்மலமாகவுனது ஞானக்கிரியைகளை யபிவியத்தமாகப் பண்ணு மிதுசத்தியம், பொற்பதனுன் முத்திநிலங்காட்டி மலமுற்று முடிக்கச் சரிக்குஞ் சத்தியமாஞ் சங்கமந்தன்னை - இன்னுமழகாகச் சர்வத்திர சனங்களுக்கும் மலமாயாதி கன்மங்களைப் போக்கி மோட்சசாம்பிராச்சியத்தினை யளிக்கு நிமித்தமாக யிவ்வுலகிற்சஞ்சாரத்தினைப் பண்ணு முண்மைப்பொருளாகிய ஞானசங்கமனை, எ-று. (கசுசு)

ங-ம் வெண்பா.

(இ-ள்.) பாதம் பூசித்த பவித்திரபாதோதகமும்-தேடி யழைத்துவந்து அவர்கள் பாதத்திற் பூசித்து வாங்காநின்ற பரிசுத்தபாதோதகத்தினையும், தீதில்

பவித்திரமாஞ் சேடமு நல்லாதரவா லற்பித்தருந்த வருமெலங்கு மென்றினிது கற்பித்திருளறுத்தல்காண் - குற்றமற்ற பரிசுத்தமாகிய சேஷத்தையும் மிகுந்த நேயத்தாற் சிவனுக்கற்பித்துத் தானருந்தில் அஞ்ஞானம்போய்த் திருவருள் தன்னிடத்திற் பிரகாசிக்குமென்றினிதாகக் கற்பித்து, எ-று. (கசுஎ)

ச-ம் வெண்பா.

(இ-ள்.) சிவபுராணங்கள் சிவாகமங்க ணன்மைத்தவபுராணங்கள் முன்னோர்செய்த சிவபத்தி நற்கதைகள்கேள் - புராணம் பதினெட்டிற் சிவனுக் கோதிய புராணங்கள் பத்தையுஞ் சிவாகமங்களிருபத்தெட்டையும் புராதனர் அருளிச்செய்த இதியாசங்களையும் சிவபத்தியைவிளக்கும் சரித்திரங்களையு மெய்ந்நேரமுங்கேள், அவலநாட்கழியாதேயென்றென் றற்புதமாய்க் கற்பித்தலாம் - வீணாக வுனதுவாழ்நாளைப் போக்கிவிடாதேயென்று அற்புதமாக இதனையும் போதிக்கவேண்டும், எ-று. (கசுஅ)

[சீடனென்னும் பெயர் மாணாக்கனுக்கு வருமாறுணர்த்துகின்றார்.]

தீக்கை குருகொடுக்கை தீதகன்ற சொற்கிருபை
வாக்கியந்தப் பாத மகன்சீடன் - நோக்கரிய
தேசிகன்சிட் சிக்கவந்த சிட்சைதவ றானதனு
லாகும் பெயர்சீட னும்.

(இ-ள்.) தீக்கை குருகொடுக்கை "தியதே ஞானசற்பாவம் க்ஷயதேமல நாசனம் என்னும் வசனத்தால்" ஆசாரியர் சீடனது அஞ்ஞானத்தைப் போக்கி ஞானத்தைக்கொடுக்கை, தீதகன்ற சொற்கிருபை வாக்கியந்தப்பாத மகன் சீடன் - அவ்வாசாரியர் தமது காருண்ணியத்தினு லனுக்கிரகம் பண்ணப்பட்ட வாக்கியந்தப்பாமல் நடந்துகொள்ளுமதனுற் சீடனும் அதுவுமன்றி, நோக்கரியதேசிகன் சிட்சிக்கவந்தச்சிட்சை தவறானதனுலாகும்பெயர் சீடனும் - அவ்வாசாரியரனுக்கிரகம் பண்ணின மார்க்கத்திற்றவறுதல்கண்டாலவர் தன்னைச் சிட்சிக்க வச்சிட்சைக்கருகனாக விருக்கையாலுஞ் சீடனென்னும்பெயராம், எ-று. (கசுகூ)

[இங்ஙனம் வீரசாமான்னியதீட்சையினைச் சொல்லிமுடித்து
மேல் வீரவிசேட விதியினையைந்து வெண்பாவினுல்
விளம்புகின்றார்.]

காயநமக் கற்பித்துக் கட்டகன்ற தீரத்தா
லாயபெயர் வீரசா மானியமா - நீயறிமேல்
வீர விசேட விதிகேளித் தீக்கையொடு
சீருடனற் சிவசுத்தி செய்.

சச்சிதா னந்தர் தயங்குகின்ற கும்பசலம்
பொற்புடைய சீடன் புனிதமுற - வற்புதமா
யாடுவித்த பின்ன ரரியதுகி லாதிமுன்போ
னீடியபின் னின்மலமா கும்.

சூக்குமகா யத்துச் சுடரிலிங்கந் தாபித்துத்
தாக்குநினை வெல்லாந் தகுமிலிங்க - நோக்கு
முபதேசஞ் செய்தமல லிங்கந்தா னாகு
நவவனுபோ கமுநவிற் றி.

அத்தப் பிராண னபிமானந் தானுடையா
ருத்தமமா மும்முதலே யென்னுமுண்மை - வித்தையது
காட்டிப் பிரசாதங் காதல் விரதமதாய்
நாட்டும் வியாதிநடுங் க.

வந்திடினும் வாழ நினைந்தவுட றந்தன்னைச்
சிந்தைநினை யாதே தெளிவித்துச் - சந்ததமாய்
நிற்பார் மனவயிக்கர் நிற்பவர்க்குப் பேருரைக்கின்
மெய்ப்பான வீரவிசே டம்.

க-ம் வெண்பா.

(இ-ள்.) காயநமக்கற்பித்துக் கட்டகன்றநீரத்தா லாயபெயர்வீரசா மானியமாம் நீயறி - தூலசூக்கும காரணமென்னு மூவகைத் தேகத்தினுள் தூல தேகத்தைமாத்திர நமக்கற்பித்துத் தீரனு யிருக்கையால் வீரசாமானியனென்னும் பெயர்வந்ததென்று நீயறிவாயாக, மேல்வீர விசேட விதிகேளித் திக்கையொடு சீருடனற் சிவசுத்திசெய் - இனி வீரவிசேட தீட்சாவிதி யெப்படியென்னில் முன்பண்ணிய வீரசாமானிய தீட்சாவிதிப்படி நன்றுயனுட்டித்து மேல் வீரவிசேட தீட்சையைப் பண்ணிக்கொள்ள வேண்டுமென்று வந்த சீடனுக்கு முன்போல் மண்டப முதலியனவெல்லாஞ் செய்வித்துக்கும்பஸ்தாபன முதலியவெல்லாந் தாபித்துக்கொண்டு முன்போல வீரசாமானிய தீட்சாக்கிரியையைச் செய்துகொண்டு சிவசுத்தியைச் செய்தல், எ-று.

அதெப்படி யென்னில் ஜீவசிவ:- சிவோ - ஜீவ : - ஜீவகேவலஞ்சிவ: பாசபெந்தபவோஜீவ: - பாசமுத்தே சதாசிவா - என்கிற மந்திரத்தினுலே அஞ்சுபத்திரங் கிள்ளித் தரித்துச் சீடன் சிரசிலே அஸ்தம்வைத்துத் தூபதீபங் கொடுத்தலாம். (கஎ0)

உ-ம் வெண்பா.

(இ - ள்.) சச்சிதானந்தபரசிவ சொரூபமாயிருக்குஞ் சிவகும்பத்தினுற் சீடன் நிருமலத்தையடைய வபிஷேகம் பண்ணுவித்துப் பின்பு வஸ்திராபரணந் தரிக்கச்சொல்லி, எ-று. (கஎக)

ங-ம் வெண்பா.

(இ-ள்.) சூக்குமகாயத்துச் சுடரிலிங் கந்தாபித்து - நின்மலமாகச் சுத்தி செய்திருக்கின்ற சூட்சுமதேகத்திலே ஞானப் பிரகாசத்தினையுடைய பிராண லிங்கத்தைப் பிரதிட்டைபண்ணி, தாக்குநினைவெல்லாந் தகுமிலிங்கநோக்குமுபதேசஞ்செய்து - இந்திரியவழித்தாய் யாதொரு விடயங்களிலே மனமுதலியன பற்றும்போதெல்லா மிந்திரிய வுச்சிட்டமாய்ப் போகாமல் அந்தத்தான

ங்களிலே சிவலிங்கங்க ளிருந்தறிந்து தனக்குப் பிரசாதமாகக் கொடுக்குந் தன்மையை யுணர்த்தி, இது வீரசாமானியமாகையா லிதனேடிவ் வீரவிசேடத்துக் கந்நினைவு இந்திரியவழித்தாய்ச் செல்ல இருதயத்திற்றனே யிருந்து ஒன்றை நினைப்பதனையும் பிராணலிங்க நினைவாய்க்காண வுபதேசத்தினைப்பண்ணி, அமலலிங்கந்தானுருகவ வனுபோகமும் நவிற்றி - அவ்விலிங்கத்திலுக்குந் தனக்கும் பேதமறநிற்கும் புதிதாகிய வனுபவத்தினையு முபதேசித்து, எ-று. (கஎஉ)

ச-ம் வெண்பா.

(இ-ள்.) அத்தப்பிராண னபிமானந் தானுடையா ருத்தமமா மும்முதலே யென்னுமுண்மை வித்தையதுகாட்டி - பின்னு மாணுக்கனை யழைத்து உன்னுடைய திரவியம் உன்னுடையசீவன் உன்னுடைய வபிமானமென்னு மிவைகள் மூன்றினுக்கு முடையவர்கள் குருலிங்க சங்கமமேயென்னும் வசனத்தையெடுத்துக்காட்டி, பிரசாதங்காதல் விரதமதாய் நாட்டிவியாதிநடுங்க - எப்போதும் பிரசாதத்திலேயே நேசமாயதுவே விரதமாயிருக்க வியாதிகளஞ்சும்படி, எ-று. ()

ரு-ம் வெண்பா.

(இ-ள்) வந்திடினும் வாழநினைந்தவுட தந்தன்னைச் சிந்தைநினையாதே தெளிவித்து - வந்து மிருந்த வுபத்திரத்தைப்பண்ணினும் அவ்வியாதிதீர்ந்து சுகமாயிருந்து வாழவேண்டி மருந்தருந்தவேண்டுமென்று நினையாமல் உறுதியாக மருந்துமணி மந்திரங்களெல்லாம் விபூதி ருத்திராக்ஷ பஞ்சாக்ஷரமே யெனத் தெளிவித்து உபதேசிக்க, சந்ததமு நிற்பார்மனவயிக்கியர் நிற்பவர்க்குப் பேருைக்கில் மெய்ப்பான வீரவிசேடம்-இவ்வுபதேசத்தின்வழி நிற்குமவர்களே மனவயிக்கியர் இவர்களே வீரவிசேடதீக்கையையுடைய வீரவிசேடர், எ-று. (கஎச)

[மேல்வீரநிராபாரதீக்கையினை விதிக்கின்றார்.]

வீர விசேடத்தின் மேன்மையது நற்சைவம்
வீரநிரா பார விதிமூன்றுஞ் - சீராம்
பரஞ்சர மற்றுஞ் சுயமென்னுந் தீக்கை
திரிவிதமா கும்பரஞ்செப் பில்.

(இ-ள்.) வீரவிசேடத்தின் மேன்மையது நற்சைவம் வீரநிராபார விதிமூன்றும் - வீரவிசேட தீட்சாவிதியினைச் சொன்னேம், மேல்வீரநிராபார விதியினையும் விளம்புகின்றேம், வீரநிராபாரவிதி மூன்றுபிரகாரமாயிருக்கும் அவையெங்ஙனமென்னில், சீராம்பரஞ்சரமற்றுஞ் சுயமென்னுந் தீக்கை திரிவிதமாகும்- சிறப்பினையுடைய பரதீட்சையென்றுஞ் சரதீட்சையென்றுஞ் சுயதீட்சையென்றும் மூன்றுவிதம், பரஞ்செப்பில் - அவற்றுட் பரதீட்சையினைச் சொல்லுமிடத்து, எ-று.

(கஎரு)

தாசோகஞ் செய்யத் தகுநன் மனைவாழ்க்கை
யாசைவிடா தாருக் கருளியதென் - றேசில்
சிவகாமச் செல்வமுடைச் செம்மலான் வாழ்க்கை
தவமா சவுக்கியமுற் றும்.

தீய விடம்போற் றெளிவிக்கும் பாகமது
மாயமற வுள்ளே மருவியிடத் - தூயதா
நல்ல சவுக்கியங்கள் யாவு நடலையெனு
மல்ல லறத்துறந்தம் மா.

க-ம் வெண்பா.

(இ-ள்.) தாசோகஞ் செய்யத் தருநன்மனைவாழ்க்கை யாசைவிடாதாருக் கருளியதென்று - முன்பண்ணின வீரசாமானிய தீட்சையினையும் வீரவிசேட தீட்சையினையும் பண்ணுவதியார்க்கென்னில் கிருகஸ்த்தராய்ச் சிவனடியார் கட்குத்தாசோகம் பண்ணிப் பிழைக்கவேண்டுமென்னும் விருப்பத்தினையுடைய வர்களுக்கேயாம், ஏசில் சிவகாமச்செல்வமுடைச் செம்மலான்வாழ்க்கை தவ மாசவுக்கியமுற்றும் - குற்றமற்ற சுத்தசிவத்தை யபேட்சித்தபேர்கட்குக் கிரு கஸ்த்தங்கூடாது துறவறநெறியினின்றே பெறவேண்டுவதென்று நிச்சயமாகத் தெளிந்துகொண்டு முன்கிருகஸ்த்தனாக விருக்குங்காலத்துள்ள அர்த்தேஷணை புத்திரோஷணை தாரோஷணை முதலிய சவுக்கியங்களி லெல்லாம், எ-று. (கஎசு)

உ-ம் வெண்பா.

(இ-ள்.) தீயவிடம்போற் றெளிவிக்கும் பாகமது மாயமறவுள்ளே மருவி யிட - பொல்லாததாகிய விடத்தைக்கண்டாலெவ்வளவுபயம் வருமோ வவ்வ ளவுபயம் வரத்தக்கதாகத் தீவிரதரசத்திநிபாதம் வந்துபொருந்த, தூயதாநல் ல சவுக்கியங்கள் யாவு நடலையெனு மல்லலறத் துறந்தம்மா - எத்தனை விதத் தினும் இல்லறம் சவுக்கியமாக விருந்தபோதினு மத்தனையு மிதுபொய்யென்று துறந்து, எ-று.

வெகுநாளைய பழக்கமாய்த் தனது சரீராபேக்ஷையா யிருக்கும் பதார்த்தங் களையெல்லாந் துன்பமென்றெண்ணித் துறப்பதாச்சரியமாகையா லம்மாவென் றருளிச் செய்தார். (கஎஎ)

சற்குருவைப் பற்றிச் சரணார விந்தமதி
லற்புதமாய் வீழ்ந்துருகி யையனே - நற்கருணை
தன்னுன் மகிழ்ந்து தருஞ்சங்க மத்தீக்கை
யின்னே யெனக்கருளென் ன.

(இ-ள்.) தேகாதி பிரவஞ்சங்களைப் பொய்யெனக்கான்ற சோறுபோலக் கைவிட்டு ஞானாசாரியனாவந்தடைந்தவருடைய பாதாரவிந்தங்களிலே அடியற்ற மரம்போல வீழ்ந்து தெண்டன்பண்ணிக் கண்களிலே சலம்பெருக அழுது அக் கினியிலிட்ட வரக்கெனவுருகிச் சுவாமீ! அடியே னித்தேகாதி பிரவஞ்சத்திலே கிடந்தழுந்துவேனோ இப்போதுதானே சங்கமதீட்சையை யெனக்குத் தேவரீர் செய்தருளவேண்டுமென்று மிகவும் பரதவித்து நிற்க, எ-று. (கஎஅ)

நின்றபரி பாக நிலைமைகண்டு நேசத்தா
னன்றுநன்று நீநினைத்த னன்றென்று - குன்றுத
மைந்தன் றனக்கு மகிழ்ந்தான்ம சுத்திசெய்திட்
டந்தமிலாக் காரணத்தம் மா.

(இ-ள்.) நின்றபரிபாக நிலைமைகண்டு நேசத்தா னன்று நன்று நீநினைத்த னன்றென்று - இப்போதே சங்கமதீட்சையினைப் பண்ணவேண்டுமென்று பிரார்த்திக்குஞ் சீடனது பரிபாகநிலைமையினைப்பார்த்து ஆசாரியர் கிருபையினாலே மாணக்கனைநோக்கி நீநினைத்தகாரிய நன்றாயிருந்தததென்று கொண்டாடி நல்லதப்படியே யாகட்டுஞ் செய்வோமென்று ஓர் நல்ல சுபதினம்பார்த்து முன்புபோலத் தீட்சாமண்டப முதலாயினவெல்லாஞ் செய்வித்து வீரசாமானிய விசேடமென்னு மிருவிததீட்சாக்கிரியைகளையும் பண்ணி இவை வீரநிராபாரமாகையினாலே, குன்றுத மைந்தன் றனக்கு மகிழ்ந்தான்ம சுத்திசெய்திட்டந்தமிலாக்காரணத்தம்மா - குன்றுதலில்லாத சீடனுக்கு ஆன்மசுத்தியினைப்பண்ணி, ஆன்மசுத்தியாவது ஜீவாத்மக சுகஞ் சிவா - ஜீவாத்மக சுகஞ்சிவா, சிவஜீவாத்மக சையோகே பிராணலிங்கமதோற்பவேது - என்கின்ற மந்திரத்தினாலே சிவஜீவாத்மகயேகத்துவம் பாவித்துச்சிரசிலே அஸ்த்தம்வைத்து அஞ்சு பத்திரங்கிள்ளித் தரித்துத் தூபதீபங்கொடுத்தலாம். அந்தமிலாக்காரணத்தம்மா- பின்பு ஆச்சரியமாகச் சுத்திபண்ணியிருக்கும் காரணதேகத்தில், எ-று. (கஎகூ)

உள்ளும் புறம்பு மொழிவறவே தான்விளங்கிக்
கொள்ளுஞ் சரலிங்கக் கோமளத்தைத் - தெள்ளு
முணர்வாங் கரத்தா லுறக்கொடுபோய்த் தாபித்
துணர்வான சங்கமத் தோடு.

ஆன வறிவை யதனோ டயிக்கமதாய்த்
தானியற்றி யொன்றான தன்மையது - தானான
நல்லவது பூதி நயந்தறியப் போதித்திட்
டொல்லையுல கந்துறந்த தால்.

இவை யிரண்டுவெண்பாவு மொருதொடர்.

க-ம் வெண்பா.

(இ-ள்.) உள்ளும் புறம்பு மொழிவறவேதான்விளங்கிக்கொள்ளுஞ் சரலிங்கக் கோமளத்தை - உள்ளென்றும் புறம்பென்றுமில்லாமலெங்கும் பரிபூரணமாய் விளங்குஞ் சரலிங்கமாகிய பாவலிங்கத்தை, தெள்ளுமுணர்வாங்கரத்தாலுறக்கொடுபோய்த் தாபித்துணர்வான சங்கமத்தோடு - குற்றமற்ற ஞானஹஸ்த்தத்தினாற்கொண்டுபோய்த் தாபித்துப் பின்பறிவுக்கறிவாய் விளங்கு மவ்விலிங்கத்துடன் எ-று.

(கஅ0)

உ-ம் வெண்பா.

(இ-ள்.) ஆனவறிவை யதனோடையிக்கமதாய்த் தானியற்றியொன்றான தன்மையது தானான நல்லவநுபூதி நயந்தறியப்போதித்திட்டு - மாணாக்கனறிவினையு மவ்விலிங்கத்தினையு மேகிபாவம்பண்ணின தன்மையை யறியப்போதித்து, ஒல்லையுலகந்துறந்ததால் - பின்னர் அவனறிவு அக்கணமே இத்தேகாதி பிரபஞ்சத்தினது பற்றற சிவமேயாய் நிற்கைகண்டு, எ-று. (கஅக)

ஆளவற்ற ஞானவிழி யன்பா லளித்திட்
டளவற்ற நற்கருணை யத்த - முளமடங்கப்
பாவித்து ஞானப் பரிபூ ரணபதத்தை
வாலறி வாஞ்சிரத்தில் வைத்து.

(இ - ள்.) அளவற்ற ஞானவிழியன்பாலளித்திட்டு - பின்பளவற்றதாகிய ஞானதிருஷ்ட்டியினாலே சீடனுடைய வறிவுக்குள்ள வகண்டாகாரம் விளங்கத் தக்கதாகக் கிருபையாகப் பார்த்து, அளவற்ற நற்கருணையத்தமுள மடங்கப் பாவித்து - மட்டிடற்கரிய கிருபையினாற் சீடனுக்குத் தற்போதநீங்கிச் சிவபோகம் விளையச் சிவ அபயஸ்த்தங்கொடுத்து, ஞானபரிபூரணபதத்தை வாலறிவாஞ் சிரத்தில்வைத்து - பின்பு சீடனுடைய சாட்குண்ணியாபிவியத்தமாகச் சர்வாதாரமாகிய ஞானக்கிருபாசொரூபமாகிய தமது திருவடிகளை யவனதறிவாகிய சிரசின்மேல்வைத்து, எ-று.

ஆன்மாவுக்கு முத்தியிலே சாட்குண்ணியாபி வியத்தியுண்டோ வென்னி லுண்டென்பதற்கு உதாரணம் "பருவமுற்றவர்பா லுபதேசிகன், பரமனுக்குள வெண்குணம் பற்றுவன், என்றும்" சிவதருமோத்தரம் 'பண்டைச்சிற்றறிவொழிந்து ஞானம்பெருகி, என்றும்' 'காயமொழிந்தக்காலெங்குமாய்க் கருதரன் போ னிற்பன் என்றும்' 'சிவாநுபவஞ்சுவாநுபூதிகமாம், என்றும்' 'சூரியகாந்தக்கல்லினிடத்தே என்னும்' 'விருத்ததுள்ளூரியனுஞ் சிவந்தோன்றுந் தானுந்தோன்றாத தொல்லுலகமெல்லாந் தன்னுள்ளேதோன்றும் - நேரியனுப் பரியனுமாயுயிர்க்குயிராயெங்கு நின்றநிலையெல்லாமுநிகழ்ந்துதோன்றும், என்றும்' 'ஒத்தகருத்தினனொன்றும்' திருவாசகம். 'ஈண்டிய மாயாவிருள்கெட வெப்பொருளும் விளங்க, என்றும்' வருவனவற்றாற்காண.

நாமேநீ யென்று நயந்துதிரு வாக்கருளி
யாமிவ் வுலக வவலமறச் - சேமமதாய்க்
காவி மரவுரியிற் கந்தைகவு பீனமதாய்த்
தாவுசடை முண்டிதந்தன் னுள்.

(இ-ள்.) நாமேநீ யென்று நயந்துதிருவாக்கருளி - பின்பு நாமேநீயென்னு மகாவாக்கியப்பொருளை யுபதேசித்து, ஆமிவ்வுலகவவலமற - இப்பிரபஞ்சத்துள் வாழுமுயிர்களினது ஆணவாதிபாசமாகிய வவலம்நீங்கத்தக்கதாக, சேமமதாய்க் காவி மரவுரியிற் கந்தைகவுபீனமதாய்த் தாவுசடைமுண்டிதந் தன்

னுள் - தபசுக்கங்கமாகிய காவிவஸ்த்திரம் மரவுரி கந்தை கவுபீனம் இவைகளி லொன்றைப் புனைந்து சடையானாலும் முண்டிதமானாலு மிரண்டிலொன்றை, எ-று.

(கஅங)

செய்துலகம் யாவுஞ் செடவறிவு நீங்கியிட
வையமதிற் பிச்சை மகிழ்ந்தருந்தித் - துய்ய
சுகியா யியங்கென்று சொற்றுயிர்க்குப் பொய்யாஞ்
சகமாயை விட்டிறக்கத் தான்.

(இ - ள்.) செய்து - செய்துகொண்டு, உலகம் யாவுஞ் செடவறிவுநீங்கியிட - இவ்வுலகத்துள்ளோ ரஞ்ஞானத்தைப்போக்கு நிமித்தமாக, வையமதிற் பிச்சை மகிழ்ந்தருந்தித் துய்ய சுகியாயியங்கென்று சொற்று - இவ்வுலகத்துள் ளோரிடும் பிச்சையினை மகிழ்ந்துகொண்டு சுகமாகத் தலங்கடோறுஞ் சஞ்ச ரிப்பாயென்று அனுக்கிரகஞ்செய்து, உயிர்க்குப்பொய்யாஞ் சகமாயைவிட்டிறக் கத்தான் - இப்படி சஞ்சரிப்பானேனென்னில், பழக்கமுமபிமானமுங் கெடும் படியாகத்தான், எ-று.

(கஅச)

அங்குட்டந் தன்னி லமர்தீர்த்தந் தன்னிலையுந்
தங்கியநற் சிங்குவையிற் றன்விளங்கும் - பொங்கியநன்
ஞானப் பிரசாத நன்னிலையுஞ் சங்கமத்தி
லானதறி வித்தன்பி னால்.

(இ-ள்.) பின்னுஞ் சங்கமருக்குப் பாதாங்குஷ்டத்திருக்கு நின்மலபாதோ தகத்தினிலைமையினையும் சிங்குவையிலிருக்கும் பிரசாதத்தினுடைய நிலைமையினை யும் இப்படியென்று செவ்வையாகத் தமது காருண்ணியத்தினாலறிவித்து, எ-று.

ஆனசெகஞ் செய்யு மரும்பூசை கொண்டவர்க்கு
ஞான பிரசாத நற்றீர்த்தந் - தானளித்துத்
தீக்கையொடு சிட்சை தெளிவான மோட்சமது
வாக்கமதி கார மளித்து.

(இ-ள்.) ஆனசெகஞ்செய்யு மரும்பூசைகொண்டவர்க்கு ஞானபிரசாத நற்றீர்த்தந்தானளித்து - பின்னுஞ் சங்கமரையழைத்து நீரிவ்வுலகத்திற் பத்தி மான்கள் பத்தியாகவந்து பணிந்து உம்மைப் பூசித்தாலப்பூசையை யொப்புக் கொண்டு அவர்கட்கு ஞானமயமாகுந் தீர்த்தபிரசாதங்கொடுத்து, தீக்கை யொடு சிட்சைதெளிவானமோட்சமது வாக்கமதிகாரமளித்து - தீட்சை சிட்சை மோட்சாதிகாரமுஞ் செய்வீரெனக் கற்பித்துப் பின்னும், எ-று.

(கஅரு)

நிற்கு மறிவோ டறிவபிக்ய மாய்நடக்குங்
கற்பு பரதீக்கை காதலுடன் - சற்குணமாஞ்
சாந்தந் தயாதன்மஞ் சத்தியமா நற்சீலம்
வாய்ந்தினிய ஞான வளம்.

(இ - ள்.) நிற்கு மறிவோ டறிவயிக்யமாய்நடக்குங் கற்புபரதீக்கை - எங்கும் பரிபூரணமாயிருக்குஞ் சிவத்தைக்கலந்து பிறிதொன்றுந் தோன்றாது சிவமாய் நிற்குந் தன்மையே பரதீக்கை யிதுவே முக்கியம். உ-ம். சித்தியார் பரஞானத்தாற் பரத்தைத்தரிசித்தார் பரமே பார்த்திருப்பர் பதார்த்தங்கள் பாரார்பார்க்க, வருஞானம் பலஞான மஞ்ஞானவிகற்பம் வாச்சிய வாசகஞானம் வயிந்துவத்தின் கலக்கந், தருஞானம்போகஞா திருஞான ஞேயந்தங்கிய ஞானஞ் சங்கற்பனைஞானமாகுந், திருஞான மிவையெல்லாங்கடந்த சிவஞானமாதலாற் சீவன்முத்தர் சிவமேகண்டிருப்பர்'' என்றும், 'பார்த்தவிடமெல்லாம் பரமேகாணம்மானை, பாராதேயிந்நாளும் பாழ்பட்டேனம்மானை, என்றும்' 'எங்குஞ்சிவமொழிய வில்லையவன்றன்னாணை' என்றும், ஞாலமதின்ஞான நிட்டையுடையோருக்கு நன்மையொடு தீமையில்லை நாடுவதொன்றில்லை, சீலமில்லை தவமில்லை விரதமோடாச்சிரமச் செயலில்லை தியானமில்லை சித்தமலமில்லை, கோலமில்லை புலனில்லை கரணமில்லை குறியில்லை குணமில்லை குலமோவில்லை பாலருடனுன்மத்தர் பசாசர்குணமருவிப் பாடலினோ டாடலிவை பயின்றிடினும்பயில்வர்' என்றும், வருவனவற்றாற்காண்க. அத்தன்மைகூடாதபெயர்கட்குச் சரதீக்கை உரித்து, காதலுடன் சற்குணமாஞ் சாந்தந் தயாதன்மஞ் சத்தியமாநற்சீலம் வாய்ந்தினிய ஞானவளம் - ஆசைபற்றி யெப்போதுஞ் சாத்துவிககுணம் சாந்தம் தயை ஈதல் மெய்மையேசொல்லுதல் நல்லொழுக்கமுதலிய ஞானசாரத்தைப் பேணி, எ-று. (கஅஎ)

பாவித் துலாஞ்சனைகள் பத்தியுட னேபணிந்திட்
டோவியங்க லோநற் சரமுரைத்த - லோவுரைத்த
சற்குணங்கள் வேண்டிச் சதாசார மாய்விரதக்
கற்புடனே நற்றலத்தின் கண்.

செய்த மடத்திற் சிறந்திருந்து லாஞ்சனையோ
டைய னருளா லமைந்ததனை - யையமறத்
தானே வரக்கண்டு தானிருத்த லேசொயமாந்
தானவர்க்குப் பாவதீக் கை.

[இவை யிரண்டுவெண்பாவு மொருதொடர்.]

க-ம் வெண்பா.

(இ-ள்.) பாவித்துலாஞ்சனைகள் பத்தியுடனே பணிந்திட்டோவியங்கலோ நற்சரமுரைத்தல் - முற்கூறிய சாந்தம் தயை தன்மஞ் சீலமுதலிய ஞானசாரத்தைப்பேணி எங்குஞ் சிவபாவனையேயாய் முற்கூறிய காவிமுதலிய முத்திரைகளையுந் தரித்துக்கொண்டு தேசங்களிலே சஞ்சரித்தல் சரதீட்சையெனக் கூறப்படும், உரைத்த சற்குணங்கள்வேண்டிச் சதாசாரமாய் விரதக்கற்புடனே நற்றலத்தின்கண் - முற்கூறிய பரஞ்சரத்தின தனுபவவிலக்கணங்களி லியல்பாய் வாராதபடியினாலே யவ்வனுபவத்தை வேண்டிச் சதாசாரமுதலிய பஞ்சாசாரங்கள் விரதகற்பனைகளாகிய சீலாசார முதலியயாவும் நியமமாக வநுட்டித்துக்கொண்டு புண்ணியஸ்தலங்களில், எ-று. (கஅஅ)

உ-ம் வெண்பா.

(இ-ள்.) செய்தமடத்திற் சிறந்திருந்து - சிவபத்தர்கள் கட்டிக்கொடுத்த மடங்களில் வாசமாயிருந்து, லாஞ்சனையோடைய னருளாலமைந்தநனே - இச்சையனிச்சைபரேச்சையாக வருமவைகளைச் சிவார்ப்பணம் பண்ணிக்கொண்டு சுவேச்சையாக விருப்பதே சுவயதீட்சை, இவர்களுக்குப்பண்ணுந் தீட்சைபாவக தீட்சை, எ-று. (கஅகூ)

பொதுமுற்றிற்று.

---

ஆ செய்யுள் - கஅகூ.

---

உண்மை.

வேதா கமத்துண் மிகுங்கலைகள் யாவையினு
மோதும் பொருள்க ளுணர்வுடையோர் - சோதித்துச்
சொல்லும் பொருண்மூன்றுஞ் சொற்ற விதன்பெயர்க
ளல்லறச் சொல்வோ மறி.

(இ-ள்.) வேதாகமத்துண்மிகுங்கலைகள் யாவையினு மோதும் பொருள்கள் - பரமசிவனாற் சிருட்டிகாலத் தருளிச்செய்யப்பட்ட வேதாகம புராண முதலிய கலைகள் யாவையினும் அறுதியிட்டுச் சொல்லும்பொருள்கள் யாவையெனின், உணர்வுடையோர் சோதித்துச் சொல்லும்பொருள் மூன்றும் - அறிவினையுடைய மேலோர்கள் ஆராய்ந்து சொல்லும்பொருள்கள் மூன்று, சொற்றவிதன்பெயர்க ளல்லலறச் சொல்லுமறம் - மூன்றெனச் சொல்லப்படும் பொருள்களினது பெயர்களைக் கேட்போர்களது பிறவித்துன்பந் தீரச்சொலலுந் திறம் யாதென்னிற் சொல்வோங் கேட்பாயாக, எ-று. (க)

[மேலந்த முப்பொருளினது பெயரினைத்தொகுத்துக்கூறி யிதனுண் மூந் தக்கூறும்பதியினதியல்பினையும் பொதுவியல்பினையும் பதினாறுவெண்பாவினாற் கூறுகின்றார்.]

பதியென்று மற்றுப் பசுவென்றும் பாசத்
திதியென்று மாகமங்கள் செப்பும் - விதிமூன்ற
தாகு மதிற்பதிதா னனந்தா தீதநித்த
மாகுமதாய்ப் பூரணம தாய்.

(இ-ள்.) பதியென்றும் - சர்வஞானஞ் சர்வகர்த்திருத்துவ முதலிய குணங்களையுடைய வதனுக்கே பதியெனப்பெயர் அப்பெயரினையுடைய சிவமென்றும், மற்றுப்பசுவென்றும் - அஃதன்றியநாதியே மலசகிதமாயிருக்கு மான்மாக்களென்றும், பாசத்திதியென்றும் - நித்தியமாகச் சொல்லப்பட்ட மூவகைப் பாசங்களென்றும்; ஆகமங்கள்செப்பும் விதிமூன்றதாகும் - இங்ஙனஞ் சிவாகம

ங்கள் தொகுத்துச்சொல்லும் பதார்த்தங்கள் மூன்று, அதிற்பதிதான் - அம்மூவகைப் பதார்த்தங்களுக்குட்பதியென்னும் பெயரினையுடைய சிவத்தின திலக்கணம்யாதென்னில், ஆனந்தாதீதமாய்-அப்பதியாகியசிவம் அநாதிமலமுத்த சித்ரூபியாகையால் எக்காலமுந் துன்பமில்லாத வானந்தபூர்த்தியினை யுடைத்தாய் - நித்தமாகுமதாய், உற்பத்தி திதிநாசமின்றிஎக்காலு நித்தியமாய், நித்தியத்தை நித்தியமெனச் சொல்லுவானேனெனில், பவுத்தன் முன்வரு மறிவிலிருக்கும் வாசனையைப் பின்வருமறிவில் ஓர்கணத்தில்வைத் தக்கணமே நாசமாமென்று க்ஷணிகவாதஞ் சொல்லுவன், அங்ஙனஞ் சொல்லின் ஓர்கணத்தி லொன்றை நியமித்தறிந் துத்தியோகித்துக் கணத்திற்குனே பின்வருமறிவில் முன்வரும் வாசனையைவைத்து நாசத்தையடைய மாட்டாதென வவனைநிராகரிக்கும் பொருட்டு எப்போதும் அறிவுநித்தியமென்றும், பூரணமதாய் - வைஷ்ணவன் அருகன்முதலாயினவர்கள் அறிவுக் கேகதேசஞ்சொல்லுவார்கள் அங்ஙன மேகதேசஞ்சொல்லின் வடிவுசொல்லவேண்டும் வடிவுசொல்லின் அவ்வடிவு மாயாகாரியமாகவேண்டும் மாயாகாரியமா யுள்ளதற்கு மலமறைப்பிருக்கவேண்டும் மலமறைப்புள்ளதற்குச் சர்வஞானஞ் சர்வகர்த்திருத்துவமுதலியன கூடா, கூடாவெனச் சொல்லுவானேன் அவ்வடிவு மாயையன்று ஞானகணிபூதமென்னின் ஞானம் நிரவயவமாதலால் கணிபூத மாகாதென்பது சர்வசம்மத மாகையாற் சர்வவியாப்த்மா யிருப்பதனுக்கே சர்வ ஞானத்துவசர்வகர்த்திருத்துவமுதலியனகூடும் மற்றையதற்குக் கூடாவாகையால் அங்ஙன மேகதேசஞ்சொல்லு மவர்களை நிராகரிக்கும் பொருட்டுப் பூரணமதாய், எ-று. (உ)

ஆயென்னும் பதத்தினை இரண்டிடத்துங் கூட்டுக.

[இன்னும் பதியினது குணங்களைக் கூறுகின்றார்.]

நாமமொடு சாதி நயந்த குணங்கிரியை
யாமிவைக ளெட்டரிய வற்புதமாய்ச் - சேமப்
பொருளாய்ப் புகலரிதாய்ப் போகமின்றாய் நீங்காப்
பொருளா யுயிர்க்குயிரா கி.

(இ-ள்.) நாமமொடு - அப்பதி நிரவயவமாகையா லவயவ முள்ளதற்கே பெயர், அவயவ மில்லாததற்குப் பெயரில்லையெனின், அவயவமில்லதற்சுப் பெயருளதென்பது கூறுகின்றாம், அதனுடைய கிருத்தியத்திற்கேபெயர் கிருத்தியப்பெயரினைக் கிருத்தியகர்த்தாவின்மேலேற்றிச்சொல்லுவதேயல்லாமல் ரூடியாக வொரு பெயருமில்லை, இதற்குதாரணம். திருவாசகம் "ஒருநாமமோருருவ மொன்றுமிலார்க்காயிரந், திருநாமம்பாடிநாந் தெள்ளேணங் கொட்டாமோ" வென்பதனாற் கண்டுகொள்க. சாதி - தேகியாகிய பசுவருக்கங்களுக்கே சாதி எங்ஙனமென்னின், பிராமணர் அரசர் வணிகர் சூத்திரரென்றும் தேவர் நரர் மிருகம் பட்சி முதலியனவென்றும் ஆம், விதேகத்திற் சாதியில்லையென்னின் விதேகத்திற் சித்துச்சடமென்னுஞ் சாதிகளுண்டேயென்னின் சித்தென்னுஞ் சாதி ஆன்மவர்க்கங்களுக்குஞ் சடமென்னுஞ் சாதிபாசவர்க்கங்களுக்குமே

யல்லது சிவனுக்குச் சித்தென்றுஞ் சடமென்றும் பெயர்கூடாது. இதற்குதாரணம். சிவஞானசித்தியார் "சிவனருவுருவமல்லன் சித்தினேடசித்துமல்லன்" என்பதனுற் கண்டுகொள்க. நயந்தகுணம் - மாயையுடனே கூடினதற்கே சாத்துவிகராசத தாமதமெனக்குணங்களுண்டு அஃதொருகாலும் மாயையுடனே கூடாது உதாரணம். திருவாசகம் "உழைதருநோக்கியர்கொங்கைப் பலாப்பழத்தீயினெப்பாய், விழைதருவேனைவிடுதிகண்டாய்விடின் வேலைநஞ்சுண், மழைதரு கண்டன்குணமிலிவானவன்' என்பதனுற் கண்டுகொள்க. கிரியை - கரசரணுதி யவயவமுள்ளதற்கே கிரியை, அமூர்த்தமாகிய சிவத்துக்கில்லையோ வென்னின் அதற்குச் சிற்கிரியையுண்டு, அதாவது சர்வகிருத்தியத்தையுஞ் சந்நிதிமாத்திரத்தினலே செய்வித்தலான், ஆமிவைகளெட்டரிய - இங்ஙனஞ் சொல்லப்பட்ட குணமொன்று முபசாரமாகவானுலுங் கிட்டுதற்கரிதாய், அற்புதமாய் - தன்னையுணரும் ஞானிகட்கு ஒருகாலும் வாராத ஆச்சரியத்தை வருவிப்பதாய், சேமப்பொருளாய் - ஒருவராலு மறியப்படாது ஞானிகள் அறிவில் நிட்சேபமாயிருப்பதாய், இதற்குதாரணம். திருவாசகம் "தோன்றுத்துணையாயிருந்தனன்றன்னடியோங்களுக்கே" எனக்கெய்ப்பில்வைப்பே என்பவற்றுற் கண்டுகொள்க, புகலரிதாய் - சொல்லெல்லாம் வாக்கினிலுற்பத்தி, வாக்குசுத்தமாயையிலுற்பத்தி, அந்தச்சுத்தமாயை நாதபரியந்தம் வியாபகமதற்கப்பாற்றனது காரியஞ் செல்லாதாகையாற் புகலரிதாய், உதாரணம். சிவஞானசித்தியார். 'வாசகவாச்சிய ஞானம் வயிந்துவத்தின் கலக்க' மென்றும், திருவாசகம் 'சொல்லும்பொருளுமிறந்த சுடரை' யென்றும், 'மாற்றமனங்கழிய நின்ற மறையோனே' என்றும் வருவனவற்றுற் கண்டுகொள்க. போகமின்றய் - போகத்தைவிரும்பின பெயர்கட்குப்போகத்தைக் கொடுப்பதேயல்லாமற் றனக்கொரு போகமுமில்லாததாய், அதேனெனிற் றன்போகசொரூபியாகையால், உதாரணம். திருவாசகம் 'அந்தமொன்றில்லாவானந்தம்பெற்றேன் யாது நீபெற்ற தொன்றென்பால்' என்பதனுற் கண்டுகொள்க, நீங்காப்பொருளாய் - சித்துச்சடமாகிய சர்வத்திலும் வியாபித்திருத்தலினலே நிறைவாய், இதற்குதாரணம். சிவஞானபோதம். 'அவையேதானே' என்றும், 'அரக்கொடுசேர்த்தியணைத்தவக்கற்போ, லுருக்கியுடங்கியைந்துநின்று - பிரிப்பின்றித் தானேயுலகாம்' என்றும், 'அகரவுயிர்போ லறிவாகி யெங்கும் நிகரிலிறைநிற்கும் நிறைந்து' என்றும், 'நின்மலம் சுபாவம் வியாத்திநிறைவு' என்றும், 'நிலவுசீரமலனுகி நின்றன னீங்காது என்றும்' வருவனவற்றுற் கண்டுகொள்க. உயிர்க்குயிராகி - ஆன்மாக்கள் மனேவாக்குக்காயங்களாற் செய்யுங் கன்மங்களனைத்தையுந் திருவுள்ளத்தடைத்து அந்தக் கன்மபலன்களைக் காலவரையிலே யவ்வான்மாக்களினிச்சாஞானக்கிரியைகளை விளக்கிப் புசிப்பிக்கை நிமித்தமவனே யேவுதற்பொருட்டு உயிர்க்குயிராகி, எ-று.

இதற்குதாரணம். சிவஞான சித்தியார், "அங்கங்கே யுயிர்க்குயிரா யறிவு கொடுத்' தென்றும், 'அகரவுயிர்போலறிவாகியெங்கு, நிகரிலிறைநிற்கு நிறைந்து' என்றும், கூறுமவற்றுற்கண்டுகொள்க. (௩)

நின்றநிலை தன்னியல்ப தாகு நிகழ்பதிக்கிங்
கென்றுமுள தாகு மிருண்மலத்தா - னின்றவுயிர்க்
கானவறி யாமையெனு மாணவபா கம்வருத்தித்
தானதுவா குங்கருணை தான்.

(இ-ள்.) நின்றநிலை தன்னியல்பதாகுநிகழ்பதிக்கிங்கு - இங்ஙனமுன்னைவெண்பாவிற் கூறியதன்மையே விளங்காநின்ற பதியென்னும் பொருளுக்குத்தன்னியல்பாகிய குணம், மேற்பொதுவியல்பு யாதெனின், என்றுமுளதாகு மிருண்மலத்தானின்ற வுயிர்க்கு - அநாதிநித்தியமாயிருக்கு மந்தகாரம்போன்ற மலசத்தியால் இச்சாஞானக்கிரியையினது வியாபாரந்தடைப்பட்டு நிற்குமான்மாக்கட்கு, ஆனவறியாமையெனு மாணவபாகம் வருத்தி - அவ்வான்மசிற்சத்தியைவிட்டு நீங்கும்பொருட்டு அவ்வாணவ மலசத்திக்குப் பரிபாகத்தை வருவித்து, தானதுவாகுங் கருணைதான் - அம்மலம்பரிபாகப்பட்டவ்வுயிரினைவிட்டு நீங்குங் காலபரியந்தம் அம்மலந் தானாய்நின்று செலுத்துங்காருண்ணியத்துக்கே சிற்சத்தியென்று பெயர், எ-று. (ச)

[அச்சத்திமானாய் இச்சாஞானக்கிரியாசொரூபனாக நின்று மும்மலங்களையும் ஏவுங்காருண்ணிய சத்திமானா யிருப்பதற்கே பொதுவியல்பென் றருளிச்செய்து பின்னுமதனையே வலியுறுத்துகின்றார்.]

என்னுங் குணமொன் றியல்பாகை யாலுயிர்க்கு
மன்னு மலத்தால் வளர்துயிலாய் - மன்னியநோய்
தீர்க்கக் கிருபை தெளிவாம் பெருவாரி
யூக்குங்கா லம்பொதுவா கும்.

(இ-ள்.) என்னுங் குணமொன்றியல்பாகையால் - இங்ஙன மிக்கிருத்தியத்தினைச் செய்யுந்தன்மையு மப்பதிக்காதியே யியல்பா யிருக்கையால், உயிர்கள்மன்னு மலத்தால் வளர்துயிலாய்-ஆன்மாக்கள் நிலைபெற்ற மலசத்தி மறைப்பினா லிச்சாஞானக் கிரியையினது வியாபாரமற்று அதீத நித்திரைபண்ணுமவனெப்படி யொன்றுந் தெரியாமற் கிடப்பனோ வப்படி தமோமயமாகக் கிடத்தலால், மன்னியநோய் தீர்க்க - நிலைபெற்றொருகாலுந் தீராததாகிய வவ்வாணவமல வியாதியைத் தீர்க்க, கிருபைதெளிவாம் பெருவாரி யூக்குங்காலம் பொதுவாகும் - தமது கிருபா சமுத்திரம் போன்ற சிற்சத்தி முயற்சியே பொதுவியல்பு எ-று. (ரு)

[மேலு மக்கிருபாசமுத்திரமாகிய சிற்சத்தியினது முயற்சியினை விரித்தருளிச் செய்கின்றார்.]

அந்நினைவே சிற்சத்தி யாமதற்கே யானந்தந்
துன்னுமின்ப மிக்க சுகமென்ன - மன்னுபெய
ராகுஞ் சிவற்குருவ மாகுமந்தச் சிற்சத்தி
யாகு மிருவகைய தாய்.

(இ-ள்.) அன்னிலேவே சிற்சத்தியாகும் - நிற்குண நிருவிகார சுவாநுபூதி மானுய்த் தன்னியல்பா யிருக்கு மப்பதிக்குச் சகசமலத்துடன் கேவலமாகக் கிடக்கு மான்மாக்களைக் குறித்து ஆத்ம ரட்சகார்த்தமாக எழும் நினைவுக்கே சிற்சத்தியென்று பெயராம், இதற்கே யானந்தர் துன்னுமின்ப மிக்கசுகமென்ன மன்னுபெயர் - இங்ஙனமாகிய சிற்சத்திக்கே யானந்தசத்தி யென்றும் இன்ப சத்தியென்றும் மிக்க சுகசத்தியென்றும் பெயர் எப்போது நிலைபெற்றிருக்கும், சிவற்குருவமாகும் - சிவனுக்குச் சிற்சத்தியே சொரூபமாகும், அந்தச்சிற் சத்தியாகு மிருவகையதாய் - அச்சிற்சத்திதான் இரண்டு பிரிவினை யுடைத் தாம், எ-று. (சு)

[மேற் சிற்சத்தி யிரண்டுபிரிவாகிய திறத்தை யீதென வருளிச்செய்கின்ருர்.]

பத்திசத்தி யென்னப் பகரவிரு பேதமதாய்ப்
பத்தியது சற்பத்தி சார்நயிட்டை - யொத்த
வவதானந் தன்னோ டனுபவவா னந்த
நவமாஞ் சமரசமா கும்.

(இ-ள்.) பத்திசத்தியென்னப் பகரவிரு பேதமதாய் - அச் சிற்சத்திதானே பத்தியென்றுஞ் சத்தியென்று மிரண்டு விதமாகி அப்பத்தி யாறுவிதமாம் அவை யாவை யென்னில், பத்தியது சற்பத்தி சார்நயிட்டையொத்த வவதானந் தன்னோடனுபவ வானந்த நவமாஞ்சம ரசமாகும், (உற்பத்தி கிரமமாக வருளிச் செய்யாது சங்கார கிரமமாக வருளிச் செய்கின்றமையான்) - முந்தச்சம ரசபத்தி அதிலாயிரத்திலோரமிச மானந்தபத்தி அதிலாயிரத்திலோ ரமிசம் அனுபவ பத்தி அதிலாயிரத்லோ ரமிசம் அவதானபத்தி அதிலாயிரத்திலோ ரமிசம் நயிட்டாபத்தி அதிலாயிரத்திலோ ரமிசம் சற்பத்தி இங்ஙனம் பத்தி விருத்தி யறுவிதம், எ-று. (எ)

[மேற்கூறிய அறுவகைச் சத்தியிற் சிற்சத்தியைப் பகுக்காது பராசத்தி யென் னவே வைத்துச் சத்தி யைந்தினது பகுப்பினையு மருளிச்செய்கின்ருர்.]

பரையாதி யிச்சையொடு ஞானங் கிரியை
தரமாகு மைந்துபெயர் சத்தி - யுருவாகத்
தோன்றுஞ் சதாசிவன்ருன் றோன்றுமிதிற் சத்தியைந்தாற்
றோன்றுமைந்து சாதாக் கியம்.

(இ-ள்.) பரையாதியிச்சையொடு ஞானங்கிரியை தரமாகு மைந்துபெயர் சத்தி - சிவசத்தியி லாயிரத்திலோ ரமிசம் பராசத்தி யப்பராசத்தியி லாயிரத் திலோரமிசந் திரோதானசத்தி அத்திரோதான சத்தியி லாயிரத்திலோ ரமி சம் இச்சாசத்தி இச்சாசத்தியி லாயிரத்திலோ ரமிசம் ஞானசத்தி ஞான சத்தியி லாயிரத்திலோ ரமிசங் கிரியாசத்தி, உருவாகத்தோன்றுஞ் சதாசி வன்ருன் றோன்று மிதிற்சத்தி யைந்தாற்றோன்று மைந்துசாதாக்கியம் - இச்சத்திகளிற் றோன்றும் சாதாக்கியமே சதாசிவமாம் எங்ஙனமெனில் சிற்

சத்தி சொரூபமா யிருக்கும் பராசத்தியிற் பத்திலொருகூறு வலியினை யுடையது சிவசாதாக்கியம் திரோதானசத்தியிற் பத்திலொரு கூறுவலியை யுடையது அமூர்த்தி சாதாக்கியம் இச்சாசத்தியிற் பத்திலொரு கூறுவலியை யுடையது மூர்த்திசாதாக்கியம் ஞானசத்தியிற் பத்திலொருகூறு வலியை யுடையது கர்த்திரு சாதாக்கியம் கிரியாசத்தியிற் பத்திலொரு கூறுவலியை யுடையது கன்மசாதாக்கியம் இங்ஙனம் பஞ்ச சாதாக்கிய வுற்பத்தி, இச் சாதாக்கிய மைவருக்குமே தத்துவமென்று பெயர், சிவ சாதாக்கியத்தினது தன்மை யெங்ஙனமென்னில் சாந்தியாதீதை யென்னும் பெயரையுடைய பரா சத்தி சுத்தமாதலால் சுத்த சிவமென்னும் பெயருடையதாய்க் கரணவியாத்திக் கெட்டாத வதிசூக்கும மாயளவு படாத பிரகாசமாய்த் தியானரூபமாய் விளங்கப்பட்டுச் சர்வவியாபியா யிருப்பது சிவ சாதாக்கியம், திரோதான சத்தி யருவையாதலால் அமூர்த்திசாதாக்கிய மென்னும் பெயரையுடையதாய் வடிவறுதி யாதலா லிவ்விகற்பமான கலைகளுக் கப்பாற்பட்டுத் தம்பாகாரமான ஒப்பற்ற லிங்கமாய்க் கோடிசூரியப் பிரகாசமாயிருக்கும், வித்தையென்னும் பெயரையுடைய இச்சாசத்தியிற் றோற்றுதலால் மூர்த்தியென்னும் பெயருடைத்தாய்க் காணப்பட்ட வடிவையுடைத்தாய்க் காலாக்கினிபோலும் பிரகாசத் தினை யுடைத்தா யிலிங்கவடிவாய்த் தனது வூர்த்தத்திலே ஒரு திருமுகமு மூன்று கண்ணு மிரண்டுகையு முடையதாக விருக்கும். பிரதிட்டையென்னும் பெயரை யுடைய ஞானசத்தியிற் றோன்றுதலால் கர்த்திருவென்னும் பெயரையுடைத் தாய்ச் சுத்தபடிகப் பிரகாசமான திவ்வியலிங்கமாய்த் தனதுச்சியில் நான்கு திருமுகமும் பன்னிரண்டு திருநயனமும் எட்டத்தமும் வலப்புறத்தத்தத் திலே சூலம் மழு வாள் அபயம் இடப்புறத் தத்தத்திலே பாம்பு பாசம் மணி வரதம் என்னு மாயுதங்களைத் தரித்துக் குறைவில்லாத விலக்கணங்க ளுடனே கூடியிருக்கும், நிவர்த்தியென்னும் பெயரையுடைய கிரியாசத்தியிற் றோற்றுகையாலுங் கன்ம சாதாக்கியமென்னுங் காரணப்பெயரை புடைத்தாய் நாதமயமாகிய ஞானலிங்கமும் விந்துமயவாகிய கிரியாபீடமு முடையதாய்ப் பஞ்சகிருத்திய முடையதா யிருக்கும், இவ்வைந்துந் தத்துவமெனப்படும். இனித்தத்துவ மூர்த்திகள் யாவரென்னில் சதாசிவன் ஈசன் பிரமீசன் ஈசுரன் ஈசானன் என்பவர்களாம். இவர்கள் பிரபாவலக்ஷண மேதென்னில் சிவசா தாக்கியமென்னுந் தத்துவத்தையும் சதாசிவமென்னு மூர்த்தியையும் பொருந் தியது ஈசானமுகம், அமூர்த்தி சாதாக்கியமென்னுந் தத்துவத்தையும் ஈசனெ ன்னு மூர்த்தியையும் பொருந்தியது சத்தியோ சாதமுகம், மூர்த்திசாதாக்கிய மென்னுந் தத்துவத்தையும் பிரமீசனென்னு மூர்த்தியையும் பொருந்தியது வாமதேவமுகம், கர்த்திரு சாதாக்கியமென்னுந் தத்துவத்தையும் ஈசுரமூர்த்தி யையும் பொருந்தியது அகோரமுகம், கன்ம சாதாக்கியமென்னுந் தத்துவத் தையும் ஈசான மூர்த்தியையும் பொருந்தியது தற்புருடமுகம், இங்ஙனந் தத்துவ த்தையுந் தத்துவமூர்த்திகளையு முடைத்தாயிருத்தலாம்; இவர்கள் கூடியிருக்குந் தர்ம மெங்ஙனமென்னில், உடலு முயிரும் கூடியிருத்தல் போலாம். இத்தத்துவ

மூர்த்திக ளொருவரை யொருவர் அந்தர்க்கதமாக வழிபட்டுக்கொண் டிருப்பார்கள், அஃதெங்ஙனமென்னில் கன்ம சாதாக்கியர் கர்த்திரு சாதாக்கியரையும் கர்த்திரு சாதாக்கியர் மூர்த்தி சாதாக்கியரையும் மூர்த்திசாதாக்கியர் அமூர்த்தி சாதாக்கியரையும் அமூர்த்தி சாதாக்கியர் சிவசாதாக்கியரையும் வழிபடா நிற்பர்கள். ஆகையா லிவர்க ளொன்றுகக் கூடித் திரண்டு சமட்டிரூபமாய்க் கன்ம சாதாக்கியர் இலிங்கமும் பீட முமாயிருக்கினும் அஞ்சு திருமுகமும் பத்து அஸ்த்தமுமுடையராய்த் தியானரூபியா யிருப்பர், எ-று. (அ)

[இங்ஙனம் பரமசிவனுக்கு அதோமுகத்தில் நித்திரையாதலானும் அம்முகத்திற் பூசாங்கிகாரமும் அனுக்கிரக நிக்கிரமு மின்றுத லானும் சிற்சத்தியையும் சாந்தியாதீதோத்தர கலையையும் அதிற் றேன்றிய மகாசாதாக்கியரையும் பிரபாவமான அதோ முகமுதலிய விலக்கணங்களை ஈண்டு விவரித்திலர். இதற்குதார ணம். பரமரகசிய சடுத்தலம் "மாசாரு மலமகலயாவுந் தாங் கும் வளரொளிசே ரதோமுகமிவ் வாற தாமே" என்றும், "அற்புதமா மதோமுகத்திலுறக்க மாமென்றறைந்திடுவ ரிறை யருணூ லுணர்ந்துளோரே" என்றும் வருவனவற்றுற் காண்க.

கன்மசா தாக்கியமுங் கர்த்திருசா தாக்கியமுந்
தன்மசிவ மூர்த்திசா தாக்கியமு - நன்மையத
மூர்த்தியொடு நற்சிவசா தாக்கியமு மாம்பெயர்கொண்
மூர்த்திகட்குப் பேரினுமைந் தாம்.

(இ-ள்.) கன்மசாதாக்கியமும் - கிரியாசத்தியிற் றேன்றிப் பஞ்சகிருத்தியத்தையும் பண்ணுகையாற் கன்ம சாக்கியமென்றும், கர்த்திரு சாதாக்கியமும்-ஞானசத்தியிற் றேன்றிச் சர்வ முதன்மையு முடைமையாற் கர்த்திரு சாதாக்கிய மென்றும், தன்ம சிவமூர்த்தி சாதாக்கியமும் - இச்சாசத்தியிற் றேன்றித் தம் பாகிருதியா யிருக்கின்ற லிங்கரூபமா யொருதிருமுக முடைமையான் மூர்த்தி சாதாக்கியமென்றும், நன்மையத மூர்த்தியொடு - நலமுடையதாகிய திரோதான சத்தியிற்றேன்றியிருக்கையால் அமூர்த்தி சாதாக்கியமென்றும், நற்சிவ சாதாக்கியமும் - பராசத்தியிற்றேன்றிப் பேரொளிப்பிழம்பாய்ப் பரமானந்த சொரூபமா யிருக்கையாற் சிவ சாதாக்கியமென்றும் சொல்லப்படும் பெயர்களல்லாமலும், மூர்த்திகட்குப் பேரினுமைந்தாம் - இன்னு மம்மூர்த்திகளுக்கு ஐந்து பெயருண்டு, எ-று.

இதற்கு உதாரணம். பரமரகசியசடுத்தலம், "சிவம்பரம சுகந்தழலா மூர்த்தாமூர்த்தந் திருமுகமொன் றிருகைவிழி மூன்றுமேனி, உவலநிறங் கர்த்திருவம் பகமீராறங்கொருநாலு முகங்கரமெட் டௌவாங்கன்மத், துவமருவு மிலிங்கமதா யொன்றிலொன்று தொடர்ந்தடையு மொழிந்தடைவே மூர்த்தங்கூடி, அவமறுநற் றிருமுகமைந் தங்கையீரைந் தைம்மூன்று விழியாங்கன் மத்தமருமிதுவே" என்பதனுற்காண்க. (க)

ஆசார லிங்கங் குருலிங்கத் தோடுசிவம்
பேசுசர லிங்கம்ப்ர சாதலிங்க - மோசைட்
பெயருமைந்தாங் கன்மத்தின் மாயேசர் பின்னு
நயமொடையைந் தாம்விக்ர கம்.

(இ-ள்.) ஆசாரலிங்கம் - கன்மசாதாக்கியருக் காசாரலிங்கமென்றும், குருலிங்கத்தோடு - கர்த்திருசாதாக்கியருக்குக் குருலிங்கமென்றும், சிவம் - மூர்த்திசாதாக்கியருக்குச் சிவலிங்கமென்றும், பேசுசரலிங்கம்-அமூர்த்திசாதாக்கியருக்குச் சங்கமலிங்கமென்றும், ப்ரசாதலிங்கம் - சிவசாதாக்கியருக்குப் பிரசாதலிங்கமென்றும் ஐந்து பெயராம், கன்மத்தின்மாயேசர் - முற்கூறிய கன்மசாதாக்கியரிடத்தில் மயேசுவரமூர்த்தி உற்பவம், பின்னுநயமொடையைந் தாம் விக்ரம் - பின்னுங் கன்மசாதாக்கியத்தி லிருபத்தைந்து விக்கிரகமுண்டு, எ - று.

அவ்விருபத்தைந்து விக்கிரகம் யாவையென்னின், சந்த்ரசேகரருமா மகேசரிடபாரூடர் சபாபதி கல்யாணசுந்தரர் - சாற்று பிக்ஷாடனர் காமாரிசயவந்த காரிதிரிபுரதகனரோ - சிந்தைசெய் சலந்த்ராரி விதிதும்சர் வீரபத் திராகாரசிம நீபாதர் திகழர்த்த நாரீசர் விக்ரதர கங்காளர் சிர்ச்சண்டிகேசநுக்ரர், நந்தவில்கறைக்கண்ட சுக்ராபயப்பிரதர் நவில்கசமு காநுக்ரகர் - நவையில்சோமாஸ்கந்த ரேகநவில்பாதரு ணணுதக்ஷண மூர்த்தியே, பந்தமிலனங்கசுக பிரத்துமரி லிங்கோற்பர் பகரிருப தோடைவரும் - பரவுதுட்டர்கள்சிட்ட நிக்கிரகவநுக்கிரகம் பணுமிறைகொண் மூர்த்தமிவையே" என்பதனுற்காண்க. (கo)

பத்தியதிற் றேற்றம் பகரிலத்த மாருகும்
மற்றதனு மஞ்சுசித்த நற்சுபுத்தி - மற்று
நிரகங்கா ரஞ்சுமன நீண்ஞானம் பாவம்
வருமப் பெயராம் வளம்.

(இ - ள்.) பத்தியதிற்றேற்றம் பகரிலத்தமாருகும் - முன்சொன்னபத்தியிற் றேற்றிய வவைகளைச் சொல்லுமிடத்து அத்தமாருகும், மற்றதனு மஞ்சுசித்தம் - அவற்றின் பெயர் பிரவஞ்சமாகிய மாயா பதார்த்தங்களைச் சிந்தியாமற் சிவனையே சிந்திக்கையாற் சுசித்தமென்றும், நற்சுபுத்தி - மாயாபதார்த்தங்களை நிச்சயம்பண்ணது சிவனையே நிச்சயம் பண்ணுகையால் நற்சுபுத்தியென்றும், நிரகங்காரம் - பிரபஞ்ச பதார்த்தங்களை அபிமானியாமல் சிவனிடத் தபிமானம் பண்ணுகையால் நிரகங்காரமென்றும், சுனம் - கண்டவற்றையெல்லாம் பற்றுமற் சிவனையே பற்றுகையாற் சுமன மென்றும், நீண்ஞானம் - ஏகதேசமற்று வியாபகமாகையால் நீள்ஞானமென்றும், பாவம் - உள்ளமையாதலாற் பாவமென்றும், வரும்பெயராம் வளம் - அப்பத்திகளிற் றேற்றிய அத்தம் சிறப்புத்தங்கிய பெயர்களை யுடைத்து, எ-று. (கக)

மூர்த்திக ளொருவரை யொருவர் அந்தர்க்கதமாக வழிபட்டுக்கொண் டிருப்பார்கள், அஃதெங்ஙனமெனின் கன்ம சாதாக்கியர் கர்த்திரு சாதாக்கியரையும் கர்த்திரு சாதாக்கியர் மூர்த்தி சாதாக்கியரையும் மூர்த்திசாதாக்கியர் அமூர்த்தி சாதாக்கியரையும் அமூர்த்தி சாதாக்கியர் சிவசதாக்கியரையும் வழிபடாநிற்பர்கள். ஆகையா லிவர்க ளொன்றுகக் கூடித் திரண்டு சமட்டிரூபமாய்க் கன்ம சாதாக்கியர் இலிங்கமும் பீடமுமாயிருக்கினும் அஞ்சு திருமுகமும் பத்து அஸ்த்தமுமுடையராய்த் தியானரூபியா யிருப்பர், எ-று. (அ)

[இங்ஙனம் பரமசிவனுக்கு அதோமுகத்தில் நித்திரையாதலானும் அம்முகத்திற் பூசாங்கீகாரமும் அனுக்கிரக நிக்கிரமு மின்றுதலானும் சிற்சத்தியையும் சாந்தியாதீதோத்தர கலையையும் அதிற் றேன்றிய மகாசாதாக்கியரையும் பிரபாவமான அதோமுகமுதலிய விலக்கணங்களை ஈண்டு விவரித்திலர். இதற்குதாரணம். பரமரகசிய சடுத்தலம் "மாசாரு மலமகலயாவுந் தாங்கும் வளரொளிசே ரதோமுகமிவ் வாற தாமே" என்றும், "அற்புதமா மதோமுகத்திலுறக்க மாமென்றறைந்திடுவ ரிறையருணூ லுணர்ந்துளோரே" என்றும் வருவனவற்றுற் காண்க.

கன்மசா தாக்கியமுங் கர்த்திருசா தாக்கியமுந்
தன்மசிவ மூர்த்திசா தாக்கியமு - நன்மையத
மூர்த்தியொடு நற்சிவசா தாக்கியமு மாம்பெயர்கொண்
மூர்த்திகட்குப் பேரினுமைந் தாம்.

(இ-ள்.) கன்மசாதாக்கியமும் - கிரியாசத்தியிற் றேன்றிப் பஞ்சகிருத்தியத்தையும் பண்ணுகையாற் கன்ம சாக்கியமென்றும், கர்த்திரு சாதாக்கியமும்- ஞானசத்தியிற் றேன்றிச் சர்வ முதன்மையு முடைமையாற் கர்த்திரு சாதாக்கிய மென்றும், தன்ம சிவமூர்த்தி சாதாக்கியமும் - இச்சாசத்தியிற் றேன்றித் தம் பாகிருதியா யிருக்கின்ற லிங்கருபமா யொருதிருமுக முடைமையான் மூர்த்தி சாதாக்கியமென்றும், நன்மையத மூர்த்தியொடு - நலமுடையதாகிய திரோதான சத்தியிற்றேன்றியிருக்கையால் அமூர்த்தி சாதாக்கியமென்றும், நற்சிவ சாதாக்கியமும் - பராசத்தியிற்றேன்றிப் பேரொளிப்பிழம்பாய்ப் பரமானந்த சொருபமா யிருக்கையாற் சிவ சாதாக்கியமென்றும் சொல்லப்படும் பெயர்களல்லாமலும், மூர்த்திகட்குப் பேரினுமைந்தாம் - இன்னு மம்மூர்த்திகளுக்கு ஐந்து பெயருண்டு, எ-று.

இதற்கு உதாரணம். பரமரகசியசடுத்தலம், "சிவம்பரம சுகந்தழலா மூர்த்தாமூர்த்தந் திருமுகமொன் றிருகைவிழி மூன்றுமேனி, உவலகிறங் கர்த்திருவம் பகமீராறங்கொருநாலு முகங்கரமெட் டுளவாங்கன்மத், துவமருவு மிலிங்கமதா யொன்றிலொன்று தொடர்ந்தடையு மொழிந்தடைவே மூர்த்தங்கூடி, அவமறநற் றிருமுகமைந் தங்கையீரைந் தைம்மூன்று விழியாங்கன் மத்தமருமிதுவே" என்பதனுற்காண்க. (கூ)

ஆசார லிங்கங் குருலிங்கத் தோடுசிவம்
பேசுசர லிங்கம்ப்ர சாதலிங்க - மோசைப்
பெயருமைந்தாங் கன்மத்தின் மாயேசர் பின்னு
நயமொடையைந் தாம்விக்ர கம்.

(இ-ள்.) ஆசாரலிங்கம் - கன்மசாதாக்கியருக் காசாரலிங்கமென்றும், குருலிங்கத்தோடு - கர்த்திருசாதாக்கியருக்குக் குருலிங்கமென்றும், சிவம் - மூர்த்திசாதாக்கியருக்குச் சிவலிங்கமென்றும், பேசுசரலிங்கம்-அமூர்த்திசாதாக்கியருக்குச் சங்கமலிங்கமென்றும், ப்ரசாதலிங்கம் - சிவசாதாக்கியருக்குப் பிரசாதலிங்கமென்றும் ஐந்து பெயராம், கன்மத்தின்மாயேசர் - முற்கூறிய கன்மசாதாக்கியரிடத்தில் மயேசுவரமூர்த்தி உற்பவம், பின்னுநயமொடையைந் தாம் விக்ரம் - பின்னுங் கன்மசாதாக்கியத்தி லிருபத்தைந்து விக்கிரகமுண்டு, எ - று.

அவ்விருபத்தைந்து விக்கிரகம் யாவையென்னின், சந்த்ரசேகருமா மகேசரிடபாரூடர் சபாபதி கல்யாணசுந்தரர் - சாற்று பிக்ஷாடனர் காமாரிசயவந்த காரிதிரிபுரதகனரோ - சிந்தைசெய் சலந்த்ராரி விதிதும்சர் வீரபத் திரநாரசிம நிபாதர் திகழர்த்த நாரீசர் விக்ரதர கங்காளர் சீர்ச்சண்டிகேசநுக்ரர், நந்தலில்கறைக்கண்ட சுக்கராபயப்பிரதர் நவில்கசமு காநுக்ரகர் - நவையில்சோமாஸ்கந்த ரேகநவில்பாதரரு ணனுதக்ஷிண மூர்த்தியே, பந்தமிலனங்கசுக பிரத்துமரி லிங்கோற்பர் பகரிருப தோடைவரும் - பரவுதுட்டர்கள்சிட்ட நிக்கிரகவநுக்கிரகம் பணுமிறைகொண் மூர்த்தமிவையே" என்பதனாற்காண்க. (கo)

பத்தியதிற் றேற்றம் பகரிலத்த மாருகும்
மற்றதனு மஞ்சுசித்த நற்சுபுத்தி - மற்று
நிரகங்கா ரஞ்சுமன நீண்ஞானம் பாவம்
வருமப் பெயராம் வளம்.

(இ - ள்.) பத்தியதிற்றேற்றம் பகரிலத்தமாருகும் - முன்சொன்னபத்தியிற் றேற்றிய வவைகளைச் சொல்லுமிடத்து அத்தமாருகும், மற்றதனு மஞ்சுசித்தம் - அவற்றின் பெயர் பிரவஞ்சமாகிய மாயா பதார்த்தங்களைச் சிந்தியாமற் சிவனையே சிந்திக்கையாற் சுசித்தமென்றும், நற்சுபுத்தி - மாயாபதார்த்தங்களை நிச்சயம்பண்ணுது சிவனையே நிச்சயம் பண்ணுகையால் நற்சுபுத்தியென்றும், நிரகங்காரம் - பிரபஞ்ச பதார்த்தங்களை அபிமானியாமல் சிவனிடத் தபிமானம் பண்ணுகையால் நிரகங்காரமென்றும், சுமனம் - கண்டவற்றையெல்லாம் பற்ருமற் சிவனையே பற்றுகையாற் சுமன மென்றும், நீண்ஞானம் - ஏகதேசமற்று வியாபகமாகையால் நீள்ஞானமென்றும், பாவம் - உள்ளமையாதலாற் பாவமென்றும், வரும்பெயராம் வளம் - அப்பத்திகளிற் றேற்றிய அத்தம் சிறப்புத்தங்கிய பெயர்களை யுடைத்து, எ-று. (கக)

[மேற் பத்தியினது வியாபரத்தையுஞ் சத்தியினது வியாபாரத்தினையும் பிரித்தருளிச் செய்கின்றார்.]

பத்திசத்தி யென்னும் பகுப்பிரண்டாம் பத்தியது
சற்றுமுயிர் தோன்றாமற் றற்பரமாய் - நிற்ற
றளராம லேக மதுவாய நிட்டை
தளராமற் செய்யுமது தான்.

(இ-ள்.) பத்திசத்தியென்னும் பகுப்பிரண்டாம் - பத்தியென்றுஞ் சத்தியென்றுஞ் சொல்லப்பட்ட பகுப்பினது வியாபார மிரண்டுவிதமா யிருக்கும் அவை யெங்ஙனமென்னின், பத்தியதுசற்று முயிர்தோன்றாமல் - இருவினையொப்பு மலபரிபாகம்பிறந்த வான்மாக்கள் ஞானசாரியனையடைந்து ஞானதீட்சையைப் பெற்றுக் கேட்டல் சிந்தித்தல் தெளிதலாகிய நிட்டைபண்ணுங் காலத்து ஆன்மபோதஞ் சற்றுஞ் சீவியாமல், தற்பரமாய்நிற்ற றளராம லேகமதுவாய் - தனக்கு மேலொரு பரமில்லாமற் றானே பரமாய்நிற்குஞ் சிவத்துடனேகிபாவமாய் ஞாதிரு ஞானஞேயமென்னுந் திரிபுடியுந் தோன்றாமனிற்கும், நிட்டை தளராமற் செய்யுமதுதான் - அந்த நின்மல துரியாதீத நிட்டையை விட்டுப் பிரியாமற் சிவானந்தாநுபூதியைத் திளைத்திருக்கப் பண்ணுமதுவே பத்தி, எ-று. (கஉ)

[மேற்சத்தியினது வியாபாரத்தை யருளிச் செய்கின்றார்.]

சத்திசிவன் றன்னைத் தகுமுயிர்ச் சித்துவிடாச்
சத்தி விளக்கிச் சரிப்பிக்கு - மித்திறத்தாற்
சத்திநிபா தர்க்காகும் பத்திசத்தி தீயமலப்
பித்தறப்பா கம்வருத்தும் பின்.

(இ-ள்.) சத்திசிவன்றன்னைத் தகுமுயிர்ச் சித்துவிடாச் சத்திவிளக்கிச் சரிப்பிக்கும் - சத்தியானது ஆணவமலத்தினால் மறைபட்டொன்றுந் தோன்றாமற் கேவலமாகக் கிடக்கு மான்மாவினதிச்சா ஞானக்கிரியைகளைக் கலையாதிதத்துவங்களினால் விளக்கி மாயா தேகபோக சம்பந்தத்தினால் மலபரிபாகத்தை வரச்செய்து பின்பு பரமசிவ னொருவனுண்டென்று தோன்றப்பண்ணிச் சரியாபாதங் கிரியாபாதம் யோகபாதம் ஞானபாதங்களைக் கிரமமாக வரப்பண்ணி யிடைவிடாமற் சிவனை வழிபடச்செய்விக்கும். அதுவே சத்திவியாபாரம், இத்திறத்தாற் சத்திநிபா தர்க்காகும்பத்தி - அஃதித் திறத்தினைச் செய்விக்கையால் வருஞ் சத்திநிபாதத்தையுடைய வான்மாக்கட்கே பத்தி யுபகரிக்கும், சத்திதீயமலப்பித் தறப்பாகம் வருத்தும்பின் - பின்னும் அச்சத்தியானது ஆன்மாக்களை மயக்கும் பொல்லாததாகிய ஆணவமலத்துக்குப் பரிபாகத்தினை வரச்செய்யும், எ-று. (கங)

ஆதலினாற் பத்தியுயிர்க் கந்தரங்க மாஞ்சத்தி
யோதுகின்ற வாகிரங்க மோவாரு - மோதுகின்ற

சத்தியா லாமூர்த்தி தானுரு மூர்த்தியினு
லுற்றது வையைந்தொன் ரு.

(இ-ள்.) ஆதலினுற் பத்தியுயிர்க் கந்தரங்கமாஞ்சத்தி யோதுகின்ற வாகிர ங்க மோவாகும் - ஆகையினுலே பத்தி உயிர்களுக்கு அந்தரங்கமாகுஞ் சத்தி பகிரங்கமாகும், ஓதுகின்ற சத்தியா லாமூர்த்திதானுரும் - இங்ஙனஞ் சொல் லப்பட்ட சத்திக ளாறினுமுண்டாகும் சாதாக்கியங்களாறும், மூர்த்தியினு லுற்றதுவை யைந்தொன்ரு - இச்சாதாக்கியர்களுக் கிருப்பிடமாகிய கன்மசா தாக்கியர் வழித்தாகவரு மூர்த்திக ளிருபத்தைந்து அவ்விருபத்தைந்து மூர் திகளையு முன்சொன்ன சாதாக்கியர்களையு மொன்ருகக் கூட்ட, எ-று. (கச)

ஆறைந்தோ டொன்று மருந்தூல சூக்கமெனக்
கூறுகின்ற வாறுசத்தி கூடவே - கூறிலது
வாகுமதி சூக்கதனு வாமதனு னின்மலற்கு
மாகுந் தனுமூன்ற தாம்.

(இ-ள்.) ஆறைந்தோடொன்று மருந்தூல சூக்கமெனக் கூறுகின்ற - முன் சொல்லப்பட்ட இருபத்தைந்து மூர்த்திகள் சாதாக்கியராறுவர் ஆக முப்பத் தொரு மூர்த்திகளில் இலிங்கோற்பவமாகிய விருபத்தைந்து மூர்த்திகளும் பர மசிவனுக்குத் தூல திருமேனியாகவும் சாதாக்கிய ராறுவருஞ் சூக்கும திருமே னியாகவுஞ் சொல்லப்படுவர், ஆறுசத்திகூடவே கூறிலதுவாகுமதி சூக்கதனு வாம் - சொல்லுமிடத்துச் சத்திக ளாறுவரும் அதிசூக்கும திருமேனியாகச் சொல்லப்படுவர், அதனு னின்மலர்க்குமாகுந் தனுமூன்றதாம் - ஆகையால் நின்மலனுகிய பரமசிவனுக்குந் தூலசூக்கும காரணமென மூன்று திருமேனி கற்பிக்கப்படும், எ-று. (கரு)

[மேற் சிருட்டிபேதஞ் சொல்லுகின்ருர்.]

சிவனுற் சிவசத்தி யாற்சத்தி மூர்த்தி
யவற்ருன்மூன் ருகுஞ் சிருட்டி - யிவைதாமுஞ்
சங்கற்ப மாஞ்சிருட்டி சாற்றில்விகற் பச்சிருட்டி
யிங்கதிகா ரம்பெற் றிடும்.

(இ-ள்.) சிவனுற் சிவசத்தி யாற்சத்தி மூர்த்தியவற்ருன் மூன்ருகுஞ் சிருட்டி - சிவசிருட்டியென்றும் சத்திசிருட்டியென்றும் சாதாக்கிய சிருட்டி யென்றும் மூன்று பிரகாரமாயிருக்கும், இவைதாமுஞ் சங்கற்ப மாஞ்சிருட்டி - இம்மூன்று சிருட்டியுஞ் சங்கற்ப சிருட்டியென்று சொல்லப்படும், சங்கற்ப மாவது நினைப்பு மாத்திரமாகச் செய்கை, சாற்றில்விகற் பச்சிருட்டி யிங்கதி காரம்பெற் றிடும் - பிரமா விஷ்ணு ருத்திரன் மயேசுரன் சதாசிவன் ஆகிய அதிகாரம்பெற்ற அணுபட்ச வதிகார கருத்தர்களாற் செய்யுஞ் சிருட்டி விக ற்ப சிருட்டியெனப்படும், எ-று.

விகற்ப சிருட்டியாவது மனவாக்குக் காயங்களாற்செய்யுஞ் சிருட்டி.

[மேன் மும்மாயைகளை யதிட்டிக்கு மூர்த்திகளை யுரைக்கின்றார்.]

மற்றிவர்கண் மூவர் மதிக்கிலவர் மும்மாயை
பற்றியதி லுண்டாகும் பான்மையெலாங் - குற்றமற
வாக்கியுயிர்க் குப்பெந்த மாக்கிப் பிறந்திறந்து
ளுக்கும் வினையான்மா வுக்கு.

(இ-ள்.) மற்றிவர்கண்மூவர் மதிக்கிலவர் மும்மாயை பற்றியதிலுண்டாகும் பான்மையெலாங் குற்றமற வாக்கியுயிர்க் குப்பெந்தமாக்கி - முன்சொன்ன அணுபட்ச பிரமாதி சதாசிவாந்தமான மூர்த்திகளில் இலயபோக அதிகாரத்தையுடைய பசுபதியாகிய பரமசிவன் சிருட்டிகாலத்தில் ஒருமல பெந்திகளாகிய விஞ்ஞானகலரிற் பக்குவருக்கு நிராதாரமாக அறிவுக்கறிவாய் நின்று சாம்பவதீட்சையைப் பண்ணி யவ்வாணவ மலத்தைப் போக்கி முத்தி யோக்கியரை முத்தியிலேவிடுவர், முத்தியோக்கிய ரல்லாதவர்களை அதிகாரமலானு குணமாகச் சுத்தமாயையிற் றனுகரண புவன போகங்களை யுண்டாக்கிச் சுத்தபோக பெந்தமாகக் கொடுத்துச் சுத்தவித்தை முதலிய தானங்களில் வைப்பர், அவர்களுக்குப் பெயர் அபரமுத்தர்க ளெனவறிக. பின்னு மச்சுத்த சிவன் மயேசுர புவனத்திலிருக்கும் அனந்தேசுர மூர்த்தியை யதிட்டித்து அசுத்தமாயையை யொரு பிரதேசத்திற் கலக்கித் தனுகரண புவனபோகங் களை யுண்டாக்கிப் பிரளயாகலருக்குப் பெந்தமாகக் கொடுப்பர், பின்னும் அனந்தேசுரத் துவாரமாக உருத்திரமூர்த்தியை யதிட்டித்துப் பிரகிருதியைக் கலக்கித் தனுகரண புவனபோகங்களை யுண்டாக்கிச் சகலருக்குப் பெந்தமாகக் கொடுப்பர், பிறந்திறந்து ளுக்கும் வினை யான்மாவுக்கு - முற்கூறிய அபரமுத்தர்களுக்குச் சுத்தபோகத்தில் வயிராக்கியம் வரும்பொருட்டுப் பிரேரித்தும் பிரளயாகலருக்குப் பிரகிருதிக்கு மேலுள்ளபோகங்களில் வெறுப்புவரும்பொருட்டுச் செனன மரணங்களையு முண்டாக்குவர், எ-று. (கஎ)

[இங்ஙனம் பதியின தசாதாரண விலக்கணத் தினையுஞ் சாதாரண விலக்கணத்தினையு மருளிச்செய்து மேலான்மாவினது தன்னியல்பு பொதுவியல்பாகிய விலக்கணத்தினை யொன்பது வெண்பாவினு லருளிச்செய்கின்றார்.]

சொல்லு முயிர்க டொகும்பகுதி மூவகைத்தா
நல்லவிஞ் ஞானகலர் நற்பிரளயர் - புல்லுஞ்
சகலரெனப் பேரிவர்க்குச் சாருமன்றே நித்தத்
தகைமையின ரெண்ணரியர் தாம்.

(இ-ள்.) சொல்லுமுயிர்க டொகும்பகுதி மூவகைத்தாம் - ஆகமங்களிற் கூறிய ஆன்ம வர்க்கங்களைத் தொகுத்துச் சொல்லின் மூன்று திறமாக விருக்கும், அவையெங்ஙனமெனின், நல்லவிஞ்ஞானகலர் நற்பிரளயர் புல்லுஞ் சகலரெனப் பேரிவர்க்குச் சாருமன்றே நித்தத்தகைமை யினரெண்ண ரியர்தாம்-

நன்மையினையுடைய விஞ்ஞானகலரென்றும் பிரளயாகலரென்றும் பொருந்திய சகலரென்றும் பெயர்பெற்று அநாதியே நித்தியரா யெண்ணிறந் திருப்பர் கள், எ-று. (கஅ)

[மேலும் அம்மூவருடைய தன்மையை விரித்துக் கூறுகின்றார்.]

மலமது விஞ் ஞானகலர் மற்றுமல கன்மர்
குலபிரள யர்சகலர் கூறின் - மலமூன்றுந்
தாமுடையர் தாஞ்சகலர் தாமென்றே யாகமங்க
டாமுரைக்குஞ் சத்தியமாய்த் தான்.

(இ-ள்.) மலமது விஞ்ஞானகலர் - விசேஷ ஞானத்தினாலேதான் சந்நியா சத்தினாலேதான் தீட்சையிலே நிவிர்த்தி பிரதிட்டை வித்தை யென்னு மூன்று கலைகள் சோதிக்கப்பட்டு மாயாகாரியமாகிய தூலசூக்குமகாரண தேகங்களையும் அத்தேகாநிஷ்டமாகிய கன்மங்களையு நீங்கி ஆணவமல மொன்றினாலே மறை ப்புண்டு சுத்தவித்தைக்குக் கீழ் சுத்தமாயைக்குமே லிருக்குமவர்கள் விஞ்ஞான கலர், மற்றுமல கன்மர் குலபிரளயர் - பிரளயகாலத்திலே கலை நீங்குகை யாற் றீட்சையில் நிவிர்த்தி பிரதிட்டையென்னும் இரண்டு கலைகள் சோதிக்கப் பட்டதனாற் றும் பிரளயாகலரென்று பெயர்பெற்று ஆணவ கன்மமென்னு மிருமல பெந்திகளாய்ப் பிரகிருதிக்குமேல் அசுத்த மாயாபுவனத்திலே மாயை வசப்படாமல் மாயையைத் தம் வசப்படுத்தி வசிப்பவர்கள் பிரளயாகலர், கூறின்மல மூன்றுந் தாமுடையர் - சொல்லுமிடத்து மூன்று மலபெந்திக ளாய்ச் சிருட்டிகாலத்திற் கலையாதிகளுடன் கூடிப் பிரகிருதிக்குக் கீழுள்ள புவனங்களில் நால்வகைத்தோற்ற மெழுவகைப் பிறப்பினுஞ் சுழலுமவர்கள், சகலர் தாமென்றே யாகமங்க டாமுரைக்குஞ் சத்தியமாய்த்தான் - சகலரெ ன்று சிவாகமங்க ளுண்மையாகக் கூறும், எ-று. (கக)

[மேற் கேவல முதலிய வவத்தையைப்பற்றி யிருக்கு மான்மாக் கட்கு அக்காலத் தவசரப் பெயரினைக் கூறுகின்றார்.]

கேவலனென் றும்விகல னென்றும்பே ராமலத்தாற்
றாவுசக லன்பெத்தன் றான்சகலன் - றாவி
லமலன்மிக்க வாதிமுத்தன் முத்தியவத் தைப்பேர்
விமலன்மா யைம்மலத்தா னே.

(இ-ள்.) கேவலனென்றும் விகலனென்றும் பேராமலத்தால் - ஆணவமல மொன்றினா லிச்சாஞானக் கிரியைகள் மறைபட்டு அறிவற்றுச் செயலற்றுப் போக மற்றுக்குறி முதலியனவற்று மலந்தானா யிருக்கு மான்மாவுக்குக் கேவல னென்றும் விகலனென்றும் பெயர், தாவுசகலன் பெத்தன்றான்சகலன் - அக் கேவலக் கிடையைவிட்டுத் தூல சூக்கும காரணமாகிய மாயாதேகத்தைப் பெற் றுச் சுகதுக்க போகங்களை யனுபவித்துக்கொண்டு புண்ணியபாவங்களை யார்ச் சித்திருக்கு மான்மாவுக்குச் சகலனென்றும் பெத்தனென்றும் பெயர், தாவில

மலன்மிக்க வாதிமுத்தன் முத்தியவத்தைப்பேர் - இங்ஙனம்கூறிய கேவலசகலங்களை நீங்கிச் சிவானுக்கிரகத்தினாலே சுத்தாவத்தையைப் பெற்றிருக்கும் ஆன்மாவுக்கு நின்மலனென்றும் ஆதிமுத்தனென்றும் பெயர், விமலன்மாயை மலத்தானே - கேவலனுக்கு மலந்தாரகம் சகலனுக்கு மாயைதாரகம் சுத்தனுக்கு அருளேதாரகம், எ - று. (உ0)

[இன்னுங் கேவலசகல சுத்தமென்னு மூன்றவத்தையின் றன்மையை விரித்தருளிச்செய்கின்றார்.]

நின்மலனு னென்ன நிகழ்போ கமுமமலத்
தன்மமெனத் தானே தனிப்பொருளாஞ் - சின்மயமா
ஞானந் தனைமலத்தா லாவரிக்கக் கேவலனென்
றானவந்த வான்மாவின் பேர்.

(இ - ள்.) நின்மலனுனென்ன நிகழ்போகமும் - தன்னியல்பாகிய சுத்தாவத்தையில் நின்மலானந்த சொரூபமாய் விளங்குஞ் சிவானந்தாநுபவத் தன்மையையும், அமலத்தன்மமெனத்தானே தனிப்பொருளாஞ் சின்மயமா ஞானந்தனை மலத்தாலாவரிக்கக் கேவலனென்றானவந்த வான்மாவின்பேர் - நின்மலமாயொப்பற்ற ஞானமயமாயிருக்குந் தனதறிவினையு மாணவமலந் தடுக்க மறைபட்டொன்றுந் தோன்றாமலிருக்கு மான்மாவுக்குக் கேவலனென்று பெயராயிற்று, எ - று.

இதற்குதாரணம்-சித்தியார், "அறிவிலனமூர்த்தனித்த னராகாதிகுணங்களோடுஞ், செறிவிலன்கலாதியோடுஞ் சேர்விலன்செயல்களில்லான், குறியிலன் கர்த்தாவல்லன் போகத்துக்கொள்கையில்லான், பிறிவிலன்மலத்தினோடு வியாபிகேவலத்திலான்மா, என்பதனாற் கண்டுகொள்க.

இக்கேவலத்தன்மையை முன்னுங்கூறிப் பின்னுங் கூறுவானேனென்னில் முன்றொகையாகக்கூறி இவ்வெண்பாவில் வகையாகக் கூறினாரென வறிக.(உக)

[மேற் சகலாவத்தையி னிலக்கணம் ஆன்மாவினதறிவு சிறிது விளங்கியும் விளங்காமலு மிருக்குமென வருளிச்செய்கின்றார்.]

நெய்யை யுருக்கி நிகழ்குணமுஞ் சேறதுநீ
தியவிறுக்கத் திகழ்குணமும் - வெய்யவனுக்
கார்த்த முகிலா லடங்கி விளங்குதல்போற்
சேர்த் தமா யாவுருவத் தில்.

(இ-ள்.) ஆதித்தனை இராகுகேதுக்கள் வந்து மறைத்தகாலத் தவனுடைய தாகப் பிரகாச சத்திகளொன்றுந் தோன்றாமலெப்படி மறைபடுமோ அப்படி ஆணவமல மறைக்க ஆன்மாவினதிச்சா ஞானக்கிரியைகள் மலசத்தியால் மறைபட்டு யாதொரு வியாபாரமுமற்றுக் கிடப்பதுவே கேவலம், இனி யவ்வான்மா பரிபக்குவமுற்றுச் சகலாவத்தைப்படுங் காலத்து முற்கூறிய ஆதித்தனை மேக

மானதுவந்து மறைந்தகாலத்து நெய்யினையுருக்கவும் சேற்றினையிறுகச்செய்யவு முஷ்ணசத்திதோன் றுமல் பிரகாசசத்திமாத்திரஞ் சிறிது விளங்குவது போலக் கன்மத்துக்கிடாகவந்து பொருந்திய மாயாகாரியமாகிய பௌதிக தூலசரீரத் தில், எ - று. (உஉ)

நித்தியமீ தென்று நிகழநித்ய மீதென்றும்
வைத்தறியும் வித்தை வளமடங்கி - யொத்த
கலைவித்தை ராகத்திற் காணுதலான் மிக்க
சகலனெனப் பேருயிர்க்குத் தான்.

(இ-ள்.) ஒத்தகலை வித்தைராகத்தி னித்தியமீதென்று நிகழநித்திய மீதென்றும் வைத்தறியும் வித்தைவளமடங்கிக் காணுதலால் - சிவசத்தி பிரேரகத்தி ஞல் அசுத்தமாயா காரியமான கலை வித்தை ராகமுதலிய தத்துவங்கள் அவ்வா ன்மாவின திச்சாஞானக்கிரியையின் வியாபாரத்தைத் தடுக்கும் மலசத்தியின து வியாபாரத்தை அவ்விடத்துச் சிறிது நீக்க, அப்போது இது நித்தியம் இது அநித்தியமென்னும் வஸ்த்து விவேகத்தையும் பூதபவுஷிய வர்த்தமானங்களை யும் பிரித்தறியு ஞானந் தோன்றுமற் றனக்கமைத்த போக்கியபதார்த்தங்களை வஸ்த்துரூபமாகவறியாமல் மோகரூபமாய்த் தத்துவங்கடாஞக நின்றறிதலால், சகலனெனப் பேருயிர்க்குத்தான் - அவ்வவத்தைக்குச் சகலாவத்தையெனப் பெயராம், எ-று.

இதற்குதாரணம். சித்தியார். "உருவினைக்கொண்டு போகபோக்கியத் துன்னல்செப்பல், வருசெயன்மருவிச்சத்தமாதியாம்விடயந்தன்னிற், புரிவதுஞ் செய்தங்கெல்லா யோனியும்புக்குழன்று, திரிதருஞ் சகலமான வவத்தையிற் சீவன்சேர்ந்தே" என்பதனாற்காண்க. (உங)

[மேற் சுத்தமாயையினதியல்பு யாதென்னில், இஃதென்கின்றார்.]

நின்மலனாற் றீயமல நீங்கியிடத் தானற்ற
நின்மலனே தானாகி நின்றதா - லம்மா
நிமலனென்ற பேரு நிகழ்ந்திடுமான் மாவுக்
கமலமெனு மாகமங்க டாம்.

(இ-ள்.) நின்மலனாற் றீயமலநீங்கியிடத் தானற்ற நின்மலனே தானாகிநின் றதால்-இங்ஙனஞ் சகலாவத்தையைப்பற்றிச் சனன மரணத்தையுற்றுச் சுகதுக் கமாகிய கன்மபோகங்களை யனுபவித்துவருங் காலத்து இருவினையொப்பு மல பரிபாகம் வரும், அக்காலத்துப் பரமசிவன் தானே ஞானாசாரியனை யதிட்டித் துப் பொல்லாததாகிய வாணவமலத்தைத் தீட்சையினாற் போக்க அப்போதவ் வான்மா தற்போத நீங்கி நின்மலானந்த பரசிவசொரூபத்தை யநந்யமாய்க் கலந் தச்சொரூபமேயாய் நிற்கையால், அம்மா நிமலனெனப்பேரு நிழ்ந்திடு மான்மாவுக் கமலமெனு மாகமங்கடாம் - அவ்வான்மாவுக்கு நின்மலனென்னும் பெயர்வருவ தாச்சரியமோவென வாகமங்கள்கூறும் எ-று.

இதற்குதாரணம் - சித்தியார், "இருவினைச்செயல்க ளொப்பிலீசன்றன் சத்திதோயக், குருவருள் பெற்றுஞான யோகத்தைக் குறுகிமுன்னைத், திரிமல மறுத்துப்பண்டைச் சிற்றறி வொழிந்துஞானம், பெருகிநாயகன் றன்பாதம் பெறுவது சுத்தமாமே" என்பதனுற்காண்க. (உ௪)

[அவ்வான்மா நின்மலானந்தத்தைப் பெற்றிருப்பதே தன்னியல்பெனக் கூறி மேற்பொதுவியல்பீதெனப் பேசுகின்றார்.]

இறந்து பிறந்தே யிருவினைக ளுண்டு
மறந்து தனையு மலத்தாற் - பிறந்தகலா
தொன்றுஞ் சிவத்தினையு மோரா துழல்வதுயிர்க்
கென்றார் பொது வியல்பதே.

(இ - ள்.) தன்னைவிட்டுநீங்கா தநந்யமாயிருக்கும் பரமசிவனையு மறியாது மலத்தினால் மறைபட்டுத் தன்னையுமறந்து இவ்வுலகத்தில் வந்துபிறந்தும் இறந்தும் இருவினைக்கீடாகிய சுகதுக்க போகங்களை யனுபவித்துக்கொண்டு திரியுமதுவே ஆன்மாவிற்குப் பொதுவியல்பு, எ-று. (உரு)

[மேற்றன்னியல் பீதென்றருளிச்செய்கின்றார்.]

சத்திநி பாதமுறச் சத்தியமாம் பத்தியஃ
தொத்துணர்வாங் கால முயிர்க்குயிராய் - நித்தியம
தாகும் பரிபூ ரணமாஞ் சிவமேதா
னாகுமது தன்னியல்ப தாம்.

(இ - ள்.) சத்திநிபாதமுறச் சத்தியமாம் பத்தியஃ தொத்துணர்வாங்காலம் - இங்ஙனஞ் சகலாவத்தையைப்பற்றிச் சனனமரணப் படுங்காலத்து மாயா தேகபோக சம்பந்தத்தினால் இருவினையொப்பும் மலபரிபாகமும் வந்தகாலத்துச் சத்திநிபாதமுண்டாம். அச்சத்திநிபாத முண்டாகவே, மெய்ம்மையாகிய பத்திவந்துபதியும், அப்பத்திபதிந்து இவனறிவுந்தானு மொன்றுபடுங்காலம், உயிர்க்குயிராய் நித்தியமதாகும் பரிபூரணமாஞ் சிவமேதானாகுமது தன்னியல்பதாம்- உயிர்க்குயிராய்ப் பிரியாமலும் இவனுக்கு விளங்காமலு நித்தியமாய்ப் பூரணமாய்நின்ற சிவம்பிரிந்துதோன்ற அச்சிவமேதானாகச் சிவானந்தாநுபூதியைத் திளைத்திருப்பதே அவ்வான்மாவுக்குத் தன்னியல்பு, எ-று. (உசு)

[இங்ஙன மான்மாவினது தன்னியல்பு பொதுவியல்பாகிய விரண்டினையும் ஒன்பது வெண்பாவா லருளிச்செய்து மேலாணவமலத்தின திலக்கணத்தினையும் அம்மலத்தைச் செலுத்துந் திரோதான சத்தியினதிலக்கணத்தினையு மூன்று வெண்பாவினு லருளிச்செய்கின்றார்.]

ஒன்றாகிச் சத்தியொன்று யுற்றவினைப் போகமுயிர்
நின்றருந்தற் காய்ப்பலவாய் நிற்பதாய் - நின்றறிவாற்

றன்னை வினையுருவைச் சத்தியமென் றேயுணர்த்துந்
தன்மையது சத்தி செயல்.

(இ-ள்.) ஒன்றாகிச்சத்தியொன்றாய் - ஆணவமலமொன்றாய் ஆன்மாக்கள் பலவாகையால் பற்பல வான்மாக்களையுமறைக்கும் பற்பல விசித்திர சத்திகளையுடையதாய் ஒருவனைமறைத்தசத்தி மற்றொருவனை மறையாது மறைக்குமாயின் ஒருவனுக்கு மலசத்தி பரிபாகப்பட்டு நீங்குங்காலத்திற் சர்வான்மாக்களுக்கு நீங்கி மோட்சம் வரவேண்டும் அப்படிச் சர்வான்மாக்களுக்கும் ஏககாலத்தில் மோட்சமின்மையால் ஒருவனைமறைத்தசத்தி மற்றொருவனை மறையாதென்பதே நியமம், இவ்விடத் தொருசத்தியென்றது ஒருவனைக்குறித்தே யுரைத்தது, உற்றவினைப்போக முயிர்நின்றருந்தற்காய்ப் பலவாய்நிற்பதாய் - அவ்வான்மா கன்மபலன்களைப் புசிக்கவருங்காலம் முன்னொன்றாய்நின்ற சத்திதானே அதோ நியாமிகம், மோகம், மதம், அராகம், சோஷம், வைசித்திரியம், அரிஷம், விஷாதம், என வவ்வாணவமலசத்திகள் பலவாகி அப்போகத்தில் வெறுப்புவராமல் வாஞ்சையைப் பண்ணுவதாகியுடனாய் நின்று, தன்னை வினையுருவைச் சத்தியமென்றே யுணர்த்துந்தன்மையது சத்திசெயல்-சிவசத்திபிரேரகத்தாற் கலையாதி தத்துவங்களைந்தும் ஆவாரகசத்தியைச் சிறிதேநீக்க அக்காலத்து விளங்காநின்ற சிற்றறிவினாற்றன்னையுந் தனது வினைக்கிடாகவந்து பொருந்துந் தேகாதிகளையும் இதுவே பரமெனவறிவித்துக்கொண்டிருக்குந் தன்மையையுடையது அச்சத்தியினுடைய கிருத்தியம், எ-று.

கன்மபோகத்தைப் புசிக்குங்காலத்து அச்சத்திகள் பலவாகநின்று மறைத்துப் புசிப்பிக்கும்வகை யெங்ஙனமென்னின், இத்தமலஞ் சகலரெனப்பட்ட வான்மாக்களுக்குச் சகலாவத்தையில் அராகமுதலிய கருவிகளுடன்கூடி நின்றறிவித்து மோகமுதலிய வெழுவகைக்குணத்தினையுஞ் செய்விக்கும், அவற்றுள் மோகமாவது - சிவதிரவியாபகாரமுதலானவை அதிபாதகமென்றாசாரியனாலறிந்தாலும் அவ்வுணர்ச்சி சிறிதும் விளங்காமலறிவை மயக்கி யதிபாதகாதியைச் செய்விப்பது, மதமாவது - யாதாமொருவன் தான்மோகித்துப்புணர்ந்த பொது மடந்தையைப் பார்த்திவள் தெய்வமடந்தை இவளிலரியபேறெமக்கில்லையென்று மதிப்பது, அராகமாவது அவளைப்பெறாதபோது மிகவும் வருந்திப் புகும்படி வாஞ்சையைச்செய்விப்பது, சோஷமாவது - சுற்றத்தை விட்டெப்படிநீங்குவோ நாமிறந்தாற் குடும்பத்தை யாவர்தாங்குவரென்றந்த மனோதுக்கத்தாலே உடலுலரும்படி செய்விப்பது, வைசித்திரியமாவது - சிவன் நமக்குள்ள இருவினைப்பலன்களை ஆதிதைவீக முதலிய மூவிதத்தாற் றருமென்னுமுணர்வை யிழப்பித்திவன் என்னைக்கெடுத்தான் எடுத்தான் நானும் என்னை வணங்கினரை வாழ்வித்தேனென நினைப்பிப்பது, அரிஷமாவது புத்திரமித்திராதிகளைக்கண்டு களித்து இனி நமக்கொன்றுங்குறைவில்லையென மகிழ்விப்பது ஆணவமலசத்திகளின் காரியம் இங்ஙனமெனவறிக, இதற்குதாரணம் - சித்தியார், "ஒன்றதாயநேகசத்தி யுடையதாயுடனாயாதி, யன்றதாயான்மாவின்றனறி

வொடுதொழிலைபார்த்து, நின்றுபோத்திருத்துவத்தை நிகழ்த்திச்செம்பினிற்களி ம்பேய்ச், தென்று மஞ்ஞானங்காட்டுமோணவ மிசைந்துநின்றே" சிவப்பிரகாசம் "ஏகமாய்த் தங்காலவெல்லைகளின்மீரு மெண்ணரிய சத்தியதா யிருளொளிர விருளிட, மோகமாய்ச் செம்பிலுறுகளிம்பேய்ந்துநித்த மூலமலமா யறிவுமுழு தினையு மறைக்கும், பாகமாம்வகைநின்று திரோதாயிசத்திபண்ணுதலான் மல மெனவும் பகர்வர்" என்பவற்றாற் காண்க. (உஎ)

[முன்னை வெண்பாவில் அதோநியாமிகாசத்தியினது வியாபாரத் தை யுணர்த்தி இங்ஙனம் ஆவாரகசத்தியினது வியா பாரத்தை யுணர்த்துகின்றார்.]

ஏகமதாஞ் சத்தி யெழிலறிபொய்ப் போகமுன்னு
மோக வறிவுமற மூடியே - யேகமதாய்
நின்ற சிவனை நினையா துயிரறிவி
லொன்றும் படலமென வோர்.

(இ-ள்.) ஏகமதாஞ்சத்தி - ஓரான்மாவை மறைக்குமோராவாரகசத்திதானே, எழிலறிபோய்ப் போகமுன்னு மோகவறிவுமறமூடியே - நாம சாதி குணம் கிரியையுடனே யறிபப்பட்ட பொய்யாகிய மாயாபோகத்தைத் தரும் போக்கிய பதார்த்தத்தைப்பற்றி யதில் விழுந்து புசிக்குஞ் சிற்றறிவினையும், ஏகமதாய் நின்ற சிவனை நினையாதுயிரறிவிலொன்றும் படலமெனவோர் - அறிவுக்கறிவாய் ஏகனாயிருந்து பிரேரிக்குஞ் சிவபெருமானையு மறியவொட்டாமன் மறைக்கும் அதெப்படி யென்னிற் கண்ணினது பிரகாசத்தைக் காசபடலந்தடு ப்பதுபோலென்றறிவாயாக, எ-று. (உஅ)

[மேலாணவமலத்தின் சாதாரணவிலக்கணத்தை யருளிச்செய்கின்றார்.]

முத்தியடை யுங்கால மூலமாஞ் சத்திதன்னோ
டொத்தகுணி தானு மொழிந்தகன்று - நித்தியமாய்
நிற்பதுதா னாணவமா நின்றிதனை யாதிசத்தி
கற்புடன்பொற் பாய்ச்செலுத்துங் காண்.

(இ-ள்.) ஆணவ முத்தியடையுங்காலம் - ஆணவமலசத்தியானது மாயா தேகபோக சம்பந்தத்தினாற் பரிபாகத்தை யடைந்து சிவாநுக்கிரகத்தினாலான் மாவைவிட்டு நீங்குங்காலத்து, மூலமாஞ் சத்திதன்னோடொத்தகுணிதானுமொ ழிந்தகன்று - அநாதி சகசமாயான்மாவைப்பற்றியிருக்கும் மலசத்தியு மச்சத்தி மானுங் கூடவே நீங்கி, நித்தியமாய் நிற்பதுவாம் - தான் கெடாமற் பெத்தான் மாக்களைப்பற்றி நித்தியமாகவே யிருக்கும், இதற்குதாரணம் - சித்தியார், "நெல் லினுக்குத் தவிடுமிகளநாதியாயே நெல்லைவிட்டு நீங்கும்வகை நின்றநிலைநிகழ்த் தீர்-சொல்லியிடிற்றுகளற்ற வரிசியின்பா லில்லைத்தொக்கிருந்து மற்றொரு நெற் றோன்றிடாவா, மெல்லவிவை விடுமறவே யவைபோல வணுவைமேவு மலமுடல்

கன்ம மாதி விட்டே நீங்கும், நல்லசிவ முத்தியின்கட்பெத்தான்மாவை நணுகி நிற்கு மாதலா னுசமுமின்றுமே" என்பதனாற்காண்க. நின்றிதனை யாதிசத்தி கற்புடன் பொற்பாய்ச் செலுத்துங்காண் - இங்ஙன மிவ்வாணவமலத்தினைச் செலுத்திப் பரிபாகத்தினை வரச்செய்வது திரோதானசத்தி, எ-று. (உகூ)

[மேற் றிரோதான சத்தியின திலக்கண மருளிச்செய்கிறார்.]

ஆதிதிரோ தாயியர னுக்கினையென் றேபெயராய்த்
தீதி லுயிர்க்குமலத் தீயநோய் - வாதைகெட
வுள்ள வவுடதமா முற்ற வினையருத்தி
யுள்ளமல பாகம்வருத் தும்.

(இ - ள்.) ஆதிதிரோதாயியரனுக்கினை யென்றே பெயராய் - சுத்தசிவத்தினது சிற்சத்தி பராசத்தி வழித்தாகிய வாதிசத்தி தானே மலத்தைச் செலுத்துகையாற் றிரோதான சத்தியென்னும் பெயரினை யுடைத்தாய், தீதிலுயிர்க்கு மலத்தீய நோய்வாதை கெட - குற்றமில்லாமல் நித்தியமாயிருக்கும் உயிரை அநாதியேபற்றி யுபாதியினைச்செய்யும் பொல்லாத வாணவ மலமாகிய வியாதியைப் போக்கத்தக்கதாக, உள்ளவவுடதமா முற்றவினையருத்தி - அதற்கேற்ற வவுடதமாகிய வினைப்போகத்தைப் புசிப்பித்து, உள்ள மலபாகம் வருத்தும் - உண்மையாகிய பரிபாகத்தை வரச்செய்யும், எ-று.

இதற்குதாரணம் - சித்தியார், "எழுமுடல் கரணமாதி யிவைமல மலமல த்தாற், கழுவுவனென்று சொன்னகாரண மென்னை யென்னிற், செழுநவ வறுவைசாணி யுவர்செறிவித் தழுக்கை, முழுவதுங் கழிப்பன்மாயை கொடு மல மொழிப்பன் முன்னோன்" என்பதனாற் காண்க. (௩O)

[மேற் சுத்தமாயையின திலக்கண மருளிச் செய்கின்றார்.]

சுத்தமதா மாயை சொலுஞ்சத்தி மூர்த்திகளால்
வைத்தவதி கார மடையுநல்ல - தத்துவமா
மூர்த்திகளுக் கேற்றதநு வாதிகளா யேமுழுதுந்
தோற்றுவிக்கு மற்றுஞ் சொலின்.

(இ - ள்.) சுத்தமதாமாயை - சுத்தமாயையானது, சொலுஞ் சத்திமூர்த்திகளால் - முற்கூறிய சத்திமூர்த்திகளாகிய சாதாக்கியங்களால், வைத்தவதிகார மடையுநல்ல தத்துவமாமூர்த்திகளுக் கேற்றதநு வாதிகளாயே முழுதுந் தோற்றுவிக்கும் - அவ்வப்புவன வாசிகளுக்குத் தக்கதநுவாதிகளை யுண்டாக்கும், மற்றுஞ்சொலின் - இன்னுஞ் சொல்லுமிடத்து, எ-று.

இதற்குதாரணம். சித்தியார். "வித்தைகள் வித்தையீசர் சதாசிவரென்றிவர்க்கு, வைத்திடும் பதங்கள் வன்னம் புவனங்கள் மந்திரங்க, டத்துவஞ் சரீரம் போகங் கரணங்கடா மெலாமு, முய்த்திடும் வயிந்தவந்தா னுபாதான மாகின்றே" என்பதனாற் கண்டுகொள்க. (௩க)

சரியாதி செய்தோர்க்குச் சாலோக மாதி
யரிதாம் பதங்கள்பய னென்றப் - பெருமையுடன்
காட்டும் வயிந்தவமா மாயைசிவம் விந்துவென
வீட்டும் பெயரிவைக ளே.

(இ-ள்.) சரியை கிரியை யோகங்களில் நின்றோர்க்குச் சாலோகாதிபதமுத் திகளை யுண்டாக்கும் வயிந்தவமென்றும் மாயையென்றுஞ் சிவமென்றும் விந்து வென்றும் இவை முதன் முப்பத்தொரு பெயரினை யுடைத்தாயிருக்கும், எ-று.

இதற்குதாரணம் - சிவஞானதீபம், "பகர்சுத்தமாயையோங் காரமுதலா முப் பத்தொரு பேதாதிவிதப் பலபெயரா மவற்றுள், வகைமிக்க பரப்பிரமம் வயிந்தவமா யேயம் மாயை குண்டலினிநீண் மாயை படங்குடிலை, தகையுற்ற பிரணவம்பேரொளி நாதம் விந்து தக்கசிவந் தநுவாதி நாலுடனான் காகும், நிகரற்ற வாக்காதி நிவர்த்தாதி யைந்து நிகழ் சுத்தவித்தாதி யைந்தென நின் றிடுமே, என்பதனுற் காண்க. (ங௨)

[மேலசுத்தமாயையின திலக்கண மருளிச்செய்கின்றார்.]

நித்தியமா யன்றே நிகழுயிர்க்கு நேமவினைக்
குற்றதநு வாதி யொருநான்கும் - வித்தரமா
யுண்டா மதற்கிடமா யுற்றமுத்தி காலமயக்
குண்டாகுஞ் சத்திதன் னேடு.

(இ-ள்.) நித்தியமாய்-நித்தியமாகி, (மாயையொன்றேயென்றுஞ் சுத்தமா யையினதோர் பாகத்துண்டானது அசுத்தமாயையென்றும் சிலர் சொல்லுவா ர்கள், அஃதபசித்தாந்தம். ஏனெனிற் சுத்தமாயைபோதம், அசுத்தமாயைமோ கம், ஆகையாற் சுத்தமாயையைப்போல அசுத்தமாயையையும் நித்தியமென்றே யாகமங்கள் கூறுதலானும் கொற்றவன்குடி முதலியாரும் அக்கருத்தேபற்றித் திருவருட்பயனில் "ஏகனநேகனிருள் கருமமாயையிரண், டாகவிவையாறுதி யில்" என்றார், ஆதலானும் இந்நூலாசிரியரும் நித்தியமேயென்றார், அன்றே நிகழுயிர்க்கு-அநாதியாயிருக்கு முயிர்கட்கு, நேமவினைக்குற்ற தநுவாதி யொரு நான்கும் வித்தரமாயுண்டாமதற்கிடமாய்-ஆன்மாக்களாற் செய்யப்பட்டவினைக் கிடாக வந்துபொருந்துந் தநுகரண புவனபோகமாகிய நான்கும் வெவ்வேறாக உண்டாதற் கிடமாய், உற்றமுத்தி காலமயக்குண்டாக்குஞ்சத்தி தன்னோடு- ஆன்மாக்களிருவினை யொப்பு மலபரிபாகம் பிறந்து முத்தியை யடையுமளவும் பொய்யை மெய்யாகக் கருதும்படி மயக்கும், எ-று. (ஙங)

காணுதே நீங்கியிடுங் காணசுத்த மாயையது
பேணு மகேசரொடு பேதமதாய்க் - காணுமிதற்
கேற்றபொது வுண்மை யிதுவாமென் றாகமங்க
ளேற்றமுறச் சொல்லுந் திடம்.

(இ-ள்.) காணுதேநீங்கியிடுங் காரணசுத்தமாயையது - உயிர்கள் முத்தியடையுங் காலத்துத் தனது காரியமாகிய தநுகரணபுவனபோக முதலியயாவுந் தோன்ருமல் நீங்கிப்போவதாகிய அசுத்தமாயையானது, பேணுமகேசரொடுபேதமதாய்க்காணு மிதற்கேற்றபொது-ஈசுரதத்துவத்திலிருக்கும் மகேசுரனொன்னும் அனந்தேசுரர் சத்திவசப்பட்டவர்க்குப் பரிக்கிரகசடசத்தியா யிருக்கும், இங்ஙனமுற்ற மாயைக்குத் தநுகரணபுவனபோகங்களா லான்மாக்களைப் பெந்தித்து மயக்குவதுபொதுவிலக்கணம், உண்மை யிதுவாமென்ருகமங்கள் தேற்றமுறச் சொல்லுந்திடம் - இதுசத்தியமென்ருகமங்கள் தெளியவுரைக்கும், எ-று.

[மேற்கன்மத்திருவிதங் கூறுகின்ருர்.]

கோணு மலமகற்றுங் கொள்கையது வானவினை
காணி லிருவகைத்தாங் கட்டுரைக்கிற் - கோணுகு
மின்பதுன்ப மாகி யிதமகித மாய்த்தனுக்கள்
வந்துற் றிடவேது வாம்.

(இ-ள்.) கோணுமலமகற்றுங் கொள்கையதுவானவினைகாணி லிருவகையாங் கட்டுரைக்கிற்கோணுகும் - மாறுபாடில்லாமற்றனது வியாபாரத்தினுலாணவமலத்துக்குப் பரிபாகத்தை வருவித்து நீற்குந்தன்மைக்கோர் மருந்தாகிய கன்ம மலத்தினதிலக்கணம் பார்க்குமிடத்திரண்டுவிதமாகச் சொல்லப்படும் எங்ஙனமெனின், கோணுகுமின்பதுன்பமாகி - ஒன்றுக்கொன்று மாறுபாடாயிருக்குஞ் சுகத்தினையுந் துக்கத்தினையுந் தருவதாய், இதமகிதமாய் - நல்வினையென்றுந் தீவினையென்று மிருவிதமாய், தநுக்கள்வந்துற்றிடவேதுவாம்- மாயையினின்றுந் தநுகரண புவனபோகங்க ளுண்டாதற்குக் காரணமாம், எ-று. (ருடு)

[இனிக்கன்மத்தினது அசாதாரண விலக்கணமருளிச்செய்கின்ருர்.]

பக்குவமாங் காலம் பயனுஞ் சுகதுக்கத்
தொக்கவருத் தும்வலியோ டொன்ருகி - யக்கணமே
தோன்ரு தொழியுமெனச் சொல்லுமிக்க வாகமங்க
ளூன்றும்விதி யூழ் கருமப் பேர்.

(இ-ள்.) பக்குவமாங்காலம் - இருவினை யொப்புவந்தகாலத்து, பயனுஞ் சுகதுக்கத்தொக்கவருத்தும் வலியோடொன்ருகியக்கணமே தோன்ருதொழியுமெனச் சொல்லுமிக்கவாகமங்கள் - தனதுபயனுகிய சுகதுக்க முதலியவற்ருேடு பெலத்தசஞ்சிதம் பிரார்த்தமாகாமியமென்பனவாகித் தோன்ருதொழியுமெனச் சிறந்த சிவாகமங்கள் செப்பும், ஊன்றும்விதியூழ் கருமப்பேர் - அக்கன்மத்திற்குக் கன்மமென்றும் விதியென்றும் ஊழென்றும் வினையென்றும் அதிர்ஷ்டமென்றும் பூர்வமென்றும் பெயர், எ-று. (ருசு)

ஐம்பாச மென்றே யரிய சிவாகமங்க
ணம்பா வுரைக்கு நடலையறத் - தம்பமிதி
லார்ப்புண்டு நின்றிருந்த வாமுயிர்க்கு நாதனன்பா
லார்ப்புறுத்துந் தன்மையுரைப் பாம்.

(இ-ள்.) ஐம்பாசமென்றே யரியசிவாகமங்கணம்பவுரைக்கு நடலையற - இங்ஙனங்கூறிய ஆணவமலந்திரோதானசத்தி சுத்தமாயை அசுத்தமாயை கன்மமென்னு மிவைகளையே யைவகைப்பாசங்களென் றரிய சிவாகமங்க ணிச்சயமாகச் சொல்லும் அவையிற்றின்வஞ்சமனைத்து நீங்க, தம்பமிதிலார்ப்புண்டு நின்றிருந்தவா முயிர்க்குநாதனன்பால் - இவ்வைவகைப்பாசமாகிய தம்பத்திற் கட்டுப்பட்டவையிற்றின் போகங்களைப் புசிப்பித்துத் தொலைத்தற்பொருட்டவ்வான்மாக்களை, நாதனன்பாலார்ப் புறுத்துந்தன்மை யுரைப்பாம் - சிவபெருமான் காருண்ணியத்தாலவைகளிற் பெந்தப்படுத்துந் தன்மையை விரித்துச் சொல்லுவாம், எ-று. (நஎ)

[மேன்மலவசத்தாலாகிய கேவலாவத்தையின்
றன்மையை விரித்துரைக்கின்றார்.]

மூலமலத் தாற்றலைமை முற்றுமறைக் கப்பட்டுச்
சாலு முருவருவஞ் சார்குணங்கள் - சீலக்
கலாதியின்றிப் போகக் கருத்தின்றிக் கர்த்த
னலாதுவிபு கேவலத்தான் மா.

(இ-ள்.) மூலமலத்தாற் றலைமைமுற்று மறைக்கப்பட்டு - ஆணவமலசத்தியினு லான்மாவினதிச்சாஞானக் கிரியாசொரூபமாகிய தன்மை முற்றுமறைக்கப்பட்டு, சாலுமுரு - பூதபரிணாமமாகிய தூலதேகசம்பந்தமும், அருவம்-ஞானேந்திரிய கன்மேந்திரியவந்தக்கரணங்களினது சம்பந்தமும், சார்குணங்கள் - பிரகிருதிசென்னியமாகிய முக்குணசம்பந்தமும், சீலக்கலாதியின்றி - சுத்தமாயாகாரியமாகிய கலையாதிதத்துவங்களுநீங்கி, போகக்கருத்தின்றி - யாதொருபோகங்களிற் கருத்துமற்று, கர்த்தாவலாது - அகர்த்தாவாய், விபு-வியாபகமாய், கேவலத்தான்மா - கேவலாவத்தையைப் பொருந்துமான்மா எ-று.

இதற்குதாரணம் சித்தியார் "அறிவிலனமூர்த்தனித்தனராகாதி குணங்களோடுஞ், செறிவிலன்கலாதியோடுஞ் சேர்விலன் செயல்களில்லான், குறியிலன் கர்த்தாவல்லன் போகத்திற்கொள்கையில்லான், பிறிவிலன் மலத்தினோடும் வியாபிகேவலத்திலான்மா" என்பதனாற் கண்டுகொள்க. (நஅ)

[மேற்கேவலாவத்தைபற்றிக் கிடக்குமுயிர்கட் குணர்த்துந்
தன்மையை யருளிச்செய்கின்றார்.]

தூங்குங் குருடர் துயிலெழுந்து தூய்மையுட
ஞேங்கிவழி கண்டுசெல வுற்றொருவர் - தாங்கொடுக்குங்

கோலால் வழிநடக்குங் கொள்கையது போன்மாயைக்
காலாந் தநுகரணங் கள்.

(இ-ள்.) தூங்குங்குருடர் துயிலெழுந்து தூய்மையுடனேங்கி வழிகண்டு செல்ல - நித்திரைசெய்துகொண்டிருந்த பிறவிக்குருடனெருவ னித்திரைதெ ளிந்து தனது வியாபாரத்திற் செவ்விதாகவழிதெரிந்து செல்ல, உற்றொருவர் தாங்கொடுக்குங் கோலால் வழிநடக்குங் கொள்கையதுபோல் - தனக்குரித்தா யுள்ள வொருவர்கொடுக்கும் ஊன்றுகோலைப்பற்றி வழிநடக்குந்தன்மைபோல, மாயைக்காலாந்தனுகரணங்கள் - ஆன்மாக்கட்கு மாயையின் வழித்தாகிய தநு கரணங்களே ஊன்றுகோல்களாம் எ-று. (௩௯)

[இன்னும் உணர்த்து முறைமையை யருளிச்செய்கின்றார்.]

ஒப்பற்ற மேலா முணர்வா மமலனுயிர்க்
கப்பற்றொன் றாகக் கருணையாற் - றப்புணர்த்தற்
காய சதாசிவமே லாமோர் சிவமுரிமை
யேயசுத்த மாயைதனி லே.

(இ-ள்.) ஒப்பற்றமேலா முணர்வா மமலனுயிர்க்கப் பற்றொன்றாகக்கருணை யாற்றப்புணர்த்தற்காய சதாசிவனால் - தனக்கொருநிகரற் றியாவர்க்கு முதன் மையாய்ப் பேரறிவனாய் நின்மலனாயிருக்குஞ் சுத்தசிவன்றானே தனது காருண் ணியத்தினாற் றனதடிமையாகிய வான்மாக்களெல்லாந் தனக்குவேறாய்க் கேவல மாய்க்கிடக்குந் தன்மையைக்கண்டு இவ்வான்மாக்கள் கேவலநீங்கிச் சிவானந் தானுபூதியைத் தினைத்திருக்குமதுவே தன்னியல்பு அவ்வியல்பைப்பெறச் சகலத் தில் விடுத்துச் சுகதுக்கங்களைப் புசிப்பித்தற்காகப் பிரேரிக்கும் பொருட்டு அச் சுத்தசிவன்தானே, ஆமோர்சிவமுரிமையே யசுத்தமாயை தனிலே-தனது பரிக் கிரக சடசத்தியாகிய சுத்தமாயையைக்கலக்கி முந்தச் சத்தருப சிவதத்துவத் தை யுண்டுபண்ணுவன், எ-று. (௪0)

சொற்றதினில் விந்து சொலுமிதிற்சா தாக்கியமா
முற்றதனி லீச ரதில்வித்தை - மற்றவிது
வைந்தாகுந் தத்துவங்க ளாம்பிரே ர காண்டமென
வந்தவைகள் சொல்ல மதி.

(இ-ள்.) சொற்றதனில்விந்து சொலுமதிற் சாதாக்கியமாம் - முன் சொல் லப்பட்ட சத்தருபமாகத் தோன்றிய சிவதத்துவத்திற் சத்தி தத்துவந் தோன் றும் அச்சத்தி தத்துவத்திற் சாதாக்கிய தத்துவந்தோன்றும், உற்றதனி லீசரதில் வித்தை-அச்சாதாக்கிய தத்துவத்தி லீசுரதத்துவந் தோன்றும் அவ்வீசுர தத்து வத்திற் சுத்தவித்தைதோன்றும், மற்றவிது வைந்தாகுந் தத்துவங்களாம் பிரேர காண்டமென - இங்ஙனமொன்றி னொன்றுதோன்றும் இவ்வைந்து தத்துவ மூமே கலையாதி தத்துவங்களைப் பிரேரிக்கும் ஆகலான் பிரேரககாண்டமென்று

சொல்லப்படும், வந்தவைகள் சொல்லமதி-இன்னுமாயையி னின்றுந்தோன்றும் மற்றவைகளையும் யாம் சொல்லக்கேட்பாயாக, எ-று. (சுக)

அக்கரங்க ளைம்பத்தொன் றும்பதினொன் றுமனுவு
மிக்கபத மெண்பத்தொன் றும்வியப்பாய் - வர்க்க
மெழுகோடி மந்திரநூ லெண்ணில் புவன
மழிவிலெண்மூன் றேடிருநூ றும்.

(இ-ள்.) அக்கரங்களைம்பத்தொன்றும்-அகாராதிக்ஷகாராந்தமாகிய வட்சரங்கள் ஐம்பத்தொன்றும், பதினொன்றுமனுவும்-ஈசானமுதல் அஸ்த்திரமீறுகமந்திரம் பதினொன்றும், மிக்கபதமெண்பத்தொன்றும் – மேலாகிய பிரணவமுதல் நமோநமாந்தமாகப் பதமந்திரம் எண்பத்தொன்றும், வியப்பாய் வர்க்கமெழுகோடிமந்திரம்-வியக்கத்தக்கதாய் நம:–சுதா-சுவாகா-வஷடு-வவுஷடு-உம்-படு-என்னும் வர்க்கத்துக்கொரு கோடியாக மந்திரம் ஏழுகோடியாம், நூலெண்ணில்-வேதாகமமுதலிய நூல்கள் எண்ணிறந்தனவாம், புவனமழிவிலெண்மூன்றேடிருநூறும் - அழிவில்லாத காலாக்கினி ருத்திரபுவனமுதல் அநாசிருத புவனாந்தமாகப் புவனங்க ளிருநூற்றிருபத்து நான்காம், எ-று. (சுஉ)

சொற்றவைக டோற்றுவித்துச் சொற்றகுணத் தாலுயிர்க்கு
மற்றுருவாய் மிக்கவின்ப மன்னியிட - லுற்ற
பொதுவாகுந் தன்னுருவுந் தானும்பொய் யாகு
மதுசுத்த மாயைக்குண் மை.

(இ-ள்.) சொற்றவைகடோற்றுவித்து - இங்ஙனங்கூறியசத்த ரூபங்களையும் அர்த்தரூபங்களையு முண்டுபண்ணி, சொற்றகுணத்தாலுயிர்க்கு-தனது காரியரூபமாகிய தத்துவங்களாலுயிர்கட்கு, மற்றுருவாய்மிக்கவின்ப மன்னியிடலுற்றபொதுவாகும் – சிவாநுக்கிரகத்தினாலே மும்மலபெந்தங்களுநீங்கி அதிகார மலபெந்தத்தினை மாத்திரமுடைய அபரமுத்தர்கட்குச் சர்வஞ்ஞத்துவாதி குணங்களை விளக்கி மேலாகிய வின்பத்தினைத் தருவதுவுங் கன்மத்துக்கீடாக வருஞ் சுகதுக்கபோகங்களைப் புசிப்பிக்கவரும்பெத்தான் மாக்கட்கு வாக்குரூபமாயிருந்து சுத்தமாயாகாரியம் பிரேரிப்பதும் பொதுவிலக்கணம், தன்னுருவுந் தானும் பொய்யாகு மதுசுத்தமாயைக் குண்மை - அப்போகத்தில் அம்முத்தர்கட்கு வெறுப்புவந்தகாலத்துப் பொய்யாய்விட்டு நீங்குவதே சுத்தமாயைக்குண்மை, எ-று. (சுங)

[இங்ஙனஞ் சுத்தமாயைக்குப் பொதுவுண்மை சாதித்துமேல் அசுத்த மாயையிற் றத்துவவுற்பத்திக்கிரமம் உரைக்கின்றார்.]

ஆக்குமனந் தேசரா லாமசுத்த மாயைதனி
லாக்குங்கா லந்நியதி யோடுகலை - தூக்குங்
கலையதனில் வித்தையதிற் காணு மராக
மலைவறவிக் கஞ்சுகங்க ளாம்.

(இ-ள்.) ஆக்குமனந்தேசரால்-கிருத்திய கர்த்தாவாகிய அனந்தேசுரமூர்த்தியினுடைய கிரியாசத்தியினால், அசுத்தமாயைதனில் - அசுத்தமாயையிலோர் பிரதேசத்தினின்றும், ஊக்குங்காலந்நியதியோடு கலையாம் - வலியினையுடைய காலமும் நியதியுங்கலையு மொருகொத்தாகவுண்டாகும், தூக்குங்கலையதனில் வித்தையதிற் காணுமராகம் - கலையினின்றும் வித்தைதோன்றும் அவ்வித்தையினின்றும் இராகந்தோன்றும், அலைவறவிக்கஞ்சுகங்களாம் - இங்ஙனங்கூறிய விவ்வைந்தும் ஆன்மாவுக்கோர் சட்டையாகும், எ-று.

இவ்வைந்துங் கூடினவிடத்தோர் புருடதத்துவமுண்டாம், அதெங்ஙனமெனில் நெய்திரிநெருப்புக் கூடினவிடத்தோர் பிரகாச முண்டாவதுபோலவும் மஞ்சளுஞ்சுண்ணமுங் கூடினவிடத்தோர் சிவப்புண்டாவது போலவும் ஆம் அம்மாயையைக் கலக்கின பிரதேசமேமாயை, இங்ஙனமேழு தத்துவமுண்டாயவாறுகாண்க. (௪௪)

[மேற்பிரகிருதிமுதலாகிய விருபத்துநாலு தத்துவ வுற்பத்தியையுரைக்கின்றார்.]

உரைத்த கலையி லுருத்திரரா லாமான்
றெரித்தகுண மூலத்தாஞ் சித்த - முரைத்ததனிற்
புத்தியதி லாங்காரம் போதுமது மூன்றாகு
மெத்துதை சதம்வை கரி.

பூதாதி சாத்துவிக தைசதத்திற் பொற்பொடுறப்
போதுமன ஞானப் பொறியைந்து - மோதுமற்ற
வைகரியில் ராசதந்தான் மன்னக்கன் மேந்திரிய
மையபின்னிற் றாமதமன் ன.

சத்தாதி யாமிதனிற் சாற்றுபஞ்ச பூதமதாம்
வித்தார மாந்தோற்ற மெய்ம்மையிது - வைத்ததுபோற்
றோன்று மிடத்தொடுக்கந் தோன்றா தொடுங்குமிவை
யான்றவறி வாலறியத் தான்.

(இம்மூன்றுவெண்பாவு மொருதொடர்.)

௧-ம். வெண்பா.

(இ-ள்.) உரைத்தகலையிலுருத்திரராலாமான் - பிரதமசிருட்டியில் அனந்தேசுர மூர்த்திதானே பிரகிருதியிலுள்ள சாதாரண வசாதாரண பிரவஞ்சமெல்லாந் தோற்றுவித்துக்காத்து அப்பிரகிருதிமட்டுமழித்து அதன்பின்பு இரண்டாவது சிருட்டியில் அவ்வனந்தேசுரமூர்த்தி யநுக்கிரகத்தினாற் சுத்தவித்தையிலிருக்கும் உருத்திரமூர்த்தி தனது கிரியாசத்தியினால் முன் அனந்தேசுரமூர்த்தியால் மாயையிலுண்டாக்கப்பட்ட கலாதத்துவத்திற் பிரகிருதி தத்துவத்தை

யுண்டாக்க, தெரித்தகுணமூலத்தாஞ்சித்தம்-அப்பிரகிருதியினின்றும் முக்குண ந்தோன்றும் அம்முக்குணமு மொத்தவிடமே அவ்வியத்தம், அதுவேசித்தம், உரைத்ததனிற் புத்தியதிலாங்காரம் - முன்சொன்ன அவ்வியத்தத்திலேதானே புத்தியுந்தோன்றும், புத்தியிதிலாங்காரம்போதும் - அப்புத்தியிலாங்காரந் தோன்றும், அதுமூன்ருகும் - அவ்வாங்காரம் மூன்றுவிதமாம் அவை, மெத்துதைசதம் வைகரி, மேலாகிய தைசதவாங்காரமென்றும் வைகரியாங்காரமென்றும், எ-று. (சரு)

## உ-ம். வெண்பா.

(இ-ள்.) பூதாதி - பூதாதி யாங்காரமென்றும் சொல்லப்படும், சாத்துவிக தைசதத்திற் பொற்பொடுறப் போதுமன ஞானப் பொறியைந்தும் - முற்கூறிய சாத்துவிக குணத்தினையுடைய தைசதவாங்காரத்தில் மனமும் ஞானேந்திரியமாகிய சுரோத்திராதிகளைந்துந்தோன்றும், ஓதுமற்ற வைகரியில் ராசதந்தான் மன்னகன்மேந்திரியம் - இராசத குணத்தினையுடைய வைகரி யாங்காரத்திற் கன்மேந்திரியமாகிய வாக்காதிகளைந்துந்தோன்றும், ஐயபின்னிற் ருமதமன்ன - தாமதகுணத்தினையுடைய பூதாதியாங்காரத்தில், எ-று. (சசு)

## ௩-ம். வெண்பா.

(இ-ள்.) சத்தாதியாம் - சத்தபரிச ரூபரசகந்தமென்னுந் தன்மாத்திரைகளைந்துந்தோன்றும், இதனிற்சாற்று பஞ்சபூதமாம் - சத்தத்தி லாகாயந் தோன்றும், பரிசத்தில் வாயுத்தோன்றும், ரூபத்தில்தேயுத்தோன்றும், ரசத்தில் அப்புத்தோன்றும், கந்தத்தில் பிரிதிவிதோன்றும், வித்தாரமாந்தோற்ற மெய்ம்மையிது - இங்ஙனங்கூறிய தத்துவவுற்பத்திக் கிரமத்தினுண்மையிதுவாம், வைத்ததுபோற் ருேன்றுமிடத் தொடுக்கந்தோன்ரு தொடுங்குமிவையான்ற வறிவாலறியத்தான் - இத்தத்துவங்க ளொடுங்குங்காலத்து முற்ருேன்றின வடைவிலொடுங்கும் இவை தத்தங்காரணத்தி லுள்ளனவுமன்று இல்லாதனவுமன்று சங்காரகாலத்திற் சத்திருபமாயிருக்குஞ் சிருட்டிகாலத்தில் வியத்திருபமா யிருக்கும். இந்த வித்தாரத்தைச் சிவாகமங்களா லாராய்ந் தறியுமிடத்து, எ-று.

இச்சமயஞ் சற்காரியவாதமாகையால் இல்லதுவாரா துள்ளதுபோகாதென்பார்-தோன்றுமிடத் தொடுக்கந்தோன்ரு தொடுங்குமென்ருர். இதற்குதாரணம். சித்தியார். "சார்பினிற் ருேன்றுமெல்லாந் தருபவனில்லையென்னிற், றேரினில்லதற்கோதோற்ற முள்ளதற்கோநீ செப்பா, யோரினில் லதுவுந்தோன்ரு துள்ளதேலுதிக்கவேண்டா, சோர்விலா திரண்டுமின்றிநிற்பது தோன்றுமன்றே" "உள்ளதுமிலதுமின்றி நின்றதொன் றுளதேலுண்டா, மில்லதேலில்லையாகுந் தோற்றமு மிசையாதாகு, முள்ளகாரணத்திலுண்டாங் காரியமுதிக்குமண்ணி, லில்லதாம் படங்கடாதி யெழிறருமியற்றுவாஞல்" என்பவற்ருற் கண்டுகொள்க. (சஎ)

[இனிமேலாலவத்தையின திலக்கணமு மத்தியாலவத்தையின திலக்கணமுங் கூறுகின்றார்.]

ஆக்கியிடு முப்பானோர் தத்துவமு மைவகைய
தாக்கியுயிர்க் குப்பெந்த மாக்கியிட - நோக்குகின்ற
மேலா லவத்தையிது மிக்க நடுவவத்தை
சாலவொன்றாந் தத்துவக் கட் டில்.

(இ-ள்.) ஆக்கியிடுமுப்பானோர் தத்துவமு மைவகையதாக்கி - இங்ஙனம் சுத்தமாயையிலுண்டாகிய தத்துவங்களேழும் பிரகிருதியிலுண்டாகிய தத்துவங்க ளிருபத்துநான்கும் ஆகத் தத்துவங்கள் முப்பத்தொன்றையும் சாக்கிரம் சொப்பனஞ்சுழுத்தி துரியம் துரியாதீதமாகிய வைந்துஸ்தானங்களினுநிறுத்தி, உயிர்க்குப் பெந்தமாக்கி - மலவசமாயதீதத்திற் கேவலத்தைப்பற்றிக் கிடக்குமுயிர்க்குப் பெந்தமாகக்கொடுத்து, நோக்குகின்ற மேலாலவத்தையிது - ஒன்றையுமறியாததீதத்தி லதோமுகமாய்க் கிடக்குமுயிரின தறிவைவிளக்க ஊர்த்துவமுகமாய்த் துரியம்சுழுத்தி சொப்பனஞ் சாக்கிரமென்னும் ஸ்தானங்களின்வழியாய் அந்தந்தத் தானத்தினிற்குங் கருவிகளோடுகூடி இச்சாஞானக் கிரியாசொரூபனாய்ச் சகலாவத்தைப்பட்டு அச்சரீரமுற்றும் வியாபியாய் வருவது மேலாலவத்தை, இப்படி மேலாலவத்தையாகவுயர வேறிச் சகலாவத்தையாகக் கண்டு கேட்டுண் டுயிர்த்துற்றறியும் அவதரத்தினு மைந்தவத்தையுண்டு அதற்கு மத்தியாலவத்தையெனப் பெயர், எ-று.

உ-ம். சிவஞானதீபம். "ஐவகையாமவத்தைகள் சாக்கிரமதனிலுளவாமது தான் முன்னறிந்தவனைக் கண்டறியாதிருத்தல், மையலுறுமதீத நிலைமோகினியைப்பொருந்தி வாயுவியங்குத றுரியம்மானை யடைந்துடனே, பையநினைவெழுந்திருத்தல் சுழுத்திநினைவது சொப்பனம்புரியட்டகமருவிப்பகுத்தறியாவறிவா, லையமுறறாலவுட லடைந்தவனை மெனவே யறிந்திடுதல் சாக்கிரத்திற் சாக்கிர மென்றறியே" என்பதனாற்காண்க. (சஅ)

[இனி மத்தியாலவத்தையையும் அதோவவத்தையையும் இரண்டுவெண்பாவினாற் கூறுகின்றார்.]

ஐந்துவகைப் போக மருத்துவித்தற் காயுடற்க
ணைந்தவத்தை யாகி யரும்போகம் - பெந்தித்
தருந்தன்மத் தியாலவத்தை யாகுமதோ வத்தை
புரிந்துமிகப் போகமதுண் ணும்.

தூலகா யம்மிறந்து சூக்குமத்தா லாங்காயங்
கோலமென வெய்திக் கொடுநரகின் - மேலான
சொர்க்கத்தி லின்பதுன்பஞ் சோரா தனுபவித்து
நிற்பதுவு மஞ்சவத்தை நேர்.

க-ம் வெண்பா.

(இ-ள்.) ஐந்துவகைப்போக மருத்துவித்தற்கா யுடற்கணைந்தவத்தையாகி- கேவலாவத்தைபற்றி மலமறைப்பினாலொன்று மறியாமற் கிடக்கு முயிரைச் சகலாவத்தைப்படுத்துவது யாதுகாரணத்தினாலென்னின் இருவினைக்கீடாகவ ருஞ் சுகதுக்கங்களைச் சத்தபரிசரூபரசகந்தபோகமாகப் புசிப்பித்தற்பொருட்டு, ஐந்தவத்தையாகி - சரீரத்தின்கண் மெய்வாய் கண்மூக்குச் செவியென்னு மை ந்துதானம்வைத்து, அரும்போகம் பெந்தித்தருந்தன் மத்தியாலவத்தையாகும் - இவ்வைந்திடம் பற்றிவருஞ் சத்தாதிபோகங்களை யபிமானித்துப் புசித்தல் மத்தியா லவத்தையாகும், அதோவத்தை - இனி அதோவவத்தையைக் கூறின், புரிந்துமிகப்போகமதுண்ணும் - முன்னார்ச்சித்த கன்மத்துக்கீடாகிய சுகதுக்க போகங்களைப் புசித்தற்கிடமா யிருக்கும், எ-று. (சகூ)

உ-ம் வெண்பா.

(இ-ள்.) தூலகாயம் பிறந்து - பூதபரிணாமமாகிய வித்தூலசரீரம் அமை த்த பிராரத்தந் தொலைந்தவாறே விட்டுநீங்கும் மிதுநீங்கவே, சூக்குமத்தா லாங்காயங்கோலமென வெய்திக்கொடுநரகின் மேலானசொர்க்கத்தி லின்பதுன் பஞ் சோராதனுபவித்து நிற்பதுவு மஞ்சவத்தைநேர் - உடனே சூக்குமசரீரத்தி னின்றுந் தூலசரீரமுண்டாம், அச்சரீரத்தை யழகாகப்பற்றி மிகுதியும் பாப கன்மமே பரிபக்குவமாயிருந்தாற் பூதசரீரமுண்டாம், அச்சரீரத்தைப்பற்றி நரகதுன்பத்தை யனுபவிக்கும், மிகுதியும் புண்ணியகன்மமே பரிபக்குவமா யிருந்தாற் பூதசரீரமுண்டாம் அச்சரீரத்தைப்பற்றிச் சுவர்க்கவின்பத்தை யனுப விக்கும், ஆகையால் அந்நரக சுவர்க்கங்களிலுங் கண்டுகேட்டுண்டுயிர்த்துற்றறி யுஞ் சுகதுக்கபோகங்களூம் பஞ்சாவத்தையுமுண்டாம், எ-று.

சூக்குமசரீரத்தினின்றுந் தூலதேகமுண்டாமென்பதற்கு உ-ம், சித்தியார் "பூதனாசரீரம் போனாற்புரியட்டரூபந்தானே, யாதனாசரீரமாகி யின்பதுன்பங்க ளெல்லா, நாதனாராணையுய்க்க நரகொடு சுவர்கந்துய்த்துத், தீதிலாவணுவா யோனி சேர்ந்திடுஞ் சீவனெல்லாம்'' என்பதனாற் காண்க. (ரு0)

இம்மூன் றவத்தை யிதனிலிறந் தேபிறந்திங்
கம்மாமற் றன்றுமுத லின்றளவு - மம்மர்மல
பாகம் வருத்தப் பரனுதவு மாணைவழி
யேகல்சக லாவத்தை யே.

(இ-ள்.) இம்மூன்றவத்தை யிதனிலிறந்தே பிறந்திங்கம்மாமற்றன்று முத லின்றளவும் - இங்ஙனங் கூறியமேலாலவத்தை மத்தியாலவத்தை அதோவவத் தையென்னு மிம்மூன்றவத்தைபற்றி யெண்பத்துநான்குலட்சம் யோனிபேதங் களினும் வந்துபிறந்து மிருந்து மிறந்துந் திரிவது அநாதியே தொடங்கியிற்றை வரையும், மம்மர்மலபாகம் வருத்தப்பரனுதவுமாணைவழியேகல் சகலாவத்தை யே - இங்ஙனஞ் சுவர்க்கமத்திய பாதாளமென்னு மூன்றுலோகத்தினுந் திரிவ

தியாது நிமித்தமென்னில் மயக்கத்தினைச் செய்யு மாணவமலசத்திக்குப் பரிபாகம் வரும்பொருட்டுத் திரோதானசத்திசெலுத்தச் செல்லுதற்கே சகலாவத்தையெனப் பெயர் எ-று. (ருக)

[இனிமேலாலவத்தை யைந்தனது பகுப்பையு மூன்று
வெண்பாவினாற் கூறுகின்றார்.]

சொற்றவனந் தேசராற் சொன்மாயை யிற்கால
முற்ற நியதிகலை யோடுவித்தை - நத்து
மராகமுதற் றோற்றுவித்திட் டான்மாவிற் சேர்த்தல்
பராவுமே லாமதீதம் பார்.

(இ-ள்.) சொற்றவனந்தேசரால் - முற்கூறியவனந்தேசுரநாயனார் தமது கிரியாசத்தியினாலே, சொன்மாயையிற் காலமுற்ற நியதிகலையோடு வித்தை நத்துமராக முதற்றோற்றுவித்திட்டு - சிருட்டிகாலத்து அசுத்தமாயையிலொருபிரதேசத்தைக்கலக்கி யுண்டாக்கப்பட்ட அசாதாரண தத்துவங்களில் காலநியதி கலைவித்தை இராகம்புருடன் மாயையென்னுந் தத்துவங்களை, ஆன்மாவிற் சேர்த்தல் - கேவலத்தைப்பற்றிய வான்மாவினிடத்துக் கூட்டுதல், பராவுமேலாமதீதம்பார் - சொல்லப்பட்ட மேலாமதீதமென வறிவாயாக எ-று. (ருஉ)

போகத்தி லுத்யோகம் பொங்கச்சீ கண்டர்தம்மா
லாமக் கலையிலுண்டா மப்பகுதி - யேகமதாய்
நிற்றன்மே லாந்துரிய நிற்கும் பகுதியில்வந்
துற்றகுணம் புத்தியகந் தை.

ஒன்றுதன் மேற்சுழுத்தி யுற்றவாங் காரத்தி
னின்றார் மனம்பொறிக ணேர்விடயத் - தொன்றுத
லாஞ்சொப் பனம்விடயத் தாம்பூதத் தொன்றுத
லாஞ்சொற்ற மேற்சாக் கிரம்.

[இவ்விரண்டுவெண்பாவு மொருதொடர்.]

(இ-ள்.) போகத்தி லுத்யோகம் பொங்கச்சீ கண்டர்தம்மா லாமக்கலையிலுண்டா மப்பகுதி யேகமதாய் நிற்றன்மேலாந்துரியம் - மேலாமதீதத்திற் புருடனாகின்ற ஆன்மா சாக்கிரத்தானத்தில்வந் திருவினைக் கீடாகியபோகங்களைப் புசித்தற் குன்முகமாக உருத்திரதேவநாயனார் தமது கிரியாசத்தியாற் கலையினின்று முண்டாக்கப்பட்ட பிரகிருதியொன்றும் பிராணவாயுவும்வந்து பொருந்தினவிடம் மேலாந்துரியம், நிற்கும் பகுதியில் வந்துற்ற குணம் புத்தியகந்தை - அப்பிரகிருதியி லுண்டாகாநின்ற முக்குணங்களும் புத்திதத்துவமும் அகங்கார தத்துவமுங்கூடி, ஒன்றுதல் மேற்சுழுத்தி - ஒன்றாயிருக்குஞ் சித்தமுங் கூடினவிடம் சுழுத்தி, உற்றவாங்காரத்தி னின்றார்மனம்பொறிக

ணேர்விடயத் தொன்றுதலாஞ் சொப்பனம் - அவ்வகங்காரத்தி லுண்டாகாநின்ற மனோதத்துவமும் புத்திதத்துவமும் அகங்காரதத்துவமுஞ் சத்தாதிகளும் வசனாதிகளும் வாயுக்க ளொன்பதும்வந்து கூடினவிடஞ் சொப்பனம், விடயத் தொன்றுதலாஞ் சொற்றமேற்சாக்கிரம் - தன்மாத்திரைகளி லுண்டாகிய பூதங்க ளாதாரமாகிய ஞானேந்திரியங்க ளைந்துங் கன்மேந்திரியங்க ளைந்தும்வந்து கூடினவிடஞ் சாக்கிரம், எ-று. (ருங-ருச)

[மேன்மத்தியாலவத்தையி னனுபவங் கூறுகின்றார்.]

மேற்சாக் கிரமதனின் மிக்கவிட யம்பொறிக
ளாற்போக முண்டன்மத்தி யாலவத்தை - பார்க்கிற்
சிவன்சத்தி சாதாக் கியமீசர் வித்தை
யிவர்பிரே ரிக்கவடை வால்.

(இ-ள்.) மேற்சாக் கிரமதனில் - மேலாஞ் சாக்கிராவத்தையில், மிக்க விடயம்பொறிகளாற் போகமுண்டன் மத்தியாலவத்தை - ஞானேந்திரியங் கன்மேந்திரியமுதலிய கருவிகளுடன்கூடிப் பஞ்சவிடயங்களையு மாறிமாறிப் புசிக்கு மவதரமே மத்தியாலவத்தை. எங்ஙனமெனின், பார்க்கிற்சிவஞ்சத்தி சாதாக்கியமீசர் வித்தையிவர் பிரேரிக்கவடைவால் - சுத்த தத்துவங்களைந்துங் கலாதத்துவங்களைப் பிரேரிக்க ஆன்மாவு மிச்சாஞானக் கிரியா சொரூபனாயந்தக் கரணத்தைப்பற்றி ஞானேந்திரிய கன்மேந்திரிய வியாபாரத்தைப் பண்ணுகையால் மத்தியாலவத்தையாம், எ-று. (ருரு)

[இதுவுமது.]

சொற்றமத்தி யாலவத்தை சொல்லினிது வைந்தாகு
முற்றவிழி யாதியிலொன் றாயுயிர்தான் - சொற்றகன்மப்
போகமுண்ணல் சாக்கிரமப் போகமறக் கண்டத்தி
லாகுமனத் தாற்போகத் தை.

உண்டல்கன வாமிதயத் துற்றுறுஞ்சித் தத்தினினைந்
துண்டல் சுழுத்தி யுறுந்துரிய - முண்டலற
னாபித்தா னத்தினிது நண்ணி யசைவருந்த
னாபி கடந்தசையா னாய்.

நிற்குமூ லத்திலொன்றாய் நின்று சுகமருந்த
னிற்கு மதீத நிலைமையது - நிற்குஞ்
சிவதத் துவமைந்துஞ் சேர்புருட னீங்க
வவையும்பூ தங்களுமா க.

எண்ணிரண்டு நீங்க விருவாயுப் பத்துடனே
நண்ணும்வச னாதியைந்து நண்ணியிட - வெண்ணுதொகை

யேழஞ் சிருபத்தஞ் சென்றதிலோர் மூன்றிரண்டொன்
றூழுஞ்சாக் ராதியைந்தி லாம்.

[இம்மூன்றுவெண்பாவுமொருதொடர்.]

(இ-ள்.) சொற்றமத்தி யாலவத்தை சொல்லினது வைந்தாகும்-இங்ஙனங் கூறுகின்ற மத்தியாலவத்தை யைந்தினையும் வலியுறுத்திக் கூறுமிடத்து, உற்றவிழியாதியிலொன் றாயுயிர்தான் சொற்றகன்மப் போகமுண்ணல் சாக்கிரம் - பொருந்திய கண் காது முதலியவற்றைப்பற்றி அவைதானா யான்மா சொல்லப்பட்ட கன்மத்துக் கீடாகவராநின்ற போகங்களைப்புசித்தல் சாக்கிரமாகும், அப்போகமறக்கண்டத்தி லாகுமனத் தாற்போகத்தை - அச்சாக்கிரத் தானத்தினின்று பஞ்சேந்திரிய முன்னிலையாகவரும் போகத்தைவிட்டுக் கண்டத்தானத்தைப்பற்றி அந்தக் கரணத்திற் பரப்பிரகாசரூபபுத்தி பிரதிபிம்ப ரூபவாசனா போகங்களை, உண்டல்கனவாம் - புசித்தல் சொப்பனமாம், இதயத்துற் றுறுஞ்சித் தத்தினினைந் துண்டல் சுழுத்தி - அச்சொப்பனத் தானத்தைவிட்டு இருதயத்தானத்திலிருக்குஞ் சித்தத்தினாற் சவிகற்பத்துடனே கூடிய நிருவிகற்பமாய்ப் போகத்தைப் புசித்தல் சுழுத்தி, உறுந்துரிய முண்டலற நாபித்தானத்தினிது நண்ணி யசைவருந்தல் - அச்சுழுத்தித் தானத்தைவிட்டு நாபித்தானத்தில் வந்து பிராணவாயுமாத்திரம் இயங்கச் சற்றே சவிகற்ப நிருவிகற்பமாகப் புசித்தல் துரியம், நாபி கடந்தசையா னாய் - அத்துரியத்தானமுங் கடந்து பிராணவாயுவின தியக்கமுமற்று, நிற்குமூலத்திலொன்றாய் நின்றுசுக மருந்தனிற்கு மதீத நிலைமையது - மூலாதாரத்தைப்பற்றிப் புருடன்மாத்திரமாய் நின்று நிருவிகற்பமாகப் போகம் புசித்தல் துரியாதீதம், நிற்குஞ்சிவதத் துவமைந்துஞ் சேர்புருட னீங்கவவையும் பூதங்களுமாக - சகலாவத்தையினிற்குந் தத்துவ முப்பத்தாறில் சிவதத்துவமைந்தும் புருடனு நீங்கலாகக் காலமுதலிய தத்துவமாறும் பஞ்சபூதங்களும் ஆகப் பதினாறுதத்துவங்களும், எண்ணிரண்டு நீங்க - முற்கூறிய பதினாறு தத்துவங்களு நீங்க, இருவாயுப் பத்துடனே - ஞானேந்திரியமைந்தும் கன்மேந்திரிய மைந்தும் தன்மாத்திரை யைந்தும் அந்தக் கரண நான்கும் புருடனொன்றும் ஆக இருபது தத்துவத்தோடு பிராணாதி வாயுக்கள்பத்தும், நண்ணும்வச னாதியைந்து நண்ணியிட - பொருந்திய வசனாதிகளைந்துங்கூடினதால், நண்ணுதொகை - ஒவ்வோ ரவத்தைகளுக்குப் பொருந்திய தத்துவங்களினதுதொகை, ஏழஞ்சு - முற்கூறிய முப்பத்தைந்து கருவிகளோடு லலாடத்தானத்திலேநின்ற வவதரங் கீழாலவத்தையிற் சாக்கிரம், இருபத்தஞ் சென்றதில் - ஞானேந்திரியமுங் கன்மேந்திரியமுமாகிய பத்துஞ் சாக்கிரத்தானத்திலேநிற்க வாயுக்கள் பத்தும் வசனாதிகளைந்தும் காரிய தன்மாத்திரைகளைந்தும் அந்தக்கரண நான்கும் புருடனொன்றும் ஆக இருபத்தைந்து கருவிகளுடனே கண்டத்தானத்திலே நின்ற வவதரம் கீழாலவத்தையிற் சொப்பனம், ஓர் மூன்று - வாயுக்க ளொன்பதும் வசனாதியைந்துங் காரிய தன்மாத்திரையைந்தும் அந்தக்கரண மூன்றும் ஆக இருபத்திரண்டு கருவிகளுங் கண்டத்தானத்திலே நிற்கச் சித்தமும் பிராணவாயுவும் புருடனும் ஆக மூன்று கருவிக

ளுடன் இருதயத்தானத்திலே நின்ற வவதரம் கிழாலவத்தையிற் சுழுத்தி, இரண்டு - சித்தமொன்றுஞ் சுழுத்தியினிற்கப் பிராணவாயுவும் புருடனும் நாபித்தானத்திலே நின்ற வவதரம் கிழாலவத்தையிற் துரியம், ஒன்று - துரியத்திற் பிராணவாயுநிற்க உள்ளமொன்றும் மூலாதாரத்தைப் பற்றிநின்ற வவதரங் கிழாலவத்தையிற் றுரியாதீதம், ஆழுஞ்சாக் ராதியைந்தி லாம் - இங்ஙனங் கிழாலவத்தையைந்தின திலக்கணம், எ - று. (௫௬-௫௭-௫௮-௫௯)

[இங்ஙனந் துரியாதீதப் பட்டொன்றுந் தோன்றுமன் மலவசப் பட்டுக் கிடக்கு மான்மாவுக்குப் பின்பு தத்துவங்களைச் சிவன் கூட்டக் கூடின அத்தத்துவங்களினது வியாபாரஞ் சாற்று கின்றார்.]

மூலமல மேலீட்டான் முற்று மவத்தைவிடக்
கோலவினைப் போகங் கொளுத்தியிட - வேலுகின்ற
தத்துவங்கள் செய்யுந் தகுதிச் செயலதனை
யுத்தமநூ லோதலுரைப் பாம்.

(இ-ள்.) மூலமலமேலீட்டான் முற்றுமவத்தைவிட - ஆணவமலத்தினது மேலீட்டினாலே சாக்கிரமுதலிய வவத்தைகளைநீங்கிக் கேவலாதீதமாகிய உயிர் கட்கு, கோலவினைப்போகங் கொளுத்தியிட - அழகிய பிராரத்தகன்மத்தைக் குறித்துவரும் மாயாபோக்கிய பதார்த்தங்களைப் போகமாகவறிந்து கூட்டுதற் பொருட்டு, ஏலுகின்ற தத்துவங்கள்செய்யுந் தகுதிச் செயலதனை யுத்தம நூலோத லுரைப்பாம் - பொருந்தாநின்ற தத்துவங்களினது வியாபாரக்கிரமத்தைச் சிவாகமங்களிற் கூறியவாறு சிறிது கூறுவோம், எ-று. (௬0)

[மேற் சிவதத்துவங்களினது தன்மையுஞ் சிவதத்துவங்களைந்தி னுல் வித்தியாதத்துவமான கலாதிதத்துவங்களேழுந் தொழிற்படுமாறு மைந்து வெண்பாவினாற் கூறுகின்றார்.]

ஞானமதே யாகு நயந்தசிவ தத்துவத்தா
லானவதோ மாயை யதுமயக்கு - மானசத்தி
தத்துவந்தா னற்கிரியை தானதனாற் காலமுட
னொத்த நியதிகலை கள்.

ஆன விளங்க லதிற்கால மூன்றுறு
மானவெல்லை போக மறப்புதுமை - தானவிற்று
மாகு நியதியது வாக்கினையான் மூன்றிடத்து
மாகுங் கலைகுருங் ரை.

தூக்கந் தவிரத் தொடுங்கோல்போ லேதொழின்மேல்
வீக்கத் தொடுஞ்சுத்த வித்தையது - வாக்குந்

தொழிலகன்று ஞானத்தாற் றேற்றும்வித்தை தானு
மெழில்விடய முள்ள மினிது.

குறித்தறிய ஞானங் கொடுக்குமற்ற வீசற்
கெறித்தகுண மேய்ந்த வறிவு - பிறித்தகற்று
மக்கிரியை யேயதனா லான வராகமது
மிக்கவிச்சை தான்விளக்கு மே.

சாதாக் கியத்தொழினான் சார்ந்தஞா னக்கிரியை
நீதமதாய் முன்னுற்று நின்றதாற் - பேதக்
கிரியைஞா னஞ்சமமாய்க் கீழிடத்தொன் றாதல்
புருடனெனப் போகம்வருத் தும்.

[இவ் வைந்துவெண்பாவு மொருதொடர்.]

(இ - ள்.) ஞானமதேயாகு நயந்தசிவ தத்துவத்தா லானவதோமாயை யதுமயக்கும் - சிவனுடைய ஞானசத்தியானது சுத்தமாயா ஜென்னியமாகிய சிவதத்துவத்தைப் பிரேரிக்க அச்சிவதத்துவம் அதோ மாயையாகிய பிரகிருதியைச் செலுத்த அப்பிரகிருதி ஆன்மாவை ஒன்பதுவகைக் குணங்களாலும் பொய்யை மெய்யென மயக்காநிற்கும், ஆனசத்தி தத்துவந்தா னற்கிரியை தானதனாற் காலமுட னொத்தநியதிகலைகள் - சிவபெருமானுடைய கிரியாசத்தியானது சத்திதத்துவத்தைப் பிரேரிக்க அச்சத்திதத்துவங் காலத்தையு நியதியையுங் கலையையுமெழுப்ப, ஆன விளங்க லதில் - அங்ஙன மூன்றாகச்சொல்லப் பட்டவைகளில், கால மூன்றாகும் - அக்காலதத்துவ மூன்றுவிதமாக இருக்கும், அவை யெங்ஙனமெனின், ஆனவெல்லை போக மறப்புதுமை தானவிற்றும் - செல்காலம் நிகழ்கால மெதிர்காலமென்று மூன்றுவிதமாகக் கூறப்படும், ஆகு நியதியது வாக் கினையான் மூன்றிடத்து மாகும் - இனி நியதி தத்துவமானது செல்காலம் நிகழ்கால மெதிர்காலமென்று மூன்றுகாலத்துப்பொருள்கள் முற் பிற்பாடாய் மாறுபடாது ஏறாமற் குறையாமலரசனாணைபோல நின்று தப்பாமற் புசிப்பிக்கும், கலைகுருட னா - கலாதத்துவமானது அசுத்தனாகிய நித்திரை கொள்வா னொருவனை, தூக்கந் தவிரத் தொடுங்கோல்போ லேதொழின்மேல் வீக்கத் தொடுஞ்சுத்த வித்தையது வாக்குந் தொழிலகன்று ஞானத்தாற் றேற்றும்வித்தை தானு மெழில்விடய முள்ள மினிது-ஒருவ னித்திரையினின்றுநீங்க எழுப்புங்காலத்து அவன் அசுத்தனாகையாற் றனதுகையாற் றொட்டெழுப்பா தொருகோல் கொண்டெழுப்புமாறுபோல மலவசப்பட்டொன்றுந் தெரியாம லதீதப்பட்டுக் கிடக்கு முயிர்கட் கம்மலத்தைச் சிறிதொதுக்கிப் பிரபஞ்சோன் முகப்படுத்தக் கிரியாசத்தியை விளக்கிக் கர்த்திருகாரகமாக விருக்கும் இம் மூன்று தத்துவவியாபாரமும் சிவனது கிரியாசத்தியின் வியாபாரம், குறித்தறிய ஞானங் கொடுக்கும் - பின்னும் ஞானசத்தியானது ஞானமேறிக்கிரியை குறைந்திருக்கின்ற சுத்தவித்தையை யெழுப்ப அச்சுத்தவித்தை வித்தையை

யெழுப்ப அவ்வித்தை முன்கலையினால் விளங்கப்பட்டுக் கர்த்திருகாரகமாய்ப் பிரபஞ்சோன் முகமாயிருக்கும் ஆன்மாவினது ஞானசத்தியை விளக்கிவிடயோன்முக நிருவிகற்பஞானத்தை விளக்கிக் கரணகாரகமாக விருக்கும், மற்ற வீசற் கெறித்தருண மேய்ந்த வறிவு பிரித்தகற்று மக்கிரியை யேயதனாலான வராகமது மிக்கவிச்சை தான்விளக்கு மே - சிவனது இச்சாசத்திஞானங் குறைந்து கிரியையேறி யிருக்கின்ற ஈசுரதத்துவத்தை யெழுப்ப அவ்வீசுரதத்துவம் இராகதத்துவத்தை யெழுப்ப அவ்விராகதத்துவம் ஆன்மாவினதிச்சையைவிடயோன்முக நிருவிகற்ப ஞானத்தினு லவ்விடயத்தை யபிமானிக்கப்பண்ணிக் கர்த்திருகாரகமாக விருக்கும், சாதாக் கியத்தொழில்தான் சார்ந்த ஞானக்கிரியை நீதமதாய் முன்னுற்று நின்றதால் - முற்கூறிய கிரியாசத்திதானே ஞானமுங் கிரியையுமொத்திருக்கின்ற சாதாக்கியதத்துவத்தை யெழுப்ப அச்சாதாக்கியதத்துவம், பேதக் கிரியைஞா னஞ்சமமாய்க் கீழிடத்தொன்றுதல் புருடனைப் போகம்வருத்தும் - விடயோன் முகநிருவிகற்பஞானத்தி லொன்றுக்கொன்று பேதமாகிய ஞானக்கிரியைகளேறுமற் குறையாமற் சீவிக்கும் அவிவேகபுருட பாவத்தைப்பண்ணும், எ-று. (சுக-சுஉ-சுங-சுச-சுரு)

[மேலந்தக் கரணத்தினது வியாபாரமறைகின்றார்.]

ஆங்காரத் தோடுமன மானசித்தம் புத்தியது
வோங்கும் பொறியா லுறும்விடய - மாங்கொன்
றெழுந்துபற்றிச் சிந்தித்த னிச்சயித்தான் மாத்தா
னழுந்தக் கழிந்தாணை யால்.

(இ-ள்.) இப்படி யிச்சாஞானக்கிரியாசொரூபனாக விருக்கின்ற புருடனானவன் தனது சிற்சத்தியாலோர் விடயத்தினையோரிந்திரியத்துவாரமாகப்போந்து சமுதாயமாய் நிருவிகற்பமாக வறியு மவதரத்திற் சித்தமானது அவ்விடயத்தைப்பற்றிச் சற்றே விகற்பமாக நினைக்க அதைப் பின்மனமானதுபோய்ப்பற்றி இவ்விடயம் இன்னதாகவேண்டுமென்று சலனசங்கற்பத்தைப்பண்ணித் திரும்பவு முட்புகுந்து ஆங்காரத்தை யெழுப்பும் அவ்வாங்காரமானது அவ்விடயத்தை நானறியாநிற்கிறேனென்று போய் அபிமானித்துப் பகுக்கப் பின்பு புத்தி போய் அந்த விடயத்தை நாமசாதிகுணக்கிரியை யுடன் பகுத்தறிந்து தன்னிடத் தவ்விடயத்தைப் பிரதிவிம்பரூபமாக வைத்துக்கொள்ளுஞ் சிவசத்தி பிரோரகத்தால், எ-று.

இஃ திந்திரியத்துவாரமாக விழுந்தறியுமானதக்காட்சியினது பகுப்பை யுரைத்தது. மேற்றன்வேதனைகாட்சியை "அருந்தின்பதுன்பமுள்ளத்தறிவினுக்க ராகமாதி, தருந்தன்வேதனையாங் காட்சி" என்பதனாற் கண்டுகொள்க. (சுசு)

[மேலிந்திரியக்காட்சியை விரித்துரைக்கின்றார்.]

ஓசைகுண மாக வுறும்வா னிடமாக
வேசில் சதாசிவரா லேசெவிதா - னோசையது

தான்கேட்டு மேலாந் தகுங்கரணத் தாலறியத்
தான்காட்டி நிற்குந் தரம்.

(இ-ள்.) ஓசைகுணமாக வுறும்வானிடமாக வேசில்சதா சிவராலே செவி தானோசையது தான்கேட்டு - சத்தகுண மொன்றுமேயாய்ச் சதாசிவதேவ நாயனரை யதிதேவதையாக வுடைய ஆகாச தத்துவத்தைத் தாரகமாகவுடைய செவியானது, மேலாந்தகுங் கரணத்தாலறியத் தான்காட்டிநிற்குந்தரம் - ஆகாய பூதகாரிய சத்தத்தை நிருவிகற்பமாகக்கேட்டு அந்த விடயத்தை அந்தக்கரணத் துவாரத்துச் சவிகற்பமாக வுயிர்க்கு அச்சதாசிவ தேவரா லறியப்பண்ணும், எ-று. (சுஎ)

ஓசை பரிச முறுங்குணமாங் காலிடமா
யாசின் மகேசரா லாம்விடயம் - பேசுந்
துவக்கதுகண் டெட்கரணத் துட்புகவே நிற்கும்
வியக்குமுயிர் தானருந்த வே.

(இ-ள்.) ஓசைபரிச முறுங்குணமாங் காலிடமாயாசில் மகேசராலாம் விடயம் பேசுந்துவக்கதுகண்டு - சத்தமும் பரிசமுந் தனக்குக் குணமாக மகேசுர மூர்த்தியை அதிதேவதையாக வுடைய வாயுவை யாதாரமாகக்கொண்ட துவக்கானது, உட்கரணத்துட் புகவேநிற்கும் வியக்குமுயிர் தானருந்தவே - வாயு பூத காரியபரிசத்தை நிருவிகற்பமாகவறிந்து அந்தக் கரணவழியாச் சவிகற்பமாக மகேசுரரால் ஆன்மாவை யனுபவிக்கப்பண்ணும், எ-று. (சுஅ)

ஓசை பரிச முருவங் குணமுடைத்தாய்ப்
பேசு மனலிடமாய்ப் பேசும்விழி - யாசி
லுருவமது கண்டுட் கரணமுற நிற்கு
மருவு முருத்திரர்தம் மால்.

(இ-ள்.) சத்தபரிச ரூபகுணத்தையுடைத்தாய் உருத்திரமூர்த்தியை அதிதேவதையாகக்கொண்ட தேயுவாதாரமாய்க் கண்ணனது தேயுபூத காரியரூபத்தை நிருவிகற்பமாகவறிந்து கரணவழியாக உயிர்க்குச் சவிகற்பமாக அவ்வுருத்திரமூர்த்தியா லறிவிக்கும், எ-று. (சுக)

ஓசை பரிச முருவமிர தத்தொடுநான்
காசில் குணவப் பதனிடமாய் - நேசமுட
னரணாற் சிங்குவைதா னல்லிரதங் கண்டுநிற்குங்
காரணமுட் செல்வதற்கா க.

(இ - ள்.) சத்தபரிசருப குணத்தையுடைய அப்புவை ஆதாரமாகக் கொண்ட சிங்குவையானது நாராயணனல் அப்பூதகாரிய ரசத்தை நிருவிகற்பமாகக்கண் டந்தக் கரணவழியாய்ச் சவிகற்பமாக வுயிர்க்கறிவிக்கும், எ-று.

ஓசை பரிச முருவமிர தங்கந்த
மாசில் குணம்பா ரதுவிடமாய்க் - கூசாமற்
கெந்த மறியுங் கிராண மயன்றன்று
லுந்துட் கரணத் துற.

(இ-ள்.) சத்த பரிச ரூப ரச கந்த மைந்துங் குணமாகவுடைய பிருதிவியை ஆதாரமாகக்கொண்ட ஆக்கிராணமானது பிரமனுற் பூதகாரிய கந்தத்தினை நிருவிகற்பமாகவறிந்து அந்தக்கரணவழியாய்ச் சவிகற்பமாக வுயிர்க்கறியப்பண்ணும், எ-று. (எக)

[மேற் கன்மேந்திரிய வியாபார முரைக்கின்ருர்.]

ஆனகன்ம விந்திரிய மைந்துங் கொளும்விடய
மானவப் பூதமிட மாயைவராற் - ருனிதனோ
டாருறு தத்துவத்தா லானவினை யான்மாவுக்
கேறுவா னேற்றுமியல் பே.

(இ-ள்.) சுரோத்திரஞ் சத்தத்தையறிந்தா லாகாசமாதாரமாகச் சதாசிவதேவநாயனு ரருளினுல் வாக்கு வசனக்கிரியையைப் பண்ணும், துவக்குப் பரிசத்தையறிந்தால் வாயுவாதாரமாக மகேசுரதேவநாயனு ரருளினுல் பாதங்கமனக்கிரியையைப் பண்ணும், சட்சு ரூபத்தையறிந்தால் அக்கினி யாதாரமாக உருத்திரதேவநாயனு ரருளினுற் பாணியிடுத லேற்றலாகிய கிரியையைப்பண்ணும், சிங்ஙுவை ரசத்தையறிந்தால் அப்புவாதாரமாக நாராயணனருளினுல் பாயுமலவிசர்க்கமாகிய கிரியையைப்பண்ணும், ஆக்கிராணங் கந்தத்தையறிந்தால் பிருதிவி யாதாரமாகப் பிரமதேவனருளினுல் உபத்தம் ஆனந்தமாகிய கிரியையைப் பண்ணும், இங்ஙன முப்பத்தாறு தத்துவங்களினுலும் ஆன்மாவுக்குப் பரமசிவன் மலபரிபாகம் வரும்பொருட்டு வினையையேற்றிப் புசிப்பிக்குமுறைமையீதாம், எ-று. (எஉ)

[மேற்சத்திநிபாதத் தன்மைவருமுறைமையைச் சாற்றுகின்ருர்.]

முத்தி யவத்தை முறைமையது கட்டுரைக்கின்
வைத்தவது தீக்கையினுல் வந்தெய்து - நித்தியமாந்
தீக்கையது செய்யத் திகழ்சத் திநிபாத
வாக்கையது வாதல்செப்பு வாம்.

(இ-ள்.) முத்தி யவத்தை முறைமையது கட்டுரைக்கின் - இங்ஙன மநாதியே தொடங்கிக் கேவல சகலப்பட்டுத் திரியுமான்மா இவ்வவத்தை நீங்கிச் சுத்தாவத்தையாகிய முத்தியைப் பெறுந்தன்மையை உறுதியாகச் சொல்லுமிடத்து, வைத்தவது தீக்கையினுல் வந்தெய்தும் - அவ்வவத்தை ஞானுசாரியர் செய்யும் ஞானதீட்சையினுல் வந்து பொருந்தும் ஆகையால், நித்தியமாந் தீக்கையது செய்ய - நித்தியமாயுள்ள அத்தீக்கியினை யாசிரியர் செய்வதற்கு,

திகழ் சந்திநிபாத வாக்கையது வாதல்செப்பு வாம் - விளக்கத்தினையுடைய சத்திநிபாதச்சின்னம் உயிரினிடத்து முடலினிடத்து முண்டாகவேண்டும், அஃதுண்டாக வநேக வேதுக்களுண்டு, அவற்றைக் கூறுவாம், எ-று. (எங)

சாற்றுஞ் சகலவத்தை தன்னின்வினைக் காகவுயிர்
தோற்றி யிருந்தொடுங்கிச் சுற்றுங்கா - லேற்ற
வினைப்போக முண்டதனுன் மேவுமின்ப துன்பாய்
வினைப்படுமக் கன்ம முதவி.

(இ-ள்.) சாற்றுஞ்சகலவத்தை தன்னின் - சொல்லப்பட்ட சகலாவத்தையில், வினைக்காக வுயிர்தோற்றியிருந்தொடுங்கிச் சுற்றுங்காலேற்ற வினைப்போக முண்டதனுல் - ஆன்மாக்கள் முற்பிறப்பிற்செய்த கன்மத்துக்கீடாக உற்பத்திதிநாசத்தையடைந்து திரியுங்காலத்து, மேவுமின்பதுன்பாய் வினைப்படுமக் கன்மமுதவி - பிராரத்தபோகமாகிய சுகதுக்கங்களை யனுபவிக்குமிடத்தேறிய வாகாமிய கன்மத்துக்கீடாக, எ-று. (எச)

உண்டாங் கடுநரகத் தோடுசொர்க்கஞ் சேர்ந்ததனி
லுண்டாஞ் சுகதுக்க முண்டிடவிக் - கொண்டவுடல்
விட்டதனுக் கேற்றவுடன் மேவி நரகசொர்க்கந்
தொட்டுச் சுகதுக்க லூன்.

புசித்து மறித்தும் பொருந்திக் கருவில்
வசித்துப் பிறந்து வளர்ந்து - நசிக்குமிதி
லன்புற்று நின்றுதுய ரன்றுமுத லின்றளவு
மின்புற்ற தென்றிறுமாந் தே.

[இவை யிரண்டுவெண்பாவு மொருதொடர்.]

க-ம் வெண்பா.

(இ-ள்.) உண்டாங்கடுநரகத் தோடுசொர்க்கஞ் சேர்ந்ததனி லுண்டாஞ் சுகதுக்கமுண்டிட - தமக்குவரும் சுவர்க்க நரகத்தையடைந்து அவ்விடத்துச் சுகதுக்கங்களை யனுபவிக்கும்பொருட்டு, இக்கொண்டவுடல்விட்டு - வினைக்கீடாகவரும் பூதபரிணாமமாகிய வித்தூல சரீரத்தைவிட்டு, அதனுக்கேற்ற வுடன்மேவி நரகசொர்க்கந்தொட்டுச் சுகதுக்கலூண் - சுவர்க்கநரகங்களுக்கேற்ற பூதசாரம் பூதசரீரமென்னுஞ் சரீரங்களையெடுத்து அவ்விடத்துண்டாகிய போகங்களை, எ-று. (எரு)

உ-ம் வெண்பா.

(இ-ள்.) புசித்துமறித்தும் பொருந்திக்கருவில் வசித்துப்பிறந்து வளர்ந்து நசிக்கும் - புசிக்குங்காலவரையில் புசித்துத் தொலைந்தவாறே மற்றுமுள்ள கன்மபரிபாகங்களுக்குத் தக்கதாக மீண்டும் யோனிபேதங்களின் கர்ப்பத்தில் வந்து பொருந்திப் பின்பு பிறந்துவளர்ந்திருக்குங் காலபரியந்த மிருந்திறக்கும், இதிலன்புற்றுநின்று துயரன்றுமுத லின்றளவுமின்புற்ற தென்றிறுமா

ந்தே - இவ்வாறித்தேகங்களை யெடுக்குங்காலத்து அந்தந்தத் தனுக்களிலேயும் அந்தந்தத் தனுக்களுக்குத் தக்கபோகங்களிலேயும் அன்புபற்றி அநாதிதொட்டின்றளவும் இங்ஙனமலைந்து திரிகின்றோமே யென்கின்ற வருத்தமுந் தோன்றாமற் பொய்யாகிய மாயாபோகத்தையே மெய்யெனக்கருதி இதனையே யின்பமாகக் கொண்டிறுமாந்து திரியும், எ-று. (எசு)

எண்பத்து நான்குநா றுயிரமா யேயெடுத்த
பண்புற்ற யோனிப் பரப்பதனி - லெண்பற்றும்
யோனியதி லொன்றொன்றி லுற்ற பிறப்பநந்த
மானவவை யெய்தியத னில்.

(இ - ள்.) எண்பத்துநான்கு நூறுயிரமென்றெடுத்துச் சொல்லப்பட்ட யோனிபேதங்களிலே ஒவ்வொரு யோனியிற் றிரும்பத்திரும்ப அநேகந்தரம் வந்துதிற்கும் அத்தனையோனிகளையுமெய்தி அவைகளில், எ-று. (எஎ)

அண்டசமு மாகுஞ் சுவேதசமு முற்பிச்ச
மண்டுஞ் சராயுசம தாநான்கிற் - கண்டபிறப்
போரே ழதனை யுரிய சிவாகமத்தி
லோராகச் சொல்வ திது.

(இ - ள்.) முட்டையிற் கட்டுண்டுபிறத்தல் வேர்வையிற்பிறத்தல் பூமியைப் பிளந்துகொண்டு வித்துவேர் கிழங்குமுதலியவைகளிற் பிறத்தல் கருப்பாசயப்பையிற் கட்டுண்டுபிறத்தல் ஆகிய அண்டசஞ்சுவேதசம் உற்பிச்சம் சராயுசமென்னு நால்வகைத்தோற்றத்திற் காணப்பட்ட எழுவகைப்பிறப்பையுஞ் சிவாகமங்களி லழகாகவிரித்துச்சொல்லுவதிதுவாம், எ-று. (எஅ)

ஊக்கியிடுந் தாவரம்பத் தொன்பதுநா றுயிரமா
நோக்கியிடி னொன்றொன்றி னேக்குங்கா - லாக்கையது
வெண்ணவரி தாம்பிறவி யெய்தியின்ப துன்பமுற்று
நண்ணவர னற்பாகங் கண்டு.

(இ-ள்.) உற்பிச்சவகையில் ஓரறிவுயிராகிய வலிய விருட்சமுதலிய தாவரங்கள் பத்தொன்பது நூறுயிரபேதம், அப்படிப்பட்ட தாவரவகைகளில் ஒவ்வொரு பேதங்களில் அநேகந்தரம் பிறந்திறந்து அதற்கதற்குத்தக்க சுகதுக்கங்களைப் புசித்துவருங்காலத்து அதனால்வரு மலபரிபாகங்கண்டு பரமசிவன், எ-று. (எகூ)

ஆனவூர் வைபதினைந் தாயிரமாம் யோனியதி
லானவொன் றொன்றி லநந்தமது - வான
பிறப்பநந்தந் தன்னிற் பெருகுசுக துக்கத்
துறப்பரமன் பாக முணர்ந்து.

(இ - ள்.) பதினைந்து நூறுயிரமென்று சொல்லப்பட்ட ஊர்வனவாகிய வுயிர்வருக்கம் ஒவ்வொன்றில் அநந்தந்தரம்வந்து பிறந்து அததற்குத்தக்க

சுகதுக்கங்களை அனுபவிக்குங்காலத்துச் சிவபிரான் பின்னும் விசேஷமாகவ ரும் பரிபாகத்தை யறிந்து, எ-று. (அ0)

நீரிற் பிறக்கு நிகழ்யோனி பத்துநா
றோரிலொன் றென்றதனி லோவநந்தஞ் - சாரும்
பிறப்பி லிதாகிதத்தாற் பெற்றிடும்பா கத்தா
லுறப்பரம னோர்ந்தானை யால்.

(இ-ள்.) பின்பு நூறாயிரம்பேதமாகிய நீர்வாழுஞ்சாதிகளி லொவ்வொ ன்றில் அநந்தஞ் சனனமெடுத்து அதததற்குள்ள சுகதுக்கங்களை அனுபவித்து வருங்காலத்து விசேஷமாகவரும் பரிபாகத்தைப் பரமசிவன் றமது சிற்சத் தியாலறிந்து, எ-று. (அக)

பறவையாம் யோனிபத்து நூறா யிரமங்
குறுமதிலொன் றென்றி லுலப்பில் - பிறவி
யெடுத்துநன்மை தீமையதா லெய்துபரி பாக
மடுத்ததுகண் டையனரு ளால்.

(இ-ள்.) பின்பு பத்துநூறாயிரம் பேதமாகிய பறவைவருக்கங்களி லொவ் வொன்றில் அநந்தஞ் செனனமெடுத்து அதததற்குள்ள சுகதுக்கங்களை அனுப வித்துவருங்காலத்துவரும் பரிபாகத்தைப் பரமசிவ னருளாற்கண்டு, எ-று. ()

நாற்காலி யோனி நவின்றபத்து நூறதனி
லோர்க்கிற் பிறப்பநந்த மொன்றென்றி - லார்ப்பம்
விருப்புவெறுப் புண்டவ் வெகுபிறப்பாற் பாக
முருப்பது கண்டுள்ள வரனால்.

(இ-ள்.) பின்பு பத்துநூறாயிரம் பேதமாகிய நாற்கால் மிருகயோனி வரு க்கங்கள் ஒவ்வொன்றி லநந்தஞ் செனனமெடுத்து அதததற்குள்ள சுகதுக்கங் களை அனுபவித்துவருங்காலத்துப் பரிபாகமுதிர்வது பரமசிவனால் அறியப்பட்டு, எ-று. (அங)

அரிய பதினொருநா றாயிரமாம் யோனி
யுரியதே வப்பிறவி யோரிற் - றெரியுமொன்
றொன்றி லநந்தமதா வுற்றபிறப் பாற்பாக
நன்றறிந்து நம்பரம னால்.

(இ-ள்) பின்பு பதினொருநூறாயிரம் பேதமாகிய அரிதாகிய தேவயோனி ஒவ்வொன்றி லநந்தஞ் செனனமெடுத்து அதத்தற்குள்ள சுகதுக்கங்களை அனுப வித்து வருங்காலத் தெய்து பரிபாகம் நம் பரமனாகிய சிவபெருமானாற் காணப் பட்டு, எ-று. (அச)

அருமையுடை னென்பதுநா றாயிரமாம் யோனி
யுரிமையினு லொன்றென்றங் கொன்றிற் - பரிவா

லெடுத்தபிறப் பெண்ணிலக்கத் தின்பொடுதுன் புண்டங்
கடுத்தபா கத்தன்பி னால்.

(இ-ள்.) ஒன்பதுநூறாயிரம் பேதமாகிய அரிதாகிய மானிடயோனிகளி லொவ்வொன்றி லநந்தஞ் செனனமெடுத்து அததற்குள்ள சுகதுக்கங்களை யனுபவிக்குங் காலத்துவரும் பரிபாகத்தினால், எ-று. (அரு)

நால்வருண மாக நடக்குந் தனிப்பிறப்பிற்
கோல முடன்பிறந்த கொள்கையா - னால்வருணத்
தேற்கு மறம்புரிந்தங் கெய்தியபா கம்மதனை
யாக்குமரன் றன்னருளி னால்.

(இ-ள்.) பிராமணர் அரசர் வணிகர் சூத்திரரென்னு முயர்ந்தவருணங்களிற் பிறந்து அந்தந்த வருணங்களுக்குத்தக்க ஆசாரங்களை யநுட்டித்ததனாற் சிவபெருமான் றமது காருண்ணியத்தினால் பரிபாகத்தினை வரச்செய்வர், எ-று.

நிற்குங்கா லத்தி னிலையாம் புறச்சமய
வர்க்கமதி னிற்க வரும்பாகம் - புக்கதுகண்
டாங்கதனுக் கேற்க வடுத்ததனு வாதியா
யோங்குமர னாலுற வுற்று.

(இ-ள்.) இங்ஙன நாலுவருணமாக ஆசாரங்களை யனுட்டிக்குங்காலத்துப் புறச்சமயத்தை யனுட்டிக்கும் பரிபாகம்வரக் கிரமமாக உலகாயதம் பவுத்தம் அருகம் மீமாஞ்சகம் பாஞ்சராத்திரம் மாயாவாதமென்னும் புறச்சமயங்களிற் புகுந்து அந்தந்தச் சமயங்களிற்கூறிய சின்னங்களைத் தரித்து மந்திரங்களைச் செபித்து அம்மூர்த்திகளை வழிபட்டுவரச் சிவானுக்கிரகத்தினால், எ-று.()

நின்றுபரி வாயதனி னிட்டையுறல் கண்டரனு
லொன்றும் பதத்தி லுறும்போக - நின்றருந்தி
நிற்கும்பா கங்கண்டு நிற்கின்ற வுட்சமய
வர்க்கமதற் கேற்றவள மாம்.

(இ-ள்.) அந்தந்தச் சமயங்களிற்கூறிய நிட்டைகளைச்செய்து சிவாநுக்கிரகத்தினாலே அந்தந்தச் சமயங்களிற்கூறிய முத்திகளைப் பெற்றபின் உட்சமயத்தெய்தப் பக்குவம்வரும், எ-று. (அஅ)

காயமுத னன்குமழற் கண்ணுதலா லெய்தியதி
லேயமற நின்ற வியல்பதனுக் - காய
பதமதனி லுற்றுப் பயனருந்தி நிற்கு
மிதமுற வாகமசை வத்து.

(இ-ள்.) அவ்வுட்சமயமாகிய சைவம் பாசுபதம் மகாவிரதம் காளாமுகம் வாமம் வைரவமாகிய சட்சமயங்களிற் கிரமமாகப்புகுந்து அததற்குள்ள சாதன

மந்திர மூர்த்தி நிட்டையாகிய நான்கினையுஞ் சிவானுக்கிரகத்தாற் பெற்று அச்சமயங்களிற்கூறிய முத்திகளைப் பெற்றிருக்குங்காலத்துவரும் பரிபாகத்தினாற் சிவபெருமான் ஆகமசித்தாந்தமாகிய சைவசமயத்திற் புகுதச்செய்வர், எ-று. (அகூ)

நின்று சரியை நிகழ்கிரியை யோகமது
நன்று புரிய நயமுடனே - யொன்றவரன்
கூட்டத் தனுவாதி கொண்டுசரி யாதிசெய்து
வாட்டமற மற்றதன்போ கம்.

தானுகுஞ் சாலோக சாமீப சாரூப
மானபத மெய்தி யதிற்போக - மீனமற
வுண்டு தனுவா லுறும்போகம் யாவும்வினை
கொண்டதெனக் கண்டுநடுங் கல்.

பிண்டத் தலமென்னப் பேசுமிக்க வாகமங்கள்
பிண்டத்திற் காணும் பிறங்கறிவை - யுண்டாகத்
தாதார்வா கக்கொடுப்போர் தம்மினுமே மிக்கதவ
ரோது மிருடிகளா லும்.

[இவை மூன்றுவெண்பாவு மொருதொடர்.]

கஂம் வெண்பா.

(இ - ள்.) நின்றுசரியை நிகழ்கிரியை யோகமது நன்றுபுரிய - இச்சைவத்துட்புகுந்து சமயவிசேஷ தீட்சைகளைப்பெற்றுச் சரியைகிரியை யோகங்களையனுட்டிக்கும்பொருட்டு, நயமுடனே யொன்றவரன் கூட்டத்தனுவாதிகொண்டு கிரியைசெய்து - பரமசிவன் றமது காருண்ணியத்தினால் அதற்கேற்ற தனுவாதிகளைக்கூட்ட வத்தனுவாதிகளைக்கொண்டு சரியாதிகளை அனுட்டிக்குங்காலத்து, வாட்டமற மற்றதன்போகம் - தாழ்ச்சியில்லாமல் அதனால்வரும் பேறியாதெனில், எ-று. (கூ0)

உ-ம் வெண்பா.

(இ - ள்.) தானுகுஞ் சாலோகசாமீப சாரூபமானபத மெய்தியதிற்போக மீனமறவுண்டு தனுவாலுறும்போகம் யாவும் - அச்சிவபெருமானருளாற் சாலோகாதிபத முத்திகளையடைந்து அதனால்வரும் போகங்களை அனுபவித்துப் பின்பு அப்போகங்களையும், வினைகொண்டதெனக்கண்டு நடுங்கல் - வினைப்போகமெனக் கருதி மிகவும் நடுங்குதல், எ-று. (கூக)

ஙூ-ம். வெண்பா.

(இ-ள்.) பிண்டத்தலமென்னப் பேசுமிக்கவாகமங்கள்-ஆகமங்களனைத்தும் இதனையே பிண்டத்தலமென்று கூறும், பிண்டத்தலமாவது - அங்கத்தலம், அதற்கே உயிர்விளக்கமென்றும் ஆன்ம விவேகமென்றும் பெயர், அதன தரு

மையை இன்னுங்கூறுகின்றார். பிண்டத்திற்காணும் பிறங்கறிவை யுண்டாக- இப்பிண்டத்தலத்தி லுண்டாகாநின்ற விளக்கமுள்ள ஆன்மவிவேகஞ் சுத்த சிவானுக்கிரகத்தினால் வருவதொழிந்து மற்றொன்றாலும் வராது, மற்றொன்றா வதியாதெனிற் கூறுகின்றார். தாதாவாகக் கொடுப்போர்தம்மினும்- இரப்போர் தம்பாலெய்தியெதைக் கேட்கினும் இல்லையென்னுமற் கொடுக்கும் ஔதாரிய குணத்தினையுடையவர்களாலும் - மிக்கநவர், மேலாகிய சாந்திராயண கிரிச் சிராதி விரதங்களை யனுட்டிக்கிறவர்களாலும் - ஓது மிருடிகளாலும், சொல்லப்பட்டவன முதலிய ஸ்த்தானங்களிலிருந்து தவஞ்செய்யு மிருடிகளாலும், எ-று. (கூஉ)

நின்றவுயர் வேள்வியது நீதியுடன் செய்வோர்கள்
சென்றிடுநான் காச்சிரமஞ் சேர்ந்தோர்க - ணன்றாக
மெய்யான பஞ்சாக் கினிநடுவி னல்லறமா
யுய்யநிற்கச் செய்தவத்தி னோர்.

(இ-ள்) நின்றவுயர் வேள்வியது நீதியுடன் செய்வோர்கள் - மந்திரலோபங் கிரியாலோபந் திரவியலோபங்களின்றி வேதாகமங்களிற் கூறாநின்ற சதகிருதுகளைப் பண்ணின பெயர்களாலும், சென்றிடு நான்காச்சிரமஞ் சேர்ந்தோர்கள் - செல்லுதற்குரிய பிரமசரியம் கிருகஸ்த்தம் வானப்பிரஸ்த்தம் சந்நியாசமென்னு நான்காச்சிரமத்தின் வழிநவறாம னடக்குமவர்களாலும், நன்றாக மெய்யான பஞ்சாக்கினி நடுவினல்லறமாயுய்யநிற்கச் செய்தவத்தினோர் - நன்றாகப் பஞ்சாக்கினி மத்தியினின்று தவஞ்செய்பவர்களாலும், எ-று.

பஞ்சாக்கினி மத்தியினின்று தவஞ்செய்தலாவது-ஆகவநீயம், தெக்ஷிணக்கினி காருகபத்தியமென்று சொல்லப்பட்ட மூன்றக்கினியையு மூன்றுதிக்கிலும் மூட்டிக்கொண்டு மூலாதாரத்திருக்கும் அக்கினியையெழுப்பிச் சூரியனைப்பார்த்தவண்ணமாத் தியானித்திருத்தல். (கூங)

ஊசி முனையினின்றே யூணுமுறக் கந்தவிர்த்து
நாசி நுனியின்விழி நட்டிருக்கு - மேசி
றவத்தினரு மட்டாங்க யோகிகளுஞ் சைவ
நவக்கலைக ளோதிமிக்க நல்.

(இ-ள்.) ஊசிமுனையினின்றே யூணுமுறக்கந் தவிர்த்து நாசிநுனியின்விழி நட்டிருக்குமேசி றவத்தினரும் - வனங்களினும் மலைகளினும் சமுத்திர தீரத்தும் நதிதீரத்தும் ஊசியைநிறுத்தி யவ்வூசிநுனியிற் பெருவிரலையூன்றி ஆகாரநித்திரைகளைவிட்டு மூக்கினுனியைப் பார்த்தவண்ணமாகப் பரமசிவனைத் தியானம்பண்ணுந் தவத்தினர்களாலும், அட்டாங்க யோகிகளும் - இயம நியமாதி அட்டாங்கயோகஞ்செய்யும் யோகிகளாலும், சைவநவக்கலைக ளோதிமிக்கநல்- நல்ல நவமாகிய சைவாகமங்களை யோதினவர்களாலும், எ-று. (கூச)

அர்த்தந் தெரிந்தவரு மாமென் றறியமிக்க
சித்திரமா முன்பின் சிதையாம - லுத்தமமாய்க்
கட்டுரைக்க வல்லவர்க்குங் கட்டுரைத்த வைந்தொழிலு
முட்டெளியப் பெற்றியற்று வோர்.

(இ-ள்.) அர்த்தந் தெரிந்தவரும் - அவ்வாகமார்த்தங்களை யறிந்தவர்களாலும், ஆமென்றறிய மிக்க சித்திரமாய் முன்பின் சிதையாம லுத்தமமாய்க் கட்டுரைக்க வல்லவர்க்கும் - அவ்வர்த்தங்களை முன்னொடு பின்மலைவில்லாமல் பிறர்க்கு உபதேசிக்கத்தக்கவர்களாலும், கட்டுரைத்த வைந்தொழிலு முட்டெளியப்பெற்றியற்றுவோர் - சொல்லப்பட்ட பஞ்சகிருத்தியங்களை நன்றாகச்செய்யும் அனுவர்க்கமாகிய பிரமவிட்டுணு உருத்திரர் மகேசுரர் சதாசிவர்களாலும், எ-று. (கரு)

ஐவரா லும்முடியா தாமுணர்வு தான்விபுவாய்ச்
செவ்வியதாய் ஞானத் தெளிவாகி - யிவ்விதுபோ
லென்ன வுவமையின்றி யீறுமுத லின்றிமிக்க
தன்னிகர்தான் பிண்டத் தலம்.

(இ-ள்.) ஐவரா லும்முடியா தாமுணர்வுதான் விபுவாய்ச் செவ்வியதாய் ஞானத்தெளிவாகி - முற்கூறிய பஞ்சகர்த்தர்களாலு மறியக் கூடாததாகிய அறிவே வடிவாய் விபுவாய் வியாபகமாய் நிருமலமாய்ச் சுத்தசித்தாய், இவ்விதுபோ லென்னவுவமையின்றி யீறுமுதலின்றி மிக்கதன்னிகர்தான் பிண்டத்தலம் - இன்னின்னது போலுமென்று சொல்லவுவமையில்லாததாய் ஆதியந்தமில்லாததாய்த் தனக்குத்தானே நிகராயிருக்குமதுவே பிண்டத்தலம், எ-று.()

பிண்டத் தலத்திற் பிறங்கியிடுஞ் சத்தியைந்துங்
கொண்டதொழி லைந்துங் குலைந்தகல - வுண்டாஞ்சிற்
சத்தி பதியுமது சத்திநிபா தம்பதிந்த
வத்திலுறு மான்மவிவே கம.

(இ-ள்.) பிண்டத்தலத்திற் பிறங்கியிடுஞ் சத்தியைந்துங் கொண்டதொழிலைந்துங் குலைந்தகல - இங்ஙனங்கூறிய பிண்டத்தலத்தில் விளங்காநின்ற பஞ்ச சத்திகளினது வியாபாரமாகிய பஞ்சகிருத்தியங்களுங் குலைந்துநீங்க, உண்டாஞ் சிற்சத்திபதியுமது சத்திநிபாதம் பதிந்த வத்திலுறு மான்மவிவேகம் - உண்டாகத்தக்க சிற்சத்தியானது அட்டோது பதியும், அச் சிற்சத்திபதியவே விதேகமுத்தி சாட்சாத்காரத்தை விரும்பும் ஆன்மவிவேக முண்டாகும், எ-று. (கஎ)

[இவ்விருபத்து நான்கு வெண்பாவாற் சத்திநிபாதம்வரு மேதுவைக்
கூறி மேலேழு வெண்பாவினாற் சத்திநிபாத
குணத்தை யுரைக்கின்றார்.]

ஞானம் விளைந்தவர்க்கு நன்றாங் குறிகுணங்க
ளான துரைக்குமரு ளாகமங்க - டானறநன்

முத்தியினின் மோக முடிவின்றி யேவிளங்கும்
பித்துமிகக் கொண்டுபெருகும்.

(இ-ள்.) ஞானம் விளைந்தவர்க்கு நன்றாங்குறிகுணங்கள் - ஞானவான்களுடைய குணங்குறிகள் யாவையெனில், தானற நன்முத்தியினின் மோகமுடிவின்றியே விளங்கும் - தானென்னுஞ் சுட்டறவிதேகமுத்தி சாட்சாத்காரத்தைப் பெறவேண்டுமென்கிற வாஞ்சை மேன்மேலுமுத்தரோத்தரமாய் அடங்காமல் எழும், பித்துமிகக்கொண்டு பெருகும் - தேகாதி பிரவஞ்சங்களைக் காண்றசோற்றென அருவருத்துச் சிவராகமேபித்தாய்மேலிடும், ஆனதுறைக்கு மருளாகமங்கள் - ஆகிய விவையென்று சிவாகமங்கள் செப்பும், எ-று. (கூஅ)

[மேற்சத்திநிபாதகுணஞ் சாற்றுகின்றார்.]

அப்பொருளே யாகு மரியகுரு லிங்கமுட
னொப்பரிய சங்கமமு முன்னரிய - மெய்ப்பொருளே
யாகுமென்னும் பத்தி யதுவுருவாஞ் சத்தியமொன்
றாகுமென்னு மாகமத்தம் மா.

(இ - ள்) அப்பொருளேயாகு மரியகுருலிங்கமுட னொப்பரியசங்கமமும் - அச்சுத்தசிவ சொரூபமேயாகு மிதாகிய குருலிங்கசங்கம சொரூபமென்றும் படிக்கு, உன்னரிய மெய்ப்பொருளே யாகுமென்னும் பத்தியது - சற்றுஞ் சலனமின்றி நினைத்தற்கரிய வப்பொருளுட னேகீபாவக மாகப்பண்ணுஞ் சமரச பத்தி, அவ்வுருவாஞ் சத்தியமொன்றாகு மென்னு மாகமத்தம்மா - அப்பத்தியே தனக்குச் சத்தியவுருவமாகவந்து பதியுமெனச் சிவாகமங்கள் கூறும், எ று. ()

ஆனசமு சார மதுகண் டிலச்சைமிகுந்
தானழியுஞ் சொல்ல வருவருக்கு - மானதன்றி
யுள்ளத்தி னுள்ளும் பொழுதுயிர்மூர்ச் சித்தயரு
மெள்ளப் படாதபத்தி யான்.

(இ - ள்.) ஆனசமுசார மதுகண்டிலச்சைமிகுந் தானழியுஞ்சொல்ல வருவருக்கும் - செனனமரணத்துக் கேதுவாகிய புத்திரமித்திர களத்திராதிகளான சமுசாரத்தைக்கண்டு இந்தச் சமுசாரத்தில் விழுந்தழுந்த வோவென் றிலச்சைப்பட்டழியும் வாயினாற் சமுசாரமென்று சொல்லவும் அருவருக்கும், ஆனதன்றி யுள்ளத்தி னுள்ளும்பொழு துயிர்மூர்ச்சித்தயரு மெள்ளப்படாத பத்தியான் - அதுவுமன்றி மனத்தின்கட் சமுசாரமென்று நினைக்கும்பொழுது அதனால்வரும் பயத்தினாற் பிராணவாயு வியங்காமன் மூர்ச்சித்து அயர்ச்சியினையடையும் சொல்லுதற்கரிய பத்தியினையுடையான், எ-று.

இச்சமுசார பெந்தமாயினவெல்லாந் தன் உடற்குபகார மல்லது, சிவானந்தானுபூதியைத் திளைக்கவெண்ணும் உயிர்கட் குபகாரமன்றாதலாற் றுயருற்று மூர்ச்சித்தயருமென்றார். (கூ0)

[இன்னுமிச்சத்திநிபாத முடையவர்கட்குவருங் குணங்க ளெட்
[டனையும் விரித்தருளிச் செய்கின்றார்.]

எட்டு விதமா மிருளகன்ற பத்தர்சபை
விட்டகலா தொன்றுதன் மிக்கவர்கள் - கட்டகன்ற
பூசைக்கு வேண்டல் புரிதலவர் பூசைகண்டு
ளாசைப் படலல்லா மல்.

தாமும்பூ சிக்கவன்பாந் தாமற்ற தம்முடனன்
ஞமத் தொழிற்கிசைத னற்கதைக - ளாமதனி
னேசமாய் நெஞ்சி னினைவகலா தேயிருக்கப்
பாசமாம் பேசுமுத்தி தான்.

பாரிக்கு நல்ல பரமப் பிரசாதச்
சீரதுவாம் போகஞ் செறிவாகி - வாரமதாய்
நிற்குமிவை யெட்டு நினையா நினைவாகி
விற்பொலியுங் கற்பதன்றி யே.

ஈதெட்டும் வஞ்சனையற் றேசெய்யும் பத்தியது
பேதப் படாதுள்ளே பித்தாகி - நீதியதா
யொன்றுந் தலைமை யொருப்படுந்தா னும்மொழிய
வொன்றுந் துறவுமிக வும்.

[இந்நான்குவெண்பாவு மொருதொடர்.]

### க-ம் வெண்பா.

(இ - ள்.) எட்டுவிதமா மிருளகன்ற பத்தர்சபைவிட்டகலா தொன்றுதல்- சத்திநிபாதமுடையவர் குணமெட்டுவகையாம், அவை ஆணவாதிபாசங்களை நீங் கிச் சீவன்முத்தர்களாக விருக்குஞ் சிவயோகிகள் சந்நிதானத்தைவிட்டுப் பிரிய மாட்டாம லொன்றுபட்டிருத்தலொன்று, மிக்கவர்கள் கட்டகன்றபூசைக்கு வேண்டல் புரிதல் - மேலுமவர்கள் பெந்தநிவர்த்தியினைச் செய்யுஞ் சிவபூசை க்குவேண்டு முபகரணங்களைக் கொடுத்தலொன்று, அவர்பூசைகண்டுளாசைப் படலல்லாமல் - அவர்கள்செய்யுஞ் சிவபூசையைக்கண்டு இவர்களைப்போல நாமுஞ் சிவபூசைசெய்யவேண்டுமென்றுள்ளே விருப்பத்தை யடைதலொன்று அதுவுமன்றி, எ-று. (க0க)

### உ-ம் வெண்பா.

(இ - ள்.) தாமும்பூசிக்கவன்பாம் - தாங்களும் அவர்களைப்போல அன்பி னாற் பூசைசெய்கின்றதொன்று, தாமற்ற தம்முடனன்ஞமத் தொழிற்கிசைதல்- இத்தேக நமதன்று சிவபணிவிடைக்கே யுரியதென் றச்சிவபெருமானுடைய பணிவிடைகளைச் செய்யவிசைதலொன்று, நற்கதைகளா மதனினேசமாய் -

சிவபுராணங்களையே விருப்பமாய்க்கேட்ட லொன்று, நெஞ்சினினைவகலாதே யிருக்கப்பாசமாம் - எப்போதும் பரமசிவனை இருதயகமலத்துவிட்டு நீங்காமற் றியானித்திருக்கையொன்று, பேசுமுத்திதான் - வேதாகமங்களாற் கூறப்பட்ட முத்தியை, எ-று. (௧௦௨)

## ௩-ம் வெண்பா.

(இ-ள்.) பாரிக்குநல்ல பரமப்பிரசாதச் சீரநுவாம்போகஞ் செறிவாகி வாரமதாய்நிற்கும் - தாரநின்ற மேலாகிய பிரசாதபோகத்திலே வாஞ்சையாய்ச் சர்வவிடயங்களையுஞ் சிவபெருமானுக் கற்பித்துப் பிரசாதபோகமாய்ப் புசிக்கின்றதொன்று, இவையெட்டு நினையாநினைவாகி விற்பொலியுங்கற்பதன்றியே - இங்ஙனங்கூறிய இவ்வெட்டுக்காரியங்களையும் பிரகாசியாநின்றதவக் கற்பினால் மறவாமல் எப்போதும் இவையே கருத்தாக, எ-று. (௧௦௩)

## ௪-ம் வெண்பா.

(இ-ள்.) ஈதெட்டும் வஞ்சனையற்றேசெய்யும் பத்தியது - இவ்வெண்வித குணங்களும் முற்கூறிய சமரசபத்தி பதிந்தகாலத்துத் திரிகரணங்களையுஞ் சுத்திசெய்யும், பேதப்படாதுள்ளே பித்தாகிநீதியதா யொன்றாந்தலைமை யொருப்படுந்தானும் மொழியவொன்றாந் துறவுமிகவும் - அனவரதமும் அதுவே பித்தாய்ப்பேதமின்றி அபேதமாந் தன்மையையேவாஞ்சித்துத் தற்போதமறத் தேகாதி பிரவஞ்சங்களை மிகவுந் துறக்கும், எ-று. (௧௦௪)

[மேல்அருளே குருவடிவமாகவருமென் றிரண்டு வெண்பாவினா லுரைக்கின்றார்.]

பத்தியதுஞ் சத்திநி பாதம் பதிந்துடனே
முற்றும் விவேகஞா னம்முண்டா - நற்றவனுஞ்
சீடனது சித்தச் செயலறவே தான்விளங்கி
யாடுஞ் சிவங்குருவ தாய்.

வந்தறிவு தானாகும் வண்மையறி யாதயரு
மைந்தன்மல மெல்லா மடிவித்துச் - சிந்தை
தெளிவித்துத் தானாக்கித் தேற்றுமுயி ராளி
யளிவித்த சற்குருரு பாய்.

[இவ்விரண்டுவெண்பாவு மொருதொடர்.]

## க-ம் வெண்பா.

(இ-ள்.) பத்தியதுஞ்சத்திநிபாதம் பதிந்துடனேமுற்றும் விவேகஞானம் முண்டாகும்-இப்பருவத்தினைச்செய்விக்கும் பத்தியும் சத்தியும் ஆகியவிரண்டும் பதிந்தகாலத்து மேலாகிய விவேகஞானமுண்டாகும், நற்றவனுஞ்சீடனது சித்தச்செயலறவேதான் விளங்கியாடுஞ் சிவங்குருவதாய்-அவ்விவேகத்தினையுடைய மாணாக்கனது சித்தச்செயலையறுத்துச் சிவானந்தாநுபூதியைத் தரும்பொருட்டு ஆனந்த நிருத்தத்தினைச்செய்யு நித்திய அகண்டபரிபூரணமாகிய பரமசிவனே ஆசாரியமூர்த்தமா யருளே திருமேனியாக்கொண்டு, எ-று. (௧௦௫)

உ-ம் வெண்பா.

(இ - ள்.) வந்தறிவுதானாகும் வண்மையறியாதயரு மைந்தன்மலமெல்லா மடிவித்து - எழுந்தருளிவந்து அறிவே சொரூபமாகுந் தன்மையை அறியாது துயருறுமாணாக்கனைப் பற்றிய வாணவாதி பாசங்களைத் தீட்சையினாற்போக்கி, உயிராளியளிவித்த சற்குருரூபாய் - காருண்ணியமே திருமேனியாக் கொண்டு ஞானசாரியராக எழுந்தருளிய அச்சிவபெருமான், சிந்தைதெளிவித்துத் தானாக்கித்தேற்றும் - அம்மாணாக்கனது சித்தத்தை நிருமலமாகச்செய்து தற்சொரூபமாகப் பண்ணித் தெளிவிக்கும், எ-று.

இதற்குதாரணம் - திருவாசகம். "அரும்பரத்தொருவ னவனியில்வந்து குருபரனாகி யருளியபெருமை தம்முதல்குருவுமாய்த் தவத்தினிலுணர்த்தவிட்டு" என்றும், திருவருட்பயன் "அகத்துறுநோய்க்குள்ளின ரன்றியதனைச், சகத்தவருங்காண்பரோதான்" என்றும், சித்தியார். மன்னவன்றன்மகன் வேடரிடத்தேதங்கி வளர்ந்தவனை யறியாதுமயங்கிநிற்பப்-பின்னவனுமென்மகனீ யென்றவரிற்பிரித்துப் பெருமையொடுந் தானாக்கிப் பேணுமாபோற் - றுன்னிய வைம்புலவேடர் சுழலிற்பட்டுத் துணைவனையுமறியாது துயருறுந் தொல்லுயிரை- மன்னுமருட்குருவாகி வந்தவரினீக்கிமலமகற்றித் தானாக்கிமலரடிக்கீழ் வைப்பன்" என்றும், வருவனவற்றாற்காண்க. (கoசு)

[மேல்மாணாக்கனது பாசமகற்று முபாயமருளிச் செய்கின்றார்.]

கொண்ட கருணைக் குறியாங் குருபரன்றா
னுண்டாய மைந்தற் குறும்பாசங் - கண்டித்
தழியாத வாருயிர்தா னாக்கியிடுந் தீர
மழியாத தீக்கைய தனால்.

(இ-ள்.) கொண்டகருணைக் குறியாங்குருபரன்றா னுண்டாயமைந்தற் குறும்பாசங் கண்டித்து - காருண்ணியமே திருமேனியாக வெழுந்தருளும் ஆசாரியர் தம்மைச் சரணடைந்த மாணாக்கர்களுக்குப் பாசசேதனம்பண்ணி, அழியாதவாருயிர் தானாக்கியிடுந்தீர மழியாததீக்கையதனால் - ஒருகாலு நாசமில்லாத வான்மசொரூபத்தைத் தற்சொரூபமேயாகச்செய்யுஞ் சவுரியமேதெனிற் றீட்சாபெலத்தினாலே, எ-று. (கoஎ)

[ஆசாரியரிடத்து மாணாக்கனிடத்துஞ் சிவனின்றுநடத்துந் தன்மை யிரண்டு வெண்பாவினாற் கூறுகின்றார்.]

பாசம் பறித்துப் பதியாக்குஞ் சற்குருவாய்ப்
பேசும் வடிவினிலும் பெந்தமற - நேசமாய்
வேண்டிநிற்கு மைந்தன் வினையகற்று நற்சிவமே
பூண்டுநடிக் கின்றவற்பு தம்.

(இ-ள்.) பாசம் பறித்துப் பதியாக்குஞ் சற்குருவாய்ப் பேசும்வடிவினிலும் - மாணாக்கனைப்பற்றிய மும்மலங்களையுந் தீட்சையினாற் போக்கிச் சிவசொ

ரூபமேயாக்கவல்ல சற்குருவினது திருமேனியிலும், பாசமறவேண்டி நிற்கு மைந்தன் வினையகற்றும் - ஆணவாதிபாசங்களைப்போக்கிச் சிவானந்தாநுபூதி யைப்பெறவேண்டுமென்னும் ஆதரவுபற்றி வணங்கிநிற்கு மாணுக்கனதறிவி லும், நற்சிவமேபூண்டு நடிக்கின்றவற்புதம் - குற்றமற்ற பரமசிவனுடைய தீட்சாசத்தி இவ்விரண்டிடத்தினு நின்று செலுத்துகின்ற ஆச்சரியத்தைக்கூறு வோங் கேட்பாயாக, எ-று. (கOஅ)

ஆகிநிற்கும் போக மதுதுர் லபமிருமை
யாகும்விழி தன்னி லரியமணி - யேகமதாய்
நிற்கின்ற காகத்தி னிற்பதுபோ லேகமதாய்
நிற்கின்ற தீக்கை நிலை.

(இ-ள்.) ஆகிநிற்கும்போகமது துர்லபம் - தீட்சாசத்தி யொன்றாயிருந்து மிவர்களிருவரிடத்துங்கூடி நின்று செய்யும்வல்லபத்தைச் சொல்லுமிடத்து வெகு துர்லபமாக விருக்கும். எங்ஙனமெனின், இருமையாகும் விழிதன்னி லரியமணியேகமதாய் நிற்கின்ற காகத்தினிற்பதுபோலேகமதாய் நிற்கின்ற தீக்கைநிலை, காகத்தினிருகண்ணினிடத்து மொருமணியே நின்றறியுமதுபோல தீட்சாசத்தி ஏகமாய்நிற்கும் எ-று. (கOக)

[ஒருவகைத்தீக்கை யிருவர்க்கு முரைக்கின்றார்.]

ஆன வதுதா னறியி லிருவகைத்தா
மானநிரா தாரஞ்சா தாரமென - வீனமற்ற
மேலா நிராதாரம் விஞ்ஞா னபிரளயர்
பாலாந் தரதீ விரம்.

(இ-ள்.) ஆனவதுதானறியி லிருவகைத்தாமான நிராதாரஞ் சாதாரமென - அங்ஙனஞ்செய்யுந் தீட்சை நிராதாரதீட்சையென்றுஞ் சாதாரதீட்சையென்று மிரண்டுவகையாம், ஈனமற்ற மேலா நிராதாரம் விஞ்ஞான பிரளயர் பாலாந் தரதீ விரம் - அவற்று ணிராதாரதீட்சை யாவர்க்குரித்தெனில், தீவிரதீவிரதர சத்திநிபாதத்தையுடைய விஞ்ஞானகலர்க்கும் பிரளயாகலர்க்குமாம், எ-று. ()

சொற்றிடுவிஞ் ஞான கலர்க்கும் பிரளயர்க்குஞ்
சொற்றமலங் கன்மமலஞ் சுற்றகற்றிச் - சற்று
மகலாத சச்சிதா னந்தத்தொன் றாக்கும்
புகலுமரன் பொற்பவர்போ லாய்.

(இ-ள்.) சொற்றிடு விஞ்ஞானகலர்க்கும் பிரளயர்க்குஞ் சொற்றமலங் கன்மமலஞ் சுற்றகற்றி - இங்ஙனங்கூறிய விஞ்ஞானகலர்க்கும் பிரளயாகலர்க் கும் தேகமின்மையினாலே பரமசிவனுநிராதாரமாகவே யெழுந்தருளி அறிவுக் கறிவாக நின்று விஞ்ஞானகலருக்கு ஆணவமலத்தினையும் பிரளயாகலருக்கு ஆணவமலத்தோடு கன்மமலத்தினையுந் தீட்சையினாற்போக்கி, சற்றுமகலாத

சச்சிதானந்தத் தொன்றுக்கும் புகலுமரன்பொற்பவர்போலாய் - சிவபிரான் ஒருகாலுநீங்காத சச்சிதானந்தானுபவ வநுபவசாட்சாத்காரத்தைப் பண்ணு வர், எ-று.

இதற்குதாரணம் - சித்தியார். "உரைதரு மிப்பசுவர்க்கமுணரின் மூன்று மூயரும் விஞ்ஞானகலர் பிரளயாகலர் சகலர் - நிரையின் மலமலங்கன்ம மலங் கன்ம மாயை நிற்குமுதலிருவர்க்கு நிராதாரமாகிக் - கரையிலருட்பரன்று விதாசத்திநிபாதத்தாற் கழிப்பன்மலஞ் சகலர்க்குக் கன்மவொப்பிற் - றரையி லாசான் மூர்த்தியாதாரமாகித் தரித்தொழிப்பன் மலஞ்சதுர்த்தாசத்திநிபாத த்தால்" என்பதனாற் கண்டுகொள்க. (கசக)

[மேற்சாதாரமாகவெழுந்தருளிச் சகலர்க்குப்பண்ணுந்
தீக்கைக்குச் சத்திநிபாதச் சிறப்பிரண்டு
வெண்பாவினாற் சாற்றுகின்றார்.]

பரிபாகி யென்றுரைத்த பண்பாஞ் சகலர்க்
குரிமைபெறு மும்மலமா யுள்ள - கருமலங்க
ணீக்கியின்பப் பூரணமா நின்மலனோ டொன்றாக
வாக்கியிட யோசித்தற் காய்.

மற்றவரைப் போல மதிக்குங் குருமூர்த்தி
பற்றிமிகத் தீக்கை பரிவுடனே - மற்றியற்ற
வுண்டாகு மந்தமொடு மந்ததர பாகமுறக்
கண்டவர்க்குச் செய்யுந்தீக் கை.

க-ம் வெண்பா.

(இ-ள்.) பரிபாகியென்றுரைத்த பண்பாஞ் சகலர்க்குரிமைபெறு மும் மலமாயுள்ள கருமலங்கணீக்கி - இங்ஙனங்கூறிய பரிபாக விலக்கணத்தை யுடைய சகலருக்குரித்தாகிய மும்மலங்களையுந் தீட்சையினாற்போக்கி, இன்ப பரிபூரணமா நின்மலனோடொன்றாகவாக்கியிட யோசித்தற்காய் - நின்மலா னந்தபரிபூரண சிவத்துடனே யேகிபாவமாக யோசனை பண்ணுவதற்காக, எ-று. (கசஉ)

உ-ம் வெண்பா.

(இ-ள்.) மற்றவரைப்போல மதிக்குங்குருமூர்த்தி பற்றிமிகத் தீக்கைபரி வுடனே மற்றியற்ற - மானைக்காட்டி மானைப்பிடிக்குமாறுபோல அவர்களைப் போலவே மானிடச்சட்டை சாத்திக்கொண்டெழுந்தருளும் ஞானசாரியரை யதிட்டித்துப்பரிவோடு சிவபெருமான் தீட்சையினைப்பண்ணுவதற்கு, உண்டா கு மந்தமொடு மந்ததரபாகமுறக் கண்டவர்க்குச்செய்யுந் தீக்கை - அவர்களி டத்து விளங்காநின்ற மந்தமந்ததரபரிபாகச் சின்னத்தைக்கண்டு அதன்பின்பு பண்ணுந் தீட்சை விதத்தினைக்கூறுவாம், எ-று. (கசங)

[சிவபிரான் ஆசாரியமூர்த்தமா யெழுந்தருளிவந்து பரிபாகங்கண்டு பண்ணும் தீட்சை மூவிதமெனப் பகர்கின்றார்.]

சாதா ரணமாகுந் தீக்கையது தான்மூன்று
மோதிலொன்று பீசமொன்று நிர்ப்பீசந் - தீதகன்ற
சின்மயம தொன்றென்னச் செப்பிடுமிம் மூன்றினுக்கும்
புன்மையறச் சொல்லும் பொருள்.

(இ-ள்.) சாதாரணமாகுந் தீக்கையதுதான் மூன்றும் - சிவபெருமான் குருமூர்த்தியை யதிட்டித்துக்கொண்டு பண்ணும் தீட்சை மூன்றுவிதமாம், அவை யாவன, ஓதிலொன்று பீசமொன்று நிர்ப்பீசந் தீதகன்ற சின்மயம தொன்றென்னச் செப்பிடும் - சொல்லுமிடத்துப் பீசதீட்சையொன்று நிர்ப்பீசதீட்சையொன்று குற்றமில்லாத சின்மயதீட்சையொன்றென வாகமங்கள் சொல்லும், இம்மூன்றினுக்கும் புன்மையறச் சொல்லும் பொருள் - இம்மூவகைத்தீட்சைக்கும் இழிதகைமை யில்லாமற் சொல்லப்படும் பெயரிவையாம், எ-று. (ககச)

[மேற்சின்மயதீட்சையின் திறத்தைச்செப்புகின்றார்.]

திருநோக்கி னாலுந் திருக்கரத்தி னாலு
மரிய வுபதேசத் தாலு - முரியநல
பாவனையி னாலும் பகர்யோகத் தாலுநூ
லாமிவைக டாஞ்சின் மயம்.

(இ-ள்.) திருநோக்கினாலும் - (மீனானது சினையைப்பார்த்தமாத்திரத்திலே யதனைப்பேதித்துத் தானாக்குமாறுபோல ஆசாரியருமுண்மையிலே சித்தத்தை வைத்துத் திவ்வியசட்சுவினாலே பார்த்துக் கட்டுப்பட்ட பெந்தங்களைச் சேதிக்குமது) திருநோக்குத் தீட்சை, திருக்கரத்தினாலும் - (வாரணமானது தன்முட்டையைச் செட்டையாலணைத்துப் பரிசித்துத் தற்சொரூபமாகச் செய்வது போல ஆசாரியர் தமதுவலதுகையிலே சிவாஸ்த்தங் கற்பித்துச் சோதிரூபமாகத் தியானம்பண்ணி மாணாக்கனது சிரசுதொடங்கி சர்வாங்கமும் பரிசித்துப் பின்புறமாக விடுவது) பரிசதீட்சை, அரியவுபதேசம் - (ஆசாரியர் தமது உண்மையிலே சித்தத்தைவைத்து ஞானவொளியுடனேகூடிச் சங்கிதாமந்திரங்களை அவ்வவ்வன்னங்களின் மாத்திரைகளேறாமற் குறையாமலுச்சரிக்கும்படி யுபதேசிப்பது) வாசகதீட்சை, உரியநல்பாவனையினாலும் - (ஆமையானது நீர்க்கரையின் முட்டையிட்டுத்தான் சந்நிதானமாகச் சலத்திலிருந்து தன்னைப்போலுருவாகும்படி சிந்திப்பதுபோல ஆசாரியருங் கிரியாவிதிபோல வழுவின்றிச் சோகம் பாவனையுடனிருந்து பாசசேதனஞ்செய்வது) பாவனாதீட்சை, பகர் யோகத்தால்- (ஆசாரியர் மாணாக்கனுடைய இருதயத்திலேநாடி சந்தானமார்க்கத்திற் பிரவேசித்து அவ்வியத்தத்தினடுவில் விந்துரூபமாக நின்றவான்மாவைச் சுழுமுனைநாடி வழியாலே பிரமரந்திரமளவாகக்கொண்டு சென்று சிவரூபத்தில் யோசித்து நிறுத்துகை) யோகதீட்சை, நூல்- (ஐயந்திரிவின்றித் திவ்வியாகமங்

களிற்சொன்னபடி யோதிவைத்து அதனையுள்ளபடி யறிவிக்கை) சாத்திரதீட்சை, ஆமிவைகடாஞ் சின்மயம்-இங்ஙனஞ்செய்வது சின்மயதீட்சையாம், எ-று

[மேல்நிர்ப்பீசதீட்சையினை யருளிச்செய்கின்றார்.]

நிர்ப்பீச மென்றபெயர் நீங்காப் பிறவிதருங்
கற்பான பீசமதாங் கன்மத்தா – லுற்பவிக்கு
முற்பவமே யில்லையென்ற வுண்மையென வாகமங்கள்
பொற்புடனே சொல்லும் பொருள்.

(இ-ள்.) நிர்ப்பீசமென்றபெயர் - இத்தீக்கைக்கு நிர்ப்பீச தீட்சையெனப் பெயர்வருவானேனெனில், நீங்காப்பிறவிதருங் கற்பானபீசமதாங் கன்மத்தா லுற்பவிக்கு முற்பவம் - தொலையாதசெனனமரணங்களைக் கொடுத்தற்குரித்தாகிய புத்திநிஷ்ட்ட கன்மபீசங்களைத் தீட்சையினாற் போக்கி, மேலில்லையென்ற வுண்மையென வாகமங்கள் பொற்புடனே சொல்லும்பொருள் - மறுபடியுஞ் செனனமரணமில்லாமற் பண்ணுகையாலென்று சிவாகமங்கள் சொல்லும், எ-று. (கககூ)

[மேற்பீசதீட்சையின திலக்கணமுரைக்கின்றார்.]

பீசமென்ற பேர்பிறப்பிற் பெந்தித்து மெல்லமெல்ல
மாசதுவாய் நிற்கு மலபாக – மாசகலப்
பாகம் வருத்துமெனப் பண்பாற் சிவாகமங்கள்
சோகமறச் சொல்லும் பொருள்.

(இ-ள்.) பீசமென்றபெயர் - பீசதீட்சையென விதற்குப்பெயர்வந்ததேதுகாரணமெனில், பிறப்பிறப்பிற் பெந்தித்து மெல்லமெல்லமாசதுவாய் நிற்கு மலபாக மாசகலப்பாகம் வருத்துமென - கேவலாவத்தையைப்பற்றிக் கிடக்கும் ஆன்மவர்க்கங்களுக்குத் தனுகரணபுவனபோகங்களைக்கூட்டி மெல்ல மெல்ல அஞ்ஞானத்தினைச் செய்யும் ஆணவமலத்திற்குப் பரிபாகம்வரச் செய்விப்பதென்று, பண்பாற் சிவாகமங்கள் சோகமறச்சொல்லும்பொருள், நயமாகச் சோர்வின்றிச் சிவாகமங்களுரைக்கும், எ-று. (ககஎ)

[இனிநிர்ப்பீசதீட்சை யிரண்டுவிதமென நிகழ்த்துகின்றார்.]

செப்பியிடு நிர்ப்பீச தீட்சை யிருவகைத்தா
மொப்புடைய தாம்பே ருகந்துரைக்கி – லற்புதமாய்ச்
சத்தியநிர் வாணமொன்றங் கொன்றுசிர நிர்வாணம்
வித்தகமாய்ச் சொல்லும் விதி.

(இ-ள்.) முற்கூறிய நிர்ப்பீசதீட்சை யிரண்டுவிதம், அவற்றிற்குச் சத்தியநிருவாண தீட்சையென்றும் சிரநிருவாணதீட்சையென்றும் பெயராம், எ-று.

[இவ்விருவகைத் தீட்சையும் யாவர்க்கெனிலிவர்க் கென்கின்றார்.]

மந்தமொடு மந்ததர மாஞ்சத் திநிபாதர்
பந்த மகற்றும் பரிவினல் – வந்தவருட்

டக்கை தெரிக்கி லிருவகைத்தாஞ் சத்தியமொன்
ருக்குஞ் சிரநிருவா ணம்.

(இ-ள்.) மந்தபரிபாகத்தினை யுடையவர்கட்குச் சிரநிருவாணதீட்சையும் மந்ததரபரிபாகத்தினை யுடையவர்கட்குச் சத்தியநிருவாண தீட்சையும் ஆம், எ-று. (கககக)

[மேற்சத்தியநிருவாணதீட்சையினை மூன்றுவெண்பாவினுல் மொழிகின்றார்.]

சத்தியம தாகவே சாற்று நிருவாண
முத்தம மான வுயர்தீக்கை - நித்தத்தா
லெண்ணில்பெருஞ் சஞ்சிதமு மெய்து முடற்புசிப்பாய்ப்
பண்ணுபிரா ரத்தமும்பண் பால்.

முன்னுறவுண் டாக்கி முடியாவா காமியமுந்
தன்னியல்பாஞ் சத்தியநன் முத்தியெய்தத் - தன்னை
நினையா தமலனென்னு தாமிலக்க ணங்க
ளனையவைக ளுள்ளசம்பன் னன்.

ஆகி யுடல்பொருளோ டாவிகொடுத் தேனென்னு
மோக விரத்தனு மொய்ம்புடைய - வாகனுக்குச்
செய்வதென வன்றே சிவாகமங்கள் செப்புமவர்
துய்யபர முத்தர் துணி.

க-ம் வெண்பா.

(இ-ள்.) சத்தியமதாகவே சாற்றுநிருவாண முத்தமமானவுயர் தீக்கை- சத்தியநிருவாணமென்று சொல்லப்பட்ட தீட்சையே மேலானதீட்சை. எங்ஙனமெனில், நித்தத்தாலெண்ணில் பெருஞ் சஞ்சிதமுமெய்து முடற்புசிப்பாய்ப் பண்ணு பிராரத்தமும் பண்பால் - அழிவின்றிப் புத்தியில்வாசனுத்மகமாகக் கட்டுப்பட்டிருக்கு மளவிறந்த மிக்க சஞ்சித கன்மத்தினையு மெடுத்தவுடலுக் கமைத்த பிராரத்தகன்மத்தினையும், எ-று. (கஉ0)

உ-ம் வெண்பா.

(இ-ள்.) முன்னுறவுண்டாக்கு முடியாவாகாமியமும் - தனகிச்சையாற் செய்யு மாகாமிய கன்மத்தினையும் போக்கி, தன்னியல்பாஞ் சத்தியநன்முத்தியெய்த - தன்னியல்பாகிய பரமுத்தியினை இப்பொழுதே யடையும் பொருட்டு, தன்னைநினையாதமலனென்னுதா மிலக்கணங்களனையவைகளுள்ள சம்பன்னன்- சிவபிரானைநினைப்பதுந் துதிப்பதும் இடைவிடாது வருகையால் நினைப்பு மறப்புமற்றுப் பேய் பிடியுண்டவன்போல அப்பொருளிலே இடைவிடாதழுந்திக் கண்ணீர்தம்பலை முதலாயுள்ளவருட் சின்னங்களையே சம்பத்தாக வுடையவன் எ-று. (கஉக)

ஙஃம் வெண்பா.

(இ-ள்.) ஆகியுடல்பொருளோ டாவிகொடுத்தே னென்னுமோகவிரத்தனு மொய்ம்புடையவாகனுக்குச் செய்வதெனவன்றே சிவாகமங்கள் செப்பும் - இங்ஙனங்கூறிய சின்னங்களை யுடையவனுய் உடல்பொருள் ஆவியென்னு மூன்றனையும் ஆசாரியருக்குக் கொடுத்துவிட்டேனென்னும் அதிமோகனுய்ச் சர்வசங்கபரித்தியாகம்பண்ணிச் சிவராகபெலவானுகிய மாணுக்கனுக்கே பண்ணத்தக்கதென்று சிவாகமங்கள் சொல்லும், அவர் துய்யபரமுத்தர் அணி - அத்திக்கையினைப் பெற்றவர்களே பரமுத்தர்களென்று நீ நிச்சயித்தறிவாயாக, எ-று. (கஉஉ)

[மேற்சிரநிருவாண தீக்கையினை மூன்றுவெண்பாவினுற் செப்புகின்முர்.]

வைப்பான சஞ்சிதமு மாயமதா மேலைக்கு
வைப்பாகு மாகா மியவினையு - மெய்ப்பாஞ்
சிரநிருவா ணத்தாற் சிதைந்துபிரா ரத்த
மெரிமருவு பீசமதாக் கி.

அங்கமலர்க் காகு மதுபோக மாயரனை
யெங்கு மகலா திருந்திடுநற் - றுங்க
சிவபோக முண்டுநிற்குஞ் சீவன்முத்தி யந்தத்
துவராப் பரமமுத்தி யும்.

ஆகு நிலையு மனுக்கிரகம் பண்ணியவர்
போக மனைவாழ்க்கைப் பொறபுடனே - போகியா
மென்னத் தழன்மலையா யெய்து சடுத்தலத்தின்
மன்னுவிக்கச் சொல்லு மதி.

க-ம் வெண்பா.

(இ-ள்.) வைப்பானசஞ்சிதமு மாயமதாமேலைக்கு வைப்பாகு மாகாமிய வினையும் - செனனங்கடோறு மார்ச்சித்துக் கட்டுப்பட்டிருக்குஞ் சஞ்சிதகன்மத்தினையு மேலைக்குத் தொடர்ச்சியாக வருகிற ஆகாமிய கன்மத்தினையும், மெய்ப்பாஞ்சிர நிருவாணத்தாற் சிதைந்து பிரார்த்தமெரிமருவு பீசமதாக்கி - மந்திரலோபங் கிரியாலோபந்திரவிய லோபமில்லாமற் செய்யும் உண்மையாகிய சிரநிருவாண தீக்கையினுற்போக்கிப் பிராரத்த கன்மத்தினை யத்தேகமுள்ளமட்டும் வறுத்தவித்துப்போல மறுபடி தொடர்ச்சியில்லாமனிறுத்தி, எ-று. ()

உ-ம் வெண்பா.

(இ-ள்.) அங்கமலர்க்காகுமதுபோகமாய் - அவ்விடத்துச் சிவனுக்கு அற்பிதயோக்கியமாகிய போகங்களை யற்பித்துப் பிரசாதபோகமாக்கி, அரனையெங்குமகலாதிருந்திடுநற் றுங்கசிவபோகமுண்டு நிற்குஞ் சீவன்முத்தி - அனவரதகாலமுஞ் சர்வவியாயிருக்கிற சிவத்துட னிரண்டறக்கலந்து சிவானந்தாநு

பூதியினையே யனுபவிக்கு மிதுவே சீவன்முத்தி, அந்தத்துவராப் பரமமுத்தியும்-இச்சீவன் முத்தியர்ந்தத்து ஒருகாலுந் தெவிட்டாத பரமமுத்தியும், எ-று.

சீவன்முத்திக்கும் பரமமுத்திக்குங் கிஞ்சித்பேதம். (கஉச)

ரு-ம் வெண்பா.

(இ-ள்.) ஆகுநிலையு மனுக்கிரகம்பண்ணி – இங்ஙனமாகுவனவற்றையெல்லாமனுக்கிரகித்து, அவர்போகமனைவாழ்க்கை பொற்புடனேபோகியாமென்ன-அவர்கட்குப் பிராரத்தசோதனையின்றி வறுத்தவித்தாக நிறுத்தியிருக்கையால் மனைவாழ்க்கை முதலிய போகங்களை விருப்பாகப் புசிக்கின்றவர்களைப்போல அவற்றிற்றோயாமற் புசிக்குங்காலத்தும் வாசனையாலாகாமியம் அங்குரியாமல், தழன்மலையாயெய்து சடுத்தலத்தின் மன்னுவிக்கச்சொல்லுமதி – தன்னைச் சேர்ந்த பதார்த்தங்களையெல்லாந் தன்னிறமாக்கிக்கொள்ளும் அக்கினிமலை போன்ற சடுத்தலலிங்கமுகமா யனுபவிக்கச்சொல்லுவது சிரகிருவாணதீட்சையின் முறைமையென்றறிவாயாக, எ-று. (கஉரு)

[இத்தீக்கை யுடையார்க்குஞ் சரியைகிரியாயோகங்களை
யபேதமாகச் செய்தல்வேண்டுமென
உரைக்கின்றார்.]

செய்யுமிவர்க் குக்கிரியை செய்வதிரண் டாகாதே
செய்ய சிவாகமங்கள் செப்புமுன்னே – செய்யுஞ்
சரியாதி மூன்றதனிற் சாராத் தொடர்பிங்
கொருவா துணர்த்தவுளுற் றும்.

(இ-ள்.) இத்தீக்கையினை யுடையார்க்குஞ் சரியைகிரியா யோகங்களை விட்டுவிடாது முன்புபோலச் சாலோகாதிபதவிகளை இச்சியாது அபேதமாகிய முத்தியினைக்குறித்தே செய்யவேண்டுமென்று குற்றமற்ற சிவாகமங்கள் செப்பும், எ-று. (கஉசு)

[சரியைகிரியாயோகங்கள் இவற்றினுக்கு வேறன்றென்பதை
விளம்புகின்றார்.]

தெரிசித்த லர்ச்சித்தல் சிந்தித்தன் மூன்று
முரியசரி யைகிரியா யோகப் – பரிசதனு
லாம்பயனுஞ் சாலோக மாதிவினை யென்றறிவு
மேம்படலால் வேறன் றவை.

(இ-ள்.) சரியையாவது சிவபெருமானைத் தரிசித்தல், கிரியையாவது சிவபெருமானைப் பூசித்தல், யோகமாவது சிவபெருமானைத் தியானித்தல். இவற்றிற்குப்பலன் சாலோகசாமீபசாரூபமாகையால் இவையுங் கருமத்தினால் வரும் அங்கசுகமென்றறிவு மேம்படலால் இவைஞானம் வருவதற்கு நிமித்தம் வேறல்ல, எ-று. (கஉஎ)

[மேலிவைகளை விடினுஞ் செய்யினுமாகாவென
விளம்புகின்றார்.]

விட்டாற் சிவசமயம் வீணும் விடாராகிற்
கிட்டா வறிவிற் கிளர்ந்தொளியாய் - விட்டகலா
வானந்தா தீத மதுவாகு மத்துவித
மோனந்தா னுரு முதல்.

(இ-ள்.) இங்ஙனங்கூறிய சரியைமுதலியன சாலோகாதிபத முத்திகளையன்றி உண்மை முத்தியினைக்கொடுக்கமாட்டாவென்று விட்டுவிடுவார்களாயின் சிவசமயத்துக்குப் பங்கம்வரும். விடாதனுட்டித்தார்களாயின் தமதறிவிற் பிரகாசித்தபேதமாகிய ஆனந்தாநுபூதியாம், அத்துவிதமௌனந் தானுருமுதன்மை கிட்டாது, எ-று. (கஉஅ)

[மேலிவைகளை விட்டும்விடாமலு மிருத்தற்குச் சற்காரியசார்பு
சாற்றுகின்றார்.]

ஆன சரியை யரியகிரி யாயோக
மானதற் காதார மானலிங்கந் - தானினிய
வத்துவித முத்தி யளிப்பதற்குச் சார்பிதுவே
சத்தியஞ்சற் காரியத்தாற் றன்.

(இ-ள்.) சரியைகிரியாயோகங்களுக்கும் ஆதாரம் சிவலிங்கமே, அத்துவித முத்தியைக்கொடுப்பதற்குஞ் சார்பு சிவலிங்கமே. ஆகையாற் சிவலிங்கதாரணமே யவைகளை விடாததாம், இதுவேசத்தியம், இதுவேசற்காரியம், எ-று. ()

[மேலும் அதனையே வலியுறுத்துகின்றார்.]

அன்றியுந்தா னன்றுமுத லின்றளவுஞ் செய்தநன்றி
கொன்றதுவாம் விட்டாற் குலவுமரு - ளொன்றொருவற்
காக்கியிடுஞ் சற்குருவு மற்புதமாம் லிங்கத்தா
னீக்குவதிக் காரணத்தா னே.

(இ - ள்.) அன்றியுந் தானன்றுமுத லின்றளவுஞ் செய்தநன்றி கொன்றது வாம்விட்டால் - அல்லாமலும் ஒருவன் விவேகமுதல் ஞானேதயபரியந்தம் இச்சரியை கிரியா யோகங்களைச் சாங்கமாய்ச் செய்ய இவை காரணமாகவே ஞானேதயமாம். ஆகலாற் செய்யாது விடின் ஒருவன்செய்த நன்றியை மறந்ததற்கொப்பாம். அதுவுமன்றி, குலவு மருளொன் றொருவற் காக்கியிடுஞ் சற்குருவு மற்புதமாம் லிங்கத்தா னீக்குவதிக் காரணத்தானே - ஞானசாரியர் ஒருவற்கு ஞானத்தை வருவித்தற்கும் இச் சிவலிங்க முன்னிலையாகச் சிவலிங்க தரிசனஞ் சிவலிங்க பூசை சிவலிங்கத்தியான முதலியவற்றால் தேகாதி பிரவஞ்சப் பற்றுக்களை நீக்கி ஞானத்தை வருவித்தற்கும் இச்சரியாதிகளே காரணம், எ-று. (கஙo)

[இவனறிவுக் கறிவா யிருக்குஞ் சிவமே சிவலிங்கமென்பதை
உபமான முகத்தா லுரைக்கின்ருர்.]

ஆவி னுறும்பிணிக்கிங் கான்பான் மருந்தென்றிங்
கோவதறிந் தாற்பசுவி னுள்ளபா - லாவிற்
கறந்துபா கஞ்செய்து காதலினே டுள்ளே
யுறைந்திடவே யூட்டத்தீ நோய்.

நீங்கிச் சுகமாய் நிலவுதல்போற் சற்குருவு
மோங்குமைந்த னுள்ளத் துணர்வாகி - நீங்காத
மெய்ப்பொருளை வாங்கி மிகுமிலிங்க மாக்கிமைந்தற்
குய்ப்பவத ஞன்மலநீங் கும்.

(இ - ள்.) ஆவி னுறும்பிணிக்கிங் கான்பான் மருந்தென்றிங் கோவ தறிந் தால் - பசுவுக்குவரும் வியாதிக்குப் பசுவின்பாலே நீக்குவதாகிய மருந்தென வறிந்தாராயின், பசுவினுள்ள பாலாவிற் கறந்து பாகஞ்செய்து காதலினே டுள்ளே யுறைந்திடவே யூட்ட-அப்பசுவினிடத்துண்டாகிய பாலைக் கறந்து காய்ச்சி யப்பசுவிற் கூட்ட, தீநோய் நீங்கிச் சுகமாய் நிலவுதல்போல் - அக்கொடிய வியாதிநீங்கிச் சுகமாய் விளங்குவதுபோல, சற்குருவு மோங்கு மைந்தனுள்ளத் துணர்வாகி நீங்காத மெய்ப்பொருளைவாங்கி மிகுமிலிங்கமாக்கி மைந்தற்குய்ப் பவதஞன்மலநீங்கும் - ஆசாரியரும் பரிபாகத்தினை யுடைய மாணுக்க னறிவுக் கறிவாகி நீங்காமலிருக்குஞ் சுத்த சிவத்தை வாங்கிச் சிவலிங்கமாக்கித் தரிக்க வே இவனு மந்த லிங்கரூபமாவ னவனைப்பற்றிய ஆணவமலமு நீங்கும், எ-று()

[வாக்கிய விரோதம் வாராததனுற் றீக்கை யிதுவெனச் செப்பலுற்ருர்.]

மூன்று பதத்தின் முயலுமனுட் டானமுற்று
மூன்றுமகா வாக்கியத்தி னுற்றிடா - தோன்று
மதுநீயா வாயென்ன வாவதுசன் மார்க்க
விதியாம் விதிக்குவிரோ தம்.

தோன்றுமத் துவிதந் தோன்றியிட லிங்கமது
வூன்றுமங்க நீயென் றுணர்த்தியே - யேன்றதுநீ
யாஞ யெனவே யருளாற் சிவனுரைத்த
ஞான கமமுரைக்கு நன்று.

(இ-ள்.) மூன்றுபதத்தின் முயலு மனுட்டானமுற்று மூன்று மகாவாக்கி யத்தி னுற்றிடா - முற்கூறிய சரியை கிரியை யோகமென்னு மனுட்டானத்தி ஞல் வரும்பேறு சாலோகாதிபத முத்திகளாகையா லவைகள் சதேகமுத்தி யன்றி விதேகமுத்தியல்ல. ஆகலான் வேதாகமங்களிற் சொல்லப்பட்ட வாக் கியப் பொருளுடன் வந்துகூடா. அவ்வாக்கிய விரோதம் வரும், அவை யெங்

ஙனமெனின், தோன்றுமது நீயாவா யென்னவாவது சன்மார்க்கவிதியாம் - அவ்வாக்கியார்த்தம் விளங்காநின்ற அதுவென்னும் பதார்த்தம் சிவம், நீயென்னும் பதார்த்தம் ஆன்மா, ஆயென்னும் பதார்த்தம் ஒன்ருனுயென்று கூறுகையால் இதுவே சன்மார்க்கம், அதெங்ஙனமெனின் சுத்தசிவமும் விதேகி சுத்தான்மாவும் விதேகி யாகையால் இவ் வர்த்தத்திற்கு முற்கூறிய சதேகமுத்தி விரோதம். ஆகையால் அத்துவித ஆனிவரும், விதிக்கு விரோதந் தோன்றும லத்துவிதந் தோன்றியிட - அவ்விதிக்கு அத்துவிதார்த்தம் விளங்க ஆசாரிய ரநுக்கிரகம் பண்ணுவ தெங்ஙனமெனின், லிங்கமது வூன்றுமங்க நீயென் றுணர்த்தியே - அதுவென்னும் லிங்கமே சிவம், நீயென்னு மான்மாவே அங்கம், ஆனுயென்பது சையோகம் ஆகலான், அது நீயானுயெனவே யருளாற் சிவனுரைத்த னுராகம முரைக்குநன்று-காருண்ணியத்தாற் சிவபெருமானு லருளிச்செய்யப்பட்ட சிவாகமங்கள் அது நீயானுயென்னும் பதத்திற்கே லிங்காங்க சையோகமெனப் பொருள் விளங்கவுரைக்கும், எ-று. (கநஉ)

[இனி இலிங்காங்க சையோகத்தைப் பண்ணுந் தீக்கை யேழுவகையென வுறைகின்ருர்.]

ஆதலினு லிங்கிவற்கிங் காசான் கருணையினுற்
பேதமறப் பற்றும் பெரும்பாசத் - தீதகற்றச்
செப்பியிடுந் தீக்கை தெரிக்கி லெழுவகைத்தா
மொப்பியிட நாம மதற்கு.

(இ - ள்.) ஆகலான் விதேகமுத்தி சாட்சாத்காரமாகிய அத்துவிதானந்தத்தைப் பெறவேண்டுமென்னும் பரிபாகத்தினை யுடைய மாணுக்கனுக்குப் பேதமில்லாமல் அனுதி சகசமாய் மறைத்திருக்கும் ஆணவாதி பாசங்களைப் போக்குதற்குச் செய்யுந் தீக்கையினைச் சொல்லுமிடத்து ஏழுவிதமாம், அறிவுடையோர்க்கொப்பாக அவ்வெழுவகைத் தீக்கைக்கும் பெயர் யாவையெனிற் சொல்லுவாம், எ-று. (கநங)

ஆக்கினையா தீக்கையென்று மாமுவமா தீக்கையென்றுந்
தேக்கருங்கா யாரோண தீக்கையென்று - நோக்கு
மரியவிபூ திப்பட்ட மாமபிடே கத்தோ
டுரியலிங் காயித்த மும்.

சொல்லியிடும் லிங்க சுவாயித்த தீக்கையுடன்
வல்லபெய ரொன்றே வகுத்துரைக்கு - நல்லிவற்ருற்
செய்கின்ற செய்திச் செயல்கள் விரித்துரைப்ப
னையந் தெளியவரு ளால்.

(இ - ள்.) ஆக்கினதீட்சை யுவமாதீட்சை சுவஸ்திகாரோண தீட்சை விபூதிப்பட்டதீட்சை கலசாபிடேகதீட்சை இலிங்காயித்ததீட்சை இலிங்கசுவா

யித்த தீட்சை யென வேறுவகை. அத்தீட்சையினைச் செய்யு முறைமையினைச் சந்தேகமற விரிந்துச் சொல்லுவோம், எ-று. (கருச)

[ஆக்கிஞாதீட்சை யடைவினை யுறைகின்றார்.]

பீறுமை லுள்ளம் விகற்பக் கருவிவழி
யேறாமல் யானென் றெதிர்மாற்றம் - கூறாமற்
றன்றன் வழிநிறுத்த றாஞைக் கினைதீக்கை
யென்ற சிவாகமங்க ளே.

(இ-ள்) ஆக்கிஞாதீட்சையாவது ஆசாரியர் மாணாக்க னதறிவு தாம்விதித்த விதியினைக் கடவாமலும் விகற்பத்தினைச் செய்யும் பஞ்சேந்திரிய அந்தக்கரண வழிச்செல்லாமலுந் தம்முன் யானென மறுமாற்றஞ் சொல்லாமலுந் தாம் விதித்தவிதி பிசகாமலு மிருக்க ஆக்கிஞா சத்தியை நிறுத்தித் தம தாக்கினைப்படி செய்வித்தலே ஆக்கிஞாதீட்சையெனச் சிவாகமங்கள் செப்பும், எ-று. (கருரு)

[உவமாதீக்கையி னுண்மையை யுரைக்கின்றார்.]

முன்னோர் நடந்த முதுசமயா சாரத்தின்
மன்னாத மைந்தன் மனமகிழத் - தன்னாணை
யாலே சமயாசா ரந்தன்னி னிற்பித்த
லாலே யுவமதீக்கை யாம்.

(இ-ள்.) ஆசாரியர் மாணாக்கனிடத்துச் சமயாசார சத்தியைத் தாபித்து இச்சமயத்தில் முன்னோர்களான வசுவாதி கணங்கள் குருலிங்க சங்கமத்தினிடத்திலே வழிபட்ட திறத்தினையும் அஷ்டாபரண பஞ்சாசார விருத்தினையும் அறிவித்துச் சமயாசார முறைமையிலே நிறுத்துவது உவமாதீட்சை, எ-று. ()

[மேற்காயா ரோகணவிதியைக் கழறலுற்றார்.]

ஆரிருளாற் காணா வருவான் கதிர்தோன்றக்
கூரிருள்போய் வான்விளங்குங் கொள்கைபோற்-காருருவ
வத்துவா நீங்க வரியகியா சம்மனுவா
லத்துறல்கா யாரோ கணம்.

(இ-ள்.) நிறைந்தவந்தகாரத்தினால் மறைபட்டுத்தோன்றாத ஆகாயஞ் சூரியோதய மானவுடனே யவ்வந்தகாரநீங்கி அவ்வாகாயந் தோன்றுமாறு போல, ஆசாரியரும் மாணக்கனைச் சுவஸ்திகாசனத்திருத்தி நிவர்த்திமுதலிய பஞ்சகலைகளில் வியாபித்திருக்கும் மந்திர பத வன்ன புவனதத்துவங்களிற் கட்டுண்டிருக்குங் கன்மங்களைப்போக்கி, அவ்வத்துவாக்களைச் சுத்தியண்ணவே அவனதறிவு விளங்கும். ஆகலான் அவனதுடலின்கண் மந்திரங்களினால் நியாசம் பண்ணுந் தீக்கைக்கே காயாரோகணதீக்கை யென்றுபெயர், எ-று.

காயாரோகணமாவது மாயாதேகத்தை மந்திரதேகமாகச் செய்வதென வறிக. (கருஎ)

[மேல்விபூதிப்பட்டதீக்கைவிதி யுரைக்கின்றார்.]

மாயா விசய மதுசெய்தே னென்றுதன்றன்
னாயகரத் தாலே நலக்கமிக்க - வாயவருட்
சோதி விபூதிதன்னாற் றோன்றுநுத லிற்றரித்த
லாதிவிபூ திப்பட்ட மாம்.

(இ-ள்.) முற்கூறிய காயாரோகணதீக்கையில் ஆசாரியர் மாணாக்கனது தூலசூக்குமகாரணதேகங்களையும் அத்தேகாதாரமாகிய புவனங்களையும் அத்தேக பிரேரகமாகிய மந்திரபத முதலியவற்றையுஞ் சோதித்து அத்துவாக்களிற் கட்டுப்பட்டிருக்குங் கன்மங்களையும் போக்கி இனிமேற் கன்மபந்தமேறுபடி இருவகைமாயாகன்ம பெந்தங்களையும் போக்கிவிட்டோமாதலான் மாயையாகிய சத்துருவைச் செயித்தாய் நீயென்று தமது திருவஸ்தத்தாலே திருவருள் பிரகாசிக்கக்கடவதென்று மாணாக்கனெற்றியிற் திருநீற்றைத் தரிப்பது விபூதிப்பட்ட திட்சை, எ-று. (கஙுஅ)

[மேற்கலசாபிடேகதீக்கையினை யுரைக்கின்றார்.]

நின்மலமா மூர்த்தி நிகழ்வித்த கும்பசலஞ்
சென்மமறு ரூபத்திற் சேர்ந்திலிங்க - மன்னியிட
லாட்டுவித்த லேநல் லபிடேக மாமென்ன
வீட்டுஞ் சிவாகமங்க ளே.

(இ-ள்.) ஆசாரியர்முன்னரே மாணாக்கனுடைய மாயாதேகத்தைக் காயாரோகண தீக்கையினால் மந்திரதேகமாகச் செய்து பின்னர்ச் சிவலிங்கத்தைத் தரிக்கத் தருணகலசமாகிய சிவகும்பசலத்தை யெடுத்து மாணாக்கன் சிவரூபமாறுபாவித்துச் சிரசின்மீதபிடேகஞ்செய்தலே கலசாபிடேகதீக்கையென்று சிவாகமங்கள் ஆராய்ந்துசொல்லும், எ-று. (கஙுக)

[மேலிலிங்காயித்ததீக்கை யியம்புகின்றார்.]

கன்னிதனைக் கண்டு கருத்தழிந்து மிக்கநரன்
மன்னுமட லூரும் வழக்கதுபோற் - றன்னைச்
சிவலிங்க மாக்கிச் சிறப்புடனர்ச் சித்த
சிவசம்புத் தேவர்கடே வை.

தானேதா னாகித் தழைத்தசிவ லிங்கத்தைத்
தானே தழுவலத் தழுவெலடுத்தன் - மானவே
கையி லெடுத்துமைந்தன் காதலுற நோக்குவித்த
லையசிவ லிங்காயித் தம்.

[இவ்விரண்டு வெண்பாவு மொருதொடர்.]

(இ-ள்.) கன்னிதனைக்கண்டு கருத்தழிந்த மிக்கநரன் மன்னுமடலூரும் வழக்கதுபோல் - இவ்வுலகத்திற் காமுகனொருவன் ரூபலாவண்ணியத்தையுடையவளாய்த் தருணியாயிருக்குமோர் கன்னிகையைக்கண்டு அவளிடத்து அதிமோகத்தை யடைந்து தன்வசமழிந்து தன்னால் அவளைவசப்படுத்திக் கூடு

தற்குக் கிடையாமையால் மானத்தைவிடுத்துப் பனைமடலாலொரு குதிரையைச்செய்து அக்குதிரையின்மே லேறிக்கொண்டு அவளைப்போ லொருபடத்தி லெழுதிக் கையிலேந்திக்கொண்டு அவளூரினையும் பேரினையு முரைத்து அரச னிருக்கு நகரில் அக்குதிரையை நடத்துங்காலத்தந்நகரத்தரசன் அவனதுகாமக் குறியைக்கண்டு அக்கன்னிகையை யழைப்பித்தவனுக்கு வேண்டுவன கொடுத்து அக்காமுகன்வசம்ஆக்குமாறுபோல, தன்னைச் சிவலிங்கமாக்கிச் சிறப் படைனர்ச்சித்த சிவசம்புத்தேவர்கடேவை - பரிபாகத்தினை யுடைய மாணுக்கனும் பரமசிவனுற்றரும் பேரின்பத்தினைப் பரோட்சஞானமாயறிந்து பின்பு அபரோட்சமாக வச்சுகத்தினை யனுபவிக்கவேண்டித்தேகாதி பிரவஞ்சத்தினைக் கைவிட்டுச் சிவதாகமேலிட்டுக் கண்ணீருங் கம்பலையுமாகக் கதறிக்கொண்டு நாணத்தினைவிடுத்து அன்புமேற்கொண்டு சிவாகமங்களைக் கைவிடாது ஆசாரியனைத்தேடி வருங்காலத் தவ்வாசாரியருந் தமதுசொரூபமாகியதோர் சிவலிங்கத்தை ஆகமவிதிப்படி பூசித்துப் பின்பு அப்படி பூசைகொள்ளுஞ் சிவசம்புவாகிய தேவர்களுக்குத் தேவை, தானே தானுகித்தழைத்த சிவலிங்கத்தை- தமக்கொப்பாரு மிக்காரு மின்றித் தமக்குத்தாமே யொப்பாய் விளங்கிய இஷ்டலிங்கத்தை, தானேதழலைத் தழலெடுத்தன்மானவே - அக்கினியை அக்கினிதேவனெடுத்ததுபோலக் கையிலெடுத்து, மைந்தன் காதலுறநோக்குவித்த லையசிவலிங்காயித்தம் - தமதுகரத்தினுலெடுத்து அங்கையில் வைத்து அம்மாணுக்கன் கண்களிகூர அவனுக்குத் தரிசனஞ்செய்விக்கையே இலிங்காயித்த தீட்சையாம், எ-று.

ஐயவென்பது ஆச்சரியப் பொருடரு மிடைச்சொல். (கசா௦,கசாக)

[மேலிங்கசுவாயித்ததீட்சையினை விளம்புகின்முர்.]

நெருப்புருவ மாமிரும்பை நீரதனில் வைக்க
விருப்பொடுநீ ருண்ட விறல்போற் - றிரப்பொருளாஞ்
சோதிமணி லிங்கந் துலங்கறிவா மான்மாவிற்
போதமறத் தாபிக்கும் பொற்பு.

(இ-ள்.) கொல்லன் இருப்புப்பாளத்தை உலையில் நெருப்பெழக்காய்ச்சி யொருபாத்திரத்துள்ள சலத்திலே தோய்க்க அச்சலத்தை அப்பாளந்தனக் குட் சுவறப்பண்ணிக்கொள்ளுமாறுபோல, அவ்வாசாரியரும் அம்மாணுக்கனுக் கச்சிவலிங்கத்தை அவனது தற்போதத்தை விழுங்கிச் சிவபோதத்தைத்தரும் பொருட்டு அவனது தூலாங்கத்தில் உத்தமாங்கமான சிரசுமுதலிய தானங் களிற் றாரணம்பண்ணுவதே இலிங்கசுவாயித்த தீக்கை, எ-று. (கசாஉ)

[இங்ஙனம் அவனது தூலதேகத்திற் சிவலிங்கத்தைத் தரிக்கவே அத் தூலதேகத்தைப் பற்றிய சீவனுஞ் சிவசொரூபமாமென்பதற்குத் திட்டாந்தபூருவமாக அருளிச்செய்கின்முர்.]

மாநாக நோக்கிப் பரிசிக்க மற்றவுட
லானு விடமா மூடலுயிர்போன் - ஞானகுந்

தானுன லிங்கந் தரிக்கப் பரப்பிரமந்
தானகுஞ் சத்தியமா க.

(இ-ள்.) மாநாகநோக்கிப் பரிசிக்க மற்றவுடலானு விடமாமுடனுயிர் போல் - அந்தணசாதியாகிய நல்லசர்ப்பமானது ஒருவனைப்பார்த்துக் கடித்த காலத்து அக்கணமே யவனுடனுயிரிரண்டுமெவ்விடமயமானவாறுபோல, ஞானகுந்தானுன லிங்கந்தரிக்கப் பரப்பிரமந் தானகுஞ் சத்தியமாக - ஞானசாரியர் மாணுக்கன துடலிற் றமதுசொரூபமாகிய இஷ்டலிங்கத்தைத் தரிக்கவே யவ்வுடனுயிரிரண்டும் பரப்பிரமசொரூபமேயாகும். அதுசத்தியம், எ-று. ()

[இன்னுமொரு திட்டாந்தமிட்டுரைக்கின்றுர்.]

எரிகின்ற செந்தழலொப் பேய்ந்தநீர்க் கும்ப
மெரியுருவாய் நீரு மெரியாம் - பரிசதுபோற்
சற்குருரூ பானலிங்கந் தான்புறத்தோன் றுயுளத்தும்
விற்பொலியுந் தானும் விறல்.

(இ-ள்.) எரிகின்ற செந்தழலொப் பேய்ந்த நீர்க்கும்ப மெரியுருவாய் நீரு மெரியாம் பரிசதுபோல் - ஒருகடத்திற் சலத்தைப்பூரித் தடுப்பிலேற்றி விறகிற் றீக் கொளுவியெரிக்க அச் சூடு அக் கடத்தினையும் அக்கடத்திற் பூரித்திருந்த சலத்தினையுங் கலந்து தற்சொரூபமாகச் செய்யுமாறுபோல, சற்குரு ரூபான லிங்கந் தான்புறத் தோன்றுயுளத்தும் விற்பொலியுந் தானும்விறல் - ஆசாரியர் மாணுக்கன துடலிற் றமது சொரூபமாகிய இஷ்டலிங்கத்தைத் தரிக்கவே அவனுடைய தேகத் துள்ளும் புறமும் அத் தேகத்தைப்பற்றிய சீவனும் சிவ சொரூபமாவ தித்தன்மைத்து, எ-று. (கசச)

[இத்தீக்கை அபக்குவற்குப் பலியாது பக்குவற்கே பலிக்குமென்ப தற்குத் திட்டாந்த பூருவமாக வருளிச்செய்கின்றுர்.]

சோதி மழைபெய்தாற் சொல்லுங் கடலுயிர்க
ளாயதுணின் முத்தாகா தாமுத்துச் - சோதிமழைக்
காவென்னுஞ் சிப்பி யருந்துமது வாங்கதுபோ
லாவென் றயருமறி வாம்.

ஞானப் புதல்வனுக்கு ஞானசான் செய்கின்ற
ஞானக் கிரியையது நல்லின்ப - மான
பரப்பிரமந் தானகும் பண்புடைய லிங்கந்
திரப்படவே தீக்கைசெய்யத் தேர்.

(இவ்விரண்டு வெண்பாவு மொருதொடர்.)

(இ-ள்.) சோதி மழைபெய்தாற் சொல்லுங் கடலுயிர்க ளாயதுணின்முத்தாகா தாமுத்துச் சோதிமழைக் காவென்னுஞ் சிப்பி யருந்துமதுவாங்கதுபோல்-ஐப்பசித்திங்களிலாதித்தவாரத்திற் சோதிநக்ஷத்திரங்கூடிய தினத்தில் மேக

நீரைச்சொரியுமதறிந்து சமுத்திரத்தில் வாழுஞ் சிப்பிகளெல்லாமச்சலத்தின் மிதந்து வாயைத்திறந்துகொண்டிருந்து அம்மழைத்துளியை அருந்திக் கருக் கொண்டு முத்துகளை யீனுவதன்றி யக்கடலுள் வாழுமற்றைச் சீவராசிகளுண் டதனாற் பிரயோசனமில்லாததுபோல, ஆவென்றயரு மறிவாம் ஞானப்புதல்வ னுக்கு - நமக்கெப்போது அத்துவிதானந்த முத்திகிடைக்குமென்று சிவராகங் கொண்டு வாய்விட்டலறிவருந்திப் பிரவஞ்சத்தையும் போகங்களையும் வெறுத் துக் கைவிடவிரும்பும் அறிவுடையனாகிய சற்சீடனுக்கு, ஞானாசான்செய்கின்ற ஞானக்கிரியையது - ஞானாசாரியன் தீட்சையினைப்பண்ணிப் பின்பு, நல்லின்ப மான பரப்பிரமந் தானாகும் பண்புடைய லிங்கந் திரப்படவே தீக்கைசெய்யத் தேர் - ஞானக்கிரியாபி வியக்தபரப்பிரம சொரூபமே தானாக விளங்குஞ் சிவ லிங்கத்தைத் தரிக்கவே அச்சிவசொரூபங் கிடைக்கும், அவ்வாஞ்சையற்ற அபக் குவர்களுக்கு அத்தீட்சையாற் பிரயோசனமில்லையா மென்றறிவாயாக, எ-று.

[இச்சற்குரு சாயித்தியத்தையே லிங்கசுவாயித்தமென
வேத சிவாகமமுதலிய நூல்கள் சொல்லுமென
றுரைக்கின்றார்.]

சற்குருசா யித்தியமாய்ச் சாற்றும் பெயர்மற்றும்
பொற்புற லிங்கசுவா யித்தமெனத் - தற்பரனுன்
ஞானதீக் கைக்கிரியை ஞான கமம்வேத
மீனமில்பன் னூலுமியம் பும்.

(இ-ள்.) இங்ஙனம் ஞானக்கிரியாதீக்கை யென்று கூறப்பட்ட சற்குரு சாயித்தியத்தைத் தானே லிங்கசுவாயித்த தீக்கையென்று சிவபெருமானரு ளிச்செய்யப்பட்ட ஞானமயமாகிய வேதசிவாகமபுராணமுதலிய நூல்களனை த்துஞ் சொல்லும், எ-று. (கசஎ)

[தீட்சையென்னுஞ் சொல்லுக்குப் பொருள்
இதுவெனச் செப்புகின்றார்.]

நயமுடைய தீக்கையெனு நற்சொற் பொருடான்
பயனுய தானமெனும் பண்பால் - வயமதனற் [தல்
போக்குவது போக்கியென்றும் போகாப் பொருள்கொடுத்
வாக்கியதிட் டாந்த வளம்.

(இ-ள்.) நயமுடைய தீக்கையெனு நற்சொற் பொருடான் - நலத்தினைத் தராநின்ற தீக்கையெனுஞ் சொல்லுக்குப் பொருள் யாதெனின், பயனுயதா னமெனும் பண்பால் - ஒன்றைக்கெடுத் தொன்றைக் கொடுத்தலென்பதாம், ஆகலான், எதைக்கெடுத்து எதைக்கொடுப்பதெனின், போக்குவது போக்கியெ ன்றும் போகாப் பொருள்கொடுத்தல் வாக்கியதிட்டாந்தவளம் - நெல்லுக்குத் தவிடுமி முளையைப்போல அநாதி சையோகமாயிருக்கும் ஆணவாதி மலத்தி னையங்களையும்போக்கி ஒருகாலு நீங்காததாகிய சிவத்துவாபி வியத்தியைக் கொடுத்தலென வேத சிவாகம வாக்கியங்கள் திட்டாந்தமாக வளம்படச்சொ ல்லும், எ-று. (கசஅ)

[இங்ஙனங் கூறிப்போந்த சத்திய நிருவாணதீக்கை சத்திநிபாதர்க்குச் செய்வதென்றுரைத்து, மேல் சத்தியநிருவாணதீக்கை செய்யுமா றறைகின்றார்.]

சத்திநி பாதர்க்குச் சாற்றியவித் தீக்கையீ
தித்தகைமை யாகு மிதுவன்றிப் - பத்தி
பரிபாக மில்லார் பரிபாக மாக
வுரியதன்றென் றூர்சிவனுக் கு.

ஆன சருவா னுக்கிரகத் தாற்பாகந்
தானியற்று மென்ற றவரூகு - மானதற
நீக்கச் சபீசமதாந் தீக்கையது செய்வதுவே
யாக்கு மசத்தியதீக் கை.

இவ் விரண்டுவெண்பாவு மொருதொடர்.

(இ-ள்.) இங்ஙனஞ் சொல்லப்பட்ட வித்தீக்கை சத்திநிபாத குணமுடைய சற்சீடருக்கே பண்ணப்படுவது அன்றி பத்தியும் பரிபாகமு மில்லாதார்க்குப் பண்ணத்தக்க தன்றெனின் பரமசிவனுக்குச் சர்வானுக்கிரக கர்த்திருத்துவ மிருக்கையாற் பரிபாகத்தை வரச்செய்து பண்ணவேண்டும். அங்ஙனஞ் செய்யாகுகில் அப்பெயருக் கீனம்வரும் என்பதைக் குறித்துச் சபீசதீக்கையினைச் செய்வன், அதற்கு அசத்திய நிருவாணதீக்கையென்றும் பீசதீக்கையென்றும் பெயர், எ-று. (கரு௦)

[இப்பீசதீட்சை விதியினை முன்னரோ பீசமென்றபேர் பிறப்பிறப்பிற் பெந்திதமென்னும் வெண்பாவிற் கூறியதனுன் மேற்கிரியா தீட்சை விதியைக் கிளக்கலுற்றார்.]

சொல்லியவித் தீக்கை சொலுங்கன்ம காண்டமெனு
நல்லயோ கங்கிரியை நற்சரியை - யல்லலறச்
செய்துபரி பாகமுறச் செப்பியதாந் தீக்கையது
செய்கை யுரைக்குந் திறம்.

(இ-ள்.) சொல்லியவித்தீக்கை சொலுங்கன்ம காண்டமெனும் - இங்ஙனங் கூறப்பட்ட வித்தீக்கை கன்மகாண்டமெனச் சொல்லப்படும் எங்ஙனமெனின், நல்லயோகங்கிரியை நற்சரியையல்லலறச் செய்துபரிபாகமுறச் செப்பியதாந் தீக்கையது செய்கையுரைக்குந்திறம் - சமயதீட்சையினைச்செய்து கிரியாவிதியை யனுட்டிக்கப்பண்ணி அதிற் பரிபாகம் வந்தமைகண்டு மந்திரதீட்சையைச் செய்து யோகமார்க்கத்தை அனுட்டிக்கப்பண்ணி அதினும் பரிபாகத்தைவரப்பண்ணுங் கிரியாவிதியை மேற்சொல்லுவாம், எ-று. (கருக)

[இதுவுமது.]

ஆக்கினையாற் பாச மறுத்துப் பரத்துடனே
யாக்கினையா லான்மாவை யோசித்தற் - கூக்கமுள்ள

வாசா னதற்கிசையு மானபரி பாகமில்லார்
பாசபா கம்வருத்தும் பண்பு.

(இ - ள்.) பரிபாகத்தினையுடைய மாணுக்கருக்கு ஆசாரியர் ஆக்கினையாகிய சிவசத்தியால் அவனது பாசத்தினைச் சேதித்து மேலாகிய பரமசிவத்துடனேகீபாவமா யோசனைவண்ணுவதே யவருக்குச் சுபாவமாயினும் அபரிபாக சீடனுக்குப் பரிபாகத்தினைத் தீட்சையால் வருவித்தற் குடன்படுவர், எ-று.

[இதுவுமது.]

ஆடம் பரமாக வானகுண்ட மண்டலங்க
ளூடுங் கிரமத்தா னன்றாகக் - கூடுவித்தங்
குண்டாந் திரவியநெய் யுற்றவையான் மந்திரத்தா
லுண்டான தேவதைக ளால்.

(இ-ள்.) ஆடம்பரமாக வானகுண்டமண்டலங்க ளூடுங்கிரமத்தா னன்றாகக்கூடுவித்து - தீட்சைக்குவிதித்த காலத்திற் புண்ணியஸ்தலங்களில் அலங்காரமாகச் சிற்பர்களைக்கொண்டு சிவாகமவிதிப் பிரகாரம் மண்டபமமைத்து அதன்மத்தியிலே குண்டமண்டல வேதிகையை நிருமித்து அட்டமங்கல முதலியன நிறுவி மேற்கட்டிதூக்கி வாழை முதலியவற்றால் அலங்காரஞ்செய்வித்து, உண்டாந் திரவியநெய் யுற்றவையான் மந்திரத்தா லுண்டான தேவதைகளால் - சமித்து நவதானியம் முதலிய ஓமதிரவிய மத்தனையும் லோபமின்றிச் சேகரித்துக்கொண்டு ஞானசாரியர் மண்டபத்தில்வந்து வாஸ்துசாந்தி யங்குராற்பண முதலியவெல்லாஞ்செய்து மந்திரலோபங் கிரியாலோப முதலிய வின்றி மண்டபபூசைசெய்து அங்கங்குவிதிப்படி ஆசனமூர்த்தி மூலங்களால் மூர்த்திகளை ஆவாகனஞ்செய்து தேவதாசாந்நித்தியம் பண்ணிக்கொண்டு, எ-று.

உள்ள புவனத் துறுங்கன்ம போகமுண்ண
வுள்ளதனு வுண்டாக்கி யூட்டுவித்தங் - குள்ளதா
மத்துவா வுண்டான வவ்விடத்தி லேயொடுக்கா
வொத்த சிவாக்கினியி னுள்.

(இ-ள்.) உள்ளபுவனத் துறுங்கன்மபோகமுண்ண வுள்ளதனுவுண்டாக்கி யூட்டுவித்து - பின்பு தீட்சையினைப் பண்ணிக்கொள்ள நியமத்துடன் அம்மண்டப மேற்குத்துவாரத்தில்வந்து நிற்குஞ் சீடனது கண்களை ஆசாரியர் நேத்திரபடத்தினால் மறைத்து மண்டபத்துள் அழைத்துக்கொண்டுவந்து அவன் கையிற் புட்பங்கொடுத்து மண்டலேசுவரனை அர்ச்சனைசெய்வித்துப் பின் நேத்திரபடத்தை வாங்கிப் பிரதட்சிணமாக அழைத்துக்கொண்டுவந்து குண்டத்தினது சந்நிதியிலே நிறுத்திக் குண்டத் தக்கினியில் யாகியாகீஸ்வரனைப் பூசித்து மற்றுமுள்ள கிரியைகளையும் ஆகமவிதிப்படிசெய்து சீடனுடைய பிரமரந்திரந் தொட்டுப் பாதபரியந்தம் சூத்திரநிறுவி அதனிற் கலைகளைத் தாபித்து முடிந்து அக்கலைகளில் மந்திரபதவன்ன புவனதத்துவங்களைப் பிரித்து அக்கலைகடோறுங் கிரமப்படி அடைத்து முந்தநிவர்த்தி கலைதொடங்கி பஞ்சகலை

களினும் பரிணமித்திருக்கும் கன்மபோகங்களைச் சீடன் புசித்துத் தொலைக்கும்பொருட்டு அந்தந்தப் புவனத்துக்குத்தக்க தனுக்களை யுண்டாக்கிக்கொடுத்துப் புசிப்பித்துப் பின்பு அவ்வத்துவாக்களுடன் அக்கலைகளை, அங்குள்ளதாமத்துவா வுண்டானவவ்விடத்தி லேயொடுக்கா - அந்தந்த அத்துவாக்களை யொடுக்குமிடமதில் தொடுக்கி, ஒத்தசிவாக்கினியினுள் - பின்பு குண்டத்திலோமஞ்செய்தற்கொத்த சிவாக்கினியில், எ-று. (கருச)

அத்துவா வாறு மரிந்திட்டுச் சுட்டதெனப்
புத்தி தெளியப் புலப்படுத்தி - நித்தியம
தான விரதம் வைராக்கி யங்கிரியை
யானதுமுன் னுயார்ச் சனை.

(இ-ள்.) அத்துவாவாறு மரிந்திட்டுச் சுட்டதெனப் புத்திதெளியப் புலப்படுத்தி - பின்பு அக்கலைகளை யொவ்வொன்றாக ஞானக்கத்திரியால் கத்திரித்து அவ்வக்கினியிற் றெப்தம்பண்ணி அச்சடத்துவா பெந்தமகற்றி அவனறிவை விளக்கி யுபதேசித்து, நித்தியமதானவிரதம் வைராக்கியங் கிரியையானது முன்னுயர்ச்சனை - பின்பு நித்தியமாயிருக்குஞ் சிவவிரதம் வைராக்கியம் சமயாசார நியமம் சிவார்ச்சனை, எ-று. (கருரு)

செய்ய நியமஞ் செபந்தான மோமமிக்க
பொய்யி றியானம் புகறீர்த்த - மெய்ம்மைச்
சிவத்தலங்கள் சேவித்த லாதியா யாவு
முவப்புடனே யுற்றியற்றென் றே.

[வெளிப்படை.]

நன்று யனுக்ரகித்து நல்லகுலா சாரமது
குன்றும னின்று குறித்தவருக் - கின்றுகா
தாமென்ற சூதகா திப்பிராயச் சித்தத்தாற்
போமென்று போதித்துப் பின்.

(இ-ள்.) இங்ஙனங் கூறியவைகளையெல்லாம் செவ்வையாகச் செய்யக்கடவாயென்று கட்டளையிட்டுக் குலாசாரதருமம் வழுவாமனின்று தீட்சானுகுண்ணியமாகச் சூதகாதி முதலியனவெல்லாம் பிராயச்சித்தங்களாற் போமென்று விதித்துப் பின்பு, எ-று. (கருள)

குருலிங்க சங்கமமே தெய்வமெனக் கொண்டங்
குரியவுப சார மவற்குப் - பொருணடைக்குத்
தக்கதுசெய் யென்றவற்குத் தானுபதே சித்தலென
மிக்க சிவாகமஞ் செப்பும்.

(இ-ள்.) குருலிங்க சங்கமமே தெய்வமெனப் பத்திபண்ணிக்கொண்டு பொருள்வருவாய்க்குத் தக்கபடி செய்துவரக்கடவாயென் றவற்குபதேசித்தல் தக்கதெனச்சிறந்த சிவாகமங்கள் செப்பும், எ-று. (கருஅ)

போகத்தர் பாலர் புகலுந் தருணரவற்
கேகமல பாக மிசைவிக்க - வாகாகச்
சொல்லியவித் தீக்கையெனச் சொல்லுஞ் சிவாகமங்க
ளல்ல லறவறியம் மா.

(இ-ள்.) பலபோகத்தினை யுடையவர்களுக்கும் பதினைந்துவயதுக் குட்பட்ட சிறுவர்களுக்கும் முப்பதுவயதுக் குட்பட்ட தருணிகளுக்கும் வியாதியாளருக்கும் எண்பதுவயதினையுடைய விருத்தர்கட்கும் மலபாகம்வரின் இத்தீக்கையினைச் செய்யலாமென்று சிவாகமங்கள் செப்பும், அல்லலறவறி - உன்னுடைய கிலேசமற வறிந்துகொள்வாயாக, எ-று. (கருகூ)

[பத்திவிழுங்கிப் பதைப்பறநிற்றற் கொத்த வாணவ
வுவமைகாட்டி யுரைக்கின்றார்.]

சீவன்முத்தித் தன்மை செறிந்தவர்க்குப் பத்தியது
தாவிலுணர் வாயுயிரைத் தான்விழுங்கி - யாவிக்கன்
றாணவந்தா னன்மாவுக் கானவஞ்ஞா னங்காட்டி
யாணி வறிவகற்றல் போல்.

(இ - ள்.) சீவன்முத்தித்தன்மை செறிந்தவர்க்குப்பத்தியது தாவிலுணர் வாயுயிரைத் தான்விழுங்கி யாவிக்கு - அசத்திய நிருவாணமென்னுஞ் சபீசதீக்கையினை இவ்வாறு சொல்லிமுடித்து முன்சொன்ன சீவன்முத்தித் தன்மையைப் பெற்றவர்கட்குப் பத்தியானது பிரகாசித்து அவர்க ளான்மபோதத்தை விழுங்கித் தன்னுளடக்கிக்கொண்டதற் குவமான மெங்ஙனமெனின், அன்றாணவந்தா னன்மாவுக்கான வஞ்ஞானங் காட்டியாணி வறிவகற்றல்போல் - அநாதியே ஆணவமலம் ஆன்மாவின தாணியாகிய வறிவைமறைத்து அஞ்ஞானமே சொரூபமாகக் காட்டுதல்போல, எ-று. (கஙo)

ஈண்டுப் பொதுப்படப்பத்தியென்றது - சற்பத்தி, நயிட்டாபத்தி, அவதானபத்தி, அனுபவபத்தி, ஆனந்தபத்தி, சமரசபத்திகளே.

பொய்யென் றறியப் புலப்படுஞா னம்பசுவின்
கையொன்று ஞானந்தன் கண்ணன - மெய்யாகுஞ்
சிற்சத் தியையுமிது வென்றறியப் பற்றுமது
கற்புடைய ஞானக் கடன்.

(இ - ள்.) பொய்யென்றறியப் புலப்படுஞானம்பசுவின் கையொன்று ஞானம் - தேகாதி பிரவஞ்ச முதலியனவற்றையெல்லாம் பொய்யென்றறியவந்த ஞானம் ஆன்ம ஞானமாம், அவ்வான்ம ஞானத்துக் குயிராகிய, தன்கண்ணன மெய்யாகுஞ் சிற்சத்தியையுமிதுவென் றறியப்பற்றுமது - சிற்சத்தியையு மெதிரீடற்றறிவதும், கற்புடைய ஞானக்கடன், அவ்வான்ம ஞானமே, எ-று. ()

[இனிச் சீவன்முத்தியவத்தை தெரிசிப்பிக்கின்றார்.]

சற்றுந்தோன் றாமற் சதுராகி யேவிழுங்கி
யுற்றசிற் சத்தி யுருவாகு - மற்றைச்

சிவன்றானாய் நிற்கின்ற செல்வ முணர்த்த
வுவந்தவத்தை யைந்தேழ தாம்.

(இ-ள்.) ஆன்மாவினது தற்போதந் தோன்றாதபடி சதுராக விழுங்கிக் கொள்ளுஞ் சிற்சத்தியே தனக்கு வடிவமாய் விளங்கும், அந்தச் சிவமே தானாய் நிற்கின்ற சீவன்முத்தி வாழ்வினை யுணர்த்துவதாகிய அவத்தை பன்னிரண்டு, எ-று. (கசுஉ)

[மேற் சீவன்முத்தியவத்தை பன்னிரண்டினையும் எட்டு வெண்பாவிற் றுணர்த்தத்தொடங்கி முந்தக் காயரூப தெரிசனசுத்தியைக் கூறுகின்றார்.]

காயம் பகையாகக் காண லுருவாகுங்
காயமுபகாரமென்கை காட்சியாங் - காயமெனு
நாமமறைய நயந்தலிங்க மேதனுவ
தாமதுவே காயசுத்தி யாம்.

(இ - ள்.) காயம்பகையாகக் காணலுருவாகும் - காயமென்று பொதுப்படக் கூறுகையாற் பூதபரிணாமமாகிய தூலதேகமும் பிரகிருதி சென்னியமாகிய சூக்குமதேகமும் அசுத்த மாயாகாரியமாகிய காரணதேகமு மாகியஇத் தேகங்கண் மூன்றும் பெத்தாவத்தையில் ஆன்மாவைப் பிரபஞ்சோன் முகப் படுத்துகையாலும் பொய்யை மெய்யாக மயக்குகையாலுஞ் சடமாய்த்தனக் கந்நிய மாகையாலுந் தனக்கு வேறாகிய பகையென்றறிவது காயரூபதரிசனம், காயமுபகாரமென்கை காட்சியாம் - இம்மூவகைத் தேகங்களும் ஆணவமலத்தைச் சிறிதொதுக்கி ஆன்மாவினதிச்சாஞானக்கிரியைகளை விளக்கிக் கர்த்திருகாரகங் கரணகாரகமாக நிற்கையாலும் மலபரிபாகத்தினைக் கிரமமாக வரப் பண்ணுகையாலும் அம்மலபரிபாகம் வந்தகாலத்துச் சிவபணிவிடை சிவபூசை சிவத்தியானங்களுக்கிவை யின்றிக் கூடாவாகையாலும் இவை நமக்கு உபகாரமென்றறிவது காயதரிசனம், காயமெனுநாமமறைய நயந்தலிங்கமே தனுவதாமதுவே காயசுத்தியாம் - தீட்சாகாலத்தி லிம்மூவகைத் தேகங்களையும் ஆசாரியர் சுத்திபண்ணித் தூலதேகத்தில் இஷ்டலிங்கத்தினையும் சூக்குமதேகத்திற் பிராணலிங்கத்தினையுங் காரணதேகத்திற் பாவலிங்கத்தினையும் ஞானேந்திரியங் கன்மேந்திரியங்களில் ஆசாராதி மகாலிங்கங்களையுந் தாபித்து யாதொருவிடயங் களைப்பிரித்தறியுங் காலத்தும் அவ்விடயங்களைத்தொட்டுப் பற்றி நிச்சயித்தனுபவிக்குங் காலத்தும் இலிங்கமுகமன்றித் தத்துவவியாபாரங்களொன்றுமில்லை யாகலான் இதுவே காயசுத்திதரிசனம், எ-று. (கசுங)

[மேலான்மரூபம் ஆன்மதரிசனத்தோடு சிவரூபஞ் சிவதரிசனமு முரைக்கலுற்றார்.]

கண்டலிங்கந் தன்னுருவாய்க் காணுவதான் மாவுருவாங்
கண்ட வறிவுநம தாமென்னக் - கண்டநிலை
காட்சியது கண்டதன்கட் கண்ணுஞ்சிற் சத்தியெனுங்
காட்சிஞா னக்காட்சி யாம்.

போகத்தர் பாலர் புகலுந் தருணரவற்
கேகமல பாக மிசைவிக்க - வாகாகச்
சொல்லியவித் தீக்கையெனச் சொல்லுஞ் சிவாகமங்க
ளல்ல லறவறியம் மா.

(இ-ள்.) பலபோகத்தினை யுடையவர்களுக்கும் பதினைந்துவயதுக் குட்பட்ட சிறுவர்களுக்கும் முப்பதுவயதுக் குட்பட்ட தருணிகளுக்கும் வியாதியாளருக்கும் எண்பதுவயதினையுடைய விருத்தர்கட்கும் மலபாகம்வரின் இத்தீக்கையினைச் செய்யலாமென்று சிவாகமங்கள் செப்பும், அல்லலறவறி - உன்னுடைய கிலேசமற வறிந்துகொள்வாயாக, எ-று. (கருகூ)

[பத்திவிழுங்கிப் பதைப்பறநிற்றற் கொத்த வாணவ
வுவமைகாட்டி யுரைக்கின்றார்.]

சீவன்முத்தித் தன்மை செறிந்தவர்க்குப் பத்தியது
தாவிலுணர் வாயுயிரைத் தான்விழுங்கி - யாவிக்கன்
றுணவந்தா னுன்மாவுக் கானவஞ்ஞா னங்காட்டி
யாணி வறிவகற்றல் போல்.

(இ - ள்.) சீவன்முத்தித்தன்மை செறிந்தவர்க்குப்பத்தியது தாவிலுணர் வாயுயிரைத் தான்விழுங்கி யாவிக்கு - அசத்திய நிருவாணமென்னுஞ் சபீச தீக்கையினை இவ்வாறு சொல்லிமுடித்து முன்சொன்ன சீவன்முத்தித் தன்மையைப் பெற்றவர்கட்குப் பத்தியானது பிரகாசித்து அவர்க ளான்மபோதத்தை விழுங்கித் தன்னுளடக்கிக்கொண்டதற் குவமான மெங்ஙனமெனின், அன்றுணவந்தா னுன்மாவுக்கான வஞ்ஞானங் காட்டியாணி வறிவகற்றல்போல் - அநாதியே ஆணவமலம் ஆன்மாவின தாணியாகிய வறிவைமறைத்து அஞ்ஞானமே சொரூபமாகக் காட்டுதல்போல, எ-று. (கசூO)

ஈண்டுப் பொதுப்படபத்தியென்றது - சற்பத்தி, நயிட்டாபத்தி, அவதானபத்தி, அனுபவபத்தி, ஆனந்தபத்தி, சமரசபத்திகளை.

பொய்யென் றறியப் புலப்படுஞா னம்பசுவின்
கையொன்று ஞானந்தன் கண்ணுன - மெய்யாகுஞ்
சிற்சத் தியையுமிது வென்றறியப் பற்றுமது
கற்புடைய ஞானக் கடன்.

(இ - ள்.) பொய்யென்றறியப் புலப்படுஞானம்பசுவின் கையொன்று ஞானம் - தேகாதி பிரவஞ்ச முதலியனவற்றையெல்லாம் பொய்யென்றறியவந்த ஞானம் ஆன்ம ஞானமாம், அவ்வான்ம ஞானத்துக் குயிராகிய, தன்கண்ணுன மெய்யாகுஞ் சிற்சத்தியையுமிதுவென் றறியப்பற்றுமது - சிற்சத்தியையு மெதிரீடற்றறிவதும், கற்புடைய ஞானக்கடன், அவ்வான்ம ஞானமே, எ-று. ()

[இனிச் சீவன்முத்தியவத்தை தெரிசிப்பிக்கின்றார்.]

சற்றுந்தோன் றமற் சதுராகி யேவிழுங்கி
யுற்றசிற் சத்தி யுருவாகு - மற்றைச்

சிவன்றானாய் நிற்கின்ற செல்வ முணர்த்த
வுவந்தவத்தை யைந்தேழ தாம்.

(இ-ள்.) ஆன்மாவினது தற்போதந் தோன்றாதபடி சதுராக விழுங்கிக் கொள்ளுஞ் சிற்சத்தியே தனக்கு வடிவமாய் விளங்கும், அந்தச் சிவமே தானாய் நிற்கின்ற சீவன்முத்தி வாழ்வினை யுணர்த்துவதாகிய அவத்தை பன்னிரண்டு, எ-று. (கசுஉ)

[மேற் சீவன்முத்தியவத்தை பன்னிரண்டினையும் எட்டு வெண்பாவிரு லுணர்த்தத்தொடங்கி முந்தக் காயரூப தெரிசனசுத்தியைக் கூறுகின்றார்.]

காயம் பகையாகக் காண லுருவாகுங்
காயமுப கார மென்கை காட்சியாங் - காயமெனு
நாம மறைய நயந்துலிங்க மேதனுவ
தாமதுவே காயசுத்தி யாம்.

(இ - ள்.) காயம்பகையாகக் காணலுருவாகும் - காயமென்று பொதுப் படக் கூறுகையாற் பூதபரிணாமமாகிய தூலதேகமும் பிரகிருதி சென்னியமாகிய சூக்குமதேகமும் அசுத்த மாயாகாரியமாகிய காரணதேகமு மாகியஇத் தேகங்கள் மூன்றும் பெத்தாவத்தையில் ஆன்மாவைப் பிரபஞ்சோன் முகப் படுத்துகையாலும் பொய்யை மெய்யாக மயக்குகையாலுஞ் சடமாய்த்தனக் கந்நிய மாகையாலுந் தனக்கு வேறாகிய பகையென்றறிவது காயரூபதரிசனம், காயமுபகாரமென்கை காட்சியாம் - இம்மூவகைத் தேகங்களும் ஆணவமலத் தைச் சிறிதொதுக்கி ஆன்மாவினதிச்சாஞானக்கிரியைகளை விளக்கிக் கர்த்திரு காரகங் கரணகாரகமாக நிற்கையாலும் மலபரிபாகத்தினைக் கிரமமாக வரப் பண்ணுகையாலும் அம்மலபரிபாகம் வந்தகாலத்துச் சிவபணிவிடை சிவபூசை சிவத்தியானங்களுக்கிவை யின்றிக் கூடாவாகையாலும் இவை நமக்கு உபகார மென்றறிவது காயதரிசனம், காயமெனுநாமமறைய நயந்தலிங்கமே தனுவதா மதுவே காயசுத்தியாம் - தீட்சாகாலத்தி லிம்மூவகைத் தேகங்களையும் ஆசாரி யர் சுத்திபண்ணித் தூலதேகத்தில் இஷ்டலிங்கத்தினையும் சூக்குமதேகத் திற் பிராணலிங்கத்தினையுங் காரணதேகத்திற் பாவலிங்கத்தினையும் ஞானேந் திரியங் கன்மேந்திரியங்களில் ஆசாராதி மகாலிங்கங்களையுந் தாபித்து யாதொ ருவிடயங் களைப்பிரித்தறியுங் காலத்தும் அவ்விடயங்களைத்தொட்டுப் பற்றி நிச்சயித்தனுபவிக்குங் காலத்தும் இலிங்கமுகமன்றித் தத்துவவியாபாரங்க ளொன்றுமில்லை யாகலான் இதுவே காயசுத்திதரிசனம், எ-று. (கசுங)

[மேலான்மரூபம் ஆன்மதரிசனத்தோடு சிவரூபஞ்
சிவதரிசனமு முரைக்கலுற்றார்.]

கண்டலிங்கந் தன்னுருவாய்க் காணுவதான் மாவுருவாங்
கண்ட வறிவுநம தாமென்னக் - கண்டநிலை
காட்சியது கண்டதன்கட் கண்ணுஞ்சிற் சத்தியெனுங்
காட்சிஞா னக்காட்சி யாம்.

(இ-ள்.) கண்டலிங்கர் தன்னுருவாய்க் காணுவதான்மாவுருவாம் – ஆன்மாவுக்குள்ள வடிவம் அவனதிச்சானக்கிரியையே, அவ்விச்சாஞானக்கிரியை கட்குப் பெத்தாவத்தையில் மாயாகாரியமாகிய தத்துவங்களே கரணகாரகமாகியுங் கர்த்திருகாரகமாகியும் பிரிவற்றுநின்று யாதொருவிடயங்களையும் புசிப்பிக்கையால் அவைகளை வடிவமென வுபசரித்துக் கூறுமாறுபோல, சுத்தாவத்தையில் இங்ஙனங் கூறிய இலிங்கங்களெல்லாங் கர்த்திருகாரகங்கரணகாரகமாய்ப் பிரிவற்றுநின்று யாதொரு விடயங்களையும் பிரசாதமாக வூட்டுகையாலுபசரித்துருவமாகக் கூறியது, ஆகலின் இவ்விடத்தான்மரூபமுஞ் சிவரூபமுங் கூறியவாறுயிற்று. கண்டவறிவு நமதாமென்னக் கண்டநிலைகாட்சி - அவ்விலிங்கங்களே தனக்கு வடிவமெனக்கண்டவறிவே நமதறிவென்பது ஆன்மதரிசனம், அதுகண்ட தன்கட் கண்ணுஞ் சிற்சத்தியெனுங் காட்சி ஞானக்காட்சியாம் - அவ்விலிங்கங்களே தனக்கு வடிவமெனக் கண்ட தனதறிவுக் கறிவா யிருந்து விளக்குகின்றது மேலாகிய சிற்சத்தியென வறிவது சிவதரிசனமாம், எ-று. ()

[அச் சிவதரிசனத்தை விளக்கும் பத்தி யிதுவெனச் செப்பலுற்றுர்.]

ஆனசிற் சத்தியது வான வடிவெனவே
தானுணர்ந்து நிற்கத் தகுதியாய் - யானறிந்தே
னென்னு மகந்தையின்றி யேவிளங்குஞ் சற்பத்தி
தன்னுருவா யேவிளங்கித் தான்.

(இ-ள்.) ஆனசிற் சத்தியது வான வடிவெனவே தானுணர்ந்து நிற்கத் தகுதியாய் - அச்சிற்சத்தியே தனதறிவுக் கறிவாய் விளங்கிக்கொண்டு தனக்கு வடிவாயிருக்குமென்பதனையு முணர்ந்து நிற்கும்படியாக, யானறிந்தேனென்னு மகந்தையின்றியே விளங்குஞ் சற்பத்தி தன்னுருவாயே விளங்கித் தான் - அச்சிற்சத்தியை யன்றி யானே யறிவேனென்னு மமதையினையுந் தோன்றுதுணர்த்தி நிற்குஞ் சற்பத்தியையுந் தனக்குச் சொரூபமாகக்கொண்டு விளங்கினின்று, எ-று. (கசுரு)

[மேனின்மலசாக்கிரத்தினையு நயிட்டாபத்தியையும் நவிலலுற்றுர்.]

என்னுருவ மென்ற வதுசாக் கிரம்வடிவன்
றென்னறிவுக் கான வினிதறிவு - தன்னாலே
யானறிவ தன்றியொன்றும் யானறியே னென்றதிடந்
தானுணர்த்தும் பத்திநயிட் டை.

(இ-ள்.) என்னுருவ மென்ற வதுசாக்கிரம் - அச்சிற்சத்தியே தனக்கு வடிவமென்று நின்றநிட்டை நின்மலசாக்கிரம், வடிவன்றென் னறிவுக்கான வினிதறிவு தன்னாலே யானறிவதன்றி - அச்சிற்சத்தி யெனக்கு வடிவமன்று எனதறிவை விளக்குவதாய்ப் பகுப்பற்றிருக்கு மவ்வறிவாலே யானறிவதல்லது, ஒன்றும் யானறியேனென்ற திடந்தானுணர்த்தும் பத்தி நயிட்டை - யானாக வொன்றையு மறியமாட்டே னென்னு நிச்சயத்தினையு மறிவித்துக் கொண்டிருக்கும் பத்தி நயிட்டாபத்தி, எ-று. (கசுசு)

[மேனின்மல சொப்பனத்தினையும் நின்மல சுழுத்தியினையும் அவதான பத்தியினையு முறைக்கலுற்முர்.]

அறிவென்னக் காண்ட லதுசொப் பனமா
மறியவறி விக்கவிரண் டல்ல - பிரிவற்றுக்
காட்டலவ தானபத்தி காணி லிதுசுழுத்தி
தீட்டியவச் சிற்சத்தி தான்.

(இ-ள்.) அச்சிற்சத்தியே தன்னறிவை விளக்குமறிவெனக்கண்டு நிற்கு மனுபவம் நின்மல சொப்பனமாம், இதைவிட்டு அச்சிற்சத்தி யறிவிக்க யாமறி இன்றே மென்னும் பகுப்புமின்றிப் பிரிவற்றுநிற்கு மனுபவத்தை விளக்குவது அவதானபத்தி, இவ் வனுபவம் நின்மல சுழுத்தி, எ-று. (கசுஎ)

[மேனின்மல சொப்பனத்தினையும் நின்மல துரியாதீதத்தினையு மிரண்டு வெண்பாவினு னுரைக்கின்முர்.]

யானே யெனநிகழு மான வனுபவத்தைத்
தானுணர்த்தும் பத்தி யனுபவந்தா - ஞன
துரியமிது வாகுமறி சொற்றிடுஞ்சிற் சத்தி
யரியவித னுள்ளழுந்த ருன்.

தோன்றறுரி யாதீதஞ் சொற்றிடுஞ்சிற் சத்தியதே
யேன்றவறி வெல்லா மினிதறியுந் - தோன்றி
யறியே னெனநிகழ்வின் காகுமது காட்டு
முரியவா னந்தபத்தி யோர்.

இவ்விரண்டுவெண்பாவு மொருதொடர்.

(இ-ள்.) யானேயென நிகழுமானவனுபவத்தைத்தானுணர்த்தும் பத்திய னுபவந்தாஞன துரியமிதுவாகுமறி - முற்கூறிய சிற்சத்தியுந் தன்னறிவு மிர ண்டல்லவென்னுஞ் சுட்டுமற்று அச்சிற்சத்திதாஞய் நிற்குமனுபவத்தை விளக் கும்பத்தி யனுபவபத்தி இது நின்மலதுரியமெனவறி, சொற்றிடுஞ் சிற்சத்தி யரியவதனுள்ளழுந்தருன்ருேன்ற றுரியாதீதம் - அச்சிற்சத்திதாஞய் நிற்கும் அனுபவத்தற்பச்சுட்டிருக்கும், அச்சுட்டுமற்று நீரிலேமுழுகினவனைப்போலவும் நிறைய வுண்டவனைப்போலவும் அச்சிற்சத்தியி லழுந்திப் பிறிதொன்றுந் தோன்முமற் றிரிபுடியுங்கழன்று நிற்பதே துரியாதீதம், தோற்றிடுஞ் சிற்சத் தியதே யேன்றவறிவெல்லா மினிதறியுந் தோன்றியறியேனென நிகழ்வின்காகு மதுகாட்டு முரியவானந்தபத்தியோர் - அச்சிற்சத்தியே பேரறிவுபெருந்தொ ழிலையெல்லாமுடையது, அங்ஙனமாகிய சிற்சத்தியையுங் குறியாது அதனுளழு ந்து மனுபவத்தினை விளக்குவது ஆனந்தபத்தியென் றறிவாயாக, எ-று. (கசுகூ)

[மேலான்மலாபமுணர்த்துகின்முர்.]

அவத்தை சகச மதுவான்ம சுத்தி
சிவப்பொருளே யானென் றுணரப் - பவிப்பதுதான்
பத்தி சமரசமாம் பாரவத்தை யுன்மனமே
லொத்தவிது சீவன்முத்தி யோர்.

(இ - ள்.) அவத்தை சகச மதுவான்மசுத்தி - இங்ஙனங் கூறிய நின்மல பஞ்சாவத்தைகளுஞ் சகசமாகச் சுட்டற்றனுபவமாய் விளங்குமதுவேயான்ம சுத்தி, சிவப்பொருளே யானென்றுணரப்பவிப்பதுதான் பத்தி சமரசமாம் பாரவத்தையுன்மனேமே லொத்தவிது சீவன்முத்தியோர்-இவ்வான்ம சுத்திக்கு மேலான்மலாபமெங்ஙனமெனின்,இருதயந்தொடங்கித்துவாதசாந்தமாகிய உன்மனே கலைபரியந்தம் நின்மலசாக்கிரமுதல் நின்மல துரியாதீதம், இம்மட்டுமே நிட்டை, இங்ஙன நிட்டைகூடி நிற்குமளவிலுன்மனுந்த மபராவத்தை, அவற்றினை விளக்குவது சமரசபத்தி, அவ்விடத்து நின்மலானந்த வகண்டாகார பரசிவ சாட்சாத்காரமாம், அச்சிவசாட்சாத்காரத்தைப் பெறுமதுவே ஆன்ம லாபம், அதுவே சீவன்முத்தி என்றறி, எ-று. (கஎ0)

[இங்ஙனம் பன்னிரண்டவத்தையினையுங் கூறி மேற்சிவபோகவனுபவத்தினைத் திட்டாந்த பூருவமாக விரண்டுவெண்பாவினு லியம்புகின்றார்.]

சொல்லிடிலச் சீவன்முத்தர் சொல்லரிய வப்பரத்தோ
டெல்லையற வத்துவித மேயாகிப் - புல்லிநிற்பர்
தேனுஞ் சுவையுஞ் செறிந்தகலா வாறதுபோ
லேமம் பரிசனவே தி.

பரிசித்துப் பொன்னுக்கிப் பற்றுங் களிம்பு
பரவக் கொடாமற் பரிசம் - விரவியொன்ருய்
நீங்காமைப் பொன்னுகி நிற்பதுபோ லப்பொருளோ
டாங்கத் துவிதமா னுர்.

இவ்விரண்டுவெண்பாவு மொருதொடர்.

(இ-ள்.) சொல்லிடிலச்சீவன்முத்தர் சொல்லரிய வப்பரத்தோடெல்லையறவத்துவிதமேயாகிப் புல்லிநிற்பர் - சொல்லுமிடத்து இங்ஙனங் கூறிய சீவன்முத்தர்கள் அவாங் மனகோசரமாகிய பரசிவத்தோ டொன்ருய்க்கலந்து வியாபியாய் அத்துவிதமேயாகி நீரோடு நீர்சேர்ந்தொன்ருய்ப் போமாறுபோலவு மல்லவாய் இருளும் ஒளியும்போல விரண்டாகி நிற்பதுமல்லவாய் அத்துவிதமாகக் கலந்துநிற்பர். அக்கலப்பெங்ஙனமென்னின், தேனுஞ் சுவையுஞ் செறிந்தகலாவாறுபோல் - தேனும் அதனது ருசியும் எங்ஙனம் பிரியாதிருக்குமோ அங்ஙனம் ஆன்மாவுஞ் சிவமும் பிரியாதிருப்பதுவே பரமுத்தி இஃதன்றி, ஏமம் பரிசனவேதி - பரிசனவேதி பரிசிக்கச்செம்பு பொன்னுமாறுபோலும், பரிசித்துப் பொன்னுக்கிப் பற்றுங் களிம்புபரவக்கொடாமற் பரிசம் விரவியொன்ருய் நீங்காமைப் பொன்னுகி நிற்பதுபோல் - செம்பினிடத்து இரதகுளிகை கொடுக்க அக்குளிகை யச்செம்பினிடத்துள்ள காளிதத்தையெல்லாம் போக்கி மீண்டும் அச்செம்பிலூறிப் பரவக்கொடாமல் வேதித்து அச்செம்பினிடத் தொன்ருய்க்கலந் ததனைப் பொன்னுக்கித் தானும் அப்பொன்னை விட்டு நீங்காது நிற்குமாறுபோல, அப் பொருளோடாங் கத்துவிதமானுர் - சிவபெ

ருமானுந் தமது சிற்சத்தியாய் ஆன்மாவினது ஆணவாதிமலங்களை யெல்லாம் போக்கி மீண்டும் அவை யவ்வான்மாவினது ஞானசத்தியைவந் தாவரியாத படி அச்சத்தி வியத்திருபமா யவ்வான்ம சிற்சத்தியிற் கலந்துநின்று தன்முத லாயுள்ள சிவத்தோ டத்துவிதமாகச் சேர்க்கச் சேர்த்துக்கொள்ளுவர், எ-று.

[சீவன் முத்தி யவத்தையை யுரைத்துச் சிவபோகமா மாறுசெப்பலுற்றார்.]

உண்ணும் பிராரத்த மொன்றுஞ் சிவார்ப்பிதமாய்
நண்ணும் வகையை நலமாக - வெண்ணமறச்
சொற்ற சடுத்தலத்தின் றொன்மை யெடுத்துரைப்பாம்
பற்றும் பழக்கமற வே.

(இ - ள்.) உண்ணும் பிராரத்த மொன்றுஞ் சிவார்ப்பிதமாய் நண்ணும் வகையை - சீவன் முத்தி யவத்தையிற் சரீரந் தெத்தபட ஞாயமாக விருந்து பிராரத்தகன்மத்தைப் பிரசாதபோகமாய்ப் புசிக்கும் வகையினை, நலமாகவெ ண்ணமறச் சொற்ற சடுத்தலத்தின் றொன்மை யெடுத்துரைப்பாம் பற்றும் பழக்கமறவே-பெத்தாவத்தையில் இந்திரிய முகமாய்ப் புசிக்கும் பழக்கம் போ கத்தக்கதாக நன்றாகச் சொல்லப்பட்ட சடுத்தல வியாபாரத்தின் பழமையினை யெடுத்துச் சொல்லுவோம், எ-று. (கஎஉ)

அங்கமிக்க பத்த னருந்திரவி யம்முகம்பின்
றங்குமத்தஞ் சத்தி தகுமிலிங்கம் - பொங்குபத்தி
யோடற் பிதநன்மை யுற்ற பிரசாதத்
தோடுற்ற பத்திவையா மோர்.

(இ - ள்.) ஒரு தலத்துக்குள்ள பத்துவிதத்தினையும் சொல்லு மிடத்து அவை அங்கம் பத்தன் திரவியம் முகம் அத்தம் சத்தி லிங்கம் பத்தி அற்பிதம் பிரசாதம் ஆகிய விவையாம். நீயறிவாயாக, எ-று. (கஎங)

[மேலாசார லிங்காற் பிதத்துக்குள்ளவற்றை இரண்டு வெண்பாவினாற் கூறுகின்றார்.]

அங்கஞ் சிவபூமி யானசிவ பத்தனயன்
பொங்கிய கெந்தம் பொருளாகு - மிங்கா
முகஞ்சத்தி யோசாத மத்தஞ் சுசித்தந்
தகுஞ்சத்தி நற்கிரியை தான்.

ஆசார லிங்க மரும்பத்தி சற்பத்தி
பேசுகின்ற பீதங்கெந் தாற்பிதமாம் - பேசும்
பரமசிவ னென்று பகருமறை நாதன்
பரிவுடனே பற்றுதற்கா க.

(இ-ள்.) கெந்தவிடயத்தைச் சிவனுக்கற்பிக்குந் திறமீதென வேதசிவாக மங்கள் விளம்பும், எ-று. (கஎரு)

மற்றது வெளிப்படை.

[மேற் குருலிங்காற்பிதக் கொள்கையினை இரண்டு வெண்பாவினாற் கூறுகின்றார்.]

அங்கம் புனல்பத்த னுமாற் பொருளிரத
மங்கு முகம்வாம தேவமா - மிங்குரைக்கு
மத்தஞ் சுபுத்தி யருஞ்சத்தி ஞானசத்தி
யொத்தலிங்க மோகுருலிங் கம்.

பத்தி நயிட்டை பகரின் ரசாற்பிதமா
மொத்த ரசாற்பிதமா யுற்றதனை - நித்தியமா
யுள்ளும் புறம்புமதா யுற்றபரி பூரணமாம்
வள்ள லருந்துதற்கா க.

(இ - ள்.) உள்ளும் புறம்புமாயுள்ள பரிபூரணசிவத்துக் கிரசாற்பிதம் பண்ணுந் திறமிதுவென வேதசிவாகமங்கள் செப்பும், எ-று. (௧௭௭)

மற்றது வெளிப்படை.

[மேற் சிவலிங்காற்பிதத் திறத்தினை இரண்டு வெண்பாவினாற் கூறுகின்றார்.]

அங்கமது பத்த னுருத்திரனும் ரூபமது
பொங்கு திரவியமாம் போற்றுமுக - மங்கா
மகோரநிர கங்கார மத்தமிச்சா சத்தி
பகர்சிவ லிங்கமிலிங் கம்.

அவதான பத்திமிக்க ரூபாற் பிதமா
நவமான ரூபாற் பிதந்தா - னவமான
சச்சிதா னந்த சயம்புவண்ண நின்மலமா
யிச்சையுடன் வந்தியில்பா க.

(இ - ள்.) சச்சிதானந்த சிவத்தினுக் குருவாற்பிதம் பண்ணுந்திறமிது, எ-று. (௧௭௮)

மற்றது வெளிப்படை.

[சரலிங்காற்பித வகையினை இரண்டு வெண்பாவினாற் சாற்றுகின்றார்.]

வாயுவங்க மாயேசன் பத்தன் பரிசமது
வாயபொரு டற்புருட மங்குமுகந் - தூய
சுமனமத்த மாதிசத்தி சொல்லிடினல் லிங்கங்
கமையுடைய சங்கமலிங் கம்.

அரிய வனுபவமென் பத்தியது தானும்
பிரிவில் பரிசாற் பிதந்தா - னுரியதனைத்

தேடற் கரிய சிவனுக் கமலமதாய்
நாடிவந்து நிற்க நயந்து.
(இ - ள்) தேடுதற்கரிய பரமசிவனுக்குப் பரிசாற்பிதம் பண்ணுக் கிர (கூஅ௬)
து, எ-று.

மற்றது வெளிப்படை.

[இனிப்பிரசாத லிங்காற்பிதத்தினை இரண்டு வெண்பாவிற்றும் கூறுகின்றார்.]

வானமங்கம் பத்தன் சதாசிவனு மாம்பொருடா
ஞானசத்த மீசான மன்னுமுக - ஞானமது
வத்தமிக்க சத்தி பராசத்தி லிங்கமது
வைத்தபிர சாதலிங்க மாம்.

ஆனந்த பத்திமிக்க சத்தாற் பிதமாரும்
தானினிய சத்தாற் பிதமதுதா - ஞானத்தை
யுள்ளரிய தான வுரிய பரப்பிரம
மன்ன வமலமதா க.
(இ-ள்.) மேலாகிய பரப்பிரம சொருபத்துக்குச் சத்தாற்பிதம் பண்ணும் (கூஅ௯)
வகையிது, எ-று.

மற்றது வெளிப்படை.

[மகா லிங்காற்பிதவகை இரண்டு வெண்பாவிற் றுரைக்கின்றார்.]

வந்தவைந்து வற்பிதத்தை மன்னியவான் மாவங்கம்
தந்த வுமாபதி தான்பத்தன் - சந்த
விதயமுகம் பாவவத்த மேற்றசிற் சத்தி
மதியிலிங்க மோமகாலிங் கம்.

சமரச பத்தியைந்துந் தானற் பிதமா
மமலப் பிரசாத மாக - வமலனே
தான்மூன் றுடலிலிங்கந் தான்மூன்று யுற்றருந்து
மான்மூன் றுருவாதி யை.

(இ - ள்.) இங்ஙனஞ் சொல்லிப்போந்த பிருதிவியாதி பஞ்சபூதமாகிய தேகங்களினிடமாகச் சுசித்த முதலிய பஞ்சகரணங்களாகிய அஸ்தங்களால் கன்ம சாதாக்கியர் முதலிய பஞ்ச சாதாக்கியரான கிரியாசத்தி முதலிய பஞ்சசத்திகளிற் றோற்றிய ஆசாராதி பஞ்சலிங்கங்களுக்கு நிவர்த்திமுதலிய பஞ்சகலைகளி லிருந்து வரப்பட்ட கந்தமுதலிய பஞ்சவிடயப் பிரயோசனங்களைச் சத்தியோ சாதாதிபஞ்ச முகத்தினிடமாக அற்பித்து அவ்வைவகைப் பிரயோசனங்களை யெல்லாம் சிவனாகிய அங்கத்தினிடமாக மகா சாதாக்கியரென்னுஞ் சிற்சத்தியிற் றோற்றிய மகாலிங்கத்துக்குச் சாந்தியாதீ தோத்தரையென்னுங் கலையி லடங்கியிருந்து வரப்பட்ட பரிணும மென்னும் விடயப்பிரயோசன

னத்தைப் பாவமென்னும் அஸ்தத்தினால் இருதயமென்னு முகத்தினிடமாக அற்பிதஞ் செய்கின்றவர்களுக்கே பத்தன் மயேசுரன் பிரசாதி பிராணலிங்கி சரணன் ஐக்கியனென்று பெயர், இவர்களுக்கே பிரமன் விஷ்ணு உருத்திரன் மயேசுரன் சதாசிவன் உமாபதியெனப் பரியாய நாமம், இவ்வாறுவர்களா லற்பிக்கப்பட்ட விடயப்பிரயோசனங்களை யெல்லா மிலயபோக அதிகார சத்தி சாமர்த்தியனாகிய நின்மலசிவனே தூலசூக்கும காரணமாகிய தனுத்திரயங்களிலேயும் இஷ்டப்பிராண பாவலிங்கமும் முற்கூறிய ஆசாராதி சடுவிதலிங்கமும் ஆகிய வின்னவலிங்க முமாய்நின்று புசிப்பன். அங்ஙன நவலிங்க முகமாகப் புசிப்பானேன்? ஒருலிங்க முகமாகப் புசிக்கிற் போதாதோவெனின், பிராரத்த வழித்தாய் வரப்பட்ட முற்கூறிய ஒவ்வொரு விடய பதார்த்தமு மூவிதமாக விருக்கையினு லென்க, எ-று. (கஅரு)

ஆனரூ பம்ருசியு மாம்பரி ணாமமுறத்
தானே சிவனருந்தத் தானருந்தித் - தானறவே
நிற்பதுதா னாகு நிகழுஞ் சடுத்தலமென்
றற்புதமா யாகமஞ்செப் பும்.

(இ - ள்.) பரிணாமமாக வரும் விடயபதார்த்தத்திற்கு மூன்று குணம். அவையாவை யென்னின், அப்பதார்த்தத்தின் வடிவமே ரூபம், அஃதித்தன்மை யதென்றறிவதே ருசி, அதனால் வருஞ் சுகத்தினை யனுபவிப்பதே திருத்தி, இங்ஙனங் கூறிய ரூபருசிதிருத்தியைச் சிவன்புசிக்க அதைச் சிவப்பிரசாதமாகத் தான் புசித்து நான்புசிக்கிறேனென்னுந் தன்மைதோன்றாமல் நிற்பதுவே சடுத்தலவற்பிதமென்று ஆகமங்கள் சொல்லும், எ-று. (கஅசு)

[சிவசொரூபத்தைப்பெற்ற வான்மாவுஞ் சிவனேயென்
றுணர்த்துகின்றார்.]

நவலிங்க மாயதனை நண்ணியுநண் ணாது
சிவனின்ற வாறு சிவனாய்ப் - பவமற்ற
வான்மாவு மங்கவைக ளாயுமில்லா தேநிற்ப
னான்மாவு மத்துவித மாய்.

(இ-ள்.) சுத்தசிவம் இஷ்டப்பிராணபாவமூன்றும் ஆசாராதியாறும் ஆகிய வொன்பதுவகையிலிங்கங்களுடனே கலந்துங் கலவாது நின்றாற்போல நின்மலமான அச்சுத்த சிவத்துடன் அத்துவிதமாய்க் கலந்தவான்மாவும் அவ்விலிங்கங்களுடன் கலந்துங் கலவாமனிற்பன், எ-று. (கஅஎ)

[இன்னுஞ் சீவன்முத்த ரிவ்வுலகத்திற் சஞ்சரிக்குந் தன்மையை
யுணர்த்துகின்றார்.]

ஈங்கிதனை யாகமங்க ளெல்லா மெடுத்துரைக்கு
மோங்குகின்ற வுன்ன வுணர்வென்றுந் - தூங்கலறத்
தூங்குவ தென்றுந் துணியாத் துணிவென்று
மோங்குமறி யாவறிவென் றும்.

நில்லா நிலையென்று நேசியா நேசமென்றுங்
கல்லாக் கதிகாணுக் காட்சியென்றும் - வல்லவராய்ச்
சொல்லப் பொருளொன்றுஞ் சோதியாச் சோகமென்றும்
புல்லாப் புணர்ச்சியதென் றும்.

நடவா நடையென்று நாடாத நாட்ட
முடியா முடிவென்று முன்னும் - படிமீதிற்
கேளாத கேள்விக் கிறியாக் கிறியென்றும்
வாழாத வாழ்வென்று மாம்.

பொருந்தாப் பொருந்தலற்றுப் பூசியாப் பூசை
யருந்தா வருந்த லகன்று - பொருந்தியே
சுத்த சிவமாய்ச் சுகித்திருப்ப ரெப்பொழுதும்
வைத்தவிது சீவன்முத்தி வாழ்வு.

(இ-ள்.) ஈங்கிதனை யாகமங்களெல்லா மெடுத்துரைக்கும் - இங்ஙனங் கூறிய சீவன்முத்தர்கள் நடையைச் சிவாகமங்கள் சொல்லும். எங்ஙனமெ னின், ஓங்குகின்ற வுன்னுவுணர்வென்றுந் தூங்கலறத் தூங்குவதென்றுந் துணி யாத்துணிவென்று மோங்குமறியா வறிவென்றும் - யாதொன்றினைச் செய்யு மிடத்தும் அதன் வசப்படாமல் அதிற்றோயாமல் தமது நிலைதவறாமல் அயரா மல் எழுக்கம்பிமேலேறிச்சென்று கால்கட்டியாடுகின்றவன் பிறரறிய எத்தனை வினோதஞ் செய்யினும் அவனினைவு அக்காலின்கண்ணே நிற்குமாறுபோல, அவர்களறிவு அச்சிவத்தை விட்டுப்பிரியாதாகையால் அவர்களொன்றை நினைக்கி னும் அது நினைவன்று நினையாநினைவு, நித்திரைசெய்யினும் அது நித்திரையன்று, ஒன்றைச் செய்யவேண்டுமென்று துணியினும் அது துணிவன்று, ஒன்றைய றியவேண்டுமென்றறியினும் அதனை யறிந்ததன்று, எ-று. (ககூக)

மற்றவை வெளிப்படை.

[இக்குணங்களை விட்டவர்க்கே ஆசாரலிங்க சாயித்தியமருக மெனவேழு வெண்பாவினாற் கூறுகின்றார்.]

பொய்யா யிருக்கின்ற பொய்யுடலர்த் தப்பிராணத்
தையவபி மான மகலாமன் - மெய்யாகப்
பற்றுவிக்குந் தீயமனப் பண்பாம் பிராந்தியது
சற்று மகலா தவை.

என்னுடல மென்மனைவி யென்செல்வ மென்சாதி
யென்னுமிவைக் குண்டா மியல்குணங்கள் - சொன்னவடை
யெய்தும் வியாதி யபிமானங் கேடுவடு
வெய்தும் பொழுதியல்பா க.

தன்னுயிரை மாய்த்த றனதபிமா னம்மழித்தன்
மன்னுரைக் கொன்றிடுதல் வந்தக்கா - னன்மானங்

காத்தா னெனவுலகங் கட்டுரைக்கும் புன்மொழியி
லாத்தாடுந் தீயபிமா னம்.

(இ - ள்.) மெய்போலவிருந்து பின்பொய்யாகப் போகையால் உடல் பொய்யாம். ஆகையாற் பொய்யாகிய வித்துனுவினிடத்துந் திரவியத்தினிடத்துந் தன் சீவனிடத்தும் அபிமானம் வைத்து இவை மெய்யான பதார்த்தமென்று பற்றுதலைச் செய்விக்கு மனப்பிராந்தி சற்றுந் தீராமையால், தன் றேகம் மனைவிசெல்வம் சாதி ஆகிய விவற்றுள் முறையாகத் தன் றேகத்தின்கண் வயிற்றுவலி முதலிய மகாரோகங்கள் வந்தவிடத்தும் மனைவியினிடத்து மானபங்கமெய்திய விடத்தும் செல்வப்பொருட்குச் சடுதியி லரசர் கள்வர் முதலாயினோராற் பங்கம் வந்தபொழுது மரபுக்கீனம் வந்தவிடத்தும் தன்னுயிரை வலியவிடுதல் மானபங்கம் பண்ணினவனைத்தான் கொல்லுதலாகிய இவைகளினாற் றன்பிராணனை யுத்தரித்துத் தன்மானத்தைக் காத்துக்கொண்டானென் றுலகங்கொண்டாட இவ்விழிவாகிய கீர்த்தியில் தீயவபிமானத்தை வைத்தல், எ-று. (கசுசு)

நிறுத்துமனக் கோட்ட நிவர்த்திசெய்து முன்னே
குறித்தவநா சாரமெனக் கூறிப் - பிறித்துக்
கொலைகளவு கட்காமங் கூறுபர நிந்தைக்
கலமரலுற் றஞ்சியடைந் தோன்.

ஞான விபூதி நடுநாட்ட நன்மணிமெய்
யான குருலிங்க சங்கமத்தோ - டானவருட்
பாதோ தகமும் பரிபூ ரணமாக
வோதும் பிரசாத மும்.

என்னுமிவை யெட்டு மெழிலுடைய தீக்கையினாற்
பின்னமறப் பெற்றுப் பெருவாழ்வா - மன்னும்
சதாசார நீங்காமற் சார்ந்தறிவு நிற்கு
மதாவான வன்புதழைக் க.

இவை மூன்றுவெண்பாவு மொருதொடர்.

(இ-ள்.) நிறுத்துமனக்கோட்ட நிவர்த்திசெய்து - இங்ஙனங் கூறியபிராந்திகட்கெல்லா மிருப்பிடமாகிய மனப்பிராந்தியைப் பரிச்சேதமாகப் போக்கி, முன்னே குறித்தவநா சாரமெனக்கூறிப் பிறித்துக் கொலைகளவு கட்காமங் கூறுபரநிந்தைக் கலமரலுற்றஞ்சி யடைந்தோன் - பெரியோர்களால் முன்னே குறித்துச் சொல்லப்பட்ட இவைகள் அநாசாரமென்று தள்ளிக் கொலைகளவு கட்காமம் பரநிந்தைமுதலிய பாதகங்களை முற்றும் விட்டு அவை கட்கு மிகப்பயந்த[illegible]ச் செனனமரண துக்கத்திற்குத் தப்பிப் பிழைக்கவேண்டுமென வந்தடைந்த மாணாக்கனுக்கு, ஞானவிபூதி நடுநாட்ட நன்மணி - எப்போதும் ஞானப்பிரகாசத்தைத் தரும் விபூதி ருத்திராட்சமும், மெய்யான குருலிங்கசங்கமத்தோடான வருட்பாதோதகமும் பரிபூரணமாகவோதும் பிர

சாதமும் - மெய்ப்பொருளாகிய பஞ்சாக்கரமும் குருலிங்கசங்கமங்களும் திருபாசொரூபமாகிய பாதோதகமும் பரிபூரணமான பிரசாதமும், என்னு மிவையெட்டும்-என்று சொல்லப்பட்ட அஷ்டாபரணங்களையும், எழிலுடைய தீக்கையினாற் பின்னமறப்பெற்றுப் பெருவாழ்வாமன்னுஞ் சதாசாரநீங்காமற் சார்ந்தறிவுநிற்க - அழகிய தீக்கையினால் விட்டு நீங்காதவண்ண மங்கிகரித்துப் பெருவாழ்வாகிய சதாசாரமுதல் ஆசாரங்களை விட்டு நீங்காமல் அறிவுபற்றி நிற்பதாக அச்சற்பத்தியினாலே மேலுமேலும் அன்பு பெருக, எ-று. (கககஎ)

செய்யுநல்ல சற்பத்தி செய்கை விளக்கிநிற்கச்
செய்யுமறி விற்சுசித்த வத்தத்திற் - பொய்யான
மாசா மநாசார மன்னுநெஞ்சிற் கிட்டாத
வாசார லிங்கசாயித் யம்.

(இ-ள்.) செய்யு நல்ல சற்பத்திசெய்கை விளக்கி நிற்கச்செய்யு மறிவில்- இங்ஙனங்கூறிய வாசாரங்களை யெல்லாம் வரச்செய்யா நின்ற நல்ல சற்பத்தி யானது இச்செயல்களை இவனிடத்து விளக்கி நிற்க, அதனால் விளங்கிநிற்கு மறி வின்கண், சுசித்தவத்தத்திற் பொய்யான மாசாமநாசாரமன்னுநெஞ்சிற் கிட்டாத வாசாரலிங்க சாயித்யம் - சுசித்தவத்தத்திற் பொய்யும் அநாசாரமும் அஞ் ஞானமுமாகிய குற்றங்கள் சேர்ந்திருக்கு மனத்தின்கட் சேராததாகிய வாசார லிங்கத்தைத் தரிப்பது, எ-று. (கககஅ)

[குருலிங்கசாயித்தியங் கூறலுற்குர்.]

நின்றசதா சார நிலைதவறி னுங்கிருபை
யொன்றுஞ் சதாசார ரூபமதாய் - நின்ற
குருலிங்க சங்கமத்தைக் குன்ற வுரைக்கும்
பெருநிந்தை கேட்டவிடத் தும்.

தன்னுடல மீந்தத் தவறு தவிர்த்திடவே
மன்னும் விரதவயி ராக்கியந்தான் - முன்போ
லபிமானஞ் செய்யு மதுநயிட்டா பத்தி
யபிமான மாஞ்சுபுத்தி யில்.

ஞானக் கிரியை யதுதவறு தேநடத்தத்
தானினிய தாரணமாத் தானடத்த - ஞானமதாய்ச்
சாற்றுங் குருலிங்க சாயித் தியமென்றே
சாற்றுமரு ளாகமங்க டாம்.

இவைமூன்று வெண்பாவு மொருதொடர்.

(இ - ள்.) நின்ற சதாசார நிலைதவறினும் - ஒருவன் சதாசார நிலைதவ றினவிடத்தும், கிருபையா லொன்றுஞ் சதாசார ரூபமதாய் நின்ற குருலிங்க சங்கமத்தைக் குன்ற வுரைக்கும் பெருநிந்தை கேட்டவிடத்தும் - அக்குற்றத்தை க்கிருபையினாலே போக்குஞ் சதாசார சொரூபமாகிய குருலிங்க சங்கமத்தை

யொருவன் குறைவாகச்சொல்லும் மிக்க நிந்தை வார்த்தையினைக் காதினாலே கேட்டவிடத்தும், தன்னுடலமீந்தத் தவறு தவிர்ந்திடவே மன்னும் விரதவயிராக்கியந்தான் - அந் நிந்தையைக் கேட்ட தோஷந்தீரத் தன்னுடைய சரீரத்தை விட்டு அத்தோஷத்தைத் தீர்த்துக்கொள்ளுவதாகிய நிலைபெற்ற வைராக்கிய பத்தியை, முன்போ லபிமானஞ் செய்யுமது நயிட்டாபத்தி யபிமானமாஞ் சுபுத்தியில் - தான் முன்பு பெத்தாவத்தையிற் றன் மாதாபிதாக்கள் முதலிய பெயர்களை யொருவன் நிந்தித்த விடத்துத் தனக்கெப்படி யபிமானமுண்டாகியதோ அப்படி யபிமானத்தைப் பண்ணுவிக்குமது நயிட்டாபத்தி, அந்நயிட்டாபத்தி யதிட்டானமான சுபுத்தியத்தத்தில், ஞானக்கிரியை யதுதவறாதே நடத்தத் தானினிய தாரணமாத்தானடத்த - ஞானமார்க்கங் கிரியாமார்க்க மிரண்டுந் தவறாதே நடத்தத்தக்கதாக எந்த இலிங்கத்தைத் தரிப்பதென்னில், ஞானமாய்ச் சாற்றுங் குருலிங்கசாயித்திய மென்றே சாற்றுமருளாகமங்கடாம் - ஞான சொரூபமாகிய குருலிங்க சாயித்தியத்தைப் பண்ணவேண்டுமென்று சிவாகமங்கள் சொல்லும், எ-று. (உ0௪)

[சிவலிங்க சாயித்தியஞ் செப்பலுற்றார்.]

நின்றவீ ரவ்விரத நேர்ந்தவறி வின்முன்ன
நின்ற தனுவி னிகழ்பொறிக - ணன்றாய்
விளங்க நடப்பதுபோன் மெய்யெல்லாம் லிங்கம்
விளங்கும் விளக்கமது வே.

சாக்கிரத்துஞ் சொப்பனத்துஞ் சந்தேக மற்றுநிற்கத்
தாக்குமிக்க பத்தியவ தானத்தா - லூக்கு
நினைவி னிரகங்கா ரத்தா னிலிங்கந்
தனையகலாச் சாயித் தியம்.

இவையிரண்டுவெண்பாவும் ஒருதொடர்.

(இ - ள்.) நின்றவீ ரவ்விரதநேர்ந்த வறிவில் - நிலையினையுடைய வீர சைவாசார நிலைமைபற்றிய வறிவில், முன்னநின்ற தனுவினிகழ் பொறிகணன்றாய் விளங்க நடப்பதுபோல் - பெத்தகாலத்துத் தன் தேகத்துள்ள இந்திரியாதியந் தக்கரண முதலிய வியாபாரங்கள் அபேதமாய் நடக்குமாறுபோல, மெய்யெல்லாம் லிங்கம் விளங்கும் விளக்கமதுவே - தன் சரீரமெல்லாம் இலிங்க விளக்கமும் அப்படிச்சகசமாக, சாக்கிரத்துஞ் சொப்பனத்துஞ் சந்தேகமற்று நிற்க - சாக்கிரம் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீத முதலியவவத்தைகளினும் இந்திரிய வியாபாரங்கள் வந்து தாக்காமற் சற்றுஞ் சந்தேகமில்லாமல் நிற்கப் பண்ணும் அவதான பத்தியினால், ஊக்கு நினைவில் - மிக்க வறிவில், நிரகங்காரத்தா னிலிங்கந் தனையகலாச் சாயித் தியம் - நிரகங்கார அத்தத்திற் சிவலிங்க சாயித்தியம், எ-று. (உ0௫)

[சங்கமலிங்க சாயித்தியஞ் சாற்றலுற்றார்.]

நின்றலிங்க மேனியது நித்தியஞா னந்தானாய்
நின்று நிகழு நிகழ்ச்சியது - குன்று
வகுந்தையற நிற்க வனுபவமாம் பத்தி
திகழ்ந்து விளங்குந் திடம்.

ஆன சுமனமதா மத்தத்திற் றூரணமாந்
தானினிய சங்கமமாம் லிங்கந்தா - னானதென
வாகமங்கள் சொல்லுமென வம்மாநல் லோருரைப்ப
ரேகமனத் தாரறிய வே.

(இவை யிரண்டுவெண்பாவு மொருதொடர்.)

(இ-ள்.) நின்றலிங்கமேனியது நித்தியஞானந்தானாய் - தனக்கு முற்கூறி யலிங்கமே யுருவமாய் நித்தியமாகிய சிற்சத்தியே தானாய், நின்று நிகழு நிகழ்ச்சியது குன்று வகுந்தையற நிற்க வனுபவமாம் பத்திதிகழ்ந்து விளங்குந் திடம் - அச்சிற்சத்தியே தானாய் நின்று விளங்கும் விளக்கம் வழுவாது தற் போதஞ் சுட்டாறு நிற்கப் பண்ணும் அனுபவபத்தி யதிட்டானமாகிய, ஆனசு மனமதாமத்தத்திற் றூரணமாந் தானினிய சங்கமமாம் லிங்கந்தானானதென- சுமன மென்னும் அத்தத்திற் சங்கமலிங்க சாயித்தியமென்று, ஆகமங்கள் சொல்லுமெனவம்மா நல்லோருரைப்ப ரேகமனத்தா ரறியவே - இங்ஙனஞ் சிவாகமங்கள் செப்புமென்று ஆச்சரியமாகப் பெரியோர்கள் மனமொன்று பட்டுக் கேட்போர்களுக்குக் கூறுவார்கள், எ-று. (உ0ரு)

[மேற் பிரசாதலிங்க சாயித்தியம் பேசலுற்றார்.]

அந்த வனுபவத்தாம் லிங்கம் பிராணனங்க
மென்றனைறி வென்னு மெழிலதுதா - னந்தமறக்
காட்டுமா னந்தபத்தி கண்ணுஞா னக்கரத்தி
னட்டும்ப்ர சாதலிங்க நாடு.

(இ-ள்.) முற்கூறப்பட்ட அனுபவபத்தி இலிங்கத்தை யுயிராகவும் அறிவை யுடலாகவு முடையதாய் நிகழும் அனுபவத்தை விளக்கும் ஆனந்தபத்தி யதிட் டானமாகிய ஞானமென்னும் அத்தத்திற் பிரசாதலிங்க சாயித்தியம், எ-று. ()

[மகாலிங்க சாயித்தியவண்மை யுரைக்கின்றார்.]

ஆனந்த மாமுணர்வின் பேதமது கண்டிருமை
தானறவே காட்டுந் தகுதியா - லான
சமரச பத்தியது தான்விளக்குந் தன்மை
யமருமறி வோடறியம் மா.

தானயிக்ய மாகிநிற்குந் தன்மைகண்டு தீதினிமை
யானதற்றுத் தன்னறிவா மாவலற்றே - யூனத்தோ

யொருவன் குறைவாகச்சொல்லும் மிக்க நிந்தை வார்த்தையினைக் காதினாலே கேட்டவிடத்தும், தன்னுடலமீந்தத் தவறு தவிர்த்திடவே மன்னும் விரதவயிராக்கியந்தான் - அந் நிந்தையைக் கேட்ட தோஷந்தீரத் தன்னுடைய சரீரத்தை விட்டு அத்தோஷத்தைத் தீர்த்துக்கொள்ளுவதாகிய நிலைபெற்ற வைராக்கிய பத்தியை, முன்போ லபிமானஞ் செய்யுமது நயிட்டாபத்தி யபிமானமாஞ் சுபுத்தியில் - தான் முன்பு பெத்தாவத்தையிற் றன் மாதாபிதாக்கள் முதலிய பெயர்களை யொருவன் நிந்தித்த விடத்துத் தனக்கெப்படி யபிமானமுண்டாயதோ அப்படி யபிமானத்தைப் பண்ணுவிக்குமது நயிட்டாபத்தி, அந்நயிட்டாபத்தி யதிட்டானமான சுபுத்தியத்தத்தில், ஞானக்கிரியை யதுதவறாதே நடத்தத் தானினிய தாரணமாத்தானடத்த - ஞானமார்க்கங் கிரியாமார்க்க மிரண்டுந் தவறாதே நடத்தத்தக்கதாக எந்த இலிங்கத்தைத் தரிப்பதென்னில், ஞானமாய்ச் சாற்றுங் குருலிங்கசாயித்திய மென்றே சாற்றுமருளாகமங்கடாம் - ஞான சொரூபமாகிய குருலிங்க சாயித்தியத்தைப் பண்ணவேண்டுமென்று சிவாகமங்கள் சொல்லும், எ-று. (உ0௪)

[சிவலிங்க சாயித்தியஞ் செப்பலுற்றார்.]

நின்றவீ ரவ்விரத நேர்ந்தவறி வின்முன்ன
நின்ற தனுவி னிகழ்பொறிக - ணன்றாய்
விளங்க நடப்பதுபோன் மெய்யெல்லாம் லிங்கம்
விளங்கும் விளக்கமது வே.

சாக்கிரத்துஞ் சொப்பனத்துஞ் சந்தேக மற்றுநிற்கத்
தாக்குமிக்க பத்தியவ தானத்தா - லூக்கு
நினைவி னிரகங்கா ரத்தா னிலிங்கந்
தனையகலாச் சாயித் தியம்.

இவையிரண்டுவெண்பாவும் ஒருதொடர்.

(இ - ள்.) நின்றவீ ரவ்விரதநேர்ந்த வறிவில் - நிலையினையுடைய வீர சைவாசார நிலைமைபற்றிய வறிவில், முன்னநின்ற தனுவினிகழ் பொறிகணன்றாய் விளங்க நடப்பதுபோல் - பெத்தகாலத்துத் தன் தேகத்துள்ள இந்திரியாதியந் தக்கரண முதலிய வியாபாரங்கள் அபேதமாய் நடக்குமாறுபோல, மெய்யெல்லாம் லிங்கம் விளங்கும் விளக்கமதுவே - தன் சரீரமெல்லாம் இலிங்க விளக்கமும் அப்படிச்சகசமாக, சாக்கிரத்துஞ் சொப்பனத்துஞ் சந்தேகமற்று நிற்க - சாக்கிரம் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீத முதலியவவத்தைகளினும் இந்திரிய வியாபாரங்கள் வந்து தாக்காமற் சற்றுஞ் சந்தேகமில்லாமல் நிற்கப் பண்ணும் அவதான பத்தியினால், ஊக்கு நினைவில் - மிக்க வறிவில், நிரகங்காரத்தா னிலிங்கந் தனையகலாச் சாயித் தியம் - நிரகங்கார அத்தத்திற் சிவலிங்க சாயித்தியம், எ-று. (உ0௫)

[சங்கமலிங்க சாயித்தியஞ் சாற்றலுற்றார்.]

நின்றலிங்க மேனியது நித்தியஞா னந்தானாய்
நின்று நிகழு நிகழ்ச்சியது - குன்றா
வகந்தையற நிற்க வனுபவமாம் பத்தி
திகழ்ந்து விளங்குந் திடம்.

ஆன சுமனமதா மத்தத்திற் றாரணமாந்
தானினிய சங்கமமாம் லிங்கந்தா - னனதென
வாகமங்கள் சொல்லுமென வம்மாநல் லோருரைப்ப
ரேகமனத் தாரறிய வே.

(இவை யிரண்டுவெண்பாவு மொருதொடர்.)

(இ-ள்.) நின்றலிங்கமேனியது நித்தியஞானந்தானாய் - தனக்கு முற்கூறி யலிங்கமே யுருவமாய் நித்தியமாகிய சிற்சத்தியே தானாய், நின்று நிகழு நிகழ்ச்சியது குன்றா வகந்தையற நிற்க வனுபவமாம் பத்திதிகழ்ந்து விளங்குந் திடம் - அச்சிற்சத்தியே தானாய் நின்று விளங்கும் விளக்கம் வழுவாது தற் போதஞ் சுட்டாறு நிற்கப் பண்ணும் அனுபவபத்தி யதிட்டானமாகிய, ஆனசு மனமதாமத்தத்திற் றாரணமாந் தானினிய சங்கமமாம் லிங்கந்தானனதென - சுமன மென்னும் அத்தத்திற் சங்கமலிங்க சாயித்தியமென்று, ஆகமங்கள் சொல்லுமெனவம்மா நல்லோருரைப்ப ரேகமனத்தா ரறியவே - இங்ஙனஞ் சிவாகமங்கள் செப்புமென்று ஆச்சரியமாகப் பெரியோர்கள் மனமொன்று பட்டுக் கேட்போர்களுக்குக் கூறுவார்கள், எ-று. (உ0ரு)

[மேற் பிரசாதலிங்க சாயித்தியம் பேசலுற்றார்.]

அந்த வனுபவத்தாம் லிங்கம் பிராணனங்க
மென்றனறி வென்னு மெழிலதுதா - னந்தமறக்
காட்டுமா னந்தபத்தி கண்ணுஞா னக்கரத்தி
னட்டும்பிர சாதலிங்க நாடு.

(இ-ள்.) முற்கூறப்பட்ட அனுபவபத்தி இலிங்கத்தை யுயிராகவும் அறிவை யுடலாகவு முடையதாய் நிகழும் அனுபவத்தை விளக்கும் ஆனந்தபத்தி யதிட் டானமாகிய ஞானமென்னும் அத்தத்திற் பிரசாதலிங்க சாயித்தியம், எ-று. ()

[மகாலிங்க சாயித்தியவண்மை யுரைக்கின்றார்.]

ஆனந்த மாமுணர்வின் பேதமது கண்டிருமை
தானறவே காட்டுந் தகுதியா - லான
சமரச பத்தியது தான்விளக்குந் தன்மை
யமருமறி வோடறியம் மா.

தானயிக்ய மாகிநிற்குந் தன்மைகண்டு தீதினிமை
யானதற்றுத் தன்னறிவா மாவலற்றே - யூனத்தோ

காத்தா னெனவுலகங் கட்டுரைக்கும் புன்மொழியி
லாத்தாடுந் தீயபிமா னம்.

(இ - ள்.) மெய்போலவிருந்து பின்பொய்யாகப் போகையால் உடல் பொய்யாம். ஆகையாற் பொய்யாகிய வித்தனுவினிடத்துந் திரவியத்தினிடத்துந் தன் சீவனிடத்தும் அபிமானம் வைத்து இவை மெய்யான பதார்த்தமென்று பற்றுதலைச் செய்விக்கு மனப்பிராந்தி சற்றுந் தீராமையால், தன் றேகம் மனைவிசெல்வம் சாதி ஆகிய விவற்றுள் முறையாகத் தன் றேகத்தின்கண் வயிற்றுவலி முதலிய மகாரோகங்கள் வந்தவிடத்தும் மனைவியினிடத்து மானபங்கமெய்திய விடத்தும் செல்வப்பொருட்குச் சடுதியி லரசர் கள்வர் முதலாயினோராற் பங்கம் வந்தபொழுது மரபுக்கீனம் வந்தவிடத்தும் தன்னுயிரை வலியவிடுதல் மானபங்கம் பண்ணினவனைத்தான் கொல்லுதலாகிய இவைகளினாற் றன்பிராணனை யுத்தரித்துத் தன்மானத்தைக் காத்துக்கொண்டானென் றுலகங்கொண்டாட இவ்விழிவாகிய கீர்த்தியில் தீயவபிமானத்தை வைத்தல், எ-று. (கஙச)

நிறுத்துமனக் கோட்ட நிவர்த்திசெய்து முன்னே
குறித்தவநா சாரமெனக் கூறிப் - பிறித்துக்
கொலைகளவு கட்காமங் கூறுபர நிந்தைக்
கலமரலுற் றஞ்சியடைந் தோன்.

ஞான விபூதி நடுநோட்ட நன்மணிமெய்
யான குருலிங்க சங்கமத்தோ - டானவருட்
பாதோ தகமும் பரிபூ ரணமாக
வோதும் பிரசாத மும்.

என்னுமிவை யெட்டு மெழிலுடைய தீக்கையினாற்
பின்னமறப் பெற்றுப் பெருவாழ்வா - மன்னும்
சதாசார நீங்காமற் சார்ந்தறிவு நிற்கு
மதாவான வன்புதழைக் க.

இவை மூன்றுவெண்பாவு மொருதொடர்.

(இ-ள்.) நிறுத்துமனக்கோட்ட நிவர்த்திசெய்து - இங்ஙனங் கூறியபிராந்திகட்கெல்லா மிருப்பிடமாகிய மனப்பிராந்தியைப் பரிச்சேதமாகப் போக்கி, முன்னே குறித்தவநா சாரமெனக்கூறிப் பிறித்துக் கொலைகளவு கட்காமங் கூறுபரநிந்தைக் கலமரலுற்றஞ்சி யடைந்தோன் - பெரியோர்களால் முன்னே குறித்துச் சொல்லப்பட்ட இவைகள் அநாசாரமென்று தள்ளிக் கொலைகளவு கட்காமம் பரநிந்தைமுதலிய பாதகங்களை முற்றும் விட்டு அவை கட்கு மிகப்பயந்தவனாய்ச் செனனமரண துக்கத்திற்குத் தப்பிப் பிழைக்கவேண்டுமென வந்தடைந்த மாணாக்கனுக்கு, ஞானவிபூதி நடுநோட்ட நன்மணி - எப்போதும் ஞானப்பிரகாசத்தைத் தரும் விபூதி ருத்திராட்சமும், மெய்யான குருலிங்கசங்கமத்தோடான வருட்பாதோதகமும் பரிபூரணமாகவோதும் பிர

சாதமும் - மெய்ப்பொருளாகிய பஞ்சாக்கரமும் குருலிங்கசங்கமங்களும் திருபாதசொரூபமாகிய பாதோதகமும் பரிபூரணமான பிரசாதமும், என்னு மிவையெட்டும்-என்று சொல்லப்பட்ட அஷ்டாவரணங்களையும், எழிலுடைய தீக்கையினும் பின்னமறப்பெற்றுப் பெருவாழ்வாமன்னுஞ் சதாசாரநீங்காமற் சார்ந்துயிருநிற்க - அழகிய தீக்கையினால் விட்டு நீங்காதவண்ண மங்கிகரித்துப் பெருவாழ்வாகிய சதாசாரமுநல் ஆசாரங்களை விட்டு நீங்காமல் அறிவுபற்றி நிற்பதாக அச்சம்பத்தியினாலே மேலுமேலும் அன்பு பெருக, எ-று. (கசுஎ)

செய்யுநல்ல சற்பத்தி செய்கை விளக்கிநிற்கச்
செய்யுமறி விற்சுசித்த வத்தத்திற் - பொய்யான
மாசா மநாசார மன்னுநெஞ்சிற் கிட்டாத
வாசார லிங்கசாயித் யம்.

(இ-ள்.) செய்யு நல்ல சற்பத்திசெய்கை விளக்கி நிற்கச்செய்யு மறிவில்- இங்ஙனங்கூறிய வாசாரங்களை யெல்லாம் வரச்செய்யா நின்ற நல்ல சற்பத்தி யானது இச்செயல்களை இவனிடத்து விளக்கி நிற்க, அதனால் விளங்கிநிற்கு மறி வின்கண், சுசித்தவத்தத்திற் பொய்யான மாசாமநாசாரமன்னுநெஞ்சிற் கிட் டாத வாசாரலிங்க சாயித்யம் - சுசித்தவத்தத்திற் பொய்யும் அநாசாரமும் அஞ் ஞானமுமாகிய குற்றங்கள் சேர்ந்திருக்கு மனத்தின்கட் சேராததாகிய வாசார லிங்கத்தைத் தரிப்பது, எ-று. (கசுஅ)

[குருலிங்கசாயித்தியங் கூறலுற்றார்.]

நின்றசதா சார நிலைதவறி னுங்கிருபை
யொன்றுஞ் சதாசார ரூபமதாய் - நின்ற
குருலிங்க சங்கமத்தைக் குன்ற வுரைக்கும்
பெருநிந்தை கேட்டவிடத் தும்.

நன்னுடல மீந்தத் தவறு தவிர்த்திடவே
மன்னும் விரதவயி ராக்கியந்தான் - முன்போ
லபிமானஞ் செய்யு மதுநயிட்டா பத்தி
யபிமான மாஞ்சுபுத்தி யில்.

ஞானக் கிரியை யதுதவறு தேகடத்தத்
தானினிய தாரணமாத் தானடத்த - ஞானமதாய்ச்
சாற்றுங் குருலிங்க சாயித் தியமென்றே
சாற்றுமரு ளாகமங்க டாம்.

இவைமூன்று வெண்பாவு மொருதொடர்.

(இ - ள்.) நின்ற சதாசார நிலைதவறினும் - ஒருவன் சதாசார நிலைதவ றினவிடத்தும், கிருபையா லொன்றுஞ் சதாசார ரூபமதாய் நின்ற குருலிங்க சங்கமத்தைக் குன்ற வுரைக்கும் பெருநிந்தை கேட்டவிடத்தும் - அக்குற்றத்தை க்கிருபையினாலே போக்குஞ் சதாசார சொரூபமாகிய குருலிங்க சங்கமத்தை

யொருவன் குறைவாகச்சொல்லும் மிக்க நிந்தை வார்த்தையினைக் காதினாலே கேட்டவிடத்தும், தன்னுடலமீந்தத் தவறு தவிர்த்திடவே மன்னும் விரதவயிராக்கியந்தான் - அந் நிந்தையைக் கேட்ட தோஷந்தீரத் தன்னுடைய சரீரத்தை விட்டு அத்தோஷத்தைத் தீர்த்துக்கொள்ளுவதாகிய நிலைபெற்ற வைராக்கிய பத்தியை, முன்போ லபிமானஞ் செய்யுமது நயிட்டாபத்தி யபிமானமாஞ் சுபுத்தியில் - தான் முன்பு பெத்தாவத்தையிற் றன் மாதாபிதாக்கள் முதலிய பெயர்களை யொருவன் நிந்தித்த விடத்துத் தனக்கெப்படி யபிமானமுண்டாகியதோ அப்படி யபிமானத்தைப் பண்ணுவிக்குமது நயிட்டாபத்தி, அந்நயிட்டாபத்தி யதிட்டானமான சுபுத்தியத்தத்தில், ஞானக்கிரியை யதுதவறாதே நடத்தத் தானினிய தாரணமாத்தானடத்த - ஞானமார்க்கங் கிரியாமார்க்கமிரண்டுந் தவறாதே நடத்தத்தக்கதாக எந்த இலிங்கத்தைத் தரிப்பதென்னில், ஞானமாய்ச் சாற்றுங் குருலிங்கசாயித்திய மென்றே சாற்றுமருளாகமங்கடாம் - ஞான சொரூபமாகிய குருலிங்க சாயித்தியத்தைப் பண்ணவேண்டுமென்று சிவாகமங்கள் சொல்லும், எ-று. (உ0௪)

[சிவலிங்க சாயித்தியஞ் செப்பலுற்றார்.]

நின்றவீ ரவ்விரத நேர்ந்தவறி வின்முன்ன
நின்ற தனுவி னிநிகழ்பொறிக - ணன்றாய்
விளங்க நடப்பதுபோன் மெய்யெல்லாம் லிங்கம்
விளங்கும் விளக்கமது வே.

சாக்கிரத்துஞ் சொப்பனத்துஞ் சந்தேக மற்றுநிற்கத்
தாக்குமிக்க பத்தியவ தானத்தா - லூக்கு
நினைவி னிரகங்கா ரத்தா னிலிங்கந்
தனையகலாச் சாயித் தியம்.

இவையிரண்டுவெண்பாவும் ஒருதொடர்.

(இ - ள்.) நின்றவீ ரவ்விரதநேர்ந்த வறிவில் - நிலையினையுடைய வீர சைவாசார நிலைமைபற்றிய வறிவில், முன்னநின்ற தனுவினிகழ் பொறிகணன்றாய் விளங்க நடப்பதுபோல் - பெத்தகாலத்துத் தன் தேகத்துள்ள இந்திரியாதியந்தக்கரண முதலிய வியாபாரங்கள் அபேதமாய் நடக்குமாறுபோல, மெய்யெல்லாம் லிங்கம் விளங்கும் விளக்கமதுவே - தன் சரீரமெல்லாம் இலிங்க விளக்கமும் அப்படிச்சகசமாக, சாக்கிரத்துஞ் சொப்பனத்துஞ் சந்தேகமற்று நிற்க - சாக்கிரம் சொப்பனஞ் சுழுத்தி துரியந் துரியாதீத முதலியவவத்தைகளினும் இந்திரிய வியாபாரங்கள் வந்து தாக்காமற் சற்றுஞ் சந்தேகமில்லாமல் நிற்கப் பண்ணும் அவதான பத்தியினால், ஊக்கு நினைவில் - மிக்க வறிவில், நிரகங்கா ரத்தா னிலிங்கந் தனையகலாச் சாயித் தியம் - நிரகங்கார அத்தத்திற் சிவலிங்க சாயித்தியம், எ-று. (உ0௫)

[சங்கமலிங்க சாயித்தியஞ் சாற்றலுற்றார்.]

நின்றலிங்க மேனியது நித்தியஞா னந்தானாய்
நின்று நிகழு நிகழ்ச்சியது - குன்றா
வகந்தையற நிற்க வனுபவமாம் பத்தி
திகழ்ந்து விளங்குந் திடம்.

ஆன சுமனமதா மத்தத்திற் றாரணமாந்
தானினிய சங்கமமாம் லிங்கந்தா - னனெதென
வாகமங்கள் சொல்லுமென வம்மாநல் லோருரைப்ப
ரேகமனத் தாரறிய வே.

(இவை யிரண்டுவெண்பாவு மொருதொடர்.)

(இ-ள்.) நின்றலிங்கமேனியது நித்தியஞானந்தானாய் - தனக்கு முற்கூறி யலிங்கமே யுருவமாய் நித்தியமாகிய சிற்சத்தியே தானாய், நின்று நிகழு நிகழ்ச்சியது குன்றா வகந்தையற நிற்க வனுபவமாம் பத்திதிகழ்ந்து விளங்குந் திடம் - அச்சிற்சத்தியே தானாய் நின்று விளங்கும் விளக்கம் வழுவாது தற்போதஞ் சுட்டாது நிற்கப் பண்ணும் அனுபவபத்தி யதிட்டானமாகிய, ஆனசுமனமதாமத்தத்திற் றாரணமாந் தானினிய சங்கமமாம் லிங்கந்தானனதென- சுமன மென்னும் அத்தத்திற் சங்கமலிங்க சாயித்தியமென்று, ஆகமங்கள் சொல்லுமெனவம்மா நல்லோருரைப்ப ரேகமனத்தா ரறியவே - இங்ஙனஞ் சிவாகமங்கள் செப்புமென்று ஆச்சரியமாகப் பெரியோர்கள் மனமொன்றுபட்டுக் கேட்போர்களுக்குக் கூறுவார்கள், எ-று. (உ0ரு)

[மேற் பிரசாதலிங்க சாயித்தியம் பேசலுற்றார்.]

அந்த வனுபவத்தாம் லிங்கம் பிராணனங்க
மென்றனறி வென்னு மெழிலதுதா - னந்தமறக்
காட்டுமா னந்தபத்தி கண்ணுஞா னக்கரத்தி
னட்டும்ப்ர சாதலிங்க நாடு.

(இ-ள்.) முற்கூறப்பட்ட அனுபவபத்தி இலிங்கத்தை யுயிராகவும் அறிவை யுடலாகவு முடையபதாய் நிகழும் அனுபவத்தை விளக்கும் ஆனந்தபத்தி யதிட்டானமாகிய ஞானமென்னும் அத்தத்திற் பிரசாதலிங்க சாயித்தியம், எ-று. ()

[மகாலிங்க சாயித்தியவண்மை யுரைக்கின்றார்.]

ஆனந்த மாமுணர்வின் பேதமது கண்டிருமை
தானறவே காட்டுந் தகுதியா - லான
சமரச பத்தியது தான்விளக்குந் தன்மை
யமருமறி வோடறியம் மா.

தானயிக்ய மாகிநிற்குந் தன்மைகண்டு தீதினிமை
யானதற்றுத் தன்னறிவா மாவலற்றே - யூனத்தோ

டான சிறப்பற் றசைவற் றரும்பூசை
மானமற்று நிற்கும் பதம்.

காட்டுஞ் சமரசமாம் பத்தியது மற்றறிவி
லாட்டுமற்ற பாவமதா மத்தத்தாற் - றீட்டு
மகாலிங்க சாயித்ய வாழ்வான தென்றே
மிகலிங்காங் கத்தருரைப் பர்.

இவைமூன்றுவெண்பாவு மொருதொடர்.

க-ம் வெண்பா.

(இ-ள்.) ஆனந்தமாமுணர்வின் பேதமதுகண்டிருமை தானறவே காட்டுந் தகுதியால் – சச்சிதானந்த நித்தியபரிபூரண சிவத்துக்குஞ் சீவனுக்கும் அனுபவத்திற் கிஞ்சித்பேதங்கண் டப்பேதந்தோன்றாமல் அவ்விரண்டையு மொன்றாகச் சமரசப் படுத்துகையால், ஆனசமரச பத்தியதுதான் விளக்குந் தன்மை யமருமறிவோடறியம்மா - அப்பத்திக்குச் சமரசபத்தியெனப் பெயராயிற்று. அச்சமரசபத்தி சமரசப் படுத்துங்காலத்து அனுபவமெங்ஙனமெனின், அந்த வாச்சரியத்தை யெங்ஙனங்கூறுவன் இரண்டற் றேகரசமாமென்றறி, எ-று.

உ-ம் வெண்பா.

(இ-ள்.) தானயிக்யமாகிநிற்குந் தன்மைகண்டு – இன்னும் அப்பத்தி இங்ஙனஞ் சிவசீவ ஐக்கியத்தைக்கண்டு, தீதினிமையானதற்றுத் தன்னறிவாமாவலற்றேயூனத்தோ டானசிறப்பற் றசைவற்றரும்பூசை மானமற்றுநிற்கும் பதம் – முற்சன்மவாசனையினாலே நன்மைதீமை அவா இழிவு சிறப்புமுயற்சிமானமுதலாய குணங்கள் வந்தடராமல் அப்பற்றினையெல்லா மகற்றிச் சிவத்தினை, எ-று.

ங-ம் வெண்பா.

(இ-ள்.) காட்டுஞ்சமரசமாம் பத்தியது மற்றறிவிலாட்டுமற்ற பாவமதாமத்தத்தில் – "பரஞானத்தாற் பரத்தைத் தெரிசித்தார் பரமேபார்த்திருப்பார் பதார்த்தங்கள் பாரார்" என்னும் வசனத்தால் – அச்சிவானுபவத்தையே பண்ணிக்கொண் டான்மபோத வியாபாரத்தை யறச்செய்துகொண்டிருக்கும் பாவவத்தத்தில், தீட்டுமகாலிங்க சாயித்தியவாழ்வானதென்று மிகலிங்காங்கத்தருரைப்பர் – சொல்லப்பட்ட மகாலிங்கசாயித்தியத்தின் பெருமை இப்படிப்பட்டதென்று இலிங்காங்கசையோகத்தைப் பெற்ற மகான்கள் சொல்லுவார்கள், எ-று. (உ0௧)

[மேலங்கத்தல மிலிங்கத்தலமிவையென அருளிச்செய்கின்றார்.]

பத்தன் மயேசன்ப்ர சாதி பிராணலிங்கி
யொத்தசர ணன்னைக்ய ரோடாறு - முத்தமமா
மங்கத் தலமென் றறையுஞ் சிவாகமங்கள்
பங்கப் பவமறவம் மா.

(இ - ள்.) பந்நுந்நல முதலேக்கத்நல மீருகியஆறும் அங்கத்தலமென் றும் ஆசாராதி யகாலிங்கமீருனஆறும் இலிங்கத்தலமென்றும் ஆகமங்கள் கூறும், எ-று. (உசO)

[மேன்ஞான விரதசீலமே சீலமென நவிற்றுகின்றார்.]

உள்ளும் புறம்பு மொழியா தொருபொருளே
நள்ளுஞ் சுடுந்நலஞா னவ்விரதம் - விள்ளரிய
மேலா மனுபவமா மிக்கமகா சீலமன்றி
யேலா சடவிரத மே.

(இ - ள்.) உள்ளும் புறம்பு மொழியா தொருபொருளே நள்ளுஞ் சுடுத் தலம் - உள்ளும் புறம்பு நீக்கமற்றுச் சர்வவியாபியா யிருக்கும் சுத்தசிவமே சுடுந்நலலிங்கம், ஞானவ்விரதம் விள்ளரிய மேலா மனுபவமாம் - அவ்விலிங்கத் தைக்கலந்து வராநின்ற விடயங்களெல்லாம் அவ்விலிங்காற் பிதமாக்கி அவ்விலி ங்கப்பிரசாதமாய்ப் புசிப்பதே ஞானவிரதம், அதுவே சொல்லுதற்கரிய மேலா கியவனுபவம், அதுவே மகத்தாகிய சீலம், மிக்கமகா சீலமன்றி - இம் மகத்தா கியவனுபவமன்றி, ஏலாசடவிரதமே - தனக்கந்நியமாகிய சடபதார்த்தங் களுக்குச் சீலமென்பது கூடாது, எ-று. (உகக)

[மேலுஞ் சடவிரத சீலர்கட்கு ஞானங் கூடாதெனத் திட் டாந்தமிட்டாறு வெண்பாவினு லுரைக்கின்றார்.]

சடவிரத சீலமெனுஞ் சங்கற்ப காயத்
துடனகலா ஞான முனைக்குந் - திடமதுவு
மில்லையில்லை யென்றுமறை யெல்லாஞ் சொலுமுவமை
வல்லபமோ டேயுரைப்ப மால்.

(இ-ள்.) சடவிரத சீலமெனுஞ் சங்கற்ப காயத் துடனகலா ஞான முனை க்குந் திடமதுவு மில்லையில்லை யென்று - முற்கூறிய சடுஸ்தல விரதபங்கம் வராமல் நடக்கு முறைமையே அறிவினுக் காசாரம், அஃதன்றி அறிவில்லாத சடபதார்த்தங்களுக் காசாரங் கற்பித்துச் சங்கற்ப விகற்பத்துடன் கூடிக்கொ ண்டிருக்கும் புத்தியை யுடையவர்கட்கு விட்டு நீங்காத சிவஞானம் ஒருகா லும் பிரகாசியாது, சிவஞானம் நமக்குண்டென்று சொல்லுஞ் சமுச்சயமு மவர்கட்கில்லை, மறையெல்லாஞ் சொலுமுவமை வல்லபமோடே யுரைப்பமால்- நான்குவேதங்களும் அவர்கட்குச் சிவஞானம் பிரகாசியாதென்று சொல்லும், இதற்கோர் திட்டாந்த மிட்டுரைப்போங் கேட்பாயாக, எ-று. (உகஉ)

பிரம சரியதன்மம் பேராமல் வாழ்க்கைக்
குரியமனை யாளையன்றி யோகோ - பருகுமின்ப
மாகவுப தேசத்தா லாம்விரத சீலசடர்
மோகமிலா ஞானமுறு வார்.

(இ-ள்.) பிரமசரிய தன்மத்தை விடாமல் அனுட்டிப்பா னொருவனுக்கு மற்றொருவன் இல்லறத்துக்குரிய மனையாள் போக முதலியவற்றை யடைவா யாக வென்றுகூற அதனைக் கேட்டு அவன் பிரமசரிய தன்மைத்தை விட்டுக் கிருகாச்சிரம தன்மத்தை யடையினன்றோ அவ்வின்பங் கிடைக்கும், அங்ஙன மன்றிப் பிரமசரிய தன்மத்தை விடாது ஒருவன் வாய்மொழியிற் றானே அவனுக் கவ்வின்பங் கிடைக்குமாயின் சடவிரத சீலனுக்கும் ஞானங் கிடைக்கும், எ-று. (உகங)

மனைவாழ்க்கை தன்மமுற்று மாயா தொருவ
னினியசந்நி யாசத்தை யெய்தின் - வினவியிடுங்
காய விரதமெனுங் கட்டிருக்க வான்மாவுக்
கேயுஞ் சிவஞான மே.

(இ-ள்.) அர்த்தேடணை புத்திரேடணை உலகேடணையென்னு மேடணாத் திரையங்களும் விடாமற் றேனிற்படிந்த ஈப்போல மனைவாழ்க்கையைப் பற்றிக் கிடப்பா னொருவனுக்கு மற்றொருவன் சந்நியாச தன்மபெலத்தினாலே முத்தி வருமென்று போதிக்கின் அதனைக் கேட் டம்மனைவாழ்க்கையை விடாத வவனுக்கு அச் சந்நியாசபலம் வருமாயின், ஞான விரதசீலமின்றிச் சரீர விரத சீலக் கட்டிருக்க அவனுக்குச் சிவஞானம் வரும் எ-று. (உகச)

ஆனகன்ம சந்நியாச தன்மவன்மக் கட்டுடனே
தானப் பரமாங்ச சந்நியாச - ஞானமது
வந்தொருவர் போதிக்க வந்தக்காற் சீலனுக்குப்
பெந்தமறு ஞானம் பெறும்.

(இ-ள்.) சிகை யெக்ஞோபவீதந் தரித்துத் திரிதண்ட கமண்டலமேந்திக் கன்மானுஷ்டானம் விடாத ஒரு குடீசக சந்நியாசிக்கு ஒருவன் பரமாங்கிச சந்நியாச பெலத்தாலேயே மோட்சஞ் சித்திக்குமென்று போதிக்க, அதனைக் கேட்டு அக்கன்மானுஷ்டானத்தை விடாம லிருக்குமவனுக்குப் பரமாங்கிச சந்நியாசபலம் வருமாயின், ஞான விரதசீலமின்றிச் சடவிரதசீலனா யிருப்போனுக்கும் ஞானம்வரும், எ-று.

சடவிரத சீலமாகிய பந்த நீங்காமையால் ஞானம் வரா தென்பதே கருத்து. (உகரு)

[இதுவுமது.]

ஆச்சிரம தன்மமுற்று மாயிருந்த காயமதே
யாச்சிரம தன்மமெல்லா மற்றுநின்ற - தேசுபெறுங்
கன்ம விரதமெனுங் கட்டுவிடா லிங்கமதாம்
வன்மமுற ஞானம் வரும்.

(இ-ள்.) முன் பிரமசரிய முதலிய நான்காச்சிரங்களையும் கிரமமா யனுட்டித்துச் சித்தியான தேகத்தை யுடையோனுக்கு நித்திரை செய்வோன் கையிற்

பதார்த்த கழுவுமாறு போல, சங்கற்ப விகற்பத்தோடு கூடிய அவ்வாச்சிரமப் பழக்கமாகிய சடவிரதசீலக் கட்டு விட்டாலன்றிச் சிவஞானம் பிரகாசியாது. ஆதலான் அக்கட்டகல எங்குஞ் சிவசொருபமாகக் காணும் அழுத்தமுண்டாம், அவ்விடத்துச் சிவஞானம் பிரகாசிக்கும், எ-று. (உகசு)

[இதுவுமது.]

வர்ணாச் சிரமதன்மம் வல்வினையென் றேதுறக்க
நண்ணும் விவேக மிருக்கா நண்ணுமோ – வுண்ணிறையாப்
பேத விரதலிங்கம் பேதகமாப் பூசிக்கப்
போத விகழ்வோ புகல்.

(இ – ள்.) பிராமணர் அரசர் வணிகர் சூத்திரரென்று நான்கு குலவொழுக்கத்தான் வருவனவெல்லாங் கன்மானுபவமே யன்றிச் சிவானுபவமன்று, ஆதலான் அதனைத் துறக்கவேண்டுமென்னும் விவேகம் வருவதிருக்கோ? இருக்கன்று, அதுபோல ஞானாசார நிறைவின்றிச் சடவிரத சீலங் கொண்டிருப்பதுவே பேதம், அப்பேதத்தை விட்டு அபேதமாய்ச் சர்வமுஞ் சிவமாய்க் காண்பதோ இகழ்ச்சி? நீ கூறுவாயாக, எ-று. (உகஎ)

ஆனவன்ன வாச்சிரமக் கட்டுவிட்டான் மேலான
ஞான சிவாச்சிரமத் தாஞ்சீல – மானவெல்லாங்
கைவிட்டா லிங்கமந்த லிங்க விரதமதா
மெய்யாஞ் சடுத்தலமே மெய்.

(இ – ள்.) முற்கூறிய பிராமணர் முதலிய வருணங்கள் பிரமசரிய முதலிய வாச்சிரமங்கள் இவை யாவும் பெந்தமென விட்டால் மேலாகிய சிவாச்சிரமத்தை யடையலாம், அதுபோல இச்சடவிரதசீல சங்கற்ப விகற்பங்களை விட்டால் மகாலிங்க சிவ சொருபத்தைப் பெறலாம், அவ்வனுபவத்தினால் அனுட்டிக்குஞ் சடுத்தலமே மெய்யான சடுத்தலம், எ-று. (உகஅ)

உண்மைமுற்றும்.

---

ஆ படலம் உ – று செய்யுள் சஉக.

---

அத்துவிதவெண்பா மூலமு முரையு முற்றுப்பெற்றன.

சிவப்பிரகாசன் திருவடிவாழ்க.

உ

சிவமயம்.

# பிழை திருத்தம்.

| பக்கம். | வரி. | பிழை. | திருத்தம். |
|---|---|---|---|
| ௮ | ௬ | நீங்காதவர் | நீங்காரவர் |
| ௩௯ | ௩ | சைம்போன்ன | செம்பொன்ன |
| ௪௧ | ௨௮ | சவுசமுத | சவுரமுத |
| ௪௫ | ௯ | போகங்களும் | போகாங்கங்களும் |
| ௬௮ | ௧௪ | பரிமீரகணம் | பரிமீகரணம் |
| ௮௩ | ௮ | றளவற்ற | டளவற்ற |
| ௮௬ | ௧௧ | வோதும் | மோதும் |
| ௮௯ | ௧௯ | சொல்லுமறம் | சொல்வோமறி |
| ௯௩ | ௩௧ | சுனம் | சுமனம் |
| ௯௪ | ௧௯ | முயிர்ச்சித்து | முயிரர்ச்சித்து |
| ௯௫ | ௨௫ | யவற்றுன் | யவரான் |
| ௧௩௭ | கடைசிவரி | வியாயிருக்கிற | வியாபியாயிருக்கிற |
| ௧௪௧ | ௩ | ஆயென்னும் | ஆறுயென்னும் |